# அப்துல்ரகுமான் கவிதைகள் - ஓர் ஆய்வு

அழகப்பா பல்கலைக் கழக முனைவர் (Ph.D) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**இரா.கருணாநிதி**

மேற்பார்வையாளர்

முனைவர்.**இரா.பாலசுப்பிரமணியன்**






தமிழ்த்துறை

அழகப்பா பல்கலைக் கழகம்

காரைக்குடி – 630 003.


ஆகஸ்ட்–1999

முனைவர். இரா. பாலசுப்பிரமணியன், எம்.ஏ., எம்.ஃ.பில்., பிஎச்.டி., டி.ஜி.டி.,
இணைப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள்: 30.8.99

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

**"அப்துல் ரகுமான் கவிதைகள் -- ஓர் ஆய்வு"** என்னும் பொருள் பற்றி முனைவர் (பி.எச்டி) பட்டத்திற்காகத் திரு. **இரா. கருணாநிதி** அவர்கள் செய்துள்ள இவ்வாய்வு, அழகப்பா பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறையில் என் மேற்பார்வையின் கீழ் ஆய்வு செய்த காலத்தில் அவரின் சொந்த முயற்சியால் செய்யப் பெற்றது என்றும் இவ் ஆய்வேடு ஆய்வாளருக்காக இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்காகவும் அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இரா. பாலசுப்பிரமணியன்

முனைவர் இரா. பாலசுப்பிரமணியன்
(மேற்பார்வையாளர்)

இரா. கருணாநிதி, எம்.ஏ., எம்.ஃபில்.,
ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக் கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள்: 30.8.99.

## ஆய்வாளர் உறுதிமொழி

**"அப்துல் ரகுமான் கவிதைகள் -- ஓர் ஆய்வு"** என்னும் பொருளில் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காகச் செய்யப்பெற்ற இவ்வாய்வு என் முயற்சியில் உருவானதே ஆகும். இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ் ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என உறுதி அளிக்கிறேன்.

(இரா. கருணாநிதி)
ஆய்வாளர்

இரா. பாலசுப்பிரமணியன்.
உறுதிக்கையொப்பம்

முனைவர். இரா. பாலசுப்பிரமணியன்,
இணைப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக் கழகம்,
காரைக்குடி - 630 003.

## நன்றியுரை

அழகப்பா பல்கலைக் கழகம் என் இதயக்கோயில்தான். இரத்தமாக நான் இந்தப் பல்கலைக் கழகத்தைச் சுற்றிவந்த போதெல்லாம் சுத்தம் செய்யப் பெற்றுள்ளேன். அழகப்பா பல்கலைக் கழகத்தாருக்கும், தெள்ளுதமிழ் அறிஞர், வள்ளல், தமிழ்த்துறைத்தலைவர் முனைவர்.**தே. சொக்கலிங்கம்** அவர்களுக்கும் நன்றி.

வெய்யோனாய் எமக்கிருந்து, விழி தந்து, வழி தந்து விடியல் தந்த அய்யா ஆய்வு நெறியாளர் முனைவர் **இரா. பாலசுப்பிரமணியன்** அவர்களுக்கும், அவர் குடும்பத்தார்க்கும் என் நன்றி என்றும் உரியது.

உமையொரு பாகனாய் எமக்கு உதவிய மாண்புமிகு அமைச்சர் முனைவர் **மு.தமிழ்க்குடிமகனாருக்கும்,** அன்னை **வெற்றிச்செல்வி** அவர்களுக்கும் நன்றி. தாயன்பு அருள் தந்த என் உயிர் திரு. **இரெ.தண்டபாணி** அவர்களுக்கும் அறிஞர்கள் திரு. **அ.ராமகிருஷ்ணன்,** திரு. **சா. ஜெயராமன், பேரா. திரு.இராம.இராமநாதன்** ஆகியோருக்கும் என் நன்றி.

இன்முகம் குறையாமல் எனக்குதவிய முனைவர் திரு. **மு. சுதந்திரமுத்து** அவர்களுக்கும், முனைவர் திரு. **சி.இ. மறைமலை** அவர்களுக்கும், முனைவர் திரு.**க.காந்தி** அவர்களுக்கும், திரு. **பேரா. சுப. கணபதி** அவர்களுக்கும் என் நன்றி. பல வகைகளில் துணைபுரிந்த அழகப்பா பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறை விரிவுரையாளர்கள் முனைவர். திரு.**மு. பாண்டி,** திருமதி **சே. செந்தமிழ்ப்பாவை,** திரு. **சு. இராசாராம்** ஆகியோர்களுக்கும் நன்றி. திரு. **இரா. மணிகண்டன்,** திரு. **சா. இரமேஷ்,** திரு. **இரா. விமலன்** ஆகியோர்களுக்கும் என் நன்றி .அன்புத்தம்பிகள், **செ. சு. நா.சந்திரசேகரன், க. சொல்லேருழவன், இரா.குமார், ஆ. சங்கரதாஸ்** ஆகியோர்களுக்கும், தங்கைகள் **.தி. ரமா, பி.மாலதி, சி.விமலா** ஆகியோருக்கும் என் வாழ்த்து கலந்த நன்றிகள். எம்.ஏ., எம்.ஃ.பில்., மாணவ மாணவியர்க்கும் என் நன்றி உரியது.

தாய் தந்தைக்கும், தமக்கையர்க்கும், அன்பு மாமன்கள் **ஆ.கண்ணன், ஆ.இளங்கோவன்,** என் தாயுமானவர் அண்ணன் **இரா. முருகேசன்,** அண்ணி **க.ரமாதேவி** ஆகியோருக்கும் என் நன்றி. திருவாளர்கள் **பெ. வெள்ளைச்சாமி, சோ.விஸ்வநாதன், செல்வமணி, ம. சங்கர்கணேஷ்** ஆகியோருக்கும் மனம்கனிந்த நன்றிகள். கையெழுத்துக்களை உயிர்மெய்யெழுத்துக்களாய்க் கணினியில் அச்சாக்கம் செய்த செல்வி **வெ.கீதா,** நண்பர்கள் **எஸ்.முகமதுசுல்தான். விஜய்** ஆகியோருக்கும் நன்றி.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| ஆ.ப | - | ஆறாம் பதிப்பு |
| எ.டு | - | எடுத்துக்காட்டு |
| ஏ.ப | - | ஏழாம் பதிப்பு |
| கவிஞர் | - | அப்துல் ரகுமான் |
| கழக வெளியீடு | - | திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட். |
| க.நா.சு | - | க. நா. சுப்பிரமணியன் |
| கு.ப.ரா | - | கு.ப. ராஜகோபாலன் |
| தி.மு.க | - | திராவிட முன்னேற்றக் கழகம் |
| ந.பி | - | ந. பிச்சமூர்த்தி |
| நூ.எ | - | நூற்பா எண் |
| பக் | - | பக்கங்கள் |
| ப.ஆ | - | பதிப்பு ஆசிரியர் |
| ப.ஆ.கு | - | பதிப்பு ஆசிரியர் குழு |
| ப | - | பக்கம் |
| பா.எ | - | பாடல் எண் |
| ம.ஆ | - | மலர்க்குழு ஆசிரியர் |
| மு.ப.ஆ | - | முதன்மைப் பதிப்பு ஆசிரியர் |
| மூ.ப | - | மூன்றாம் பதிப்பு |
| மு.வ | - | மு. வரதராசன் |
| மு.நூ | - | முற்சுட்டிய நூல் |
| மொ.பெ.ஆ | - | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| மேலது | - | மேலே உள்ள நூல் |
| Edr | - | Editor |
| Edrs | - | Editors |
| F.E | - | Fifth Edition |
| P | - | Page |
| PP | - | Pages |
| Vol | - | Volume |

# உள்ளடக்கம்

# இயல் 1

## முன்னுரை

ஆய்வுத்தலைப்பு

ஆய்வு முன்னோடிகள்

ஆய்வு நோக்கம்

ஆய்வு மூலங்கள்

ஆய்வு அணுகுமுறை

ஆய்வுப் பகுப்பு

# 1. முன்னுரை

இலக்கியங்கள் காலச் சூழலுக்கு ஏற்பவும், சமூகச் சூழலுக்கு ஏற்பவும் மாற்றம் பெறுகின்றன. அம்மாற்றம் வடிவம், உள்ளடக்கம், வெளிப்பாட்டு முறை போன்ற நிலைகளில் நிகழலாம். இந்நிலை அனைத்துமொழி இலக்கியத்திற்கும் பொதுவானதாகும். இலக்கிய இயல்பு குறித்த பொதுக் கோட்பாடு எனவும் மதிப்பிடலாம்.

மேலைநாடுகளில் நிகழ்ந்த தொழிற்புரட்சிகளால் சமூகத்தில் மாற்றங்கள் பல நிகழ்ந்தன. அம்மாற்றம் அக்காலச் சூழல்களில் தோன்றிய இலக்கியத்திலும் தாக்கம் பெற்றது. அத்தாக்கத்தின் விளைவால் புத்திலக்கிய வகைகள் பல தோன்றின. புத்திலக்கியத்தின் தோற்ற காலத்தில் எதிர்ப்புகள் பல எழுந்தன. அவ்வெதிர்ப்புக்களுக்கு மரபியல்வாதிகள் ஆதாரங்களாக இருந்தனர். இருப்பினும் காலவளர்ச்சியில் புத்திலக்கியங்களுக்குப் பெரும் வரவேற்பு இருந்த நிலையை வரலாற்றின் வழி அறியலாம்.

அவ்வரவேற்பால் புத்திலக்கியங்கள் உலகின் பல மொழிகளிலும் தாக்கம் பெற்றுப் பரவத்தொடங்கின. அப்பரவல் இந்தியாவிற்குள் ஆங்கிலேயரின் வரவால் வீறு கொண்டு எழுந்தது. இந்திய மொழிகளில் பரவல் நிகழ்ந்தபோதே எதிர்ப்பும் உடன் எழுந்தது. எதிர்ப்புநிலை பிற்காலத்தில் சிறந்த திறனாய்வுத்துறை வளர்வதற்கு வித்தாக அமைந்தது. புதுக்கவிதை, சிறுகதை, நாவல் போன்ற புத்திலக்கிய வகைகள் செல்வாக்குப் பெற்று வளர்ந்தன.

> "விருந்தே தானும்
>
> புதுவது புனைந்த யாப்பின் மேற்றே" (நூா. எண். 540)

என்று தொல்காப்பியர் குறிப்பிடுவார். இலக்கியச் சூழலில் இவ்விதமான புதுவரவுகள் உருவாவதற்கான நெகிழ்ச்சித் தன்மை இருப்பதால் புதுவகை இலக்கியங்கள் தோன்றுவதற்கான வாய்ப்புகள் ஏற்படுகின்றன. அவ்வகையில் புதுக்கவிதை, சிறுகதை, நாவல் போன்ற இலக்கிய வகைகள் புதிதாகத் தோற்றம் பெற்றன. அத்தோற்ற உருவாக்கத்தில்

புதுக்கவிதைக்குச் சிறப்பான இடம் உண்டு. காலவேகத்தில் கவிதைத் துறையில் இயல்பாக நிகழ்ந்த பரிணாமம் இஃதென மதிப்பிடுவர்.

தமிழில் புதுக்கவிதையின் தந்தையென்று கூறப்பெறும் பாரதியார் முதற்கொண்டு புதுக்கவிதைக்கான வரலாறு தொடங்குகிறது. நீண்டு வரும் தமிழ்ப் புதுக்கவிதை வரலாற்றில் முத்திரை பதித்த இடத்தைப் பெற்றவராக அப்துல் ரகுமான் விளங்குகிறார். புதுவகை இலக்கியங்கள் குறித்த ஆராய்ச்சியில் தொடக்க காலத்தில் இலக்கிய வடிவத்தைக் கருத்தில் கொண்டு ஆய்வு செய்யும் போக்கு இருந்தது. ஆய்வின் வளர்ச்சியால் தற்போது குறிப்பிட்ட படைப்பாளரைக் கருத்தில் கொண்டு ஆய்வு செய்கிற போக்கும் வளரலாயிற்று. அப்போக்கில் இவ்வாய்வில் தனி ஒரு கவிதைப் படைப்பாளரான அப்துல் ரகுமானின் கவிதைப்படைப்புகள் பல்வேறு கோணங்களில் ஆராய்ச்சி செய்யப்பெறும் வகையில் ஆய்விற்கான களம் அமைக்கப் பெற்றுள்ளது.

## ஆய்வுத் தலைப்பு

புதுக்கவிதை என்கிற ஆய்வுக்களத்தில் வரையறை கருதிக் குறிப்பிட்ட கவிஞரின் கவிதைப் படைப்புகளை ஆராயும் முயற்சி மேற்கொள்ளப் பெற்றுள்ளது. அவ்வகையில் "அப்துல் ரகுமான் கவிதைகள் ஓர் ஆய்வு" என்பது ஆய்வுத் தலைப்பாக அமைந்தது.

## ஆய்வு முன்னோடிகள்

தமிழ்ப் புதுக்கவிதைகளைக் கல்வி சாராத நிலையிலும் (Non-Academic Research) கல்வித்தளத்தைச் சார்ந்த நிலையிலும் (Academic Research) ஆய்வுகளை மேற்கொண்டுள்ளனர்.

வல்லிக்கண்ணன், சி.சு. செல்லப்பா, நா. வானமாமலை முதலியோரின் ஆய்வுகள் முதல் வகைக்குரிய சான்றுகளாகக் கூறலாம். காட்டாக, வல்லிக் கண்ணனின் "புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்" என்ற ஆய்வு நூலைக் குறிப்பிடுவது பொருந்தும்.

இரண்டாம் நிலையில் பல்கலைக்கழகத்தைச் சார்ந்து அமையும் ஆய்வுகளைக் குறிப்பிடலாம். கல்வித் தளத்தைச் சார்ந்தமையும் இவ்வகைப் புதுக்கவிதை ஆய்வுகளில் இருவிதமான போக்குகள் காணப்பெறுகின்றன.

1. புதுக்கவிதையினைப் பொதுமை நோக்கில் ஆராயும் நிலை.

எ.டு. சு. அரங்கராசு, தமிழ்ப் புதுக்கவிதை ஒரு திறனாய்வு (சென்னைப் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டத்திற்காக அளிக்கப் பெற்ற ஆய்வேடு, 1986).

2. குறிப்பிட்ட கவிஞரின் படைப்புகளை மையமிட்டுஆராயும் நிலை.

எ.டு. க. மீனாகுமாரி, ந. பிச்சமூர்த்தி படைப்புகள் ஓர் ஆய்வு (மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டத்திற்காக அளிக்கப் பெற்ற ஆய்வேடு, 1985).

3. புதுக்கவிதை உத்திகளை மையமிட்டு ஆராயும் நிலை.

அ) எ.டு. அப்துல் ரகுமான், புதுக்கவிதையில் குறியீடு (சென்னைப் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு, 1985).

ஆ) மு. சுதந்திரமுத்து, புதுக்கவிதையில் படிமம் (சென்னைப் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு, 1985).

இவ்வாய்வு இரண்டாம் வகையைச் சார்ந்தது. குறிப்பிட்ட கவிஞரான அப்துல் ரகுமான் கவிதைகளை ஆய்வதாக அமைந்துள்ளது. அப்துல் ரகுமான் கவிதைகளைச் சிலர் இளமுனைவர் பட்டத்திற்காக ஆய்வு நிகழ்த்தியுள்ளனர்.

எ.டு. அ) இலலிதவேலு, "அப்துல் ரகுமான் பால்வீதி - ஓர் ஆய்வு" (சென்னைப் பல்கலைக் கழகத்தில் எம்.ஃ.பில் பட்டத்திற்காக அளிக்கப் பெற்ற ஆய்வேடு, 1980).

ஆ) அமுதவல்லி, "நேயர்விருப்பம்-ஓர் ஆய்வு" (சென்னைப் பல்கலைக் கழகத்தில் எம்.ஃபில் பட்டத்திற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு, 1989).

எனினும் அவரது கவிதைகள் முழுமையினையும் ஆதாரமாகக் கொண்டு ஆய்வுகள் நிகழ்த்தப் பெறவில்லை. இச்சூழலைக் கருத்தில் கொண்டு "அப்துல் ரகுமான் கவிதைகள் - ஓர் ஆய்வு" என்ற தலைப்பு, முன்னோடிகளின் ஆய்வுப் பின்னணியைக் கருத்தில் கொண்டு அமைக்கப் பெற்றது.

**ஆய்வு நோக்கம்**

இவ்வாய்வு பின்வரும் நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது.

(அ) புதுக்கவிதை வரலாற்றில் அப்துல் ரகுமானுக்குரிய இடத்தை மதிப்பிடுதல்.

(ஆ) புதுக்கவிதையின் உள்ளடக்க வரலாற்றை அறிமுகநிலையில் அறிந்து, அப்பின்னணியில் அப்துல் ரகுமானின் உள்ளடக்கப் பரிணாமத்தினை அறிதல். மேலும் அப்துல் ரகுமானின் கவிதை வடிவம் குறித்தும் மதிப்பிடுதல்.

(இ) புதுக்கவிதையின் உத்திகளான பருப்பொருள் உத்திகள், நுண் பொருள் உத்திகளை விளக்கி, அப்துல் ரகுமானின் கவிதைகளில் அவ்வுத்திகள் இடம் பெற்றுள்ள நிலையினைக் கண்டறிந்து விளக்குதல்.

(ஈ) உளவியல் பார்வையில் அப்துல் ரகுமானின் கவிதைகளை நோக்குதல்.

(உ) புதுக்கவிதையாக்கத்தில் அப்துல் ரகுமான் செய்த பரிசோதனை முயற்சிகளை இனம் காணுதல்.

மேற்குறித்த ஆய்வு நோக்கங்களைக் கருவாகக் கொண்டு ஆய்விற்கான கருதுகோளும் அமைகிறது.

## ஆய்வு மூலங்கள்

அப்துல் ரகுமானின் கவிதைத் தொகுப்புகளான பால்வீதி (1974), நேயர் விருப்பம் (1978), சுட்டுவிரல் (1986), ஆலாபனை (1995) முதலியவை ஆய்வின் முதன்மை ஆதாரங்களாக (Primary Sources) அமைகின்றன. புதுக்கவிதை சார்ந்த ஆய்வு நூல்கள், கட்டுரைகள் சார்ந்த நூல்கள் முதலியவை (Secondary Sources) இரண்டாம் நிலைச் சான்றுகளாகின்றன. கள ஆய்வு முறையில் (Feild work) அமைத்துக் கொள்ளப் பெறும் பேட்டி (Interview Method) இரண்டாம் நிலைச் சான்று என்கிற வகையினைச் சார்ந்தமையும்.

## ஆய்வு அணுகுமுறை

கவிதைகளை ஆய்வுத்தளத்திற்கு உட்படுத்தும் பொழுது அக் கவிதையின் வடிவம் (Form), உள்ளடக்கம் (Content), உத்தி (Technique) போன்ற கூறுகளை மையப்படுத்தி ஆராயும் நிலை புறநிலை அணுகு முறையைச் (Deductive approach) சார்ந்தமையும். கவிதைப்பொருள் புலப் படுத்தும் சமூகம், கவிஞனுக்கும் சமூகத்திற்கும் உள்ள உறவுநிலை, கவிஞன் விரும்பும் சமூகம் போன்ற கூறுகளை மையமிட்டு ஆராயும் நிலை அகநிலை அணுகுமுறையாகும் (Inductive Criticism). முதலாவதாகக் கூறப்பெற்ற புறநிலை அணுகுமுறை இவ்வாய்வில் முதன்மைப் படுத்தப் பெற்றுள்ளது.

புதுக்கவிதை வரலாற்றில் அப்துல் ரகுமானின் இடத்தை மதிப்பிடும் முயற்சியிலும், கவிஞரின் வரலாற்றை விளக்கும் நிலையிலும், வரலாற்று அணுகுமுறை (Historical Method) பின்பற்றப்பெற்றுள்ளது. உள்ளடக்கத்தை வகைப்படுத்தி ஆராயும் முறையில் உள்ளடக்கப் பகுப்பாய்வும் (Content Analysis), பொருத்தமான இடங்களில் உளவியல் அணுகுமுறையும் (Psychological approach) செயல்படுத்தப்பெற்றுள்ளன.

## ஆய்வுப் பகுப்பு

"அப்துல் ரகுமான் கவிதைகள் ஓர் ஆய்வு" என்னும் இவ்வாய்வு கீழ்கண்ட ஏழு இயல்களில் பகுக்கப் பெற்றுள்ளது.

1. முன்னுரை
2. புதுக்கவிதை வரலாற்றில் அப்துல் ரகுமான்
3. உள்ளடக்கமும் வடிவமும்
4. புதுக்கவிதை உத்திகள்
5. உளவியல் பார்வை
6. பரிசோதனை முயற்சிகள்
7. முடிவுரை

துணைநூற்பட்டியல்

பின்னிணைப்புகள்

**பின்னிணைப்பு - 1**

1. அ. உள்ளடக்கக் கவிதைகளின் எண்ணிக்கை: அட்டவணை எண் - 1.
   ஆ. உள்ளடக்கக் கவிதைகளின் எண்ணிக்கை: அட்டவணை எண் - 2.
2. பருப்பொருள் உத்திக் கவிதைகளின் எண்ணிக்கை:அட்டவணை எண்- 3
3. அங்கத உத்திக் கவிதைகளின் எண்ணிக்கை: அட்டவணை எண் -4.
4. முரண் உத்திக் கவிதைகளின் எண்ணிக்கை: அட்டவணை எண் - 5.
5. குறியீட்டு உத்திக் கவிதைகளின் எண்ணிக்கை: அட்டவணை எண் - 6.

**பின்னிணைப்பு - 2**

1. அப்துல்ரகுமான் ஆய்வாளருக்கு அளித்த நேர்முகப்பேட்டி.

**பின்னிணைப்பு - 3**

புகைப்படங்கள்.

ஆய்வுத்தலைப்பு, ஆய்வின் முன்னோடிகள், ஆய்வின் நோக்கம், ஆய்வு மூலங்கள், ஆய்வின் அணுகுமுறை, ஆய்வுப்பகுப்புப் போன்ற உட்தலைப்பு களைக் கொண்டு ஆய்வின் அறிமுகமாக முன்னுரைப்பகுதி அமைந்துள்ளது.

“புதுக்கவிதை வரலாற்றில் அப்துல்ரகுமான்” என்பது இரண்டாவது இயலாகும். மேற்கத்தியச் சூழலிலும், தமிழகச் சூழலிலும் புதுக்கவிதை வரலாறு விளக்கப் பெற்று, புதுக்கவிதை வரலாற்றில் அப்துல்

ரகுமானுக்குரிய இடம் விளக்கப் பெற்றுள்ளது. அப்துல் ரகுமான் வானம்பாடிக் கவிஞரில்லை என நிறுவப் பெற்று, தொடர்ந்து அப்துல் ரகுமானின் வாழ்வும் பணியும் செறிவாகக் கூறப் பெற்றுள்ளது.

"உள்ளடக்கமும் வடிவமும்" என்ற மூன்றாவது இயலில் உள்ளடக்கம் அல்லது பொருள் குறித்த வரைவிலக்கணமும், பொருள்வகைப்பாடும் தரப் பெற்றுள்ளன. புதுக்கவிதையின் உள்ளடக்க வரலாற்றினையும், வரலாற்றின் தலைமைப் பண்புகளும் விளக்கப் பெற்று, புதுப்பரிணாமத்தில் அப்துல் ரகுமான் இருப்பது மதிப்பிடப் பெற்றுள்ளது. அப்துல் ரகுமான் கவிதைகள் தற்சார்பு பெற்ற கவிதைகள், தற்சார்பற்ற கவிதைகள் எனப் பகுக்கப் பெற்று, பகுப்பில் பொருத்தமான உட்தலைப்புக்களின் வழி உள்ளடக்கச் சிந்தனைகள் விரிவாக எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. சமூகம் சார்ந்த கவிதைகளில் சீர்கேடுகள் மிகுதியாக இருப்பினும் புதியதொரு சமுதாயத்தின் எழுச்சிக்கு நம்பிக்கையூட்டும் வண்ணம் கவிஞர் கவிதைகள் எழுதியிருப்பது இனங்காட்டப் பெற்றுள்ளது. அப்துல் ரகுமான் கவிதைகளில் யாப்பு வடிவங்கள், யாப்பின் திரிந்த வடிவங்கள், புதிய வடிவங்கள் போன்றவை இடம் பெற்ற நிலை விளக்கங்களுடன் இவ்வியலில் குறிப்பிடப் பெற்றுள்ளன. புதுக்கவிதை வடிவம், வசனகவிதை வடிவம், பரிசோதனை முயற்சிகள்- புதியன தேடும் தன்மைக்குச் சான்றாகும் நிலை மதிப்பிடப் பெற்றுள்ளது.

"புதுக்கவிதை உத்திகள்" என்பது நான்காவது இயலாகும். பருப் பொருள் வடிவ உத்திகளில் சித்திரமுறை, முரண், தலைப்பு, சொல்லுடைப்பு, சொல்லாடல், அடுக்குவருணனை, அங்கதம் போன்ற ஏழு பகுப்புக்களில் அப்துல் ரகுமானின் கவிதைகள் ஆராயப் பெற்றுள்ளன. இவ்வுத்திகளில் அங்கதஉத்தியும், முரண் உத்தியும் கவிஞரால் கையாளப் பெற்ற நிலை அட்டவணைப் படுத்தப் பெற்றுள்ளன. நுண்பொருள் உத்திகளில் குறியீடு, படிமம் போன்றவை கூறப்பெற்றுள்ளன. எட்டுவகைக் குறியீடுகள் கவிஞரின் கவிதைகளில் வகைப்படுத்தப்பெற்று அட்டவணையின் வழி மதிப்பிடப் பெற்றுள்ளன. படிமஉத்தி குறித்த

வரைவிலக்கணச் சிந்தனைகளின் பின்னணியில் படிமத்தை வினை, பயன், மெய், உரு என்ற நான்கு வகை களில் வகைப்படுத்தப் பெற்று, எடுத்துக்காட்டு விளக்கத்திற்கு உறுதுணையாகப் படிமம் குறித்த அட்டவணைகளும் இணைக்கப் பெற்றுள்ளன.

"உளவியல் பார்வை" என்ற ஐந்தாவது இயலில் உளவியலின் புதுமைப் போக்குகள், உளவியலுக்கு அறிஞர்களின் விளக்கங்கள், ஃபிராய்டின் மனம் பற்றிய கோட்பாடு, இலக்கியத்திற்கும் ஃபிராய்டியத்திற்கும் உள்ள தொடர்பு, இலக்கியத்தில் உளவியல் நிலைகள் போன்றவை விளக்கமாக விரித்துரைக்கப் பெற்றுள்ளன. இலக்கியப் படைப்பாக்கம், நனவிலி மனத்தை அடிப்படையாகக் கொண்டநிலை, படைப்பாளியின் சுயவரலாறு, தொல் படிவமும் உளவியல் நிலையும், தனிச்சிறப்பான சொற்கள், கவிஞர் - வாசகர் உறவு போன்ற உட்தலைப்புக்களின் வழி அப்துல் ரகுமான் கவிதைகள் உளவியல் ஆய்விற்குட்படுத்தப் பெற்றுள்ளன.

"பரிசோதனை முயற்சிகள்" என்பது ஆறாவது இயலாகும். ஹைகூ, இருசீர் வடிவக்கவிதைகள், ஹிந்தி இசைப் பாடல்கள் வடிவிலான கவிதைகள் உருவகக்கதைக்கவிதை, நாடகம், உரைநடை, சொற்பொழிவுத் தாக்கம்பெற்ற கவிதை போன்ற தலைப்புகளில் வடிவம் பற்றிய பரிசோதனை முயற்சிகள் விளக்கப்பெற்றுள்ளன. மீமெய்மையியம் உத்தி பரிசோதனையாக விளக்கப் பெற்றுள்ளது.

"முடிவுரை" என்ற இயலில் இதுகாறும் கண்ட முடிவுகள் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன. துணைநூற்பட்டியலை அடுத்துப் பின்னிணைப்பில் அட்டவணைகளும் அப்துல் ரகுமானுடன் நிகழ்த்திய நேர்முகப் பேட்டியும் சில புகைப்படங்களும் இணைக்கப்பெற்றுள்ளன.

## இயல் 2

## புதுக்கவிதை வரலாற்றில் அப்துல் ரகுமான்

### புதுக்கவிதை வரலாறு

மேற்கத்தியச் சூழலில் புதுக்கவிதை தோன்றிய வரலாறு

1. ஆங்கிலேய நாட்டுச் சூழல்
2. அமெரிக்க நாட்டுச் சூழல்

தமிழகச் சூழலில் புதுக்கவிதை தோன்றிய வரலாறு

1. முன்னோடிகள்
2. மணிக்கொடி குழுவினர்
3. எழுத்துக் குழுவினர்
4. பிற இதழ்க்குழுவினர்
5. வானம்பாடிக் குழுவினர்

அப்துல் ரகுமான் வானம்பாடிக் கவிஞரா?

எழுத்துக் காலமா?
வானம்பாடிக் கவிஞர்களின் தன்மைகள்

அப்துல் ரகுமானின் வாழ்வும் பணியும்

கல்விப்பணி

கவிதைத்துறை

படைப்புகள்

பதிப்புப் பணி

சிறப்புக் குறிப்புகள்





## 2. புதுக்கவிதை வரலாற்றில் அப்துல் ரகுமான்

இலக்கியம் காலங்கள் தோறும் புதுப்புது பரிணாமங்களைப் பெற்று வளர்ந்துள்ளது. அவ்வகைப் பரிணாமங்கள் இயல்பானவை; இயற்கையானவை.

"இலக்கியம் என்பது குறிப்பிட்ட யாப்பு வகைக்குள்ளாகவோ, குறிப்பிட்ட பொருள் சார்புக்குள்ளாகவோ எக்காலத்திலும் சிறைப்பட்டு நிற்பதில்லை. வளர்ந்து வரும் சமுதாயத்தின் உணர்வுக்கும் மாறிவரும் காலத்தின் தேவைக்கும் ஏற்ற வகையில் வடிவாலும், அமைப்பாலும் பொருளாலும் புதுப்புது வகையில் உருக்கொண்டு வளர்ச்சி பெறுதலே இலக்கியத்தின் இயல்பு"[1] என்று அறிஞர் கருதுவர்.

தமிழ் இலக்கியத்திற்கும் இக்கருத்து இயைந்து வருவதாக உள்ளது. கவிதை, தொல்காப்பியர் காலத்திலிருந்து இக்காலம் வரை பல மாற்றங்கள் பெற்று வளர்ந்திருப்பதை வரலாறு உணர்த்தியுள்ளது. குறிப்பாக இருபதாம் நூற்றாண்டில் அக்கவிதை இணையற்ற மாற்றம் பெற்றுப் புதுக்கவிதையாக வளர்ந்துள்ளது. தமிழ் இலக்கிய வகையில் புதுக்கவிதையாக மட்டுமல்லாமல் அஃது புதுமைத்தடத்தையும் பதித்துள்ளது. மரபுக் கவிதையில் வல்லமை பெற்றவர்களும் புதுக்கவிதை உலகில் சாதனை படைப்பது புதுக்கவிதையை மேலும் சிறப்பாக்குவது போல் உள்ளது.

புதுக்கவிதைக்குச் சிறப்பும் வளமும் சேர்க்கும் கவிஞர்களுள் அப்துல் ரகுமானும் ஒருவர். இவ்வியலில் புதுக்கவிதை வரலாற்றில் அப்துல் ரகுமானின் இடத்தை மதிப்பிடும் முயற்சி நோக்கமாக உள்ளது. அந்நோக்கத்திற்கு உறுதுணையாகும் வண்ணம் கீழ்க்கண்ட கருதுகோள்கள் அமைக்கப் பெற்றுள்ளன.

1. புதுக்கவிதை வரலாற்றைச் சுருக்கமாக விளக்குதல்

2. அவ்விளக்கப் பின்னணியில் அப்துல் ரகுமானின் இடத்தை மதிப்பிடல், அவரை வானம்பாடிக் கவிஞர் என மதிப்பிட்டமை பொருந்தாது என நிறுவுதல்.
3. பொதுநிலை ஆய்விற்குப் பயன்படும் வகையில் அவரது வாழ்வையும் பணியையும் விளக்குதல்

மேற்குறித்த கருதுகோள்களின் பின்னணியில் இனிவரும் ஆய்வுரைப் பகுதியைக் காணலாம்.

**புதுக்கவிதை வரலாறு**

புதுக்கவிதை வரலாற்றை இருவகைகளில் பகுத்துப் பார்க்கலாம்.

1. மேற்கத்தியச் சூழலில் புதுக்கவிதை தோன்றிய வரலாறு.
2. தமிழகச் சூழலில் புதுக்கவிதை தோன்றிய வரலாறு.

**1. மேற்கத்தியச் சூழலில் புதுக்கவிதை தோன்றிய வரலாறு:-**

ஆங்கிலேயர் இக்கவிதையை இக்காலக் கவிதை (Modern Poetry) புதுக்கவிதை (New Poetry), புதுப்பா (New Verse) போன்ற பெயர்களில் அழைத்தனர். பொதுவாக மேற்கத்தியச் சூழலில் புதுக்கவிதை வரலாற்றை இருவகைகளில் பகுத்துப் பார்ப்பது பயனுடைய முயற்சியாகும்.

அவையாவன:-

1. ஆங்கிலேய நாட்டுச் சூழல்
2. அமெரிக்க நாட்டுச் சூழல்

**1. ஆங்கிலேய நாட்டுச் சூழல்:-**

ஆங்கிலேயரின் ஆங்கில மொழியில் கிரேக்கம், இலத்தீன் போன்ற மொழிகளின் இலக்கணங்கள் ஆதிக்கம் செலுத்தின. ஆங்கிலேயக் கவிஞர்கள் இவ்வாதிக்க மரபிலிருந்து விடுபட விரும்பினர். இவ்விருப்பமும் எதிர்ப்பும், பதின்மூன்றாம் நூற்றாண்டிலிருந்து தொடங்கியது.

பிரஞ்சுப் புரட்சி, சமுதாய மாற்றம், புதுமை நாட்டம் போன்ற காரணிகள் எதிர்ப்புணர்வை மேலும் வலிமை பெறச் செய்தன. இரண்டாம்

உலகப் போரின் விளைவு பண்பாட்டு மரபில் நிகழ்ந்த வீழ்ச்சி (Breakdown of Cultural Tradition) மத நம்பிக்கைகளில் ஏற்பட்ட தளர்ச்சி, தகவல் தொடர்புச் சாதனங்களின் வளர்ச்சி, தனிமனித நிலையில் ஏற்பட்ட சிதைவு ஆகியன கவிஞர்களைப் பாதித்துள்ளன. எனவே இந்நிலை, புதுமை நாட்டத்திற்கு அடிகோலின.

இக்கால கட்டத்தில் உருவாகிய இயக்கங்களும் கவிதைக் கோட்பாடு களும் புதுக்கவிதையின் வளர்ச்சிக்கு ஆதரவு தந்தன. 1912-க்கும் 1917-க்கும் இடைப்பட்ட காலத்தில் அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும் படிமவியல் இயக்கம் செழிப்புடன் வளர்ந்தது. "மரபு வழியான கவிதைச் சொற்களையும் யாப்பு முறைகளையும் விடுத்து உருக்கவிஞர்கள் (படிமவியல் இயக்கம்) எந்தக் கருத்தினையும் எடுத்தாளவும் எந்த ஒலி முறைகளையும் பயன்படுத்தவும், உலகியற் சொற்களை எடுத்தாளவும் அவற்றின் மூலம் ஒரு உருவைப் படைக்கவும் விழைந்தார்கள்"[2] என்றும், இவர்கள் கவிதை விடுதலைப் பாவால் (Free verse) எழுதப் பெற்றது என்றும் கூறுவர்.

**அமெரிக்க நாட்டுச் சூழல்:-**

அமெரிக்க இலக்கியம் ஆங்கிலேயரின் சார்பைப் பெற்றிருந்தது. அமெரிக்கக் கவிஞர்கள் அச்சார்பிலிருந்து விடுபட முனைந்தனர். அமெரிக்காவில் நிகழ்ந்த உள்நாட்டுப் போர் (கி.பி.1861-1865) மக்களின் மனப் போக்கைப் பாதித்துச் சமுதாய மாற்றத்திற்கும் காரணியாகியது.

இச்சூழலில் தான் விட்மனின் பங்கு (1819-1892) குறிப்பிடத் தகுந்ததாக அமைந்தது. "புதுக்கவிதையின் தந்தையென மதிக்கப்படுபவர் விட்மன். இவர் தன்னுடைய கவிதை நூலில் (Myself, 1855) புதுக்கவிதையைச் செயல் முறைப்படுத்தினார்."[3] 1900களில் படிமவியல் இயக்கம் (Imagisim) இவ்வகைக் கவிதைக்கு ஊக்கம் கொடுத்து அமெரிக்கப் பிறப்பாளரான டி.எஸ்.

இலியட்டும் (T.S.Eliot) எஸ்ரா பவுண்டும் (Ezra pound) இவ்வியக்கத்தைச் சார்ந்து கட்டுப்பாடற்ற கவிதைகளை (Free verse) வளர்த்தார்கள்.

இ.இ.கம்மிங்ஸ்(E.E.Cummings) புதுக்கவிதையில் பல்வேறு பரிசோதனைகளைச் செய்துள்ளார். 1900களின் நடுவில் புதுக் கவிதை மதிப்பான கவிதை வடிவமாகி, ராபர்ட் லோவெல் (Rober Lowell) தியோடர் ரோய்த்க் (Theodore Roythke) வில்லியம் கரோல்ஸ் (William Carols) வில்லியம்ஸ் போன்ற அமெரிக்கக் கவிஞர்களால் கையாளப் பெற்றச் சிறப்பினைப் பெற்றது"[4]. இவ்வாறு புதுக்கவிதை வளம்பெறத் தொடங்கியது.

பொதுவாக மேற்கத்தியச் சூழலில் புதுக்கவிதை குறித்து மதிப்பிடும் போது, ஆங்கிலேயர் கிரேக்க, இலத்தீன் இலக்கண மரபுப் பிடியிலிருந்து விடுபட நினைத்ததை உணரலாம். அதேபோல், அமெரிக்கர், ஆங்கில மொழிச் சாயலிலிருந்து விடுபட விரும்பினர். இக்கருத்துருவாக்கம் முற்குறிப்பிடப் பெற்ற சூழல்களிலிருந்து பெறப்பெற்றதாகும். மாறிவரும் சமூகம், கோட்பாடுகள் போன்றவைகளுக்கேற்பக் கவிதையின் வடிவமும் பாடுபொருளும் மாறுபடுவது இயல்பாக அமைந்துள்ளது எனக் கருதலாம்.

**தமிழகச் சூழலில் புதுக்கவிதை தோன்றிய வரலாறு:-**

ஆங்கிலேயர் இந்தியாவை ஆண்டுகொண்டிருந்த காலத்தில் அடிமை நிலை இருந்தது. எனினும் ஆங்கிலக் கல்வி பயிலும் வாய்ப்புப் பரவலாக எல்லோர்க்கும் கிட்டியது. ஆங்கிலக்கல்வியின் வாயிலாக உலக அளவில் இயங்கும் இலக்கியப் போக்கினை அறிவதற்கான வாய்ப்பும் தமிழர்களுக்கு உருவானது. இவ்வாய்ப்பு ஏற்படுவதற்கு முன் வடமொழியுடன் மட்டுமே தொடர்பு பெற்று, மரபுகளுக்குள்ளேயே தமிழ் இலக்கியம் வட்டமடித்த நிலையும் மறுப்பதற்கில்லை.

தமிழில் புதிதாகத் துவங்கிய சிற்றிலக்கிய வகைகளின் பெருக்கம் மகிழ்வைத் தந்தாலும் குறிப்பிட்ட வடிவ வார்ப்பிற்குள் இலக்கியத்தின்

குறிப்பிட்ட பாடுபொருள் இயங்கிய நிலை இருந்தது. இந்நிலை தொடர்ந்த நிலையில் சோர்வுநிலை தருவதாயிற்று. கவிஞர்களின் கவித்திறம் வரவேற்கப் பெறவில்லை. மாறாகச் சமூகப் போலிகளையும் அதிகார வர்க்கங்களையும் பாடிப் பொருள் பெறும் இழிநிலை வளர்ந்து கொண்டே வந்தது. இச்சூழலில் தான் சிற்றிலக்கியங்களுக்குத் தேக்கநிலைக் காலம் (Age of Decadance) உருவாயிற்று.

மேற்கத்தியச் சூழலில் வளர்ந்த புதுக்கவிதை பிறமொழிகளிலும் தாக்கம் பெற்றது. அம்முறையில் தமிழ் மொழியிலும் அத்தாக்கம் நுழைந்தது. இந்நிகழ்வினால் முற்சுட்டிய தேக்கநிலைக் காலம் தகர்க்கப்பெற்றுப் புதுக்கவிதையின் வித்துக்கள் முளைத்து வெளிவரத் தொடங்கின. வெளிவரத் தொடங்கிய புதுக் கவிதையின் வரலாற்றைக் கீழ்க்கண்ட உட்தலைப்புக்களின் வழி மதிப்பிடுவது பயனுடையது ஆகும்.

1. முன்னோடிகள்
2. மணிக்கொடிக்குழுவினர்.
3. எழுத்துக்குழுவினர்.
4. பிற இதழ்க்குழுவினர்.
5. வானம்பாடிக் குழுவினர்.

**1. முன்னோடிகள்:-**

தமிழில் புதுக்கவிதை முன்னோடிகளின் வரிசையில் முதலிடம் பெறுபவர் சி. சுப்பிரமணிய பாரதியார் ஆவார். பாரதியாரின் வசன கவிதைகள் மேனாட்டாரின் தாக்கத்தால் பிறந்தவைகளாகும். குறிப்பாக, வால்ட்விட்மனை நன்கு அறிந்தவர் பாரதியார். அவ்வறிதலின் பயனாக "காட்சிகள்" எனும் வசனகவிதைகளை எழுதினார். சிலர் வசனகவிதைகளைப் புதுக்கவிதைகளிலிருந்து பிரித்துப் பார்க்க வேண்டுமென்று கூறுவர். இச்சிந்தனை தனித்ததொரு ஆய்விற்குரியது.

"பாரதியின் வசனகவிதை வேதங்கள் மற்றும் விட்மனின் கலவையாக உள்ளது. அவருடைய வசன கவிதையின் சிந்தனை, உள்ளடக்கம் வேதங்களிலிருந்தும் உருவப்போக்கு வேதமந்திர நடையிலிருந்தும் விட்மனின் வசன கவிதை நடையிலிருந்தும் பெறப்பட்டவை"[5] என்கிற கருத்து இங்கு குறிக்கத் தகுந்ததாகும்.

பாரதியாரின் வசன கவிதை முயற்சி ஒரு பக்கம் வரவேற்பைப் பெற்றாலும் மறுபக்கம் எதிர்ப்புக்களையும் சமாளிக்க வேண்டியிருந்தது.

> "சுவை புதிது, நயம் புதிது, வளம் புதிது
> சொற்புதிது ஜோதி கொண்ட
> நவகவிதை"[6]

என்று தம் கவிதையைப் பற்றி மகாகவி பாரதியார் குறிப்பிட்டுள்ளார். பாரதியார் கவிதைகளில் பல சோதனைகளைச் செய்தவர். எனவே, அவரைப் "புதுக்கவிதையின் தந்தையாக" மதிப்பிடுவதில் தவறில்லை.

**2. மணிக்கொடிக்குழுவினர்:-**

மணிக்கொடி இதழ் (1933-39) தமிழின் தற்கால இலக்கியத்தின் வளர்ச்சிக்கு ஆற்றிய பங்கு மிகப்பெரிது. தமிழில் புதுக்கவிதை வளம்பெறுவதற்கும் மணிக்கொடி உதவியுள்ளது.

புதுமைப்பித்தன் "மகாகாவியம்" என்ற உரைநடைக் கவிதையை வடித்துள்ளார். எனினும் இவரது சாதனை சிறுகதையில் வலிமை பெற்ற அளவு புதுக்கவிதைத் துறையில் வலிமைபெறவில்லை.

புதுக்கவிதைத் துறையில் குறிப்பிடத்தகுந்த சாதனை படைத்தவர், ந. பிச்சமூர்த்தி ஆவார். அச்சாதனை படைப்பதற்கு அவருக்குத் தூண்டு கோலாக இருந்த சூழலைக் குறித்து அவர், "சம்பிரதாயமான யாப்பு முறைகளுக்கு உட்படாமல் கவிதையைக் காணும் புதுக்கவிதை முயற்சிக்கு யாப்பு மரபே கண்டிராத வகையில் அமெரிக்கக் கவிஞர் வால்ட்விட்மன்

எழுதிய "புல்லின் இதழ்கள்" என்ற கவிதைத் தொகுப்புத்தான் வித்திட்டது. அதைப் படித்தபோது கவிதையின் ஊற்றுக்கள் எனக்குத் தெரிந்தன. பின்னர் பாரதியின் வசன கவிதையைப் படிக்க நேர்ந்தது. என் கருத்து வலுவடைந்தது இவற்றின் விளைவாக என் உணர்ச்சிப் போக்கில் இக்கவிதைகளை எழுதினேன்"[7] என்று குறிப்பிடுவது கருத்தக்கதாகும்.

ந. பிச்சமூர்த்தி, கு.ப. ராஜகோபாலன் இருவரையும் இரட்டையர் என்று வல்லிக்கண்ணன் குறிப்பிட்டுள்ளார். "ஆண்-பெண் உணர்ச்சிகளைப் பற்றி அகத்துறைக் கவிதைகள் படைத்ததில் கு.ப. ராஜகோபாலன் தமிழின் முதற் கவிஞர்"[8] என மதிப்பிடுவர். புதுக்கவிதைக்கு எதிர்ப்பு வந்தபோது க.நா.சுப்பிரமணியன் மயன் என்ற புனைப்பெயரில் எதிர்ப்புக்களை எதிர் கொண்டு ஆதரவுமுகத்தான் எழுதியுள்ளார். "பாரதி அடிச்சுவட்டில்" என்று தலைப்பிட்டு வல்லிக்கண்ணனும் திருலோக சீதாராமும் கவிதைகளை "கிராம ஊழியன்" என்ற இதழில் எழுதியுள்ளனர்.

### 3. எழுத்துக்குழுவினர்:-

"எழுத்து" இதழுக்கு முன் வந்த "சரஸ்வதி" என்ற இதழ் புதுக் கவிதைக்குத் தேவையான களம் அமைத்துக் கொடுக்கவில்லை. சி.சு.செல்லப்பா தொடங்கிவைத்த எழுத்துவில் (கி.பி.1959-1971) ந.பிச்சமூர்த்தி, கு.ப.ரா., க.நா. சுப்பிரமணியன் போன்றோர் புதுக்கவிதைகள் பல எழுதி யுள்ளனர். மேலும், தி.சோ. வேணுகோபாலன், டி.கே. துரைசாமி, பசுவய்யா போன்றோர்களும் எழுத்துக் குழுவினரில் குறிப்பிடத் தகுந்தவர்கள் ஆவார்கள். இக்காலக் கட்டத்தில் மேல்நாட்டாரின் தாக்கம் புதுக்கவிதைகளில் மிகுந்திருப்பதாக அறிஞர்கள் மதிப்பிடுகின்றனர். கடுமையான விமர்சனங்களும் உண்டு. புதுக்குரல்கள் என்ற புதுக்கவிதைகளின் தொகுப்புநூலை (1962) சி.சு.செல்லப்பா வெளியிட்டுள்ளார்.

எழுத்து இதழின் பெருமையை, "சி.சு. செல்லப்பாவால் இலக்கிய விமர்சனத்திற்கென்றே தொடங்கப்பெற்ற "எழுத்து" என்ற ஏடே புதுக்கவிதை யின் சக்திவாய்ந்த பிரச்சாரக் கருவியாக இருந்தது. புதுக்கவிதைக்காக வாதிட்டு, எதிர்ப்புகளை முனைமழுங்க வைத்துப் பலரைப் புதுக்கவிஞர் களாகவும், புதுக்கவிதை ரசிகர்களாகவும் ஆக்கிய பெருமை எழுத்துக்கு உண்டு".[9]

"இருபது ஆண்டுகளுக்கு முன்பே ந.பியும், கு.ப.ராவும் வல்லிக் கண்ணனும் பிறப்பித்துவிட்டதே புதுக்கவிதை. ஆனால் 1959 முதல் இன்று வரை நாட்களில்தான் இந்தப் புதுக்கவிதை இடம் கண்டுபிடிக்கப்பட்டு நாம கரணமும் இடப்பட்டது"[10] என்ற கருத்துக்கள் எழுத்து இதழின் சாதனை களுடன் தொடர்புடையது.

**4. பிற இதழ்க்குழுவினர்:-**

"நடை" என்னும் இதழ் "சேலத்திலிருந்து வந்தது(1968). சி. மணி, ந.முத்துச்சாமி, எஸ்.வைத்தீஸ்வரன், வ.து.சீனிவாசன் போன்றோர் நடை இதழில் எழுதியவர்களுள் குறிப்பிடத்தகுந்தவர்கள். நகுலன் என்பவர் "குருஷேத்திரம்" என்ற இதழைத் திருவனந்தபுரத்திலிருந்து வெளியிட்டார்.

முற்போக்கு இதழான தாமரையின் ஆசிரியர் ஜீவா. சிற்பி, தமிழ்நாடன், மீரா, சக்திக்கனல் போன்ற புதுக்கவிதைக் கவிஞர்கள் இவ்விதழில் உயர்வு பெற்றவர்களாகத் திகழ்ந்தார்கள். "கசடதபற" (1970-1973) மாத இதழாக வெளிவந்தது.

புதுக்கவிதையில் சோதனைக்கவிதைகள் பல இவ்விதழில் வெளியாயின. இவ்விதழ்க் கவிஞர்களுள் குறிப்பிடத்தகுந்தவர் ஞானக் கூத்தன்.

மேற்குறித்த இதழ்களெல்லாம் குறிப்பிடத்தகுந்த சிற்றிதழ்களாகும். குறிப்பாகப் புதுக்கவிதைத் துறைக்கு வளம் சேர்த்த இதழ்கள் எனவும் மதிப்பிடலாம்.

5. வானம்பாடிக் குழுவினர்:-

"வானம்பாடி" என்னும் இதழ் கோவையிலிருந்து வெளிவந்தது (1971-73). "இன்றைய நிலையில் கல்வி, கலை விஞ்ஞானம் முதலியவற்றின் வளர்ச்சிக்கும் சமுதாயத்தின் அடிப்படை மாறுதலுக்கு உள்ள இன்றியமையாத உறவு விளங்கி வருகிறது. இத்தகைய நெருக்கடிகளும் தீர்வுகளும் தற்காலத் தமிழ்க்கவிஞர்களைப் பாதிக்காமல் இருக்க முடியாது. வானம்பாடிக் கவிஞர்களும் இந்தப் பாதிப்பிற்குச் சிறிய அளவிலோ பெரிய அளவிலோ உட்படு வதனால்தான் இவர்கள் இவற்றைப் பற்றிக் கவிதை படைக்கிறார்கள்"[11] என்று ஞானி மதிப்பிட்டுள்ளமை இங்கு சிந்திக்கத்தக்கதாகும். வானம்பாடிக் கவிஞர்கள் தங்களை "மானுடம் பாடும் வானம்பாடிக் கவிஞர்கள்" என்று கூறிக் கொண்டனர்.

" மௌனங்களும் விம்மல்களும்
பிரார்த்தனைகளாய் இருந்த
கர்ப்பகிரகங்களில் - எம்
ஆவேச சங்கீதங்கள்
அலைபாய்கின்றன
மனித இதயங்களின்
சிவப்பு நீரோடைகளில்
எம் உயிர்ப்படகு
பயணம் செய்கின்றது"[12]

என்று வானம்பாடிக் கவிஞர்களின் போக்கை "நாங்கள்" என்ற கவிதைத் தலைப்பில் சிற்பி வெளிப்படுத்தியுள்ளார். "நாங்கள்" என்கிற குழுவில் சிற்பி, புவியரசு, வேலுச்சாமி, ரவீந்திரன், நக்கீரன், இளமுருகு, பிரபஞ்சன், சக்திக்கனல், சகுந்தலா, கதிரேசன், ஜெயப்பிரகாசம், அக்கினிபுத்திரன், மேத்தா, கங்கைகொண்டான், பாலா, தமிழன்பன், தமிழ் நாடன், இன்குலாப் போன்ற கவிஞர்கள் இடம்பெற்றிருந்தார்கள்.

"வானம்பாடிக் கவிஞர்கள் சமுதாயத்தை உற்றுநோக்கும் பார்வை கொண்டவராக இருந்தனர். எழுத்து வட்டத்தினரை விட வேறுபட்ட இவர்களின் கவிதைகளில் எதிர்காலநம்பிக்கை, கொள்கைத்தெளிவு, நாட்டுப்பற்று, நேர்மை, தமிழ்மரபு, உணர்ச்சி, எளிமை, பொறுப்புணர்ச்சி, சமுதாய நேயம், கூட்டுறவு மனோபாவம் முதலியன மூன்றாவது காலகட்டத்துக் கவிஞர்களிடத்தில் குறிப்பிடத்தக்க விதத்தில் பரவலாகக் காணப்படுகிறது"[13] என்று அறிஞர் மதிப்பிடுவர்.

புதுக்கவிதையின் முன்னோடியாக மகாகவி பாரதியாரைக் குறிப்பிடலாம். புதுக்கவிதைக்குரிய இலக்கிய அங்கீகாரம் எழுத்து இதழின் காலத்தில்தான் கிடைத்தது. எழுத்து இதழைச் சார்ந்த கவிஞர்களிடம் மேனாட்டாரின் தாக்கம் மிகுந்துள்ளதை அறிஞர்கள் சுட்டிக்காட்டியுள்ளனர். வானம்பாடி இதழைச் சார்ந்த கவிஞர்களிடம் கொள்கை முழக்கம் இருந்தது. சமுதாயப் பார்வை கவிதைகளில் மேலோங்கியிருந்தது.

முற்குறித்த வரலாற்றில் அப்துல் ரகுமானை அறிஞர்கள் சிலர் வானம்பாடிக் கவிஞரென மதிப்பிட்டுள்ளனர்.

**அப்துல் ரகுமான் வானம்பாடிக் கவிஞரா?**

"மேத்தா, இன்குலாப், அப்துல் ரகுமான் போன்ற வானம்பாடிக் காலக் கவிஞர்களிடம் சிலப்பதிகார இலக்கியம் தொடர்பான குறியீடுகளைக் காணமுடிகிறது"[14] என்று வானம்பாடிக் காலக் கவிஞராக அப்துல் ரகுமானைக் குறிப்பிடுவர்.

வானம்பாடியில் கவிதை படைத்தவர்களை, வீ. உண்ணாமலை இருவகையில் பகுப்பார்.

1. மரபுக்கவிதையிலிருந்து புதுக்கவிதைக்கு வந்தவர்கள்.
2. புதுக்கவிதைக்கு நேரடியாக வந்தவர்கள்.

"சிற்பி, நா.காமராசன், மீரா, அப்துல் ரகுமான், தமிழன்பன், தமிழ்நாடன் மு. மேத்தா ஆகியோர்கள் முதல் வகையைச் சார்ந்தவர்கள்"[15] என்று குறிப்பிடுவார். "தொடக்க காலத்தில் மரபுக்கவிதை எழுதிய வானம்பாடிக் கவிஞர்களில் மீரா, சிற்பி, அப்துல் ரகுமான், நா. காமராசன், நடராசன், மு.மேத்தா ஆகியோர் குறிப்பிடத் தகுந்தவர்கள்"[16] என்று இராமச்சந்திரனும் மதிப்பிட்டுள்ளார்.

க. ஞானச்சந்திரன்[17] ஹெச். ரசூல்[18] ஆகியோர்களும் அப்துல் ரகுமானை வானம்பாடிக் குழுவினர் வரிசையில் இணைத்துக் கூறியுள்ளனர். ஹெச். ரசூல் அப்துல்ரகுமானை, இடதுசாரிக் கருத்துக்களின் சாயலைப் பெற்றவர் என்று மதிப்பிட்டுள்ளார். அப்துல் ரகுமானை வானம்பாடிக் கவிஞர்கள் வரிசையில் இணைத்துப்பார்க்கும் மேற்குறித்த மதிப்பீடு பொருத்தமானதாக இல்லை. இக்கருத்துக்களைச் சான்றுகளின் வழியாகவும் உறுதிப்படுத்தலாம்.

**எழுத்துக் காலமா?**

அப்துல் ரகுமான் 1937-இல் நவம்பர் திங்கள் 9-இல் பிறந்தார். அவர்தம் பதின்மூன்றாவது வயதில் எட்டாவது படித்துக் கொண்டிருந்தபோது முதல் கவிதையை எழுதினார். அக்கவிதை 1950-இல் பள்ளி ஆண்டு மலரில் வெளிவந்தது. அக்கவிதை பின்வருமாறு:-

" எழிலன்னை ஆட்சியடா - அது
எங்கெங்கும் காணுதடா
பொழிலெங்கும் பாடுகிறாள் - புதுப்
பூக்களில் புன்னகைத்தாள்
மாலை மதியத்திலும் - அந்தி
மந்தார வானத்திலும்,
சோலையின் தென்றலிலும் - சுக

7

சோபனம் கூறுகிறாள்

மலைகளின் மோனத்திலே - ஆட

வானவில் வண்ணத்திலே

அலைகளின் பாடலிலே - அவள்

அருள்பொங்கி வழியுதடா"[19]

என்பது அப்பாடல். இளங்கலை படித்துக் கொண்டிருந்த காலம் (1957-59). ஆங்கிலப் பேராசிரியர் திரு.சக்திவேல் "சர்ரியலிசம்" என்பது பற்றி எனக்கு உரைத்தார். அதனைக் கேட்டபிறகு சர்ரியலிசக் கவிதைகளைச் செய்தேன்[20] என்கிற கருத்து இங்கு குறிக்கத்தக்கது. 1959-இல் எழுத்து இதழ் தோன்றுவதற்கு முன்பே மீமெய்ம்மையியப் பரிசோதனைக் கவிதைகளைச் செய்தவர் அப்துல் ரகுமான். இவரை சர்ரியலிசக் கவிஞர்களில் முதலாமாவர் என்றும் குறிப்பிடலாம்.

"ஐம்பதுகளின் பிற்பகுதியில் புதுக்கவிதையோடு எனக்கு அறிமுகம் ஏற்பட்டது. அப்போது நான் ந.பிச்சமூர்த்தியை அறிந்திருக்கவில்லை. "எழுத்து" இதழும் பிறக்கவில்லை"[21] என்று அப்துல் ரகுமான் கருத்துத் தெரிவித்துள்ளார்.

எனவே, அப்துல் ரகுமான் எழுத்துக்காலத்திற்கு முன்பே புதுக் கவிதையில் ஈடுபட்டவர் என்பதை அறியலாம். மேலும் அக்காலத்திலேயே புதிய பரிசோதனைகளில் கவிதை யாத்த கவிஞராகவும் திகழ்ந்ததை அறியலாம்.

**வானம்பாடிக் கவிஞர்களின் தன்மைகள்:-**

வானம்பாடிக் குழுவினர் சமுதாயக் கண்ணோட்டம் உள்ளவர்கள். குறிப்பாகப் பொதுவுடைமைச் சித்தாந்தம் அக்குழுவினரிடம் பரவலாகக் காணப்பெற்றது. "வானம்பாடி கட்சி சார்பற்ற ஒரு கவிதை இயக்கம். சமுதாயப் பார்வையை முன் வைத்துக்கவிதை படைப்பவர்களின்

இயக்கம், இது முற்போக்குச் சிந்தனையுடைய அனைவரையும் ஏற்றுக் கொள்ளும் இயக்கம்"[22] என்கிற கருத்து முற்சுட்டிய கருத்தை அரண் செய்யக் காணலாம். மேலும் வானம்பாடிக்குழுவினரின் கவிதைகள் வெளிவந்த இதழ்களை இங்கு வரிசைப்படுத்திப் பார்ப்பதும் பயனுடையது ஆகலாம். வானம்பாடி, தாமரை, செம்மலர் போன்ற இதழ்களின் வழி வானம்பாடிக் குழுவினர்களின் கவிதைகள் அவ்வப்போது வெளிவந்துள்ளன.

"எங்கள்
வைகறைக்காய்க் கூவும்
மனிதாபிமானச் சேவல்கள்
ஓநாய்களுக்குத்
தீனியாகின்றன
அந்தச்
சிவப்புத் துளிகளின் மேல்
எங்களது
யாத்திரை தங்களது"[23]
. . . . . . .

என ரவீந்திரன் "கறுப்புக் குயில்கள்" என்ற தலைப்பில் பாடியுள்ளார்.

"யுத்த காலத்து
இரவு நேர
நகர வீதிகளைப் போல
வெளிச் சென்று
இருண்டு போகும்
உன் இதய வீட்டுக்கு
சிவப்பு வெளிச்சத்தை
நான்
கொண்டு தரவே[24]
.......

என்பது பிரபஞ்சனின் கவிதைச் சிந்தனையாகும்.

"வானம்பாடி" குறித்து அப்துல் ரகுமான் குறிப்பிடுவதாவது: "சமுதாயப் பார்வையும், முற்போக்கு எண்ணங்களையும் கொண்ட இளைஞர்களால் இலவச வெளியீட்டாக் வெளியிடப்பட்ட "வானம்பாடி" இளைஞர்களிடையே கிளர்ச்சியையும் உந்துதலையும் உண்டாக்கிப் பெரும்பரபரப்பை ஏற்படுத்தியது.[25]

வானம்பாடிக் குழுவினரின் கொள்கைகள் அப்துல் ரகுமானுடன் இயைந்து வரவில்லை. வானம்பாடிக் கவிஞர்களின் சமுதாயக் கண்ணோட்டத்தில் உள்ள "மனிதாபிமானம்" என்கிற உணர்வு அப்துல் ரகுமானுக்கு உடன் பாடானது. ஆனால் வானம்பாடிகளின் பொதுவுடைமைப் போக்குக் கவிஞருக்கு உடன்பாடில்லை.

அப்துல் ரகுமானின் நண்பர்கள் வானம்பாடிக் குழுவில் இருந்தனர். மேலும் ஓரிரு கவிதைகள் வானம்பாடியில் பிரசுரிக்கப்பட்டிருந்தன. இவை களை அடிப்படையாகக் கொண்டு அப்துல் ரகுமானை வானம்பாடிக் கவிஞரென முத்திரை குத்துவது பொருந்தாது.

திட்டங்கள்,[26] அறிதுயில் போன்ற தலைப்பிலான கவிதைகள் வானம்பாடி இதழில் நண்பர்கள் பிரசுரிக்கப் பெற்றிருந்தன.

வானம்பாடியினருக்கும் அப்துல் ரகுமானுக்கும் இடையில் பல்வேறு முரண்கள் உள்ளன.

1.அப்துல் ரகுமான் இயல்பிலேயே சமயப்பற்றுள்ளவர். வானம்பாடியினர் இந்நிலையிலிருந்து வேறுபட்டு இருந்தார்கள்.

(எ.கா)

"சாலைக்கடவுள்களே! நடுச்
சாலைக் கடவுள்களே
வழியில் தடையாய்
முள்ளை பரப்பி
வளர்ந்து நிற்கும் கள்ளிகளே
............

ஆயிரம் யானைப் பலத்தோடு

நிற்கும்

நவீன விஞ்ஞான

வாகன மேறி

நாளை

நாங்கள்

பயணம் தொடர்கையில்

நீங்கள்

எங்கள் கால்களில் சிக்கி

நிச்சயம் நிச்சயம்

அழியப் போகிறீர்கள்''[27]

இக்கவிதை வரியைப் போன்று பல கவிஞர்கள் பாடியுள்ளனர். இப்போக்கிலிருந்து அப்துல் ரகுமான் வேறுபடுகிறார் என மதிப்பிடலாம்.

2.வானம்பாடிக் குழுவினர் திராவிட இயக்கங்களுக்கு எதிரானவர்கள். ஆனால் அப்துல்ரகுமான் அவ்வியக்கங்களோடு தொடக்க காலத்திலிருந்தே தொடர்பு பெற்றவராக உள்ளார்.

3.வானம்பாடிஇயக்கம் தோற்றம் பெற்றபோதும் அதன் வளர்ச்சிப் போக்கிலும் அப்துல்ரகுமான் பங்கேற்றது இல்லை. இச்சூழலில் அவரை வானம்பாடிக் குழுவில் பொருத்திப் பார்க்க இயலாது.

4.அப்துல்ரகுமான் "மீமெய்ம்மையியம்" போன்ற மேனாட்டுப்போக்கில் ஆர்வம் காட்டிக் கவிதைகள் படைத்துக் கொண்டிருந்தார். மேனாட்டு இலக்கிய இயக்கங்களின் போக்கையும் வரலாற்றையும் அறிந்தவர். ஆனால் வானம்பாடியினர் அவ்வியக்கங்களின் தாக்கத்தைத் தமிழ்க்கவிதைகளில் புகுத்திக் காட்டாதவர்கள்.

5.அப்துல்ரகுமானின் இலக்கியப் புலமையின் தரத்தை மேனாட்டு இலக்கியநெறி அறிந்தவர்களுக்குத்தான் பெரிதும் மதிப்பிட இயலும். வானம் பாடியினர் மானுடம்பாடும் வானம்பாடியினர் என்று கூறிக்கொண்டு வெகுசனங்களிடம் கவிதைகளை எடுத்துச் சென்றனர்.

பொதுவாக மேற்குறித்த கருத்துக்களையெல்லாம் உற்று நோக்கி மதிப்பிடும்போது வானம்பாடி வர்க்கத்திற்கும் அப்துல் ரகுமானுக்கும் இடையில் உள்ள இடைவெளியை உணரலாம். இவ்விடை வெளியை அப்துல்ரகுமான் கூற்றின் வழி மேலும் உறுதிப்படுத்தலாம். "நான் வானம்பாடிக் கவிஞனில்லை. என் நண்பர்கள் அந்தக் குழுவில் இருந்ததாலும் எனது இரண்டு கவிதைகள் வானம்பாடியில் பிரசுரமானதாலும் பலர் என்னை வானம்பாடிக் கவிஞனாக எண்ணியே விமர்சிக்கிறார்கள்[28] என்று கூறுகிறார். மேலும் 'நான் எந்த இயக்கத்தையும் சார்ந்தவனில்லை. ஒரு குறிப்பிட்ட இயக்கத்தில் என்னை ஐக்கியப்படுத்தி, முத்திரை குத்திக்கொள்வதை நான் விரும்பியதில்லை'[29] என்று தெளிவாக எடுத்துரைத்துள்ளார். மேலும், "எழுத்து இதழில் எழுதாத கவிஞர்களுள் ஞானக்கூத்தன், அப்துல் ரகுமான் ஆகிய இருவர் மட்டுமே குறிப்பிடத் தகுந்தவர்கள்"[30] என்பர். எனவே எழுத்துக்குழுவிலும் இல்லாமல் வானம்பாடிக் குழுவிலும் இல்லாமல் தமக்கெனப் புதுத்தடங்களமைத்துப் புதுக்கவிதை வரலாற்றில் தனி முத்திரையினைப் பதித்தவராக அப்துல் ரகுமான் விளங்குவதை உணரலாம். ''அப்துல் ரகுமான் இயக்கங்களைச் சார்ந்திருப்பது சிறை'' என்கிறார்.[31] இச்சிந்தனை இங்கு இணைத்துக் கருதத்தக்கதாகும். தமிழ் இலக்கியத்திற்கு மேனாட்டுக் கவிதை உத்திகளை அறிமுகப்படுத்தி, எழுத்துக்காலத்திற்கு முன்பே தமிழ்ப் புதுக்கவிதை உலகத்திற்கு அடியெடுத்துத்தந்து தனித்தன்மையுடன் திகழ்ந்தவர் அப்துல் ரகுமான் ஆவார்.

**அப்துல் ரகுமானின் வாழ்வும் பணியும்:-**

அப்துல் ரகுமானின் கவிதைகளை மதிப்பிடுவதற்கு அவரின் வாழ்க்கை வரலாற்றைப் பற்றிய செய்திகள் துணையாக நிற்கும் எனலாம். வாழ்க்கை வரலாற்று அணுகுமுறை (Biographical Approach) கவிஞரின் கவிதைகளைத் தெளிவாக மதிப்பிடவும் இருண்மைப் பகுதிகளைப் (Obscurity) புரிந்து கொள்ளவும் உதவும் எனக் கூறலாம்.

**கவிக்குடும்பம்:-**

எஸ். சையது அகமதுவிற்கும் ஸைனபீக்கும் மகனாக 1937இல் அப்துல் ரகுமான் பிறந்தார். மதுரையில் உள்ள கீழச்சந்தைப்பேட்டை அவரின் பிறப்பிடமாகும். இரு சகோதரர்களும் ஒரு சகோதரியும் இவருக்கு உடன் பிறந்தவர்கள் ஆவார்கள்.

அப்துல் ரகுமானின் தந்தையும் தாத்தாவும் கவிஞர்களாக இருந்துள்ளனர். தந்தை சையது அகமது எழுதிய கவிதைகள் வட நாட்டி லிருந்து வெளிவந்த உருது இதழ்களில் வெளியாகியுள்ளன. “மஹுதி” என்ற புனை பெயரில் அவர் எழுதி வந்தார். மேலும் ருஷ்யப் புரட்சி, இமயத்தின் சிரிப்பு (1934) போன்ற நூல்களையும் எழுதியுள்ளார். ரம்ஜான் காலங்களில் அதிகாலையில் பாடுவதற்கான கவிதைகள் பலவும் அவர் எழுதியுள்ளார்.

அப்துல் ரகுமானின் தந்தைக்குத் தந்தையார் உருதுவில் மட்டுமின்றி, பாரசீக மொழியிலும் கவிதை புனைவதில் வல்லவர். பாட்டி அஜீஷாபேகம் ஆவார். இவர் ஆர்க்காடு நவாப் முகமதலியின் பரம்பரையில் வந்தவர்.

கவிக்குடும்பத்தில் தோன்றிய அப்துல் ரகுமான் மதுரையைச் சேர்ந்த “சலீமா பேகம்” என்பவரை 1964இல் மணந்தார். ஒரு மகனும் (சையது அசராப்) ஒரு மகளும்(வசிதாபானு) உள்ளனர்.

**கல்வியும் பணியும்:-**

பள்ளி இறுதி வகுப்பிற்குப் (1954) பிறகு தையற்கடையில் சிறிது நாட்கள் பணியாற்றினார். மதுரை தியாகராசர் கல்லூரியில் ஆறு ஆண்டுகள் (1955-1961) தமிழைச் சிறப்புப் பாடமாகக் கொண்டு பயின்றிருக்கிறார். இளங்கலை (1959), முதுகலைப் (1961) பட்டங்களைப் பெற்றவர். சென்னைப் பல்கலைக் கழகத்தின் வழி "புதுக்கவிதையில் குறியீடு" என்ற தலைப்பில் 1985-இல் முனைவர் பட்டம் பெற்றார் என்பது குறிப்பிடத்தகுந்தது.

தமிழ்நாடு இதழில் துணையாசிரியராகப் பணியாற்றியுள்ளார்.(1961) வாணியம்பாடி இசுலாமியக் கல்லூரியில் விரிவுரையாளராகவும் தமிழ்த்துறைத் தலைவராகவும் பணியாற்றிப் பின் பணிவிருப்ப ஓய்வு பெற்றார். (1961-1993), தற்போது முழு அளவில் இலக்கியப் பணி ஆற்றிவருகிறார்.

**கவிதைத்துறை:-**

எட்டாம் வகுப்பில் பள்ளிச் சிறுவனாக இருந்த போதே "தேவதாஸ்" என்ற பெயரில் அறுசீர் விருத்தப்பாவை எழுதினார். ஏழாம் வகுப்பில் கவிஞர் திருக்குரான் முழுமையையும் படித்துள்ளார். இயல்பாகவே இவருக்குப் படிப்பதில் பெரு விருப்பம் இருந்திருக்கிறது. சிறுவனாக இருந்தபோதே புத்தகமோ பத்திரிக்கையோ கண்ணில் பட்டவுடன் படிக்க *உட்கார்ந்து* விடுவேன், அப்பா வெளியூர் சென்றால் பல புத்தகங்கள் வாங்கி வருவார். காங்கிரஸ் படிப்பகம், கம்யூனிஸ்ட் படிப்பகம், தி.க. படிப்பகம் என்று எங்கள் பகுதியில் இருந்தது பயன்படுத்தினேன்[32] என்று தான் படிக்க உகந்த சூழல் களைக் கவிஞர் நினைவு கூர்ந்த நிலை இணைத்துப் பார்க்கத்தக்கதாகும்.

"காதல் கொண்டேன்" என்ற தலைப்பில் இவர் எழுதிய கவிதை ஆனந்த விகடனில் வெளி வந்தது (1956).தந்தையின் உறுதியால் உருதுமொழியினையும் தாத்தாவின் உதவியால் பாரசீக மொழியினையும் கற்றுணர்ந்தார். அரபுமொழிக்கவிஞரான கலீல் கிப்ரானிடம் தணியாத தாகம் கொண்டுள்ளவராகத் தெரிகிறது. கல்லூரி

நாட்களில் தாகூர், காண்டேகர், கீட்ஸ், ஷெல்லி, சேக்ஸ்பியர், பைரன் ஆகியோரின் படைப்புகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருக்கிறார்.

மரபுக் கவிஞரான அப்துல் ரகுமான் ஆங்கில இலக்கிய அறிவால் புதுக்கவிதையில் நாட்டம் செலுத்தினார். "மண்" என்ற தலைப்பில் இவர் வசன கவிதையொன்று எழுதினார்(1959). கல்லூரி மலரில் அது வெளியிட மறுக்கப்பெற்றது. அக்கவிதையை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து அதே மலரில் வெளியிடும் சூழல் கிடைத்தது. இக்கவிதையை அறிஞர் அண்ணா பலமுறை படிக்குமாறு கேட்டு மகிழ்ந்திருக்கிறார்.

## படைப்புகள்

| வ.எண் | பெயர் | நூலின் பெயர் | ஆண்டு |
|---|---|---|---|
| 1. | அப்துல் ரகுமான் | பால்வீதி | 1974 |
| 2. | ” | நேயர் விருப்பம் | 1978 |
| 3. | ” | இலட்சியக் கவிஞர் இக்பால் | 1985 |
| 4. | ” | இன்றிரவு பகலில் | 1985 |
| 5. | ” | உன் கண்ணால் தூங்கிக் கொள்கிறேன் | 1985 |
| 6. | ” | கரைகளே நதியாவதில்லை | 1985 |
| 7. | ” | அவளுக்கு நிலா என்று பெயர் | 1986 |
| 8. | ” | சலவை மொட்டு | 1986 |
| 9. | ” | முட்டை வாசிகள் | 1986 |
| 10. | ” | மரணம் முற்றுப்புள்ளி அல்ல | 1986 |
| 11. | ” | சுட்டுவிரல் | 1986 |
| 12. | ” | விலங்குகள் இல்லாத கவிதை | 1987 |
| 13. | ” | சொந்தச் சிறைகள் | 1987 |
| 14. | ” | புதுக்கவிதையில் குறியீடு | 1990 |
| 15. | ” | ஆலாபனை | 1995 |
| 16. | ” | பித்தன் | 1998 |
| 17. | ” | முத்தமிழின் முகவரி | 1998 |
| 18. | ” | விதை போல் விழுந்தவன் | 1998 |

**பதிப்புப்பணி**

பல கவிஞர்களின் கவிதைகளை நூலாக வெளியிட்டு உதவியுள்ளார். 1975-இல் மாணவர்களின் கவிதைத் தொகுப்பு நூல்களான "செவ்வந்தி" 1976-இல், இலவசத்திற்கு ஒரு விலை 1976-இல், "மயானத்தில் ஒரு தொட்டில் 1977இல் "நீருக்குத்தாகம்" போன்ற நூல்களை வெளியிட்டுள்ளார்.

"தீபங்கள் எரியட்டும்" என்ற கவிதைத் தொகுப்பு 1978-இல் வெளி வந்தது. இக்கவிதைத் தொகுப்பில் அப்துல் ரகுமானின் தலைமைக் கவிதை யும் பிற கவிஞர்களின் கவிதைகளும் இடம்பெற்றுள்ளன. இவர் குணங்குடியார் கோவை (1980) என்ற நூலையும் வெளியிட்டுள்ளார்.

**பட்டச் சிறப்புக்கள்**

| வ.எண். | அமைப்பின் பெயர் | பட்டத்தின் பெயர் | ஆண்டு |
|---|---|---|---|
| 1. | தமிழ் வளர்ச்சி மன்றம் குடியேற்றம் | "கவிக்கோ" | 1967 |
| 2. | " " | "உருவகப்பேரொளி" | 1973 |
| 3. | இலக்கியப் பேரவை வேலூர் | "கவிமாமன்னர்" | 1975 |
| 4. | இலக்கிய நண்பர்கள் வேலூர் | "கவிமாமன்னர்" | 1977 |
| 5. | பறம்புமலை பாரிவிழா | "கவியரசு" | 1986 |
| 6. | தஞ்சைத்தமிழ்ப் பல்கலைக | | |
| 7. | கழகம் | "தமிழன்னை" | 1989 |
| 7. | இலக்கிய நண்பர்கள் வட்டம் வேலூர் | "தமிழ் ஞாயிறு" | 1989 |
| 8. | தமிழக அரசு | "பாரதிதாசன்" | 1990 |
| 9. | முரசொலி அறக்கட்டளை | "பொற்கிழி ஒரு இலட்சம்" | 1997 |

**சிறப்புக் குறிப்புகள்:-**

மொழி வளர்ச்சிக்காக, "முத்தமிழ் விழாவை" அப்துல் ரகுமான் நடத்தியுள்ளார். "கவிராத்திரி" என்ற நிகழ்ச்சியை அறிமுகப்படுத்திப் பல தமிழ்க்கவிஞர்களை உருவாக்கும் பணிக்கு அடிகோலியவர். இவரால் ஏற்படுத்தப்பெற்ற "ஏதேன்" சிறந்த இலக்கியக் கழகமாகும். அக்கழகத்தின் தலைமை ஏற்றுப் பல படைப்பாளர்களை உருவாக்கிய சிந்தனைவாதி ஆவார். இவரது கவிதைத் தொகுப்புகள் கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் பாட நூலாக இருப்பது குறிக்கத்தக்கதாகும்.

# முடிவுகள்

புதுக்கவிதையின் முன்னோடி மகாகவி பாரதியார் ஆவார். புதுக் கவிதைக்குரிய இலக்கிய அங்கீகாரம் எழுத்து இதழின் காலத்தில் (1954-1970) கிடைத்தது.

எழுத்து இதழைச் சார்ந்தும், பிற இதழ்களைச் சார்ந்தும் புதுக்கவிதைக் கவிஞர்கள் வளர்ந்தனர். பிற இதழ்களின் வரிசையில் குறிக்கத் தகுந்தது வானம்பாடி இதழாகும்.

எழுத்து இதழைச் சார்ந்த கவிஞர்களின் கவிதைகளில் மேனாட்டாரின் இலக்கியத் தாக்கம் மிகுந்திருந்தது. வானம்பாடி இதழைச் சார்ந்த கவிஞர் களின் கவிதைகளில் சமுதாயப் பார்வை விஞ்சி இருந்தது. குறிப்பாகப் பொதுவுடைமைச் சிந்தனைப் பரவலாக இருந்தது. அவ்வகையில் கொள்கை முழக்கம் இருந்த நிலையும் மறுப்பதற்கில்லை.

அப்துல் ரகுமான் பதின்மூன்றாவது வயதில் பள்ளி ஆண்டுமலரில் கவிதை எழுதியுள்ளார்(1950). எழுத்து இதழ் தோன்றுவதற்கு முன்பே இளங் கலை பயின்ற காலத்தில் (1957-59) மீமெய்ம்மையியக் கவிதைகளில் பரிசோதனை முயற்சிகளைக் கவிஞர் செய்துள்ளார். ஐம்பதுகளின் பிற்பகுதியில் அப்துல் ரகுமானுக்குப் புதுக்கவிதையின் அறிமுகம் கிடைத்தது. எனினும், எழுத்து இதழ் அப்போது பிறக்கவில்லை. ந. பிச்சமூர்த்தியையும் அப்துல் ரகுமான் அறிந்திருக்கவில்லை. அவ்வகையில் எழுத்துக் காலத்திற்கு முன்பே அப்துல் ரகுமான் புதுக்கவிதையில் ஈடுபட்டுள்ளார்.

அப்துல் ரகுமானின் "திட்டங்கள்" "அறிதுயில்" என்ற கவிதைகள் வானம்பாடியில் வெளிவந்தன. அவ்வகையில் இவர் வானம்பாடிக் கவிஞர் எனச் சிலர் மதிப்பிட்டுள்ளனர். அப்துல் ரகுமானின் நண்பர்கள் வானம்பாடிக் கவிஞர் குழுவில் இருந்தமையும் முற்சுட்டிய கருத்திற்கு அரண் ஆகியது.

அப்துல் ரகுமானிடம் வானம்பாடிக் கவிஞர்களிடம் இருப்பது போன்ற பொதுவுடைமைச் சிந்தனை இல்லை. ஆனால் "மனிதாபிமானம்" என்கிற சிந்தனை மட்டும் அப்துல் ரகுமானிடம் இருந்தது.

வானம்பாடிக் கவிஞர்களுக்கும் அப்துல் ரகுமானுக்கும் இடையில் அடிப்படையில் பல முரண்கள் உள்ளன. அப்துல் ரகுமான் இயல்பாகவேச் சமயப்பற்று மிக்கவர். வானம்பாடிக் கவிஞர்கள் திராவிட இயக்கங்களுக்கு எதிரானவர்கள். அப்துல் ரகுமான் அவ்வியக்கங்களோடு தொடர்புடையவர்.

மீமெய்ம்மையியம் போன்ற மேனாட்டுக் கவிதைப் போக்கு அப்துல் ரகுமானிடம் காணப்படுவதாகும். இத்தகு போக்கு வானம்பாடிக் கவிஞர்களிடம் இல்லை.

அப்துல் ரகுமானின் தந்தையும், தந்தையின் தந்தையும் கவிஞர்கள். கவிக்குடும்பத்தில் தோன்றிய அப்துல் ரகுமான் உருது, பாரசீகம் போன்ற மொழிகளையும் அறிந்திருக்கிறார். அரபு மொழிக் கவிஞரான கலீல் கிப்ரானிடம் மிகுந்த பற்றுக் கொண்டவர். தாகூர், காண்டேகர், கீட்ஸ் ஷெல்லி, சேக்ஸ்பியர், பைரன் ஆகியோரின் படைப்புக்களிலும் தனிப்பட்ட பேரார்வம் உடையவர்.

மரபுக் கவிஞராகத் தோற்றம் பெற்று ஆங்கில அறிவால் புதுக் கவிதையில் சாதனை படைத்தவராக அப்துல் ரகுமான் விளங்குகிறார். பால்வீதி (1974) தொடங்கி விதை போல் விழுந்தவன் (1998) வரை பதினெட்டு நூல்களை உருவாக்கியுள்ளார். இவர் பதிப்புப் பணியிலும் அனுபவம் நிறைந்தவர்.

படைப்பில் சிந்தனை முதிர்ச்சி உயிர்நாடியாக இருப்பதால் அரசும், அமைப்புகளும் பல பட்டயங்களை வழங்கி "கவிக்கோவைச்" சிறப்பித்துள்ளன.

சிந்தனையாளர் பலரை உருவாக்குவதில்தான் சிந்தனைவாதியின் வெற்றி உறுதியாகும். அவ்வகையில் "ஏதேன்" என்ற இலக்கிய கழகத்தின் வழி, பல சிந்தனையாளர்களையும் படைப்பாளர்களையும் கவிஞர் உருவாக்கும் நிலை கருதத்தக்கதாகும்.

## குறிப்புகள்

1. ந.வீ. ஜெயராமன், புதுக்கவிதையியல், ப.10.
2. வை. சச்சிதானந்தம், மேலை இலக்கியச் சொல்லகராதி, பக்.106-107.
3. "The American Poet Walt Whitman is often considered the father of free verse, using the style effectively in his "Song of Myself'(1855)".
   The World Book Encyclopaedia(Vol.7)P.501.
4. "............... E.E. Cummings, a highly unorthodox American poet Experimenter with unusual punctuation and typography by the verse form in poetry, especially in the lowell. Theodore Roethke and William Carols Williams". - I bid – P.510.
5. V. Sachithanandan, The impact of Western thought on Bharathi, P.83.
6. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.510.
7. ந. பிச்சமூர்த்தி, காட்டுவாத்து, முன்னுரை, ப.2.
8. பாலா, புதுக்கவிதை ஒரு புதுப்பார்வை, ப.166
9. அப்துல் ரகுமான், விலங்குகள் இல்லாத கவிதை, ப.10.
10. வல்லிக்கண்ணன், புதுக்கவிதை தோற்றமும் வளர்ச்சியும், ப.254.
11. ஞானி, (திறவுகோல்), வெளிச்சங்கள், பக்.III-IV.
12. சிற்பி, (நாங்கள்), வெளிச்சங்கள், ப. XI.
13. ந. வீ. செயராமன், புதுக்கவிதையியல், ப.10.
14. இரா. சம்பத், புதுக்கவிதையில் இலக்கிய இயக்கம், ப.53.
15. ந. வீ. உண்ணாமலை, புதுக்கவிதையில் சமுதாயம், ப.40.
16. க. இராமச்சந்திரன், மு.மேத்தா கவிதைகளில் சமுதாயப்பார்வை, ப.13.
17. இலட்சுமி சுந்தரம் (ப.ஆ), புதுக்கவிதையும் புதுப்பிரஞ்ஞையும், ப.11.
18. ஹச். ரசூல், புதுக்கவிதைகளில் நவீனப் போக்குகள், ப.5.
19. அப்துல்ரகுமான்,(என்பேனாவின்அடிச்சுவட்டில்),முத்தாரம்5.11.95, பக்.22-23.

20. மேலது, 22.10.95, ப.24.
21. மேலது, 29.10.95 ப.19.
22. ஞானி, (திறவுகோல்), வெளிச்சங்கள், ப.16.
23. ரவீந்திரன், (கறுப்புக் குயில்கள்), வெளிச்சங்கள், ப.16.
24. பிரபஞ்சன், (வெளிச்சம்), வெளிச்சங்கள், ப.26.
25. அப்துல் ரகுமான், விலங்குகளில்லாத கவிதை, ப.12.
26. முல்லை ஆதவன் (ப.ஆ), (திட்டங்கள்),வானம்பாடி, ஆகஸ்டு, 1972, ப.1.
27. இளமுருகு, (சாலைக்கடவுள்கள்), வெளிச்சங்கள், ப.19.
28. அப்துல் ரகுமான், சுபமங்களா, (பேட்டி நவ.1995), ப.89.
29. அப்துல் ரகுமான் அவர்களுடன் கலந்துரையாடல் மூலம் பெற்ற செய்தி; நாள் 30.3.1996.
30. இரா. சம்பத், புதுக்கவிதையில் இலக்கிய இயக்கம், ப.123.
31. காண்க: நேர்முகப் பேட்டி - பிண்ணிணைப்பு எண் - 2.
32. அப்துல் ரகுமான்,(என் பேனாவின்அடிச்சுவட்டில்),முத்தாரம்,19.5.95,பக்.36-37.

# இயல் 3

## உள்ளடக்கமும் வடிவமும்

### உள்ளடக்கம்

பொருள் விளக்கம்
பொருள் நலம்
காலமும் பொருளும்
காலமும் கருத்தும்
பொருள் தனித்தகாலம்
பொருள் இணைவுக் காலம்
பொருள் விரிவுக் காலம்
பொருள் வகைப்பாடு
ஐரோப்பியர் வருகைக்குப் பிறகு
புதுக்கவிதையின் உள்ளடக்க வரலாறு
பாரதியின் பார்வை
எழுத்தின் உள்ளடக்கம்
உள்ளடக்க வரலாறு - தலைமைப் பண்புகள் - அட்டவணை
புதுப்பரிணாமத்தில் அப்துல் ரகுமான்
அப்துல் ரகுமான் கவிதைகளில் உள்ளடக்க வகைப்பாடு
தற்சார்பு பெற்ற கவிதைகள்
கவிஞரைப் பற்றிய தற்சார்பு
சுயமோகம்
கவிஞரின் இலயிப்பு
கவிஞரின் கவிதை பற்றிய தற்சார்பு
கவிதையின் பிறப்பு
தற்சார்பு பெறாத கவிதைகள்

1. இயற்கை
2. இறைமை
3. தனிமனிதம்
4. குடும்பம்
5. தத்துவம்
6. சமூகம்

### வடிவம்

புதுக்கவிதை வடிவம்
அப்துல் ரகுமான் கவிதைகளில் வடிவங்கள்
யாப்பு வடிவங்கள்
யாப்பின் திரிந்த வடிவங்கள்
புதிய வடிவங்கள்

## 3. உள்ளடக்கமும் வடிவமும்

இலக்கியத்தின் பல வகைகளில் கவிதைக்குச் சிறப்பிடம் உண்டு. கவிதை என்கிற சொல் அண்மைக் காலத்தில் பெருவழக்காக இருப்பதைக் காணலாம். பண்டை நூல்களில் செய்யுள் என்ற சொல் கவிதைக்குப் பதிலாகப் பயின்றுவந்துள்ளது.

"வடமொழியில் செய்யுளைக் கவிதா என்பதும் செய்யுள் இயற்றுவோரைக் கவி என்பதும் கவிகளில் சிறந்தோரை மகாகவிகள் வரகவிகள் என்பதும் மரபு. தமிழில் அவ்வழக்கையே வழக்கமாகக் கொண்டனர்"[1] என்று குறிப்பிடுவர்.

செய்யுளுக்குரிய விதிகளைத் தொல்காப்பியச் செய்யுளியல் விரித்துக் கூறுகிறது. செய்யுள் என்பதற்குச் செய்யப்பெற்றது என்பது பொருளாகும். எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை போன்ற உறுப்புக்களைக் கொண்டு செய்யப்பெற்றது செய்யுளாகும். "யாப்பு விதிகளுக்கு உட்பட்டு அடிவரையறையுடன் எழுதப்படுவது செய்யுள்"[2] எனத் தமிழ் அகராதி குறிப்பிடும்.

செய்யுள் யாதானும் ஒரு பொருளை மையமிட்டதாக இருக்க வேண்டும் என்பதனை,

> "எழுத்து முதலா ஈண்டிய அடியில்
> குறித்த பொருளை முடிய நாட்டல்
> யாப்பென மொழிப யாப்பறிபுலவர்"[3]

என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். இப்பொருளை உள்ளடக்கியே நன்னூலாரும்

> "பல்வகைத் தாதுவின் உயிர்க் குடல்போல் பல
> சொல்லாற் பொருட்கிடனாக உணர்வினி
> வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்"[4]

என வரையறுத்துள்ளார்.

பொருள்விளக்கம்:-

"பொருள்" என்ற சொல் பலதுறைகளோடு தொடர்புடைய சொல்லாகும். இவ்விடத்தில் இலக்கியத்திற்கும் கவிதைக்கும் தொடர்புடைய பொருளே ஆழ்ந்து பார்க்கத்தக்கது. அத்தொடர்பினைக் கீழ்க்கண்டவாறு பகுத்துக் காணலாம்.

1. இலக்கியத்தில் / கவிதையில் அமைந்துள்ள சொற்களுக்குப் பொருள் காணுதல் (Word Meaning)
2. இலக்கியத்தின் / கவிதையின் தலைமைக் கருத்து (Theme)
3. இலக்கிய வகைக்கேற்ற நிலையில் அமையும் பொருள் (Special Content of a genre)

முதல்வகை அரும்பதங்களுக்கு விளக்கம் தருவதாகும். மூன்றாவது வகைக்குச் சிற்றிலக்கியங்கள் முன்மாதிரியாகும். தூது, உலா போன்றவை இலக்கிய வகைகளுக்குரிய பொருள் தழுவியவைகளாகும். இரண்டாவது வகையில் அமையும் இலக்கியத்தின் கருத்து இங்குப் பொருளுடன் நேரடித் தொடர்பு பெற்றதாகலாம். இப்பொருள் பாடுபொருள் என்பதுடனும் தொடர்பு பெற்றிருக்கிறது. "கவிதையின் கருவால் அமையும் பொருள் (Subject matter of Poem)"[5] என்று அகராதி குறிப்பிடுவதையும் இங்கு இணைத்து நோக்கலாம்.

பொருள்நலம்:-

கவிதையின் உருவாக்கத்திற்கு வடிவம், பொருள், வெளிப்பாட்டு நிலை போன்றவற்றைத் தலைமைக் காரணிகளாகக் கருதுவர். "உலகில் பல கலைகள் வாழ்ந்தாலும் கலைஞனையும் கற்போரையும் கேட்போரையும் ஒரு சேர மகிழ்விக்கும் கலை கவிதை ஒன்றே என்பதும் அக்கவிதை வெற்று எழுத்தாலும் சொல்லாலும் மட்டும் ஆக்கப்படுவது ஆகாது என்பதும் பொருள் நலமே அதன் உயிர்நாடி என்பதும் பெறப்படும்."[6]

இவ்வாறு உயர்ந்த பொருளையே கருத்திற்கொண்டிருப்பதால் மற்ற எல்லா அறிவு நலன்களையும் விடக் கவிதை அறிவு நலம் சிறந்ததாகிறது என்று கவிஞர் வேர்ட்ஸ்வொர்த்தும் குறிப்பிட்டுள்ளார்.[7]

காலமும் பொருளும்:-

கவிதை கூறும் உயர் பொருள் காலந்தோறும் ஒன்று போல இருக்கும் என்பது இல்லை. மாறிவரும் சமூகச் சூழலுக்கேற்ப கவிதைப் பொருள் மாறி வந்திருப்பதை இலக்கிய வரலாற்றின் வழியாக உணரலாம்.

"சமுதாயச் சூழல்களின் குழந்தைகளாகப் பிறப்பெடுக்கும் உண்மைக் கவிஞன் சுற்றுப்புறச் சூழல்களால் பாதிக்கப்பட்டு அவற்றில் வலுப்பெறாமல் தன்னந்தனியனாக நின்றுவிட முடியாது. காலம் தன் குழந்தையாகக் கவிஞனை உருவாக்குகிறது. கவிஞன் தான் வாழும் காலத்தைப் புதிய முறையில் படைக்கிறான் என்பது மறுக்க முடியாத உண்மை"[8] என்கிற சிந்தனையும் இங்குக் கருதத்தக்கதாகும்.

எனவே, கவிதை கூறுகிற உள்ளடக்கம் அல்லது பொருள் காலந் தோறும் ஒன்றுபோல் இருக்கும் என்று கூறுவதற்கில்லை. "இலக்கியத்தைப் பொருள் விளக்கிப் பகுத்தாய்வதே இலக்கியப் புலமை பெறுவதற்குரிய இயல் பான அறிவுடைத் தொடக்க நிலையாகும்." வாழ்விலும் அவனது சமுதாயச் சூழலிலும் இலக்கிய வளர்ச்சியிலும் நாம் கர்வம் காட்டுவதற்குக் காரணமாக அமைவது அவனது இலக்கியப் படைப்புகளாகும்[9] என்று ரெனிவெல்லாக் ஆஸ்டின்வாரன் ஆகியோர் கருத்துத் தெரிவித்துள்ளனர்.

அக்கருத்தின் வழிப் பொருளாய்வின் தேவையை உணரலாம். மேலும் ஆக்கியோனது வாழ்வும் சமுதாயச் சூழலும் இலக்கியப் படைப்பிற்குத் தொடர்பு பெற்ற நிலையை மதிப்பிடலாம். ஆக்கியோனது வாழ்வுச் சூழலும் சமுதாயச் சூழலும் பொதுமையான நிலைபேறாக இருப்பதற்கு வாய்ப்பில்லை. காலம் என்கிற காரணி ஆக்கியோனது வாழ்வுச் சூழலையும் சமுதாயச் சூழலையும் பாதிக்கும் திறத்தது ஆகும். இந்நிலையில் காலந்தோறும்

கவிதைக்குரிய பொருள் மாற்றம் பெற வேண்டியுள்ளது. அம்மாற்றம் தமிழ்க் கவிதைகளிலும் இடம் பெற்றதை வரலாற்றின் வழி உணரலாம்.

காலமும் கருத்தும்:-

கவிதை வாழ்வியலோடும் வாழ்க்கை நெறியோடும் தொடர்புடையது. "வெவ்வேறு காலத்திற்கேற்ப வெவ்வேறு நாட்டிற்கேற்ப, வெவ்வேறு சமூகத்திற் கேற்ப வாழ்க்கை பற்றிய கருத்துக்களும் வெவ்வேறாக அமைகின்றன".[10] எனவே வாழ்க்கை பற்றிய கருத்துருவாக்கத்தில் காலம், நாடு, சமூகம் போன்ற பின்புலங்களும் தொடர்பு பெற்ற நிலை கருத்திற்குரியதாகும்.

அல்பேர்ட் சுவெயிற்சர் என்ற மேனாட்டறிஞர் "இந்தியச் சிந்தனையும் அதன் வளர்ச்சி நிலையும்" (Albert Schweitzer; Indian thought and its development English Edition, 1936) என்ற நூலை எழுதியுள்ளார். அந்நூல் கொடுத்த உந்துதலினால் ஆ. வேலுப்பிள்ளை என்பார் தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும் என்ற நூலினை உருவாக்கியுள்ளார். அவ்வக் காலங்களில் சிறப்புற்ற கருத்துக்கள் இலக்கியங்களிலும் இடம் பெற்றுள்ளன என்ற கருத்தை முற்கோளாகக் கொண்டு முற்சுட்டிய நூல் உருவாக்கம் பெற்றிருப்பது கருதத்தக்கதாகும்.

இந்த அடிப்படையில் (மேற்குறித்த) கடந்த இரண்டாயிரம் ஆண்டு காலத் தமிழிலக்கிய வரலாற்றை நோக்கி, இயற்கை நெறிக்காலம், அற நெறிக்காலம், சமய நெறிக் காலம், தத்துவ நெறிக்காலம், அறிவியல் நெறிக்காலம் என்று ஐந்து காலப் பிரிவுகள் காணப்படுகின்றன"[11] என்று ஆ.வேலுப்பிள்ளை அவர்கள் வகைப்படுத்தியுள்ளார்.

"பொருள் நெறிக்கு இவர் இடமளித்துள்ள போதிலும் இப்போக்கு மேற்போக்கான நிலையில் அமைந்துள்ளமையின் இன்னும் சற்று விளக்கமான விரிவான பகுப்புத் தேவையாகின்றது"[12] என்ற கருத்து பொருள்வகைப்பாட்டுச் சிந்தனையை விரிவாக்கியுள்ளது.

இச்சூழலில் இலக்கிய வரலாற்றில் பொருள் நிலையில் மூன்று விதக் காலங்கள் காணப்படுகின்றன[13] என்றும் அவைகளுக்குரிய வரைவிலக்கணத்தையும் ச. சிவகாமி பின்வருமாறு விளக்கியுள்ளார்.

1. பொருள் தனித்த காலம்
2. பொருள் இணைவுக் காலம்
3. பொருள் விரிவுக்காலம்

**பொருள் தனித்தகாலம்:-**

குறிப்பிட்ட பொருள் மட்டும் இலக்கியப்பரப்பின் பெரும்பகுதியை ஆட்கொண்ட காலம் இவண் எண்ணப்படுகிறது. சான்றாகச் சங்ககால இலக்கியங்கள் முழுமையும் அகம், புறம் எனும் இரு பொருட்கள் ஆட்சி செய்தமையைக் குறிப்பிடலாம்.

தொடரும் சங்கம் மருவியகாலத்துள் அறமும் பல்லவர் காலத்துள் பக்தியும் இலக்கியங்களைத் தம்வயப்படுத்திக் கொண்டுள்ளன. இம்மூன்று காலங்களிலும் இந்நான்கு பொருட்களே ஒன்றன்பின் ஒன்றாக இலக்கியச் செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்துள்ளன. ஆகவே, இவை சிறப்புப் பெற்றிருந்த காலம் பொருள் தனித்த காலம் ஆகும்.

**பொருள் இணைவுக் காலம்:-**

அடுத்த நிலையில் காப்பியங்களும் பிரபந்தங்களும் மிகுதியாக எழுந்துள்ளன. முற்சுட்டப் பெற்ற நான்கு பொருள்களும் காப்பியத்துடன் அஃதாவது ஒரே வகை இலக்கியத்துள் சிறப்பிக்கப் பெற்றுள்ளன. பிரபந்தங்களில் இவை தனி நிலையிலும் (தூது), இணைந்த நிலையிலும் (கலம்பகம்) முதன்மை பெறுகின்றன. இந்நான்கு பொருள்களும் ஒரே காலத்தில் சிறப்புப் பெறுவதால் இஃது பொருள் இணைவுக் காலம் எனப்பெறும்.

பொருள் விரிவுக் காலம்:-

அகம், புறம், அறம், பக்தி எனும் பொருட்களுள் சுழன்று கொண்டிருந்த தமிழ் இலக்கியம் அவற்றினின்றும் விலகி, சமுதாயம், படைப்பாளர், இயற்கை, வாழ்த்து, வசை, நிகழ்ச்சி, அரசியல், தேசியம் எனப் பலவாக விரிந்தது. தனிப் பாடல்களின் தோற்றம் இத்தகு விரிவிற்கு வழிவகுத்துள்ளது. ஐரோப்பியர் வருகையால் உரைநடையில் புத்திலக்கியங்களின் தோற்றம் உருவானது.

மேற்குறித்த பொருள் குறித்த வகைப்பாடு உட்பிரிவுகளை உள்ளடக் கியது. குறிப்பிட்ட காலத்தில் பிற பொருள்கள் தோன்றியிருந்தாலும் சிறப்பிடம் அல்லது தலைமையிடம் பெற்ற பொருளை ஒட்டியே வகைப்பாடு அமைந் துள்ளது. மேற்குறித்த வகைப்பாட்டு விளக்கம் எளிமை கருதிக் கீழ்க் கண்ட வாறு அட்டவணையில் தரப்பெற்றுள்ளது.

பொருள் வகைப்பாடு

| வ.எண் | காலம் | பொருள் | வகைப்பாடு |
|---|---|---|---|
| 1. | சங்க காலம் | அகம், புறம் | பொருள் தனித்த காலம் |
| 2. | சங்கம் மருவிய காலம் | அறம் | " " |
| 3. | பல்லவர் காலம் | பக்தி | " " |
| 4. | சோழர் காலம் | அகம், புறம், அறம், பக்தி | பொருள் இணைவுக் காலம் |
| 5. | நாயக்கர் காலம் | " " | " " |
| 6. | ஐரோப்பியர் காலம் | சமுதாயம், படைப்பாளர், இயற்கை, வாழ்த்து வசை, நிகழ்ச்சி, அரசியல், தேசியம், பிற | பொருள் விரிவுக் காலம் |

சங்க காலத்தில் இருந்த சமூக நிலையைக் குழுச் சமூகத்துடன் இணைத்துக் கூறுவர். எனவே, அச்சமூகச் சூழலுக்கேற்ப அகமும், புறமும் பாடலுக்குப் பொருளாயின. தனிநிலைச் செய்யுள் கோலோச்சிய காலத்தில் அத்தகு பொருள்கள் இயல்பாய் அமையும் எனலாம். சங்கம் மருவிய காலத்திலிருந்து தொடர்ந்து பல்லவர், சோழர் என்கிற பேரரசுக் காலத்தில் சமூக நிலை புதியதொரு பரிணாமம் பெற்றிருந்ததைக் கருத்தில் கொள்ள வேண்டியிருக்கிறது. இங்கு இக்காலச்சமூகச்சூழல் தேவை போன்றவைகளுக் கேற்ப அறம், பொருள், இன்பம், வீடடைதல் போன்ற நூற்பயன்கள் (புருஷார்த்தங்கள்) உருவாக்கம் பெற்றன.

நாயக்கர் காலச் சமூகப் போக்கில் ஒற்றுமை இல்லை. வீரம் குறைந்து காமம் தலைதூக்கியிருந்தது. அதிகார வெறி, சூழ்ச்சி, வறுமை போன்றவைகள் சமூகத்தைப் பீடித்திருந்தன. சிற்றிலக்கியங்கள் இக்காலத்தில் பெரிதும் எழுந்தன. சமூகப் போக்கின் மாற்றத்திற்காகச் சித்தர்கள் தங்கள் பாடல் மூலம் முயற்சித்தனர். சங்க காலத்தைப் போன்று இக்காலங்களிலும் தனிப்பாடல்கள் செல்வாக்குப் பெற்றன. ஆனால் அவற்றின் நோக்கும் போக்கும் மாறுபட்டவையாகும்.

ஐரோப்பியர் வருகையால் இந்தியச்சமூகம் ஆங்கிலேயருக்கு அடிமைப் பட்டது. எனினும் ஆங்கிலக்கல்வியும் மேற்கத்தியக் கலாச்சார நுழைவும் இந்திய இலக்கியப் போக்கில் புத்தெழுச்சிக்கு ஆதாரங்களாயின.

**ஐரோப்பியர் வருகைக்குப் பிறகு:-**

ஐரோப்பியருடன் தொடர்புடைய மேலை நாடுகளில் சமுதாய அமைப்புகளும் சிந்தனைப் போக்குகளும், பெரிதும் மாற்றம் கண்டிருந்தன. புதுப்புது இயக்கங்கள் உருப்பெற்றிருந்தன. அவ்வியக்கங்கள் அல்லது அவ்வியக்கக் கொள்கைகளைச் சேர்ந்த கவிஞர்கள் உருவாயினர். "இத்தகைய கவிதை இயக்கத்தையே வீறுணர்ச்சிக்கவிதை இயக்கம் (Romantic Movement) என்று அழைக்கிறோம். உலக இலக்கியங்கள் அனைத்தையும் 19ஆம் நூற்றாண்டிலும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் இக்கவிதை இயக்கம் பெருமளவில் தாக்கியும் இயக்கியும்

நின்றது. ஐரோப்பிய இலக்கியங்களில் 19ஆம் நூற்றாண்டிலும் கீழ்த்திசை இலக்கியங்களில் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் இக்கவிதை இயக்கம் பெரும் பாதிப்புக்களை ஏற்படுத்தியது"[14] என்று கூறுவர்.

அப்பாதிப்புக்கள் இந்திய இலக்கியத்திலும் இடம் பெற்றன. தாகூர், பாரதியார், வள்ளத்தோள், குமாரன் ஆசான் என்று கவிஞர்கள் வரிசையை நோக்குகின்ற போது முற்சுட்டிய கருத்தும் உறுதிப்படும் எனலாம். இவர்களும் ஒருவகையில் வீறுணர்ச்சிக் கவிதையால் உந்தப்பட்டவர்கள் என்றே அறிஞர்கள் மதிப்பிடுவர்.

மேலை நாட்டில் அவ்வியக்கத்தாருக்கு தனிமனிதக் கோட்பாடு (Cult of Individual) முதன்மைப் பொருளாக இருந்தது. இந்தியச் சூழலிலும் அப் பொருள் ஊடுருவியது. எனினும் அக்கோட்பாடு இந்திய மண்ணிற்குரிய கூறுகளை உள்ளடக்கியே அக்கோட்பாட்டை வளர்த்தது. இந்நிலைக்குக் காரணம் மாறுபட்ட சமுதாயப்பின்னணி என்ற கருத்து தலையாயது ஆகும். மேலை நாட்டுக் கவிதை இயக்கம் இந்தியாவில் நுழைகிறபோது இந்தியச்சூழல் எவ்வகையில் இருந்தது? இந்த வினா அடிப்படைச் சிந்தனை வினாவாகும்.

இந்தியாவின் அடிமைப்பட்ட நிலை, பொருளாதாரச் சுரண்டலினால் கிடைத்த வறுமை, ஆங்கில ஏகாதிபத்தியத்தின் அடக்குமுறை, வலுவற்ற ஒற்றுமையற்ற இலட்சியமற்ற சிறுசிறு அரசுகள், சமயத்தை மூட நம்பிக்கை யுடனும் வெற்றுச் சடங்குடனும் தொடர்புபடுத்திய போக்கு இவைபோன்ற இன்ன பிற காரணிகளையும் வரிசைப்படுத்திச் சொல்லலாம். இந்தச் சூழலில் தான் மேலைநாட்டுக் கவிதை இயக்கம் இந்தியச் சூழலில் நுழைந்தது.

இந்தியமண் சமயப்பண்பாட்டை ஆணிவேராகக் கொண்டிருந்ததால் தனி மனிதக் கோட்பாடும் சமயப் பண்பாட்டின் பின்புலத்தில் இயங்கியது. மேலை நாடுகளின் சுதந்திரச் சிந்தனையும் இந்திய நாட்டின் சுதந்திரச் சிந்தனையும் வேறுபட்ட சமுதாயப் பின்புலம் மற்றும் காலப் பின்புலம் கொண்டவை.

மாக்சிம் கார்க்கி என்னும் ரசிய நாட்டுத் திறனாய்வாளர் வீறுணர்ச்சிக் கவிதை இயக்கப் போக்கினை இரண்டாகப் பகுத்து விளக்குவார்.

1. வீறுணர்ச்சிக் கவிதைப் போக்கு (Active Romanticism)
2. செயல்திறம் குறைந்த வீறுணர்ச்சிப் போக்கு (Passive Romanticism)

இவற்றுள் "மண்ணுலகை வெறுத்து வாழும் மனிதர்களைப் புறக்கணித்து, வேதனையிலும், விரக்தியிலும் உள்ளத்தைப் பறிகொடுத்து உலகம் நிலையற்றது என்று தத்துவம் பேசிக்கொண்டு சமுதாயப் பிரச்சனைகளைச் சந்திக்கும் சக்தியற்றுக் கற்பனை உலகங்களை அமைத்துத் தப்பியோடிச் செல்லும் ஒருவிதப் போக்கினையே செயல்திறனற்ற வீறுணர்ச்சிப் போக்காகக் குறிப்பிடுவர்"[15]

இன்னொன்று "சமுதாயப் பிரச்சினைகளை அணுகிச் சமுதாயத்தின் போக்கினைத் திருத்தியமைத்து மனிதனை நல்வாழ்வு வாழத் தூண்டுவது"[16] என்றும் விளக்குவர்.

ஐரோப்பியர் வருகைக்குப் பிறகு மேலை நாட்டு இலக்கியத்தால் புதுப்போக்குகள் முகிழ்த்தன. மேற்குறித்த வீறுணர்ச்சி இயக்கப் போக்கு இந்திய இலக்கியங்களையும் தமிழ் இலக்கியத்தையும் தாக்கத்திற்குள்ளாக்கியது. அத்தாக்கத்தின் பல விளைவுகளில் இலக்கியம் அல்லது கவிதைக்குரிய பொருள்கள் விரிவுபெற்ற நிலையும் ஒன்றெனலாம். டாக்டர். ஆ. வேலுப் பிள்ளை தம்முடைய நூலில் குறிப்பிடும் அறிவியல் நெறிக் காலத்தை இவ்விடத்தில் இணைத்துச் சிந்திப்பது பொருத்தமுடையது.

"இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக இலக்கிய வளம்பெற்ற மொழியாகத் தமிழ் விளங்குவது தமிழருக்குக் கலையுணர்ச்சி சிறந்திருப்பதற்குச் சான்று. தமிழ் நாட்டில் வடமொழிக் கல்வி போற்றப்பட்டாலும் தமிழருடைய இயற்கையான அறிவுத் தூண்டுதலாலும் அறிவியற் கருத்துக்கள் சில தமிழ் நாட்டில் நிலவிப் பழந்தமிழ் நூல்களிலும் இடம்பெற்றுள்ளன. அவை வியப்பையும் மகிழ்ச்சியையும் தமிழருக்குத் தருவதெனினும் அறிவியல் நெறிக்காலம் அக்காலத்திலேயே தோன்றிவிட்ட தெனக் கூறுதல் முடியாது. அந்தக் கருத்துக்கள் அக்காலச் சிந்தனைப்

போக்கை மாற்றியமைத்துவிட வில்லை. சமுதாயத்தையும் புதுவழியிலிட்டுச் செல்லவில்லை யென்பதைத் தமிழ்நாட்டு வரலாறு கொண்டு அறியலாம். மேனாட்டாரின் தொடர்போடுதான் அறிவியல் நெறித் தொடர் தமிழருக்குக் கிடைத்துள்ளது".[17] வரலாற்று மீள்பார்வையுடன் கூடிய இக்கருத்து மேனாட்டுத் தொடர்பால் கிடைத்த விளைவை உறுதிப்படுத்துவதாகக் கொள்ளலாம்.

இந்த யுகத்தில் இலக்கியம் / கவிதைக்குரிய பொருள்கள் விரிவு படுகின்றன. "இந்நூற்றாண்டில் நம் வாழ்க்கை எவ்வளவோ மாறிவிட்டது. அதன் பரப்பும் எல்லையும் விரிந்து கொண்டே போகிறது. காலப்போக்கில் புதிய வாழ்க்கை, புதிய பண்பாடு, புதிய அனுபவம் என மாற்றங்கள் விளைவது இயல்பே. இந்த நிலையில் பாட்டு என்ற கலைத்துறையிலும் பாடுதற்குரிய பொருட்களின் எல்லை விரியாமல் இருக்குமா?"[18] என்ற வினாவின் வழி உண்மையை உறுதிப்படுத்துகின்றனர்.

## புதுக்கவிதையின் உள்ளடக்க வரலாறு:-

புதுக்கவிதையின் தோற்றத்திற்கான காரணிகளுள் உள்ளடக்கமும் ஒரு காரணியாகும் என்பர். "மாறிவரும் சமுதாய அமைப்புக்கும் அணுகுமுறைக்கும் ஏற்பக்கவிதைக் கலையிலும் ஒருவகை மாற்றம் நிகழ வேண்டும் என்பது பலரது வேட்கையாக இருந்தது. இதனால் உருவ அமைப்பை விடக் கருத்து வெளிப்பாட்டிற்கே முதன்மை தரவேண்டும் என்ற குரல் ஓங்கியது. எனவே, புதுக்கவிதைபிறந்தது"[19] என்கிற கருத்தும் இவ்விடத்தில் நினைத்தற் குரியதாகும். புதுக்கவிதைக் கவிஞர் குரலிலும் "சொற்களை ஆயுதங்களாகக் கையாளும் பக்குவம் பழைய யாப்பில் உள்ளதைவிட அர்த்த ஆழமுடைய சந்தநுட்பம், சுண்டக் காய்ச்சிய கடைசி நிலைக்குக் கெட்டிப்படுத்தும் வடிவ அமைப்பு, உள்ளடக்கமே வார்ந்து அமையும். உத்திப்புதுமை இவை எல்லாவற்றையும்விடப் புதியபார்வை, புதிய உள்ளடக்கம் இவை புதுக்கவிதையின் அவசியத் தேவைகள்".[20] என்று ஒலிக்கக் காணலாம்.

உள்ளடக்கத்தை மட்டும் மையமிட்டு வரலாற்றுப் பார்வை அமைப்பது அப்துல் ரகுமான் புதுக்கவிதை உள்ளடக்கத்தை மதிப்பிட உதவியாக இருக்கும். இந்நோக்கத்தில் புதுக்கவிதை உள்ளடக்க வரலாற்றை, பாரதி முதல் பார்க்கும் அறிமுகப் பார்வையை இனிவரும் பகுதியில் மேற்கொள்ளப் பெறுகிறது.

**பாரதியின் பார்வை:-**

மேற்கத்திய நாடுகளின் தாக்கம் பாரதிக்கு இருப்பினும் அஃது முதன்மையானது அல்ல. "பாரதிக்கு கிடைத்த வேதஇலக்கியத்தின் தாக்க மானது சமயக் கோட்பாட்டையும் இலக்கியக் கோட்பாட்டையும் ஒரு சேரப் புதியபரிணாமம் கொள்ளச் செய்கிறது. இச்சோதனை பாஞ்சாலி சபதத்தில் வரும் மாலை வருணனை சூர்யோஸ்தமத்தில் தொடங்கி "காட்சி"யில் நிறைவெய்துகிறது"[21] என்பர்.

மேலும், பாரதியின் "காட்சியில்" காணும் உள்ளடக்கம் வேதரிஷிகளின் கவிதையில் உள்ள உள்ளடக்கத்தோடு தொடர்புடையதாக உள்ளது. "புறத்தே இயற்கையையும் தெய்வீகத்தையும் சித்தரிப்பது போல் தோன்றினாலும் அகத்தே மனித வாழ்வே மையப் பொருளாக உள்ளது".[22] இவ்வாறு பாரதி பழமைத் தொடர்பும் புதுமைத் தொடர்பும் இயைந்த பரிணாமம் பெற்றவராக விளங்கினார்.

பாரதிக்குப் பின் இலக்கிய மாட்சியை நிலைநாட்ட முயன்ற பெருமை மணிக்கொடிக்கு உரியதெனலாம். "மணிக்கொடி எழுத்தாளர்கள் மாதச் சம்பளங்களை வாங்கிக் கொண்டு வசதியாக வாழ்ந்தவர்கள் அல்லர்; எழுத்தை இரண்டாம் தரமாக்கிக் கொள்ளாமல் இலக்கியத்தின் கரம்பிடித்து ஏகபத்தினி விரதம் மேற்கொண்டவர்கள் என்பதை அவர்கள் வாழ்ந்த வாழ்க்கை வரலாறே சான்றளிக்கிறது".[23] அத்தகு இயல்பு படைத்த மணிக் கொடி குழுவினர் புதுக்கவிதையில் பரிசோதனை முயற்சிகளில் ஈடுபட்டுத் தர நிலைக்காகவே (Standard) உழைத்தவர்கள் என்பதில் மிகையில்லை.

மணிக்கொடிக்குழுவிலிருந்து புதுக்கவிதையில் ஈடுபாடு கொண்டவர்களுள் "முதன்மையான முன்னோடிகள் நால்வர். புதுமைப்பித்தன்,

ந.பிச்ச மூர்த்தி, கு.ப.ரா., வல்லிக்கண்ணன் ஆகிய நால்வரின் இடைவிடாத தொடர்ந்த முயற்சியால் புதுக்கவிதைகளுக்கு இன்று இலக்கிய மதிப்பு ஏற்பட்டுள்ளது எனலாம்".[24] எனவே, இவர்கள் புதுக்கவிதைகளின் உள்ளடக்கப் போக்கை அறிவது மணிக்கொடிக்குழுவினரின் உள்ளடக்கப்போக்கிற்குச் சான்றாகலாம்.

"முன்னைப் பழமைக்கும் பழமையாக, பின்னைப் புதுமைக்கும் புதுமை யாகப் படைக்கப்பட்டவை புதுமைப்பித்தனின் கவிதைகள். பாரதியைப் போல பழஞ்செய்யுள் ஊடகத்தினூடே புதிய சமூக உள்ளடக்கத்தை இடம் பெறச்செய்து கவிதையின் நிகழ்காலத் தேவையை நிறைவு செய்தவர் (புதுமைப்பித்தன்). பு.பி. பாரதியைத் தொடர்ந்து அரசியல் ரீதியாக நினைப்புச் சுதேசிகளை அடையாளம் காட்டினார்"[25] என்று மதிப்பிடுவர்.

"இயற்கையையும் வாழ்க்கை அனுபவங்களையும் இணைத்து, அறிவுத் தெளிவுடன் நல்வாழ்வுக்கான தத்துவ உண்மைகளைக் காணும் முயற்சிகளே பிச்சமூர்த்தியின் கவிதைகள்."[26]

மேற்குறித்த வல்லிக்கண்ணனின் மதிப்பீட்டின் வழி ந. பிச்சமூர்த்தியின் உள்ளடக்கப் போக்கினை அறியலாம். "பெண்மையை வியக்கும், பெண்ணை எண்ணி ஏங்கும் அகத்துறைக் கவிதைகளையே கு.ப.ரா. (அக்காலக் கட்டத்தில்) அதிகம் எழுதினார்".[27]

"பாரதி அடிச்சுவட்டிலே" என்ற தலைப்பில் புதுக்கவிதைகளை வல்லிக் கண்ணன் வெளியிட்டுள்ளார். மறுமலர்ச்சி இரட்டையர்களான ந.பிச்ச மூர்த்தி கு.ப.ரா. இவர்களின் உந்துதல் புதுக்கவிதையில் இவரை ஈடுபடச் செய்தது.

**எழுத்தின் உள்ளடக்கம்:-**

மணிக்கொடிக்குப் பின் புதுக்கவிதைக்கு எழுத்தின் பணி குறிப்பிடத் தகுந்தது. எழுத்துக்காலக் கவிதைகளின் உள்ளடக்கம் குறித்துப் பலர் விமர்சனம் செய்துள்ளனர். அவர்களில் சி.சு. செல்லப்பா, தி.க.சிவசங்கரன், நா.வானமாமலை, சி.கனகசபாபதி போன்றோர் குறிக்கத்தகுந்தவர்கள்.

ஆய்வின் போக்கிற்காகப் பொதுநிலை மதிப்பீடு செய்த அக்கினி புத்திரனின் வரிகளை இங்கு காணலாம்.

"எழுத்துக் கவிதைகளில் காணப்படும் உள்ளடக்கம் பொதுவாக வாழ்வின் பல்வேறு நிலைகளை நடுத்தர மக்களின் கண்ணோட்டத்தில் சித்தரித்துக் காட்டின. நவீன வாழ்வின் மதிப்பீடுகள், பழைய வாழ்வின் மதிப்பீடுகளுடன் முரண்படுகிற போதும் புதியசமுதாய அமைப்பின் நியதிகள் பழைய நியதிகளுடன் மோதும்போதும் உண்டாகிற மோதல், குழப்பம், சிக்கல், நெருக்கடி போன்றவையே எழுத்தில் வெளிவந்த புதுக்கவிதை உள்ளடக்கத்தின் ஊற்றுக் கண்களாகும்"[28] என்று மதிப்பிட்டுள்ளார்.

நா. வானமாமலை எழுத்துக்கவிதைகளின் உள்ளடக்கத்தை எட்டு வகை களாகப் பகுக்கிறார். 1. வாழ்க்கை, 2. சாவு, 3. இணை விழைச்சுத் தன்மை (Sex) 4. நிராசை (Frustration) 5. தனிமனிதம் (Individualism) 6. உணர்வுத்தாரை (Stream of Consciousness) 7. கவிஞன் தொழில், 8. எழுத்தாளன் தொழில் என்பவைகளாகும்".[29]

"மணிக்கொடி, எழுத்துவைத் தொடர்ந்து வந்த இலக்கிய இதழ்களில் கசடதபற-வின் பங்கு சிறப்பு வாய்ந்தது. கசடதபற (1970-1978)வின் கவிஞர் கள் தங்களுக்குரிய இலக்குகளை வரையறுத்துக் கொண்டார்கள். முதல் இதழில் கீழ்க்கண்ட இலக்குகள் குறிப்பிடப் பெற்றிருந்தன.

1. அரசியல், சமயம், மரபு - இவை சம்பந்தப்பட்ட ஒழுக்கங்களுக்கு வாரம் தவறாமல் தோப்புக்கரணம் போடுபவர்கள் யாரும் இவர்களில் இல்லை.

2. சிந்திக்கிறவனுக்கு இன்றைய உலகம் விடும் அறைகூவல்களை ஏற்றுக் கொள்ள வந்திருக்கிறது.

3. உலகில் இதர பகுதிகளில் இலக்கியத்தில் நிகழ்வனவற்றைக் கூர்ந்து கவனிப்பதிலும் தமிழ்ச்சிந்தனையில் புதிய கிளர்ச்சிகளை இனம் கண்டு கொள்வதிலும் இவர்கள் தேர்ந்தவர்கள்"[30]

எழுத்துக் கவிஞர்கள் சிறு குழுவாக இயங்கியதைப் போல இவர்களும் இயங்கினார்கள்.

'கசடதபற' குழுவினரின் கவிதைகள் உள்ளடக்கத்தைக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுவர்.

முழுக்கவும் நகரச்சூழலில் வாழும் "கசடதபற" கவிஞர்களின் கவிதைகளில் பழந்தமிழ்ச் சொற்களோ இயற்கை வருணனையோ இடம் பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இவர்களது கவிதைகளில் காணும் உள்ளடக்கங்களைக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடலாம்.

1. சொந்த அனுபவங்கள், 2. பழமை மறுப்பு, 3. சமூக விமர்சனம், 4. குடும்ப உறவுகள், 5. தற்கால வாழ்வின் அவலம், 6. கண்முன் காணும் நுகர்பொருட்கள் போன்றவைகளாகும்.

மானுடம் பாடும் வானம்பாடிக் கவிஞர்கள் சமுதாய நிலையையொட்டிய கருத்துக்களுக்கே தங்கள் புதுக்கவிதைகளில் சிறப்பிடம் கொடுத்தனர்.

"மரபுச் சம வெளிமேல்
விம்முகின்ற ஜீவநதிப் பிரவாகம்
சரிகின்ற பழமையின் மேல்
தளிர்த்த புதுக்குருத்துக்கள்
இதயவயல் வண்டல்களில்
உயிர்நடவுப் பயிர்க்குலைகள்
எமது ஜீவநதிக் கவிதைக்குத்
தானாக இலக்கணக் கரைகள்
உருவாகின்றன."

என்று "நாங்கள்"[31] என்ற தலைப்பில் வானம்பாடிக் கவிஞர்களுக்காகச் சிற்பி பாடியுள்ளார். மனித சமுதாயத்தின் துக்கங்களுக்கும் துயரங்களுக்கும் முன்னுரிமை கொடுக்கும் முற்போக்கு இயக்கம் சார்ந்தவர்கள் வானம்பாடிக் கவிஞர்கள். இலக்கியத்தில் புரட்சி, சமூகத்திலும் புரட்சி, புரட்சிகளுக்கு இடையில் விடியலைப் பிறக்க வைக்கும் நம்பிக்கை கொண்டவர்கள்.

பொதுவாக மேலேபார்த்த உள்ளடக்க வரலாற்றினைத் தலைமைப் பண்புக் கூறுகளைக் கவனத்தில் கொண்டு பின்வருமாறு அட்டவணைப்படுத்திப் பார்க்கலாம்.

## உள்ளடக்க வரலாறு - தலைமைப் பண்புகள் - அட்டவணை

| பாரதியார் | மணிக்கொடி | எழுத்து | கசடதபற | வானம்பாடி |
|---|---|---|---|---|
| சமயக்கோட் பாடு, இலக்கி யக் கோட்பாடு, தெய்வீகம் & மனித வாழ்வு | 1. பழஞ்செய்யுள் ஊடகத்தில் புதிய சமூக உள்ளடக்கம் 2. இயற்கை + வாழ்க்கை - தத்துவ விளக்கம் 3. அகத் துறைக் கவிதை | வாழ்வின் பல்வேறு, நிலைகள் நடுத்தர மக்களின் கண்ணோட் டத்தில் - பழைய மதிப்பீடு; புதிய மதிப்பீடு ; முரண்பாடு; முரண்பாட்டில் குழப்பம், சிக்கல். | சொந்த அனு பவங்கள் பழைமை மறுப்பு, சமூக விமர்சனம் குடும்ப உறவு கள், தற்கால வாழ்வின் அவலம், கண் முன் காணும் நுகர்பொருட்கள் | சமூகம், மானுடம், முற்போக்கு இயக்கம், புரட்சிவிரும்பிகள், பழமையின் சரிவை விரும்புவர் கள். |

### புதுப்பரிணாமத்தில் அப்துல் ரகுமான்:-

புதுக்கவிதை வரலாற்றில் தடம் பதித்த அப்துல் ரகுமான் எழுத்துக் காலத்தில் எழுதத் தொடங்கினாலும் எழுத்தோடு இணையவில்லை. ‘கசடதபற’ போன்ற இதழ்களோடு இணைத்துப் புதுக்கவிதையை உருவாக்கவில்லை, பாடும் வானம்பாடிக் குழுவிலும் சாராதவர். இக்கருத்து முதல் கட்டுரையில் நிறுவப்பெற்றது. குழுவையோ, இதழையோ சாராத

நிலையில் வளர்ந்த அப்துல்ரகுமானின் உள்ளடக்கத்தில் தனித்தன்மைகள் இருக்க வேண்டும் என்கிற முற்கோள்கள் தோன்றுகின்றன.

கவிதைப் பொருள் குறித்த வகைப்பாட்டு நிலையில் பொருள் விரிவு காலத்திற்குரிய கவிதைகளாக இவரது கவிதைகள் உள்ளன.

ஐரோப்பியர் தொடர்பாலும் மேலைநாட்டுக் கவிதைத் தாக்கத்தாலும் தமிழில் புதுக்கவிதை எழுச்சியுடன் வளர்ந்தது. மேலை நாட்டாரின் எழுச்சிச் சிந்தனைகள் தமிழ்க்கவிஞர்கள் பலரையும் ஈர்த்தது நடப்பியல் வரலாறு ஆகும். அப்துல் ரகுமானும் அவ்வரலாற்றுப் பாதையில் நடைபோடுபவரென்று மதிப்பிடலாம்.

மார்க்சியம் குறிப்பிடும் வீறுணர்ச்சிக் கவிதைப் போக்கின் வகைப் பாட்டில் செயல்திறம் மிகுந்த வீறுணர்ச்சிப் போக்கைச் சார்ந்தவர் அப்துல் ரகுமான். வாழும் காலச் சூழலில் புதிய வாழ்க்கை, புதிய பண்பாடு, புதிய அனுபவம் விரிந்து கிடக்கிற சமூகக்களத்தைச் சார்ந்தவர். காலத்தையும் சமூகச் சூழலையும் சார்ந்து வாழும் அப்துல்ரகுமானிடம் உள்ளடக்கத்தில் புதுப்பரிணாமம் இருப்பது இயற்கையாகும்.

**அப்துல் ரகுமான் கவிதைகளில் உள்ளடக்க வகைப்பாடு**



அப்துல் ரகுமான் கவிதைகளைக் கீழ்க்கண்டவாறு இரு நிலைகளில் பகுத்துப் பார்க்கலாம்.

1. தற்சார்பு பெற்ற கவிதைகள்
2. தற்சார்பற்ற கவிதைகள்

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட நான்கு கவிதைகளில் முற்சுட்டிய இரு பிரிவுகள் குறித்த அட்டவணை கீழே தரப்பெறுகிறது.

| வ.எண். | கவிதைத் தொகுப்பின் பெயர் | தற்சார்பு பெற்ற கவிதைகள் | தற்சார்பு பெறாத கவிதைகள் |
|---|---|---|---|
| 1. | பால்வீதி | 12 | 53 |
| 2. | நேயர் விருப்பம் | 1 | 43 |
| 3. | சுட்டுவிரல் | -- | 60 |
| 4. | ஆலாபனை | 2 | 40 |

அட்டவணையின்படி தற்சார்பு பெறாத கவிதைகள் இவரிடம் மிகுந்துள்ளன(196). தற்சார்பு பெற்ற கவிதைகள் குறைவாகவே உள்ளன(15).

ஆய்விற்கு எடுத்துக்கொண்ட கவிதைத் தொகுப்புகளில் தற்சார்பு பெற்ற கவிதைகள் பால்வீதியில் மிகுந்துள்ளன. நேயர் விருப்பத்தில் ஒரு கவிதையே தற்சார்பு பெற்றுள்ளது. சுட்டுவிரல் கவிதைத் தொகுப்பில் தற்சார்புக் கவிதை இடம் பெறவில்லை. ஆலாபனையில் இரண்டு கவிதைகள் மட்டும் தற்சார்பு பெற்ற கவிதைகளாக உள்ளன.

“1958-இல் மீமெய்ம்மையியல்-சர்ரியலிசம் எனக்கு அறிமுகமான போது அதன் வசீகரத்தில் நான் வசியமானேன். அடிமனக் கடல் தன் அதிசய ஆழங்களுக்கு என்னை அழைத்தது”[32] என்று அப்துல் ரகுமான் பால்வீதியில் குறிப்பிடுகிற கருத்து இங்கு கருதத்தக்கதாகும்.

சர்ரியலிசத்திற்கும் சுயச்சார்புக்கும் நெருங்கிய தொடர்புண்டு. அதனால் சுயச்சார்பு இவரது கவிதைகளில் இடம் பெற்றுள்ளதாக

மதிப்பிடலாம். மேலும் பால்வீதி முதல் நூல் என்பதால் தன்னைப்பற்றியும், தன் கவிதைகளைப்பற்றியும் கவிஞர் அறிமுகம் செய்திருக்கலாம். இக்காரணங்களால் பால்வீதியில் தற்சார்புக்கவிதைகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

தற்சார்பு பெறாத கவிதைகளை இயற்கை, இறைமை, தனிமனிதம், குடும்பம், சமூகம், தத்துவம் என்று வகைப்படுத்திப் பார்க்கலாம். மேற்குறித்த வகைப்பாட்டில் இவரது கவிதைத் தொகுப்புகளில் உள்ள கவிதைகள் அட்டவணைப்படுத்தப் பெற்றுள்ளன.

| வ. எண் | கவிதைத் தொகுப்பின் பெயர் | இயற்கை | இறைமை | தனிமனிதம் | குடும்பம் | தத்துவம் | சமூகம் |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | பால்வீதி | 2 | -- | 6 | 2 | 18 | 25 |
| 2. | நேயர்விருப்பம் | 7 | 1 | 12 | -- | 10 | 15 |
| 3. | சுட்டுவிரல் | -- | -- | -- | -- | 6 | 54 |
| 4. | ஆலாபனை | 4 | 2 | 1 | -- | 23 | 11 |
| மொத்தம் 196 | | 13 | 3 | 19 | 2 | 57 | 102 |

தற்சார்பற்ற கவிதைகளில் சமூகக் கவிதைகள் (102) முதல் நிலையிலும், தத்துவக்கவிதைகள் (57) இரண்டாம் நிலையிலும் அமைந்துள்ளன. தனிமனிதம் (19) இயற்கை (13) இறைமை (3) குடும்பம் (2) என்ற வரிசையிலும் கவிதைகள் அமைந்துள்ளன.

**தற்சார்புபெற்ற கவிதைகள்:-**

கவிஞன் தான் இயற்றும் கவிதைகளில் தற்சார்புத் தன்மையை இடம் பெறச்செய்யலாம். இடம்பெறாத நிலையும் உண்டு. ஷெல்லியின் இலக்கியக்

கொள்கை பற்றிய சிறுநூல் (Defence of Poetry) கவிதைக் கொள்கையைப் பற்றிக் கூறியுள்ளது. கவிஞர்கள் அங்கீகரிக்கப்படாத சட்ட நிபுணர்கள் என்ற செம்மாந்த கருத்தை இந்நூலில் ஷெல்லி குறிக்கிறார். செம்மாந்த கவிஞனிடம் தற்சார்பு இடம் பெறுகிற நிலையினையும் எடுத்துரைக்கிறார். கவிதைக் கலையின் தோற்றம் குறித்து டபுள்யூ.பி. யீட்ஸ் (W.B. Yeats) என்பவர் "கவிஞன் தன்னோடு போராடும்போது கவிதை பிறக்கிறது என்றும் மற்றவர்களுடன் போராடும்போது வசனம்தான் பிறக்கிறது[33] என்றும் மதிப்பிட்டுள்ளார். தன்னோடு போராடுகிற கவிஞனின் கவிதையில் தற்சார்பு இடம் பெறுதல் ஒருவகையில் இயல்பெனக் கருதலாம்.

டி.எஸ்.எலியட் ரொமாண்டிக் வகைக் கவிஞர்களுக்கு எதிரான சிந்தனை உடையவர். பாரம்பரியமும் தனிநபர் திறமையும் (Tradition and Individual Talent) என்ற கட்டுரையில் தனிநபர் ஆளுமை இல்லாமை (Depersonalisation) என்ற கோட்பாட்டை உருவாக்கினார். இவரின் கருத்துப்படி கவிஞரின் ஆளுமையும் இடம்பெறக்கூடாது அவரின் தற்சார்பும் இடம் பெறக் கூடாது என்பது இவரின் கருத்தாக இருக்கிறது.[34]

தமிழில் மகாகவியான பாரதியாரிடம் தற்சார்பு இடம் பெற்ற நிலையைக் காணலாம். அவர் தன்னைப் பற்றி,

"சொல்லடி சிவசக்தி! எனைச்
சுடர்மிகு அறிவுடன் படைத்துவிட்டாய்"[35]

என்று குறிப்பிட்டுள்ளார். பாரதி சுடர் மிகும் அறிவுடன் இருப்பதாகத் தற்சார்புத் தன்மையுடன் குறிப்பிடுவது கருதத்தக்கதாகும். தன் கவிதையைப் பற்றியும் பல இடங்களில் கூறிச் செல்லும் பாங்கினைக் காணலாம்.

"என்றன்
பாட்டுத்திறத்தாலே - இவ்வையத்தைப்
பாலித்திட வேணும்"[36]

என்று கவிஞன் தன்னைப்பற்றியும் தன் கவிதைகளைப் பற்றியும் தற்சார்புடன் கூறிக்கொள்வதில் தவறில்லை. சிறந்த கவிஞனாக இருப்பவன் அவ்வாறு கூறும்போது, தற்சார்புத் தன்மை அவனின் ஆளுமையை மேலும் மெருகூட்டும்.

ஆனால் சராசரி கவிஞன் தன்னைப்பற்றியும் தன் கவிதைகளைப் பற்றியும் மிகைப்படுத்திக் கூறும்போது அது கேலிக்குரியதாகும்.

அப்துல் ரகுமான் கவிதைகளில் முற்சுட்டிய தற்சார்பு இடம்பெற்ற நிலையைக் காணலாம். அவரைப் பற்றியும் அவருடைய கவிதைகளைக் குறித்தும் சில கவிதைகளில் தற்சார்புத் தன்மை இழையோடும்படிக் கவிதைகளையாத்துள்ளார். அப்துல்ரகுமானின் கவிதைகளில் தற்சார்புத் தன்மையைக் கீழ்க்கண்டவாறு இரு நிலைகளில் பகுத்துப் பார்க்கலாம்.

1. கவிஞரைப் பற்றிய தற்சார்பு
2. கவிஞரின் கவிதையைப் பற்றிய தற்சார்பு

**1. கவிஞரைப் பற்றிய தற்சார்பு:-**

கவிஞர் மிகவும் எச்சரிக்கையாகத் தன்னைப்பற்றிய அடையாளங்களைக் கவிதைகளில் தவிர்த்துத்தான் வந்திருக்கின்றார். இருப்பினும் இவரின் வாழ்க்கையோடு தொடர்பில்லாமல் கவிதை ஊற்றோடு தொடர்புடைய நினைவுகள் வெளிப்பட்டுள்ளன. கவிஞருடைய வாழ்க்கை வரலாற்றில் மதுரையிலுள்ள தியாகராசர் கல்லூரி நீங்கா இணைப்பைப் பெற்றிருந்தது.

“நான் படித்துக்கொண்டிருந்த காலத்தில் தியாகராசர் கல்லூரி அரசியல், இலக்கியப் பாசறையாக இருந்தது. கல்லூரி வரலாற்றில் அது ஒரு பொற்காலம்”[37] என்பார் அப்துல் ரகுமான்.

அவர் கூற்றின்படி அப்துல்ரகுமான் இலக்கியப் பாசறையில் தொடர்பு கொண்டவர். அக்கல்லூரிக்கு முன் உள்ள தெப்பக்குளமும் மண்டபமும் அவரின் கவிக்கண்ணுக்கு ஒளி கொடுத்தன. அம்மண்டபத்தைக் குறித்து “ஒற்றைமுலை” என்ற கவிதையில்,

“நீர்நெய் அகலில்
நிமிர்ந்த சுடரே!
என் சில இரவுகளைத்
துப்பறிந்தாய் நீ”[38] என்று பாடியுள்ளார்.

ஓட வண்டுகள் மொய்க்கும் சூழலின் நடுவே சுதை மொட்டுப் போல இருக்கும் மண்டபத்தில் அப்துல் ரகுமான் மகரந்தமாக ஒட்டிக் கவிதைகளை இயற்றியுள்ளார்.

கவிஞர் தெப்பக்குளத்தின் நடுவே உள்ள மைய மண்டபத்தை நினைவு கூறும்போது "தியாகராசர் கல்லூரி எனக்கு இரண்டாவது கருப்பையாக இருந்தது. அதன் அருகே இருந்த மையமண்டபம் எனக்கு ஒற்றை முலை யாகத் தெரிந்தது. அந்த முலைக்குள் இரத்தமாகப் புகுந்து பாலாக வெளியேறுவேன். அப்போதெல்லாம் பசித்த வாய்களைத் தேடி நான் தவித்திருக்கிறேன். அந்த மண்டபத்திற்குள் பலமுறை நான் கர்ப்பமடைந்திருக் கிறேன்"[39] என்று குறிப்பிட்டுள்ளார்.

சுயப்பிரசவம் வேண்டும் நம்மை நாமே யார் என்று பிரசவிக்க வேண்டும் என்கிறார். வருவதும் போவதுமான உலகில் வெறும் வெள்ளைத்தாளாக வாழ்வது வாழ்க்கையல்ல என்று "சுயப்பிரசவம்"[40] என்ற கவிதையில் தம் கருத்தைப் புலப்படுத்தியுள்ளார்.

சுயமோகமும் சுயப்பிரசவமும் மனிதனுக்கு ஏற்படலாம். மனிதன் நான் என்கிற ஆணவம் அற்றவனாக இருக்க வேண்டும் என்ற கருத்தை "தற்கொலை செய்"[41] என்ற தலைப்பில் வலியுறுத்தியமை இங்கு நோக்கத் தக்கதாகும்.

சமூகக் கும்பலில் நாம் நம்மை யார் என்று தனித்துவப்படுத்திக் காட்ட வேண்டும். நான் யாராக இருக்கவேண்டும் என்பதில் நான் நானாகவே இருக்க வேண்டும் என்றும், சமூக சமுத்திரத்தில் தன்னை தனிமைப்படுத்திக் காட்ட வேண்டும். அதுவே பிறப்பின் பயன் என்று "நான் யார்"[42] என்ற கவிதையில் பாடியுள்ளார்.

**சுயமோகம்:-**

நீரில் தன் நிழலை முதன் முதலாகக் கண்ட நார்சிஸஸ் அதனைத் தழுவும் முயற்சியில் நீரில் மூழ்கி இறக்கிறான். அவனே பின்னர் நீரில் பூவாக மலர்ந்து நிற்கிறான். இதுதான் நார்சிஸத்தின் கதை.

நீரில் படியும் தன் நிழலின் மேல் நார்சிஸஸ் சுயமோகம் கொள்கிறான். சுயமோகம் கொண்ட நார்சிஸஸின் பெயரைத் தன் கவிதை ஒன்றுக்குத் தலைப்பாக்குகிறார் அப்துல் ரகுமான். இக்கவிதையில் தன் புகைப்படத்தை மையமாகக் கொண்டு கவிதை எழுதுகிறார். இறந்த காலத்தில் சிறைப்பட்டு விட்டது என் நிழல் என்று புகைப்படத்தைக் குறிக்கிறார். கவிஞரின் புகைப் படத்தில் அவரின் இறந்தகாலப் பிம்பமே நார்சிஸ்ஸாகப் பூத்து ஸ்தம்பித்து நிற்கிறது; அதனைப்பார்த்து இரசிப்பதாகக் கவிதை அமைந்துள்ளது.

நீரில் வீழ்ந்து இறந்த நார்சிஸஸ் பூவாக மலர்ந்து நின்றதைத் தன் பிம்பமே நார்சிஸஸாகப் பூத்திருப்பதுடன் ஒப்பிட்டுச் சொல்லும் போது,

"கால நதி நீரில் விழுந்த
என் பிம்பமே
நார்சிஸ்ஸஸாகப் பூத்து
ஸ்தம்பித்து விட்டது"[43]

என்று குறிப்பிடுகிற நிலை சுயமோகம் சார்ந்ததாகும்.

**கவிஞரின் இலயிப்பு:-**

அப்துல் ரகுமானுக்கு இயல்பாகவே ஓவியம், சிற்பம், இசை, கவிதை போன்றவைகளில் நாட்டம் உண்டு. இவரின் திறன் எழுதுகோலின் வழியாகக் கவிதையாக்குவதில் இருந்தாலும் மற்ற கலைகளிலும் ஐக்கியமாகிற இயல்பு உடையவர் என்பதைக் கவிதைகளின் வழி அறியலாம். கவிஞரின் இந்த ஐக்கியமாகிய தற்சார்பை "பத்மை"[44] "என் செவியின் சுவாசம்" போன்ற கவிதைகளில் காணலாம்.

"பிருந்தாவனமெங்கும்
செவிகள் பூக்க
சுவாசத்தை ராகமாக்கி
ராதை - உன்னில்
புல்லாங் குழலாயிருக்கிறாள்"[45]

என்று லதாமங்கேஷ்கரின் இசை குறித்துப் பாடியுள்ளார். அவரின் இசைக் கானத்தில் கவிஞருக்கு மிகுந்த இலயிப்பு இருப்பதை உணரலாம்.

"உன் வசியச் சுனையில்

நீர் பருகும் தாகங்கள்

விசுவரூபமெடுக்கும்"[46]

என்று தன் பேரார்வத்தையும் இசைத் தாகத்தையும் கவிதைவரிகளில் வெளிப்படுத்தியுள்ளார்.

**2. கவிஞரின் கவிதை பற்றிய தற்சார்பு:-**

அப்துல் ரகுமான் தம் கவிதைகளைப் பற்றியே, கவிதைகளில் குறிக்கும்போது தற்சார்பு இடம் பெற்றுள்ள நிலையைக் காணலாம்.

"அந்தப்புரங்களில்" என்ற தலைப்பில் தன்னிடமிருந்து கவிதை பிறக்கும் போது ஏற்படும் அனுபவங்கள்,

"நினைவுகளில் சூலாகி

நினைவுகளில் புதைந்து

கணந்தோறும் எனக்குப்

புதுப்புது அவதாரங்கள்"[47]

என்று வடிக்கும்போது தான் எடுக்கும் புதுப்புது அவதாரங்களைக் கூறியவர், நினைவுகளாலேயே சுழலும் தன் வாழ்வை,

" எண்ணங்களை சுவாசித்து

எண்ணங்களில் நான்று கொண்டு

பொழுதுக்கும்

வாழ்வோடு கண்ணாமூச்சி"[48]

என்று கூறுகிறார்.

இவ்வாறு தொடர்ச்சியாகச் சிந்தனை செய்வதால் தன் அரிய கவிதைகளில் தானே மோகித்து இலயித்து மாட்டி விடும் நிலையை,

"ஒட்டடைக் கோலிலேயே

வலைபின்னும் சிலந்திநான்

சிக்குகின்ற ஈயும்நான்"[49]

என்றும் குறிப்பிட்டுக் காட்டுவது கருதத்தக்கதாகும். அவருடைய கவிதை அவரிடம் பிறப்பெடுக்கிறது. பிறப்பெடுத்த கவிதையின் அழகில் தானே மயங்கு கின்ற "சுயமோகம்" உடைய கவிஞராக அப்துல்ரகுமான் இருக்கிறார்.

கவிதையின் பிறப்பு பற்றியும் மேம்பாடு குறித்தும் சில கவிதைகளின் வழிக் கூறிச்செல்கிறார்.

**கவிதையின் பிறப்பு:-**

அப்துல் ரகுமான் தன் கவிதையின் பிறப்புக் குறித்துக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

"என் ஆறாவது விரல் வழியே
சிலுவையிலிருந்து
வடிகிறது ரத்தம்
ஆம் -
என் "மாம்சம்"
வார்த்தை ஆகிறது" [50]

என்றவாறு தன்னிடமிருந்து கவிதைப் பிறக்கும் அனுபவ உணர்வுகளை வெளிப்படுத்திக் கூறியுள்ளார்.

"என் பேனாவிலிருந்து வரும் மை வெறும் மை அல்ல; என் ரத்தம், என் ரசம் இந்த மையில் என்னைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கரைத்துத் தெளித்துக் கொண்டிருக்கிறேன்.

ரத்தம் ஏன் வழிகிறது?

வாழ்க்கை ஒரு சிலுவை, அதில் நான் அறையப்பட்டிருக்கிறேன் (ஒவ்வொருவரும் தான்) ஒவ்வொரு அனுபவமும் ஓர் ஆணிதான்.

ஆணிகள் திறந்த காயங்களின் (உடலே காயம் தானே) ரத்தம் தான் என் ஆறாவது விரல் வழியாக வழிகிறது. என் "மாம்சம்" என் உடல் கரைந்து கரைந்து வார்த்தையாகிக் கொண்டிருக்கிறது."[51]

இச்செய்தி பைபிளிலுள்ள செய்தியுடன் ஒப்பிட்டு நோக்கத்தக்கது.

இயேசு மானுட உடல் எடுத்து வந்தது பற்றி, பைபிளில் யோவான் கூறும்போது,

"ஆதியிலே வார்த்தை இருந்தது அந்த வார்த்தை தேவனிடமிருந்தது. அந்த வார்த்தை தேவனாயிருந்தது. அவர் ஆதியிலே தேவனோடிருந்தார். சகலமும் அவர்மூலம் உண்டாயிற்று. உண்டானதொன்றும் அவராலேயே யல்லாமல் உண்டாகவில்லை. அவருக்குள் ஜீவன் இருந்தது. அந்த ஜீவன் மனுஷருக்கு ஒளியாயிருந்தது."[52]

இறைவனின் வார்த்தை ஏசு எனும் மாமிசமாயிற்று என்பது பைபிளின் செய்தியாகும். அப்துல் ரகுமானிடம் மாமிசம் வார்த்தையாகியுள்ளது. இக் கவிதைகள் சிறிது சிறிதாக இவரின் தேகத்தைக் கரைத்துத் தருவதாகப் பிறக்கின்றனவாம். இங்கு கவிஞரின் எழுதுகோல் மற்ற விரல்களைப் போல விரலாக மாறியது என்கிறார்.

வாழ்க்கை என்கிற சிலுவையில் அனுபவம் என்கிற ஆணியால் அறையப்பட்டு, இரத்தம் தன் ஆறாவது விரல் வழியாக வழிகிறதாம். அனுபவங்களால் கவிதை பிறப்பதை இவ்வாறு குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். இந்த உலகத்தில் அவர் பெற்றதைக் கவிதையின் வழியே தந்துவிட வேண்டும் என்கிற வெளிப்பாட்டைக் குறிப்பிடுவதாகவும் மதிப்பிடலாம்.

தன் கவிதைப் படைப்பின் மேன்மைகள் குறித்து அப்துல் ரகுமான் "முன்னுரையாக ஒரு விண்ணப்பம்" என்ற தலைப்பில் பாடியுள்ளார். மலரில் வண்டுகள் அமரும்; மலரிலுள்ள மகரந்தம் வண்டுகளின் மேனியில் ஒட்டிப் பிறிதொரு மலருக்குப் போகும்; அங்கு வண்டுகளின் மேனியில் படர்ந்துள்ள மகரந்தப்பொடிச் சூற்பையில் விழுந்து கருத்தரிப்பு நிகழும். இது இயற்கை யில் நிகழும் அயல்மகரந்தச் சேர்க்கையாகும். ஆனால் இவரது கவிதை மலர்களில் இருக்கும் மகரந்தம் எடுத்துச் செல்லும் வண்டுகளையே சூலாக்கும் வல்லமை பெற்றது. அத்தகு சிறப்புப் பொருந்திய தன் கவிதைமலர்களை அர்ச்சனைக்காகப் பறித்து விடாதீர்கள் என்று கேட்டுக்கொள்ளும் கருத்தை உள்ளடக்கி,

"வண்டுகளையே சூலாக்கும்

மகரந்தம்

என் பூக்களில்

இவைகளை -

அர்ச்சனைக்காகப்

பறித்துவிடாதீர்கள்"[53]

என்று வேண்டுகோள் விடுத்துள்ளமை சிறப்புடையதாகும்.

பலிபீடம் என்ற கவிதைத் தலைப்பில் கவிதையாத்தலைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

"நட்சத்திர வேஷமணிந்த

எழுத்துக்கள்

நிலாமுரசைச் சுற்றிப்

பாட்டு ரத்தத்தை

வாந்தி எடுத்தபடி

குரவையாடிக் கொண்டிருந்தன"[54]

என்று கூறுகிறார். நட்சத்திர வேஷமணிந்த எழுத்துக்கள் என்பது ஆடம்பரமான கவர்ச்சிமிகுந்த எழுத்துக்கள் என்பதாகும். கவிதையின் அர்த்தம் சந்தபீடத்தில் பலியாகிப் போகின்ற நிலை குறிப்பிடப்படுவதைக் காணலாம். இதனை அனுபவத்தின் வாயிலாக உணர்ந்தவர் தன் கவிதைகளுக்கும், பிற கவிதை களுக்கும் அர்த்தம்தான் முக்கியம் சந்தம் அல்ல என்றும் சந்தத்தை மட்டுமே நோக்கி அமைவன கவிதைகளல்ல என்றும் வலியுறுத்துகிறார்.

தன் கவிதை மேம்பாட்டைக் குறிக்கும் போது.

" மனத்

தீவின் தனிமையில்

தவத்தைப் புரிகின்ற

மௌனமே என்பாடல்"[55]

என்று இறுமாப்புடன் குறிப்பிடுகிறார்.

மேலும் அக்கவிதையில் கோடிச் சூரியர்களைப் பிழிந்து நட்சத்திரங்கள் என்கிற கவிதையைச் செய்தேன். இவைகளை நாட்கள் கழிந்தவுடன் தேதித் தாள்களைக் கிழித்துப் போடுவது போல ஆக்கிவிடக் கூடாது என்றும் கேட்டுக் கொள்கிறார். கவிதையில் சூரியன், நட்சத்திரம் என்ற சொற்களை இடம் பெறச் செய்ததன் மூலம் சுருக்கம், செறிவு, உயர்வுநிலை போன்றவைகள் கவிதையில் இடம்பெற்றுள்ளதைக் குறிப்பாகச் சுட்டுவதாகக் கொள்ளலாம். தன் கவிதை இன்பத்தை அனுபவிக்க சக்திமிக்கவர்களாலேயே இயலும்; தாலிகளுடன் அலிகளை அனுப்பிவிடாதீர்கள் என்றும் வேண்டுகோள் விடுக் கின்றார்.

மரணத்தைக் குடித்து மலரும் மலராகத் தான் மாறி இருப்பதற்கு இவரின் கவிதைகள் ஒரு “ஞாபகமுடிச்சு” என்று அப்துல் ரகுமான் குறிப்பிடுகிறார். “ஞாபகமுடிச்சு”[56] என்ற தலைப்பில் தன் மேலான மரணமில்லாத வாழ்வை இவ்வாறு சுட்டுவதாக எண்ண வழியுண்டு.

“சுவாச சாபம்”[57] என்ற தலைப்பில் கவிஞர் தன் கவிதைகள் காகிதப் பூக்கள்; அவை வேர்வையில் பூத்தவை; தம் கவிதை அர்த்தங்களோடு பூத்தவை; அக்கவிதைகள் நீருபூத்த நெருப்பாக இருக்கின்றன. தம் கவிதை கள் நிலைப்பாடு உடையன என்று குறிப்பிடுகிறார். மேலும் தன் கவிதை சமகாலக் கவிஞர்களுக்குச் சாப விமோசனம் தராதது. மாறாகப் பயன்கருதி எழுதும் சில கவிஞர்களைச் சபிக்கக் கூடியது என்றும் கூறுகிறார். அர்த்தமற்று வெற்று வார்த்தைகளுக்குள் சுகம்கண்டு வாழும் கவிஞர்களை இடித்துரைக்கிறார். கவிதைகளைப் பருவங்கள் உருட்டுகின்ற பகடைகளாக, இரவின் எச்சில்கள் துப்புகின்ற படிக்கங்களாக, காமக் கண்களுடன் நோக்கும் வேசிகளாகப் படைக்கும் சில கவிஞர்களின் கவிதைகளைத் தம் கவிதை சபிக்கும் என்று எரிந்து விழுகிறார்.

**தற்சார்பு பெறாத கவிதைகள்**

தற்சார்பு பெறாத கவிதைகளைக் கீழ்க்கண்ட உட்தலைப்புக்களின் வழிக் காணலாம்.

1. இயற்கை
2. இறைமை
3. தனிமனிதம்
4. குடும்பம்
5. தத்துவம்
6. சமூகம்

**1. இயற்கை:-**

மானுடம் இயற்கையின் ஒரு பகுதி (A Part of Nature) ஆகும். கவிஞன் மானுடத்தின் ஒரு பகுதியாக இருக்கிறான். கவிஞனுக்கும் சாதாரண மனிதனுக்கும் வேறுபாடு உண்டு.

இயற்கையின் ஒரு பகுதியாக இருக்கும் மானுடத்தைக் கவிஞன் உணர்கிறான். தான் உணர்ந்ததைப் பிறரும் உணர்கிற மாதிரி கவிதை வடிக்கிறான். சாதாரண மனிதனுக்கு இயற்கையை உணரத் தெரியும். எனினும் பிறருக்கும் பயன்படும் வகையில் கொடுக்கத் தெரியாது.

**இயற்கையின் ஆற்றல்:-**

இயற்கையின் ஆற்றல் குறித்து வோர்ட்ஸ் வொர்த் குறிப்பிடுகிற கருத்து இங்குக் கருதத்தக்கதாகும். "நகர வாழ்க்கையின் அவலங்கள் என் மனதைச் சஞ்சலப்படுத்துகின்றன. அப்போது இயற்கையில் கண்டுகளித்த பல்வேறு தோற்றங்களையெல்லாம் நினைத்துக் கொள்வேன். அந்நினைப்புக்கள் மனத்திற்கு அமைதியையும் ஆறுதலையும் அளிக்கின்றன"[58]. இக்கருத்தின் வழி மனத்திற்கு அமைதியினையும் ஆறுதலையும் தருகின்ற ஆற்றல் இயற்கைக்கு இருப்பதை அறியலாம்.

**இலக்கியங்களில் இயற்கை:-**

சங்க இலக்கியங்களில் இயற்கைக்குச் சிறப்பான இடமிருந்தது. சங்கத் தமிழர் வாழ்க்கையில் இயற்கைக்குப் பெரும்பங்கு இருந்ததை

வரலாறும் குறிப்பிடுகிறது. காப்பியங்களில் இடம்பெறும் நாட்டுவளம், நகர் வளம் போன்றவைகள் இயற்கையுடன் தொடர்புடையவை ஆகும். நாட்டுப்புற இலக்கியங்களிலும் முற்சுட்டிய இயல்புகள் காணப்படுகின்றன. தற்காலத்தில் வருணனைப் பகுதியில் இயற்கையின் ஆட்சி காணப்படுவதைக் காணலாம்.

"இயற்கை ஆரம்ப காலத்தில் முதற்பொருளைச் சிறப்பிக்கும் துணைப் பொருளாக நின்று இடைக்காலத்தில் முதல் பொருளாகி நாடு நகரங்களை விரிந்த பரப்பினை உட்கொண்டு, அதன்பின் குறிப்பிட்ட ஒன்றின் பாற்படும் (எ.டு. மயில்-சுரதா) வருணனையாக அமைகிறது"[59] என்கிற மதிப்பீட்டுச் சிந்தனை இங்கு கருதத்தக்கதாகும்.

**கவிஞர்கள் இயற்கையைப் பாடும் விதம்:-**

கவிஞர்கள் இயற்கையைப் பாடும் விதத்தினை இருவகைகளில் பகுத்துப் பார்க்கலாம்.

1. இயற்கையை இயற்கையாகப் பார்த்தால்
2. இயற்கையைச் சமூகத்துடன் இணைத்துப் பார்த்தல்.

**1. இயற்கையைச் சமூகத்துடன் இணைத்துப் பார்த்தல்:-**

மேற்குறித்த வகைகளில் அப்துல் ரகுமான் இரண்டாவது வகையைச் சார்ந்த கவிஞரென மதிப்பிடலாம். இயற்கையை இயற்கையாகப் பார்க்கும் முறையை விட (1) இயற்கையைச் சமூகத்துடன் இணைத்துப் பார்க்கின்ற விதம்(12) இவரிடம் மேலோங்கி இருப்பதாக மதிப்பிடலாம். இயற்கையாகவே இவர் சமூகம் குறித்த சிந்தனையுள்ள கவிதைகளை மிகுதியாகப் பாடியுள்ளார் என்கிற கருத்தும் இங்கு இணைத்துப் பார்க்கத்தக்கதாகும்.

மானுடத்தின் திருவிழா, அந்த இடம், நீராக, மண், இளவேனில், இரவின் கண்ணீர், அந்தி, குளம், நட்சத்திரங்களில் கூடுகட்டி, மின்னல், தாமரையும் சூரியகாந்தியும், மரங்கள், திருஷ்டி பரிகாரம் போன்றவை இயற்கையைச் சார்ந்த கவிதைகளாகும். இவற்றில் "மரங்கள்" என்ற கவிதையைத் தவிர மற்றவை யாவும் இயற்கையோடு கூடிய சமூகக் கவிதைகளாகவே மலர்ந்துள்ளன.

**வாழ்வியலுடன் ஒப்பிட்டுக் கூறல்:-**

இயற்கையின் இயல்புகளை மனித வாழ்வியல் இயல்புகளுடன் இணைத்து ஒப்பிட்டு "மானுடத்தின் திருவிழா"[60] என்ற கவிதையில் குறிக்கிறார். இக்கவிதைச் செய்திகளைப் பின் வருமாறு அட்டவணைப்படுத்திப் பார்க்கலாம்.

| வ.எண் | இயற்கை | மனித வாழ்வியல் கூறுகள் | சிறப்பு நிலை |
|---|---|---|---|
| 1. | நட்சத்திரங்களில் ஒழுங்கு இல்லை. | கோலம் போடுகிற புள்ளிகளில் ஒழுங்கு உண்டு. | நட்சத்திரங்களின் அழகு கோலப் புள்ளிகளில் இல்லை. |
| 2. | நதிகள் நேராக ஓடுவதில்லை. | வாய்க்கால்கள் நேராக ஓடும். | நதிகளில் இருக்கிற சௌந்தர்யம் வாய்க் கால்களில் இல்லை. |
| 3. | குயில்பாட்டில் பாடும் இலக்கணமில்லை. | சங்கீதத்தில் இலக்கணம் உண்டு. | குயில்பாட்டில் இருக்கிற உற்சாகம் சங்கீதத்தில் இல்லை. |
| 4. | மயிலின் நடனத்தில் தாளலயம் இல்லை. | ஆடும் பரதத்தில் தாளலயம் உண்டு. | மயில் நடனத்தில் இருக்கிற பரவசம் பரதத்தில் இல்லை. |
| 5. | கடல் அலைகளில் அணிவகுப்பு இல்லை. | படைகளில் அணிவகுப்பு உண்டு. | அலைகளின் உல்லாசம் படை களிடம் இல்லை. |
| 6. | மின்னல்களில் மரபு இல்லை. | எழுதும் வாக்கியத்தில் மரபு உண்டு. | மின்னல்களின் ஆழம் வாக்கியத்தில் இல்லை. |
| 7. | பறவைகளுக்கு நாடுகளும் எல்லைகளும் இல்லை. | மனிதர்களுக்கு நாடுகளும் நகர எல்லைகளும் உண்டு. | பறவைகளின் சுதந்திரம் மனிதர்களிடம் இல்லை. |
| 8. | மேகங்களுக்குப் பாதை பயண இலக்குகள் இல்லை. | மனிதர்களிடம் உண்டு. | மேகங்களில் இருக்கிற ஆனந்தம் மனிதர் களிடம் இல்லை. |
| 9. | மலர்களிடம் அரசியல் இல்லை. | மனிதர்களிடம் உண்டு. | மலர்களிடம் இருக்கிற கொண்டாட்டம மனிதர்களிடம் இல்லை. |

இயற்கையின் சில கூறுகளையும் மனித வாழ்க்கையுடன் தொடர்புடைய சில கூறுகளையும் இணைத்து ஒப்பிட்டுக் கவிதையாத்துள்ளார். இயற்கையில் இருக்கிற அழகு, உற்சாகம், பரவசம், உல்லாசம், ஆழம், சுதந்திரம், ஆனந்தம், கொண்டாட்டம், கள்ளம் கபடமற்ற தன்மை போன்ற இயல்புகள் மனித வாழ்வியல் கூறுகளில் இடம்பெறவில்லை. இயற்கையில் ஒழுங்கு, நேர்மை, இலக்கணம், தாளலயம், அணிவகுப்பு, மரபு, வரம்புகள், பாதை, இலக்குகள், அரசியல் போன்ற இயல்புகள் இல்லாவிட்டாலும் சிறப்புத் தன்மைகளைப் பெற்றிருக்கிறது. முற்குறித்த இயல்புகளனைத்தும் மனித வாழ்வியல் கூறுகளுடன் செயற்கையாக இடம்பெற்றுள்ளன. இருப்பினும் இயற்கையில் மிளிர்கிற சிறப்பியல்புகள் மனித வாழ்வியல் கூறுகளில் இல்லை என அப்துல் ரகுமான் சுட்டிக்காட்டுகிறார்.

**காற்று:-**

இயற்கை பஞ்சபூதங்களால் ஆனது. பஞ்சபூதத்தில் காற்றும் ஒன்று. அக்காற்றின் இயல்புகள் சிலவற்றை மனித வாழ்க்கையின் இயல்புகளுடன் ஒப்பிட்டு "அந்த இடம்"[61] என்ற தலைப்பில் அப்துல் ரகுமான் கூறுகிறார்.

| இயற்கை-காற்று | மனிதன்-வாழ்வியல் கூறுகள் | சிறப்பியல்புகள் |
|---|---|---|
| 1. காலில்லாத காற்று நடக்கிறது | காலுள்ளமனிதன் நடக்கிறான் | காலில்லாதகாற்றுக்கு ஓய்வு இல்லை. காலிருக்கும் மனிதன் ஓய்கிறான். |
| 2. கண்ணில்லாத காற்று எல்லோரையும் சந்திக்கிறது. | கண்ணிருக்கும் மனிதன் எல்லோரையும் சந்திப்பதில்லை | காற்று பேதம் பார்ப்பதில்லை. மனிதன் கண் இருந்தும் பேதம் பார்க்கிறான். |
| 3.கையில்லாத காற்று அனைவரையும் தழுவுகிறது. | கையிருக்கும் மனிதன் சகமனிதரைத் தழுவுவதில்லை | காற்றுக்குத் தீண்டாமைஇல்லை, மனிதருக்கு உண்டு. |
| 4.வாயில்லாத காற்று எல்லா மொழிகளை யும் பேசுகிறது. | வாயுள்ள மனிதன் எல்லா மொழிகளையும் பேசுவதில்லை | காற்றுக்கு மொழிகள் யாவும் தன்மொழி, மனிதனுக்கு அப்படி அல்ல. |
| 5. காற்று பொய்கை யிடம் போனால் குளி ராகும். பூக்களிடம் போனால் நறுமணமா கும்,புல்லாங்குழலிடம் போனால் இசையாகும் | மனிதன் அப்படியல்ல | காற்று பிறவற்றுடன் கலந்தால் அதன் தன்மை உயருகிறது. மனிதனிடம் கலந்தால் அழுக்காகிப் போகிறது. |
| 6. கடல் அலைகள், பச்சைப் பயிர்கள் மரங்களின் ஊமை நாக்குகளான இலை கள் போன்றவற்றுடன் காற்று பேசுகிறது. | மனிதன் இயற்கைகளுடன் பேச முடிவதில்லை. | "தான்" என்ற அகந்தையால் மனிதன் மனிதர்களிடம் கூடப் பேசுவதில்லை. இயற்கை மனிதனை விட பல தகுதிகள் பெற்றுள்ளது. |
| 7. காற்று பூக்கள் பச்சைப்பயிர்கள் மரங்களின் ஊமை நாக்குகளான இலை கள் போன்றவற்றுடன் காற்று பேசுகிறது. | மனிதன் சகமனிதனைக் கூடச் சேர்ப்பதில்லை. | மனிதன் பிரிவினை வாதி, காற்று சமத்துவபுரம். |

காற்றிற்கு கால், கண், கை, வாய் போன்ற உறுப்புகள் இல்லை. இருப்பினும் ஓயாமல் அது நடக்கிறது. எல்லோரையும் சந்திக்கிறது. அனைவரையும் தீண்டுகிறது. எல்லா மொழிகளையும் பேதமின்றிப் பேசுகிறது. எல்லோருடனும் பேசுகிறது இயற்கைக் காற்று சமத்துவபுரமாக இருக்கிறது.

மனிதனுக்குக் கால், கண், கை, வாய் போன்ற உறுப்புகள் உள்ளன. நடந்தால் ஓய்கிறான், பேதம் பார்க்கிறான், தீண்டாமையைக் கடைப்பிடிக் கிறான், மொழியால் வேறுபாடு கூறுகிறான். மனிதன் மனிதனுடன் கூடப் பேசாமல் தான் என்ற அகந்தையில் இருக்கிறான். மனிதன் பிரிவினைவாதியாக இருக்கிறான். காற்றுக்கு இருக்கும் நல்லியல்புகள் மனிதனிடம் இல்லை என ஒப்பிட்டுக் குறிப்பிடுகிறார் அப்துல் ரகுமான்.

**நீர்:-**

ஐம்பூதங்களில் ஒன்றாக நீர் அமைகிறது. நீரால் பிறந்தவன் மனிதன் ஏன் நீராக இல்லை என்ற வினாவை எழுப்புவதாக "நீர்" என்ற கவிதையை அமைக்கிறார்.

" நீ மட்டும்<br>
நீராகவே இருந்தால்<br>
உன்னை யாரும்<br>
காயப்படுத்தவே முடியாது<br>
..........................<br>
........................<br>
நீர் ஆயுதமில்லாமல்<br>
போராடுகிறது<br>
ஆனால்<br>
எல்லாவற்றையும்<br>
வென்று விடுகிறது"[62]

நீர் உயிர்களுக்குத் தவிர்க்க முடியாததாக இருக்கிறது. மனிதன் பலவாறு தவிர்க்கப்படுகிறான். நீரை யாரும் காயப்படுத்த முடியாது. நீரின் உயர்தன்மை மனிதரிடம் இல்லை. நீர் ஆயுதமின்றிப் போராடுகிறது. தாழ்ந்தாலும் உயர்கின்ற தன்மை நீருக்குண்டு. மனிதர்க்கு இல்லை. நீருக்கு ஓடுவது தான் வாழ்க்கை. நிற்பது மரணம். மனிதன் நிற்கத்தான் செய்கிறான். நீர் கரைகளைத்தானே உருவாக்கிப் பாதுகாப்பை அமைத்துக் கொள்கிறது. மனிதனுக்குச் சுயமாகத் தன்னைப் பாதுகாக்கத் தெரியாது.

நீர் தாக வேர்களைத் தேடிச் செல்கிறது. நீருக்கு இருக்கிற இரக்கம் மனிதனிடம் இல்லை. நீருக்குத் தூய்மையாக்கும் இயல்பு உண்டு. மனிதன் பிறவற்றை அழுக்காக்குகிறான். நீருக்குப் பிரதிபலிக்கிற இயல்பு உண்டு. மனிதன் அறிவைப் பிரதிபலிப்பதில்லை. நீர் எங்கு இருந்தாலும் சமுத்திரத்தை அடையும். மனிதன் மானுட சமுத்திரத்தில் சங்கமமாகத் தயங்குகிறான்.

இவ்வாறு நீரின் இயல்புகளையும் மனிதனின் வாழ்வியல் இயல்பு களையும் இணைத்து நீரின் இயல்பு உயர்ந்திருப்பதாகக் கூறப்படுகிற முறை சிறப்பானது. நீரைப் போன்ற இயல்புகளை மனிதனும் பெற்றால் உயர வழியுண்டு என்ற உட்கருத்தும் வலியுறுத்தப் பெறுவதாக மதிப்பிடலாம்.

**மண், காலம்:-**

முற்குறிப்பிட்ட நட்சத்திரம், காற்று நீர் போல மண்ணும் காலமும் மனித இயல்புகளுடன் ஒப்பிட்டு முடிவில், மண், காலத்தின் இயல்புகள் சிறந்திருப்பதாகக் கவிதைகளை அமைத்துள்ளார்.

மண் உயிர்கள் அனைத்திற்கும் கருப்பையாகவும், சமாதியாகவும் உள்ளது. மண் பிறப்பு முதல் இறப்பு வரை உதவி செய்யும் இயல்பினைக் கொண்டதாய் உள்ளது. மனிதனிடம் இத்தகு இயல்புகள் இல்லையே என அப்துல் ரகுமான் ஆதங்கப்படுகிறார். மண் பேசுவதாகக் கூறும்போது,

"உயிர்களின் கருப்பை நான்
சமாதியும் நானே!
. . . . . . . . .

ஒரே நேரத்தில் நான்

உங்களுக்குச் சமாதியாகவும்

விதைகளுக்குக் கருப்பையாகவும்

இருக்கிறேன்”[63]

மண் கீறுபவர்களுக்கும் சோறு தருகிறது. இது மண்ணின் உயர்ந்த பண்பு என்கிற கருத்து நயம் சிந்தையில் நிறைகிறது.

“ நீங்கள் என்னைக்

கீறுகிறீர்கள்

நான் சோறு தருகிறேன்

என்னைக் காயப்படுத்துகிறீர்கள்

நான் பாலூட்டுகிறேன்”[64]

இளவேனில் காலத்திற்கும் மனித இயல்புகளுக்கும் தொடர்புபடுத்தி “இளவேனில்” என்ற கவிதையை அப்துல் ரகுமான் எழுதியுள்ளார்.

“ புவிமடந்தை மறுபடியும்

பூப்பை அடைந்தாள் - தன்

கவியெழுத வர்ணமண

யாப்பை அடைந்தாள்

பனி மலர்ப்பூஞ் சொல்லடுக்கிப்

பாட்டு வரைந்தாள் - தன்

தனிமைகளின் கனாக் குரலைக்

கேட்டு வரைந்தாள்”[65]

இளவேனில் தன் கவிதைகளை வர்ணங்களான அழகாலும், நறுமணம் என்கிற சுகந்தத்தாலும் எழுதுகிறது. இயற்கை இயற்கையாகவே பனி மலர்ப் பூக்கள் என்னும் புதிய சொல்லெடுத்து அரிய கவிதையை வடிக்கிறது. இளவேனில் அரிய கவிதைகளைத் தனிமையில் எழுதுகிறது. மனிதன் படைக்கும் கவிதைகளில் இயற்கையில்லை. புதிய சொல்லாட்சி இல்லை. ஆரவாரமான சந்தடிகளுக்கிடையில் இயற்றும் கவிதையில் அழகும் பொருள்

மணமும் எங்ஙனம் இருக்க முடியும்? என்ற வினாவின் வழி இக்காலக் கவிதையின் இயல்புகளைச் சாடுகிறார்.

காலத்தின் கூறுகளில் இரவும் ஒன்றாகும். “இரவின் கண்ணீர்” என்ற தலைப்பில் இரவின் இயல்புகளுக்கும் அர்த்தம் கற்பிக்கும் ஆற்றலுடையவராக அப்துல் ரகுமான் விளங்குவதைக் காணலாம்.

“ பகல் செய்தித்தாள்
நீயோ காவியம்
பகல் வெறும் கூச்சல்
நீயோ அர்த்த கர்ப்பம் உடைய
மௌனம்
பகல் அம்பலம்
நீயோ ரகசியங்களால்
ஆனவள்
நீ அறிய முடியாதவள்
ஆதனால்தான் உன்மேல்
எனக்குக் காதல்”[66]

அந்திவானத்தில் பல நிறங்களின் கூட்டம் இருக்கின்றது என்பதற்கான விளக்கத்தைக் கற்பனை நயத்துடன் விளக்குகிறார் அப்துல் ரகுமான். சூரியன் என்னும் தலைவன் இறந்துவிட்டதால் பல நிறங்களில் அனுதாபக் கூட்டம் நடக்கிறது. மனிதர்கள் இறந்தாலும் அனுதாபக் கூட்டம் இருக்கும். ஆனால் இறந்த சூரியன் உயிர்த்து எழுவதைப் போல இறந்த மனிதன் உயிர்த்து எழுவதில்லை என்கிற முரணையும் சேர்க்கிற பொழுது “அந்தி”[67] என்னும் கவிதை நிலைபெற்றதாக மாறுகிறது.

குளம்:-

“குளம்”[68] என்ற தலைப்பிலான கவிதையில் குளமே பேசுவது போல உள்ளது. குளத்தில் பூக்கள் பூப்பதால் குளம் பூப்படைகிறது என்கிறார், கவிஞர். குளத்தைச் சுற்றியுள்ள பூமரங்கள் முகம் பார்க்கும் கண்ணாடியாகவும் குளம் விளங்குகிறது. வாசக வண்டுகள் வாசிக்கும்

வாசகசாலை குளம் என்கிற வரிகள் நயமுடையன. குளம் உடல் அழுக்கைப் போக்கவல்லது. மனிதர்கள் அழுக்கை மட்டும் போக்கிக் கொள்ளாமல், பாவத்தையும் போக்கிக்கொள்ள நினைக்கிறான் என முத்தாய்ப்பாகச் சமுதாய மக்களின் மூட நம்பிக்கையைச் சாடுகிறார்.

அறிவியல் யுகத்தின் சாயல்படிந்திருப்பதாக "நட்சத்திரங்களில் கூடுகட்டி"[69] என்ற கவிதை அமைகிறது. அறிவியலின் சாதனைப் படிக்கட்டுகளின் வழி நட்சத்திரத்தில் வசிப்போம். அங்கு வசிப்பது மட்டுமின்றிப் புதிய பரம்பரை ஒன்றை நட்சத்திரத்தில் உருவாக்குவோம் என்று உறுதிபடக் கூறுகிறார். "மின்னல்"[70] என்ற கவிதையில் மின்னலை வான உற்சவத்தின் வாண வேடிக்கை என வர்ணிக்கிறார். முகில் எனும் புற்று கக்கும் நெருப்புப் பாம்புகள் என்றும், கறுப்பு மேக உதட்டின் வெளிச்ச உளறல் என்றும், இடிச்சொற்பொழிவின் சுருக்கெழுத்து என்றும் குறிப்பிடும் நயம் இவரின் கற்பனைத் திறத்தைக் காட்டுகிறது.

தாமரைக்குக் குங்குமத்தையும் சூரிய காந்திக்கு மஞ்சளையும் சூரியன் கொடுத்ததாகத் "தாமரையும் சூரிய காந்தியும்"[71] என்ற கவிதையில் குறிப்பிடுகிறார்.

**இயற்கையை இயற்கையாகவே கூறுதல்:-**

இயற்கையைக் கற்பனைத் திறத்துடனும் வருணனை நயத்துடனும் பாடுவதில் அப்துல் ரகுமானுக்குள்ள திறமையை "மரங்கள்" முல்லை, சூரியகாந்தி ஆகிய கவிதைகளில் காணலாம். மரத்தைப் பற்றிக் கீழ்க் கண்டவாறு குறிப்பிடுகிறார்.

மரங்களே! பூமியின்
வரங்களே!
விதை வாமனனின்
விசுவருபங்களே!
நீங்கள்
ஓவியமாகவே

உருவெடுத்த தூரிகைகள்
மேக மைக் கூடுகள்
கவிழ்த்த மையில் உருவாகும்
அதிசயப் பேனாக்கள்
பனிநிழல் மழை பொழியும்
பச்சைப் பசுங்குடைகள்
வெய்யில் விழிகளுக்கு
மையெழுதும் கோல்கள்
மன்மதனின் அம்புகளை
வடிக்கின்ற பட்டறைகள்
பறவைகளின் தாய்நாடு[72]

மரங்கள் வேர்க்கூந்தலை மண்ணிற்குள் புதைத்துவிட்டு, கைகளில் பூச்சூடிக் களிக்கின்ற பைத்தியங்கள் என்று கூறுகிறார். இலை விரலின் பக்குவத்தைக் கண்டு காற்று என்னும் யாழ் தானே அசைந்து வந்து தன்னை மீட்டிக் கொள்கிறதாம். மரங்களைப் பருவங்கள் விளையாட்டுப் பாவையாக ஆக்கியுள்ளன. ஒரு பருவமோ உடைகளை அவிழ்க்கிறது. மற்றொரு பருவமோ உடைகளைச் சூட்டுகிறது.

மரங்கள் மண்ணின் ஆழத்தை வேர்களால் தோண்டியும், விண்ணின் உயரத்தைக் கிளைகளால் துழாவியும் செய்கிற இச்செயல்பாட்டை சிவனின் அடியை வராகமும் முடியை அன்னமும் தேடிய இயல்போடு இணைத்துக் கூறுகிறார். இவ்வாறு இயற்கையை இயற்கையாகவே நோக்குகிறபோதும் அப்துல் ரகுமானிடம் கற்பனைத் திறன் ஓங்கியிருப்பதைக் காணலாம்.

**2. இறைமை**

கவிஞர்களின் கவிதைகளின் வழி இறைமைக் கோட்பாட்டை உணரலாம். ஆய்விற்கு எடுத்துக்கொண்ட நான்கு கவிதைத் தொகுப்புக்களில் இறைக்கோட்பாட்டை மையமிட்ட கவிதைகள் மூன்று இடம்பெற்றுள்ளன.

**இறைவனின் இயல்புகள்:-**

"ஆயிரம்திருநாமம்பாடி" என்ற கவிதையில் இறைவன் இயல்புகள் பலவற்றை எடுத்துரைத்துள்ளார்.

" ஒரு நாமம் ஓர் உருவம்
ஒன்றுமிலாய்! ஆயிரம்
திருநாமம் பாடி நாம்
தெள்ளேணம் கொட்டுகிறோம்"[73]

என்று கூறுகிறார். இறைவனுக்கு உருவமும் பெயரும் இல்லை என்பது அவர் கருத்தாகும்.

" அரன் என்றழைப்பினும்
வரன்கொடுப்பவன் நீ
அரியென் றிசைப்பினும்
சரியென் றிசைப்பாய்
கர்த்தன் என்றுரைப்பினும்
அர்த்தம் நீதான்
அல்லா எனினும் நீ
அல்லாது வேறு யார்?[74]

என்ற வரிகளின் வழி இறைஒருமைப்பாட்டை, அல்லது இறைவன் ஒருவன்தான் என்ற சிந்தனையை உறுதிப்படுத்துகிறார். இடுகுறியாய், ஆகுபெயராய், காரணப் பெயராய் எப்படி அழைத்தாலும் இறைமை ஒருமைதான். உலகைப் படைக்கும் இறைவனுக்கு ஒருகோடிப் பெயர்களைச் சூட்டுகிறார்கள். இவ்வாறு சூட்டுவதற்கும் பொருத்தமான அமைதி காண்பது கவிஞரின் திறத்திற்குச் சான்றாகிறது. சிற்றின்பம் தரும் பெண்ணைப் புகழ்வதற்கே பல பெயர்கள் சூட்டுகிறார்கள். பேரின்பத்திற்கு ஆதாரமான இறைவனுக்குப் பல பெயர்கள் சூட்டுவது ஒருவகையில் பொருத்தமுடையது என்று குறிப்பிடுகிறார்.

" ஆத்திகர் நாவினில் நீ
அமர்ந்திருத்தல் வியப்பில்லை

நாத்திகரின் நாவினிலும்
நடம்புரியும் நாயகன் நீ
'இல்லை' எனும் பெயரே
இறைவா! அவருனக்குச்
சொல்லுகின்ற பெயரென்றால்
எல்லையுண்டோ உன் பெயர்க்கே!"[75]

என்ற வரிகள் கவிதையின் முடிவில் முத்தாய்ப்பாக அமைகின்றன. கடவுள் "இல்லை" என்று நாத்திகர் குறிப்பிடும்போது இல்லை என்ற பெயரிலும் இறைவன் இருக்கிறார் என நயம்பட உரைக்கிறார்.

**இறைவனும் சமயமும்:-**

தற்செயலாய் ஒருநாள் தொலைபேசியில் தவறான எண்ணில் இறைவனுடன் கவிஞர் தொடர்பு கொண்ட மாதிரியும், கேள்விகள் கேட்பது போலவும், "தவறான எண்" என்ற கவிதையை அமைத்துள்ளார். வாழ்வில் இவ்வளவு முரண்பாடுகளை ஏன் வைத்தாய் என்று கவிஞர் கேட்பதைக் கீழ்க்கண்ட வரிகளால் காணலாம்.

" ஏதேன் தோட்டத்தில்
விலக்கப்பட்ட கனியை
ஏன் வைத்தாய்?
உனக்கே பணிய மறுத்த சாத்தானை
பலவீனமான எங்களின் எதிரியாக
ஏன் ஆக்கினாய்?"[76]

சமய முரண்பாடுகள் மக்கள் சமுதாயத்தைச் சீரழிக்கின்றன. கடவுளிடம் நீ எந்த சமயத்தைச் சார்ந்தவன் என்று கவிஞர் கேட்கிறார்.

" இந்த ராம் யார்? ரஹீம் யார்?
பெயரில் என்ன இருக்கிறது
என்றவன் பேதை
பெயரால் அல்லவா இத்தனை பிரச்சனைகள்?
பெயர்களில் நீ இருக்கிறாயா?"[77]

என்று வினாவுகிறார். சமயவெறியர்கள் உன் பக்தர்களா? எனவும் கேட்கிறார். கவிதையின் இறுதியில்,

" ஆலயமணி ஓசையும்
மசூதியின் அழைப்பொலியும்
காற்றில் கரைந்து சங்கமிக்கும் அர்த்தம்
இவர்களுக்கு எப்போது விளங்கும்?"[78]

என்ற வரிகளில் சிந்தனை வினாவை வைக்கிறார்.

" கடைசியாகக் கேட்கிறேன்
நீ ஹிந்துவா? முஸ்லீமா?
"ராங் நம்பர்" என்ற பதிலோடு
இணைப்பு துண்டிக்கப்பட்டது"[79]

எனக் கவிதை நிறைவு பெறுகிறது. இந்த நிறைவின் வழி இறைவன் ஹிந்துவும் இல்லை, முஸ்லீமும் இல்லை, சமயங் கடந்தவர் என்பதைக் குறிப்பாகப் புரிய வைக்கிறார். ஹிந்து முஸ்லீம் என்று பேதப்படுத்திக் கேட்கிறவர்களெல்லாம் இறைவனின் தொலைபேசி தவறான எண்ணாகத்தான் இருக்கும். சமயங் கடந்த நிலையிலுள்ளவர் தொடர்பு கொள்கிறபோது இறைவனின் சரியான எண் கிடைக்கும் என்பது கவிதையின் உட்பொருள் ஆகும்.

"சிறகுகள்"[80] எனும் தலைப்பில் மனிதன் இறைவனிடம் பறவைகளைப் போல் எனக்குச் சிறகு தரவில்லையே ஏன் என வினவுகிறார். அதற்கு இறைவன் நாக்கு, மனம் என்ற உயர்ந்த சிறகுகளை உனக்குத் தந்துள்ளேன் என மொழிகிறார். இறைவனையே தொடும் சிறகினை மனிதனுக்கு வழங்கியுள்ளதாக இறைவன் குறிப்பிடுகிறார்.

இவ்வாறு இறைக்கோட்பாட்டுச் சிந்தனையில் இறைவனின் இயல்பு களையும் அவன் சமயம் கடந்து இருப்பதையும், இறைவன் மானுடர்க்கு அரிய ஆற்றல்களை வழங்கி இருப்பதையும் இவர் தம் கவிதைகளின் வழித் தெளிவாக வெளிப்படுத்துகிறார்.

3. தனிமனிதம்:-

தனிமனிதம் தொடர்பான நிலையில் தனிமனித உணர்வுகள் தொடர்பான செய்திகள் அடங்கும். குறிப்பாக, காதல் பகுதியினை இவ்வகையில் அடக்கலாம். கவிதை எண்ணத்தை உருவாக்கும் பல காரணிகளுள் காதலும் ஒன்றாகும். "ஒவ்வொரு உயிரினத்தின் அடிப்படையாய் வாழ்வோடு ஒட்டி உறவாடும் உணர்ச்சி, காதல் என்பது. இலக்கியத்தின் எண் சுவைக்கும் நிலைக்களமானதும் இவ்வுணர்ச்சியேயாம்"[81] என்று குறிப்பிடுவர்.

" எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தானமர்ந்து வரூஉம் மேவற்றாகும்"[82]

என்பது தொல்காப்பியர் சிந்தனையாகும். சங்கஇலக்கியங்கள் அகப்பொருளில் ஒன்றான காதலின் இயல்பினையும் நிகழ்வுகளையும் கவிதைகளில் படம் பிடித்துக் காட்டுகின்றன.

பண்டை இலக்கியத்தில் காதல் இயற்கைச்சூழலுடன் இணைத்துக் கூறப்படுகிறது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகை நிலங்களையும் அவற்றிற்கேற்ப முறையே கூடுதல், இருத்தல், ஊடுதல், இரங்குதல், பிரிதல் என்னும் அன்பின் ஐந்திணைக் கோட்பாட்டைப் பண்டைத் தமிழ் இலக்கணங்கள் வகுத்துள்ளன. தொல்காப்பிய அகத்திணைக் கோட் பாட்டைப் பிற்காலத்து எழுந்த இறையனார்களவியலுரை போன்ற நூல்களும் எடுத்துரைக்கின்றன.

**காதல் பற்றிக் கவிஞர்கள்:-**

காதல் பற்றிப் பாரதியார் கீழ்க்கண்டவாறு பாடுகிறார்.

"காதலினால் மானுடர்க்குக் கல்வி யுண்டாம்
கல்வியிலே மானுடர்க்குக் கவலை தீரும்
காதலினால் மானுடர்க்குக் கவிதை யுண்டாம்
கானமுண்டாம் சிற்பமுதற் கலைக ளுண்டாம்
ஆதலினால் காதல்செய்வீர் உலகத் தீரே
அஃதன்றே இவ்வுலகத் தலைமை யின்பம்

காதலினால் சாகாமலிருத்தல் கூடும்

கவலைபோம் அதனாலே மரணம் பொய்யாம்"[83]

காதல் என்பது கல்வி தருவது, கவிதை தருவது, கவலை தீர்ப்பது, கலைகள் தருவது, உலகின் தலைமை இன்பம் தருவது, மரணத்தைப் பொய்யாக்கும் வல்லமை பெற்றது என்றெல்லாம் பாரதியார் குறிப்பிடுகிறார். பாரதி வழியிலும் பாரதிதாசனும் காதலுக்குச் சிறப்பிடம் தருகிறார். இவ்வாறு தமிழர்வாழ்வின் ஒரு கூறான காதலுக்குத் தமிழ்க் கவிஞர்கள் இலக்கணம் வகுத்துள்ளனர். காதல் பற்றிக் கவிஞர்கள் பாடுவது இயல்புத் தன்மையாகவும் உள்ளது.

அப்துல் ரகுமானும் தம் கவிதைகள் சிலவற்றில் காதலைப் பாடு பொருளாக்கியுள்ளார்.

**காதல் பற்றிய விளக்கம்:-**

அப்துல் ரகுமான் காதல் பற்றிய வரைவிலக்கணச் சிந்தனைகளைச் சில பாடல்களில் தருகிறார். "கண்ணாமூச்சி" என்ற கவிதையில்

"ஆதியிலே ஒரு ஆணும் பெண்ணும்
ஆடிய ஆட்டமிது
அவன் அவளுக்குள்
ஒளிந்து கொண்டான் - அவள்
அவனுக்குள் ஒளிந்து கொண்டாள்!
அவனுக்கவளோ அவளுக் கவனோ
அகப்படவே இல்லை
ஆட்டம் இன்னும் தொடர்கிறது - அந்த
ஆட்டம் முடியவில்லை!"[84]

என்று பாடுகிறார். ஆதிகாலம் முதல் ஆண் சமுதாயமும் பெண் சமுதாயமும் விளையாடும் ஆட்டமே காதல் என்கிறார். ஆணுக்குள் பெண்ணும், பெண்ணுக்குள் ஆணும் ஒளிந்து கொண்டார்கள். அவனுக்கு

அவளோ அவளுக்கு அவனோ அகப்படவில்லை என்று கூறுகிறபோது மனித இனத்தின் "இனம் புரியாத புதிர்" என்று காதலைக் குறிப்பிடுகிறார்.

பிறிதொரு கவிதையில் காதலின் மேன்மையினையும், தற்காலத்தில் தவறாகப் பயன்படுத்தும் போக்கினையும் எடுத்துரைக்கிறார்.

"வெறும் கந்தலாக இருக்கும்
உங்களைத்
திரியாக்கி அமரும்
வானச் சுடரல்லவா அது!
ஆனால் நீங்களோ
அதனால் உங்கள் வீடுகளை
எரித்துக் கொள்கிறீர்களே!"[85]

காதல் தெய்வீகமானது என்றும் மனிதர்களைத் திரியாக்கி அமரும் தெய்வீக விளக்காகப் போற்றப்பட வேண்டியது என்றும் கூறுகிறார். ஆனால் காதலால் மனிதர்கள் தங்களைத்தானே அழித்துக் கொள்ள முயல்கின்றனர். மனதைப் பக்குவப்படுத்தும் ஆற்றல் காதல் நெருப்பிடம் இருக்கிறது. அதனை விடுத்துக் காதல் நெருப்பில் மாள்வது பொருத்தமில்லை என அப்துல் ரகுமான் கூறுகிறார்.

"காதலுக்குள் காமம் ஒரு கூறுதான். காமம் பெருகினால் காதலின் மேன்மையும் தெய்வீகமும் சிதைந்துவிடும். காமம் தீமையின் குறியீடாகிய சாத்தானின் சன்னதியாக இருக்கிறது. காதல் கடவுளின் கர்ப்பக்கிரகமாக இருக்கிறது. காமம் மரணமாகிய அழிவுடன் தொடர்புடையது. உண்மையான காதல் வாழ்க்கையுடன் தொடர்புடையது. இவ்வாறாகக் காதலைக் கடவுளுடன் தொடர்புபடுத்திப் புனித மெருகேற்றுகிறார்".[86]

**காதல் பார்வை:-**

காதல் கவிதைகளைத் தலைவி பார்வையிலும்(3) தலைவன் பார்வையிலும்(16) அமைத்துச் செல்கிறார். கவிதைகளில் மகிழ்ச்சியும் துயரமும் இணைத்துக் கூறப்படுகின்றன.




மேற்கண்ட வகைப்பாட்டை அடியொற்றிப் பின்வருமாறு காதல் கவிதைகள் விளக்கம் பெறுகின்றன.

**தலைவி பார்வையில் அமையும் கவிதைகள்**

"கண்ணும் எழுதேம்" என்ற கவிதையில் தோழி கண்ணில் ஏன் மை தீட்டவில்லை? என்று தலைவியிடம் கேட்கிறாள். அதற்குத் தலைவி,

" கண்ணுக்குள் என்
காதலர்
அவர் முகத்தில்
கரி பூசலாமா?
என் சூரியன் மீது
இருட்டைத் தடவுவதோ?"[87]

அகத்தில் காதலர் நிறைந்திருக்கும் போது அதுவே காதலின் உண்மையான அழகாக இருக்கிறது. இவ்வழகை விட்டுவிட்டுப் புறஅழகான மைதீட்டுவதும் அலங்கரிப்பதும் தேவையில்லை என்று குறிப்பாக உரைக் கிறார். காதலுக்கு அகத்தில் அன்பு இருந்தால் போதும் புறத்தில் அலங்காரம் தேவையில்லை என்றும் கூறுகிறார்.

" மாலையிலே உன்
வரவை எதிர் நோக்கி
மாலை தொடுத்துவைத்தேன் - அதில் ஏக்க
மனமும் எடுத்து வைத்தேன்
மலர்வாடும் முன்னே வருவாயா?
மனம் வாடும் முன்னே வருவாயா?
சாபத்தைப் போலத்
தழுவும் இருட்டிலோர்
தீபத்தை ஏற்றிவைத்தேன் - புலம்பும் என்
தாபத்தைத் தேற்றி வைத்தேன்
ஒளியணை யாமுன் வராவிடினும் - என்
உயிரணையாமுன் வருவாயா?"[88]

என்று "மனம் வாடும் முன்னே" என்ற தலைப்பில் மாலைப் பொழுதில் தலைவனை எதிர்நோக்கியிருக்கும் தலைவி பாடுவதாகப் பாடியுள்ளார். இப்பாடலில் தலைவியின் புலம்பல் மொழிகள் இடம் பெற்றிருக்கக் காணலாம்.

"மாலை வந்தது"[89] என்ற தலைப்பில் வான்வெளி எங்கும் தாரகைப் பூஞ்சோலை வந்தது. மண்மகளுக்கு இருள் சேலை வந்தது. மாலை நேரம் வந்தது. ஓசையற்ற தனிமையை வானம் ஏற்றிவந்தது ஊர்ந்துவரும் வட்ட நிலா எனப் பெறும் ஊற்று வந்தது. ஆசைத் தீயை வீசும் இளம் காற்று வந்தது. இவைகளுக்குத் தன்மனது தோற்றுவந்தது என்று மாலை நேர வருகையால் மனம் தோற்றுத் துவளுவதைத் தலைவி கூறுகிறாள்.

மாலைநேரம், தனிமையில் வாடும் தலைவிக்கு மிகவும் துன்பம் தரக் கூடியது. அவரில்லாமல் ஏன் இந்த மாலை என்று தலைவி வினவுகிறாள்.

**தலைவன் பார்வையில் அமைந்த கவிதைகள்:-**

தலைவன் பார்வையில் உள்ள கவிதைகளைக் கீழ்க்கண்டவாறு இரண்டு வகைகளில் பகுக்கலாம்.

1. காதலுக்கு முன்புள்ள சூழல் தொடர்பானவை
2. காதலுக்குப் பின்புள்ள சூழல் தொடர்பானவை

பெரும்பாலும் முதல்வகையில் மகிழ்ச்சியின் களிப்பும் இரண்டாம் வகையில் துன்பத்தின் சாயலும் இடம் பெற்றிருக்கக் காணலாம். துன்பத்திற்கான சூழல் பல்திறந்தன. அவைகளைக் கவிதைகள் குறிப்புப் பொருளாகக் காட்டுகின்றன.

**காதலுக்கு முன்புள்ள சூழல் தொடர்பானவை:-**

காதலி காதலனை விரும்புகிறாளா? இல்லையா? இதனை வினவும் வகையில் "மூடியஇமை" என்ற கவிதை அமைந்துள்ளது. அக்கவிதையில்,

"என்னைக் கண்டதும்
கவிழும் உன் இமைகள்
கொசுவலையா?
மீன்வலையா?"[9]

என்று பாடுகிறார்.

கொசு வலை கொசு உள் வருவதைத் தடுக்கும். மீன்வலை மீனைப்பிடிக்கும். மீன்வலை பிடித்ததை வெளியே விடாது. காதலியே நீ கொசுவலை மாதிரி மனதைத் தடுத்துக் காதலைத் தவிர்க்கிறாயா? அல்லது மீன்வலை மாதிரிப் பிடித்துக் கொள்கிறாயா? என்று காதலியிடம் கேட்கும் வகையில் அப்பாடல் அமைந்துள்ளது.

மேலும், காதலன் வினவுவதாக உள்ள செய்திகளில் கற்பனையும் கவித்துவமும் கைகோர்த்துச் சிறப்பைத் தருகின்றன. "உன் இமைப் பீலிகள் வரவேற்பு வாசகமாக உள்ளதே இந்தப் பூவன வேலிகள் என்னை

மேய்கின்றனவே. உன் இமைத்திரைகளால் இருளும் தூக்க நேரத்தில் என் கனவுகள் படமாக ஓடுமோ? என்று கேட்கிறார். இமைச்சிறகுகளை விட்டுவிட்டுப் பார்வைப் பறவைகள் பறந்து வருவது ஏன்? இரைதேடவா, கூடுகட்டவா என்று பாடுகிறார்.

" உன் இதழ்களுக்கு
உறக்கமாகும் மௌனம்
உன் இமைகளில்
மொழியாகுமோ?"[91]

என்று பாடுகிறவிதம் மனதில் அழுத்தமாகப் பதிகிறது.

பகலில் கண்ட காதலியின் நினைவு இரவில் விசுவரூபம் கொண்டு எழுவதை "விளையாட்டு" என்ற கவிதையில் சித்தரிக்கிறார். காதலியின் நினைவு என்னும் நீரில் நீந்தலாம் என்று இறங்கியபோது அந்த நினைவை விட்டு மீள முடியாத மீனாக மாறிய நிலையை,

" கொடியவளே
உன் நினைவுகளில்
நீந்த இறங்கியவனை
மீனாக்கிவிட்டாய்"[92]

என்று பாடுகிறார். காதலியின் நினைவின் வலிமையில் உள்ள மாயத்தைக் குறித்தும், காதலியின்றி வாழும் மனநிலை காதலனுக்கு (கவிஞர்க்கு) இல்லை யென்றும் பாடுகிறார்.

நினைவில் வாட்டும் காதலி கனவிலும் வாட்டத் தொடங்குகிறாள். "யாரவள் கனவில் வருகின்றாள்" என்ற தலைப்பிலே காதல் கவிதை யாத்துள்ளார். உள்ளம் எனும் பாலைவனத்தில் ஊற்றுக்களைக் கிளறிவிட உணர்வு எனும் கொடிகளில் ஆசை எனும் மலர்களை மலர்த்திவிட யார் அவள் கனவில் வருபவள்? என்று வினா எழுப்புகிறார். பார்வை விழிப்பூ மகரந்த மழைகளைச் சொரிகின்றது. இன்பம் தரும் இலக்கண உருவமும்

இசைநயப் பருவமும் ததும்பும் அவள் கவிதையைப் போலல்லவா தெரிகிறாள்? என்ற கவிஞரின் வரிகள் கருத்தாழம் மிக்கன.

காதலி தன்னை விரும்புகிறாளா? இல்லையா? என்று இறுதி முடிவாகக் கேட்பது போல "நாடகம் இன்றே முடித்துவிடு" என்று பாடுகிறார். இவ்வரி கவிதைத் தலைப்பாகவும் அமைகிறது.

"ஆமென்றுரை - இன்றேல்
அன்றென்று சொல் - என்றன்
ஆவிக்கோர் தீர்ப்பினைத் தந்துவிடு - ஒன்று
நாமென்றுரை - இன்றேல்
நானென்று சொல் - இந்த
நாடகம் இன்றே முடித்துவிடு"[93]

என்று கேட்கிறார்.

கவிதையின் இறுதி வரிகள் மறுபடியும் கவிதைத் தலைப்பிற்குள் இணைவதாக இக்கவிதை உள்ளது.

நாடகம் ஒரு பாவனையாகும். காதலியிடம் காதல் இருக்கிறது. இல்லாதது போல் பாவனை காட்டுகிறாள். பாவனை எதற்கு? என்ற கருத்து இருப்பதாக மதிப்பிடலாம். "வெளிவாசற் கோலங்கள்" காதல் இல்லாதது மாதிரித் தோற்றமளிக்கப் பார்க்கின்றன. "ஆவிக்கோர் தீர்ப்பினைத் தந்துவிடு" என்று கூறுகிறபோது உடல் தொடர்பானக் காதல் இல்லை என்கிற குறிப்பும் கிடைக்கிறது.

நாமென்றுரை-இன்றேல் நானென்று சொல் என்ற வரிகளில் நாம் என்கிற உணர்வு ஐக்கிய உணர்வைக் குறிக்கிறது. ஐக்கிய உணர்வின் இயல்பு எப்படி இருக்கும்? என்பதை அப்துல் ரகுமானின் "வரவேண்டும் நீ" என்ற கவிதை விளக்குவதாகக் கருதலாம். "காதலியே நீ மழையாக வரவேண்டும் என் மனம் தந்த விதையாகவும் மகரந்த மொழி பேசும் மலராக்கித் தரவேண்டும்" என் இதயத்து விண்மீன்கள் இமைக்காமல் சுடர் வீசிட, இரவாகக் காதலி வரவேண்டும் என்றெல்லாம் கூறுகிறார். மேலும்,

" விரலாகி வரவேண்டும் நீ - என்
மீட்டாத மௌனத்தில்

விதமான ராகங்கள்

வெளியாக்கித் தர வேண்டும் நீ"[94]

என்று பாடுகிறார்.

காதலியால் காதலனுக்கு வேதியல் மாற்றம் நிகழ்ந்து விட்டது. உன்னைப்போல் என்னை மாற்றி உன் உருவத்தில் வார்த்துவிட்டாய் என்று "வேதியியல்" என்ற தலைப்பிலான கவிதையில் குறிப்பிடுவது ஐக்கிய உணர் வோடு தொடர்புடையதாகும்.

காதலை மனதில் புதைத்து விட்டுக் காதல் இல்லாதவள்போல் இருப்பவளைத் "தீக்கோழி" என்று குறிப்பிடுகிறார். அக்கவிதையின் தலைப்பும் தீக்கோழிதான்.

"கரைவரை வந்துபின்
திரும்பும் அலைகள்போல்
என்வரை வந்துபின்
மீளும்உன் பார்வைகள்!
பாவம்!
மௌன மணலில்
தலைபுதைத்து மறைய எண்ணும்
தீக்கோழி
உன் இதயம்!"[95]

காதலுக்குக் காரணமான பெண்கள் இன்பத்திற்கு மட்டும் நிலைக் களன்களாக இருக்கவில்லை. துன்பத்திற்குப் பெண்கள்தான் காரணமென்று மதிப்பிடுகிறார். இக்கருத்தை,

"கூந்தலில் இருட்டு
முகத்தில் சூரியன்
பெண்களே?
உங்களால்தான் எமக்கு
இரவும் பகலும்
இதழ்களில் அமுதம்

விழிகளில் நஞ்சு

பெண்களே!

உங்களால்தான் எமக்கு

வாழ்வும் மரணமும்!”[96]

என்ற கவிதை வரிகளின் வழி அறியலாம்.

வாழ்வுக்கும் மரணத்திற்கும் பெண்கள்தாம் காரணம் என்று கூறுகிற நிலை தத்துவார்த்தக் குறிப்பாகவும் இருக்கிறது. “இதழ்களில் அமுதம்” புறநிலையோடு தொடர்புடையது. விழிகளில் “நஞ்சு” அகநிலையில் உள்ள காமம் ஆகும். காதலில்லாக் காமம் மரணத்திற்குச் சமமானது. இங்கு காதல் என்பது தூய்மையான ஆன்ம ஐக்கிய உணர்வைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

**துயரம் தொடர்பானக் கவிதைகள்:-**

அப்துல் ரகுமானின் காதல் தொடர்பான கவிதைகளில் துயரம் தொடர்பான கவிதைகள் பெரும்பங்கு வகிக்கின்றன. இவ்வகைக் கவிதை களைக் கீழ்க்கண்டவாறு பகுக்கலாம்.

1. பிரிவுத் துயரம் தொடர்பானவை
2. பிற துயரம் தொடர்பானவை

**1. பிரிவுத் துயரம் தொடர்பானவை:-**

“சாவி இருக்கும் வரை” என்ற தலைப்பில் அமைந்த கவிதை பிரிவுத் துயரம் சார்ந்த கவிதையாகும். பிரிந்த காதலியின் காலடி ஓசை இதயத் துடிப்பின் ஓசையாக இடைவிடாமல் கேட்பதாகக் குறிப்பிடுகிறார்.

“ ஞாபக முட்கள்,

காயங்களைச் சுட்டி

வட்டமிடும்

என் ஏகாந்தத்தின்

இதயத் துடிப்பாக,

பிரிந்து சென்ற உன்

காலடி ஓசை”[97]

என்பது அக்கவிதையாகும்.

**பிற துயரம் தொடர்பானவை:-**

இவ்வகையில் காதல் மறுப்பு, காதல் தோல்விக்குச் சடங்கு காரணமாதல், தோல்வியால் ஏற்படுகிற மனவேதனை போன்றவை பாடுபொருளாகின்றன.

காதல் மறுக்கப் பெறுவதால் இவருக்கு ஏற்பட்ட மனநிலையை "இப்பொழுதெல்லாம்" என்ற கவிதையில் உரைக்கிறார்.

"இப்பொழுதெல்லாம்
சூரியக் கூடை ஏந்திக்
கூவிச் செல்லும் பகலை
அழைக்கும் ஆசையில்லை
- - - - -
- - - - -
கோயில் மாட்டுச்
சிறுநீரில் கரையும்
வாசற் கோலத்திற்காக
வருத்தமில்லை.
நீ
சுவரொட்டிகளை
உள்ளே எறிந்து
கடிதங்களைச்
சுவரில் ஒட்டிச் சென்றதிலிருந்து"[98]

காதல் கடிதத்தை நிராகரித்துப் பொதுப்பார்வை படும் இடத்தில் சுவரொட்டியாக ஆக்கியதை நினைத்து வேதனைப்படுவதாகக் கவிதை அமைந்திருக்கிறது. அவ்வாறு அவள் புறக்கணித்ததற்கான காரணம் இக் கவிதையில் இல்லை.

இருவரும் சடங்குகளின் கைதிகள் என்று குறிப்பிடுகிறார். காதல் தோல்விக்குச் சடங்குகள் காரணமாக இருந்திருக்கலாம். இத்தோல்வியால்

அவர் மனம்படும் வேதனையை "பாவைச் சமாதியில்"[99] சித்தரிக்கிறார். அக் கவிதை பின்வருமாறு.

தூக்கம் நின்றவுடன் கனவு மரணமடைந்தது. கண்களின் சமாதியில் இறந்து போன கனவின் சவ அடக்கம் நிகழ்ந்தது. கண் இமைப் பீலிகள் எனப்படும் ஊதுவத்திகளில் திரவச் சுடர்களான கண்ணீரை ஏந்தி வைக்கிறேன் என்று இந்த கனவுக்கே ஏங்கும் அழகும் கவிஞரின் மன நிலையை இங்குக் காணலாம்.

4. குடும்பம்:-

குடும்பம் சமுதாயத்தின் அடிப்படை அலகாகும். குடும்பத்தின் மேன்மை சமுதாயத்தின் மேன்மைக்கும் காரணமாகிறது. அப்துல் ரகுமான் கவிதைகளில் குடும்பம் பற்றிய சிந்தனைகள் மிகக் குறைவாக உள்ளன. இந்நிலைக்குக் காரணமாகச் சமுதாயம் பற்றிய சிந்தனைகளுக்கு அவர் சிறப்பான இடம் தருவதைக் குறிப்பிடலாம்.

முரணும் பரிணாமும்:-

ஒன்றே போல் இருப்பதைப் பொருத்த முடியாது. முரணாக இருப்ப வற்றைப் பொருத்த முடியும். அந்நிலையில் அழகும் சுவையும் பிறக்கும். இயற்கை ஆணையும் பெண்ணையும் முரண்களாகப் படைத்திருக்கிறது. இவர்களின் சங்கமத்தில் குடும்பம் உருவாகிறது. மனைவி நாரில் தொடுக்கப் பெற்ற மலர் அல்ல. நாரில் பூத்த மலர்கள் என்று அப்துல் ரகுமான் குறிப்பிடுவார். பெண் ஆணின் விலா எலும்பிலிருந்து படைக்கப் பெற்றவள் என்பார்கள். கணவனுக்கு மனைவியாக வாய்த்ததும் விலா எலும்புதானா? என்ற வினாவை எழுப்பிச் சிந்திக்க வைக்கிறார்.

கணவன்-மனைவி தீக்கக்கடை கோல்கள், காலம் தன் அடுக்களையில் இந்தக் கோல்களை ஆயத்தமாக வைத்திருக்கிறது. தான் சமையல் செய்ய விரும்புகிற போதெல்லாம் இந்தக் கோல்களைக் கடந்து நெருப்பை உண்டாக்கிக் கொள்கிறது என்று குடும்பத்தின் இயற்கைத்

தத்துவத்தைக் கவிஞர் குறிப்பிடுகிறார். இச்சிந்தனையை அடியொற்றித் தீக்கடை கோல்கள் என்ற தலைப்பில் கவிதையாத்துள்ளார்.

" நாரில் பூத்த மலர்கள்
நானும் நீயும்
நாவைத் தொங்கப் போட்டு
வாலாட்டிய என்
பருவத்தின் முன்
வந்து விழுந்தது
என் விலா எலும்போ?"[100]

குடும்பத்தின் பரிணாமத்தைப் பற்றி,

"மாறும் பருவக் கோப்பைகளில்
நம் பானமும்
மதுவாகிப்
பாலாகி
மருந்தாகப்
பரிணமிக்கும்"[101]

என்று குறிப்பிடுவது கருதத்தக்கதாகும். குடும்ப உறவுகளைக் குறிக்கும்போது "இரண்டு எண்களாக நிற்கிறோம் நாம். இடையில் வரும் கணிதக் குறிகளால் கணவன்-மனைவி, அப்பா-அம்மா, பாட்டன்-பாட்டி, மாமன்-மாமி என்று வெவ்வேறு விடையாகிறோம். கூட்டப்படுகிறோம், கழிக்கப்படு கிறோம், பெருக்கப்படுகிறோம், வகுக்கப்படுகிறோம்"[102] என்று கவிஞர் கூறு கிறார். இக்கருத்துக்களை உள்ளடக்கி,

" உணர்வுகள் எழுதும் கணிதக் குறிகளால்
வெவ்வேறு விடையாகும்
எண்கள் நாம்"[103]

என்று முத்தாய்ப்பாகத் தெரிவிக்கிறார்.

**சந்தேகமும் அன்பும்:-**

மனைவியின் சந்தேகம் என்பது கணவன் மீதான அன்பை வெளிப்படுத்துவது என்ற கருத்தைப் "பார்வை நிழல்" எனும் கவிதையில் வித்தியாச மான வேறுபட்ட சிந்தனையில் தெரிவிக்கிறார்.

விடியல் வெளிச்சம் பகல் என்பதை வெளிச்சப்படுத்திக் காட்டிய போதும் நிழல்கள் இரவுதானா? பகலா? என்ற சந்தேகத்தை ஏற்படுத்துகின்றன. இந்த நிகழ்ச்சியினைப் பார்க்கும்போது கவிஞருக்குத் தன் மனைவியின் ஞாபகம் தோன்றுகிறது. அந்நிகழ்ச்சியில் கவிஞர் உறைந்து போகின்றமையை,

" வெளிச்சம் போதித்த பிறகும்
பகலுக்கு இருக்கும்
சந்தேகங்களாய்
இந்த நிழல்கள் . . .
இவற்றில்
உன் பார்வைகளை
ஞாபகங்கொண்டு
உறைந்து போகிறேன்
உன் நிழல்களைத்
தாகவெறியோடு அனுபவிக்க
தகிக்கும் வெயிலில்
சில யுகங்கள்
நான் புழுங்கித் துடிப்பேன்"[104]

என்பதில், மனைவியின் சந்தேகம் தம்மீது படவேண்டும் என்று பெரிதும் விரும்பித்துடிக்கிறேன் என்கிறார்.

துன்பத்தில் அழுகாத துயரப்படாத கண்களில் என்னைக் கண்ணீராகச் சேமித்துக்கொள் என்கிறார். கண்ணுள் மறைந்து உறைந்து இருக்கும் கண்ணீராகத் தாம் இருப்பதை இவ்வாறு உணர்த்துகிறார்.

குடும்பத்தைப் பற்றி இரு கவிதைகளே இவரது படைப்புக்களில் இருந்தாலும் வேறுபட்ட முத்தாய்ப்பான சிந்தனையுள்ள கவிதைகளாகக் கவிஞர் படைத்துள்ளமை கருதத்தக்கதாகும்.

**தத்துவக் கவிதைகள்**

வாழ்க்கை நெறிகளையும் வாழ்வியல் தத்துவங்களையும் உணர்த்துவது சிறந்த இலக்கியம் என்பர். அவ்வகை இலக்கியங்கள் அவ்வக்கால மக்களின் உளப்பாங்கினையும் நாகரிக உணர்வினையும் உலகிற்கு உணர்த்தும் தகுதிப்பாட்டினை உடையனவாகும்.

தத்துவ இலக்கியங்கள் ஞானத்தை நேசிக்கின்றன. தத்துவக் கவிஞர் கள் ஓர் உண்மைப் பொருளை விவரித்து முடிவு உரைக்க முயல்கின்றனர். இந்நோக்கு அறிவை விரிவு செய்ய உதவுகின்றது. சிந்தனையை ஆழப்படுத்துகிறது.

**5. தத்துவம்:-**

"தத்துவம் என்பது அறியப்படாதது; அல்லது துல்லியமின்றி அறியப்பட்டது. குறித்த அனுமான ரீதியான விளக்கம்"[105] ஆகும். "நமது தத்துவ விசாரத்தின் நோக்கம் முழுமையான புரிதலை நோக்கியதாக இருந்திட வேண்டும். மேலும் தத்துவம்/புரிதல் என்பது நம்மைச் சுற்றியுள்ள உலகைப் பற்றியது மட்டுமல்ல. நம்மைப் பற்றியதுதான்"[106] என்ற கருத்தும் தத்துவ விளக்கத்துடன் இணைந்து நோக்கத் தக்கதாகும்.

"தத்துவத்தின் நோக்கம் ஒன்றைப் பற்றி முழுமையாகப் புரிதலை அடிப்படையாகக் கொண்டது. தத்துவமானது நமது வாழ்க்கையை நெறிப்படுத்திடவும் செய்யலாம் அல்லது சமூக மாற்றத்திற்கு உதவிடவும் செய்யலாம். ஆனால் இவையெல்லாம் இரண்டாம் பட்சமானவைகள்"[107] ஆகும் என்பர். அறியப்படாததைக் குறித்த அனுமான ரீதியான விளக்கம் தத்துவமென்பதும் அவ்விளக்கம் புற உலகம் மற்றும் அகவுலகத்துடன் தொடர்புடையது என்றும் மதிப்பிடலாம்.

ஆய்விற்குட்படுத்தப் பெற்ற அப்துல் ரகுமான் கவிதைகளில் தற்சார்பற்ற கவிதைகளில் (196) சமூகம் தொடர்பான (102) கவிதைகளுக்கடுத்த நிலையில் தத்துவம் தொடர்பானக் கவிதைகள்(57) அமைந்துள்ளன என்பது கருதத்தக்கதாகும்.

தத்துவம் சிந்தனைகள் மிகுந்திருப்பதால் கவிதையின் பொருள் வெளிப்பட அறியக் கூடாமல் இருக்கலாம். இந்நிலையை வைத்து இருண்மைக் கவிஞரென இவரை மதிப்பிடுவர். அம்மதிப்பீடு ஏற்புடையது அல்ல. ஆழமான சிந்தனையின் ஊற்றுத் தத்துவக் கவிதைகளில் தான் மிளிர்கின்றன.

“கவிக்கோவின் கவிதைகளில் பொதுவாக ஒரு தத்துவ வீச்சு காணப்படுகிறது. அதற்குக் காரணமாக இருப்பது அவரிடம் இயல்பாக அமைந்திருக்கும் “தேடல்” எனும் உந்துதலாகும்”[108] என்பர். தேடல் தாகம் மிக்க அப்துல் ரகுமானின் கவிமனது சுயஞான தரிசனங்களைக் காணும் பேரவாக் கொண்டது எனலாம்.

**தத்துவக் கவிதைகள் வகைப்பாடு:-**

தத்துவத்தின் உட்பிரிவுகளை ஐந்தாகச் சுட்டுவர். “தத்துவம் என்பது ஐந்து துறைகளை உள்ளடக்கியதாகும். தர்க்கம், அழகியல், அறவியல், அரசியல் மற்றும் மீபௌதிகம்”[109] என்று பிரித்துரைப்பர். இவற்றில் தர்க்கம், அறவியல், அழகியல் ஆகியவற்றுடன் நிலையாமை, இயலாமை ஆகியவைகளையும் இணைத்து அப்துல் ரகுமானின் தத்துவக் கவிதைகள் மதிப்பிடப் பெறுகின்றன. அம்மதிப்பீட்டின் வழி அமைந்த வகைப்பாட்டு நிலையின் எண்ணிக்கை கீழே தரப்பெறுகிறது.

| | | | |
|---|---|---|---|
| 1 | தர்க்கம் | - | 22 |
| 2 | அறவியல் | - | 15 |
| 3 | அழகியல் | - | 8 |
| 4 | நிலையாமை | - | 6 |
| 5 | இயலாமை | - | 6 |

தத்துவக் கவிதைகளில் தர்க்கக் கவிதைகள் மிகுந்துள்ளன. அதற்கடுத்த நிலையில் அறவியல் குறித்த கவிதைகளும் வகைப்பாட்டில் மிகுந்திருப்பதைக் காணலாம். புதியன உரைக்க வேண்டுமென்ற வேட்கையும் ஒன்றைப் பற்றிப் பல கோணங்களில் பார்க்கும் வல்லமையும் சமய ஞானத்தில் இயல்பாய் உள்ள ஆழமும் முற்சுட்டிய நிலைக்குக் காரணங்களாகும்.

தத்துவக் கவிதைகள் :

| வகை | பால்வீதி | நேயர்விருப்பம் | சுட்டுவிரல் | ஆலாபனை | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| தர்க்கம் | 4 | 6 | 2 | 10 | 22 |
| அறவியல் | 5 | -- | 2 | 8 | 15 |
| அழகியல் | 6 | 1 | -- | 1 | 8 |
| நிலையாமை | 2 | 2 | 1 | 1 | 6 |
| இயலாமை | 1 | 1 | 1 | 3 | 6 |
| | | | | | 57 |

ஆய்வுக்கு எடுக்கப்பெற்ற கவிதைத் தொகுப்புக்களில் ஆலாபனையில் தர்க்கம், அறவியல் தொடர்பானக் கவிதைகள் மிகுந்திருப்பதை அட்டவணை யின் வழி உணரலாம்.

**தர்க்கக் கவிதைகள்:-**

"தர்க்கமானது புரிந்து கொள்ளவும் வழிநடத்திடவும் முயல்கின்றது. நம்மில் அநேகருக்குத் தர்க்கம் என்பது சுவாரசியமற்ற படிப்பாக

இருக்கின்றது. ஆனால் அது சிந்தனையின் வரலாற்றில் மாபெரும் நிகழ்வுகள் என்பவை மனிதர்கள் தங்களது சிந்தனை மற்றும் ஆராய்ச்சியின் முறைகளில் கொணர்ந்த செம்மையாக்கமே ஆகும்."[110]

தர்க்கக் கவிதைகள் முரண் கூறுகளை ஆழமாக விவரிக்கின்றன. பெரும்பாலும் தர்க்கம் தொடர்பான அப்துல் ரகுமானின் கவிதைகளில் அத்தகைய முரண் இடம் பெற்றிருப்பதைத் தனித்தன்மையாகக் கருதலாம். மேலும் தர்க்கம் சார்ந்த தத்துவக் கவிதைகளை அக உலகம் சார்ந்தவை புற உலகம் சார்ந்தவை என இரண்டாகப் பகுத்துப் பார்க்கலாம். இவைகளை மையமிட்ட அட்டவணைப் பகுப்பு கீழே தரப்பெறுகிறது.

**தர்க்கக் கவிதைகள்**

| கவிதைத் தொகுப்பும் கவிதைத் தலைப்பும் | முரண் | அக உலகம் | புற உலகம் |
|---|---|---|---|
| **பால்வீதி** | | | |
| 1.காலஅந்தாதி | தொடர்பு X தொடர்பின்மை | - | + |
| 2.முரண்தொடை | நேர் X எதிர் | - | + |
| 3.நிர்வாணத்தை உடுத்து | நிர்வாணம் X மறைத்தல் | + | - |
| 4.சலவைத் துறை | நிலைத்தல் X நிலையாமை | - | + |
| **நேயர்விருப்பம்** | | | |
| 5.எளிமை | எளிமை X ஏழ்மை | - | + |
| 6.ஆயுள்தண்டனை | விடுதலை X சிறை - | - | + |
| 7.தட்டுங்கள் திறக்கப்படும் | புலன் அடக்கம்Xபுலன் அடங்காமை | - | + |
| 8.கேள்வி | மௌனம் X உரை | - | + |
| 9.திரையை எரி | உண்மைXபொய்மை | - | + |
| 10.உரிமை | அடிமை நிலைXஉரிமை நிலை | - | + |

| சுட்டுவிரல் | | | |
|---|---|---|---|
| 11.தொலைந்துபோனவர்கள் | அறிதல் X அறியாமை | - | + |
| 12. பொம்மலாட்டம் | தனிமை X கூட்டு | - | + |
| ஆலாபனை | | | |
| 13. வெற்றி | தோல்வி X வெற்றி | - | + |
| 14. அதுதான் | இருப்பு X இன்மை | - | + |
| 15. பழம்புதிது | மரபு X புதிது | - | + |
| 16. வகைகள் | ஒன்றுXபல | - | + |
| 17. கோடுகள் | இலக்கணம்Xஇலக்கணமின்மை | - | + |
| 18. நான்யார் | தனித்துவம்Xசாயல் | + | - |
| 19. இழந்தவர்கள் | பெறுதல்Xஇழத்தல் | - | + |
| 20. முரண்களின் போராட்டம் | நேர்Xஎதிர் | - | + |
| 21. மறுபக்கம் | ஒருபக்கம்Xமறுபக்கம் | - | + |
| 22. வீழ்ச்சி | வளர்ச்சிXவீழ்ச்சி | - | + |

அப்துல் ரகுமானின் தர்க்கக் கவிதைகளில் இருபது கவிதைகள் புற உலகைக் குறித்தும் இரண்டு கவிதைள் அகவுலகைக் குறித்தும் அமைந்துள்ளன.

தர்க்கத்தின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் கேள்விகளைக் கேட்டு விடைகளைக் கண்டறிவது தேவையான முயற்சியாகும். அகவுலகையும், புற உலகையும் தர்க்க ரீதியாகச் சிந்திப்பவர்கள் கேள்வி ஞானத்திற்குத் தான் பெரும்பாலும் முதலிடம் கொடுப்பார்கள்.

கேள்வி, “செவி உண்டியலின் சிறுசேமிப்பு, நாவின் அடக்க நடனத்திற்குப் பயிற்சி அளிக்கும் பக்குவ நட்டுவம், கேள்வியில்லாத கல்வி, ஒலிப்பதிவில்லாத ஊமைத் திரைப்படம்”[111] என்று அப்துல் ரகுமான் குறிப்பிடுகிறார்.

**அகவுலகம் தொடர்பானவை:-**

இறந்த காலம் X எதிர் காலம், நிர்வாணம் X மறைத்தல், புலன் அடக்கம் X புலன் அடக்கமின்மை, மௌனம் X உரை, தனித்துவம் X சாயல் போன்ற நிலைகளில் அக உலகம் சார்ந்த கவிதைகளில் முரண்கள் அமைகின்றன. எடுத்துக்காட்டு விளக்கமாக, ஒரு கவிதையினைக் காணலாம். “நான் யார்?” என்பது கவிதையின் தலைப்பு ஆகும். இவ்வினா சமயம் சார்ந்த தத்துவ வினாவாகும். தன்னையறிதல் (Self Realization) ஆழ்ந்த ஞானத்தின் சிறப்புத் தன்மையாகும்.

“மகனே! என அழைக்கிறாள் தாய்
நான் மகனாகிறேன்
‘தம்பீ!’ என அழைக்கிறான் அண்ணன்
நான் தம்பியாகிறேன்
‘அண்ணா!’ என அழைக்கிறாள் தங்கை
நான் அண்ணனாகிறேன்”[112]

இவ்வாறு ஒவ்வொருவரும் என்னை ஒவ்வொரு பெயரால் அழைக்கிறார் கள். என்னை நான் எங்ஙனம் அழைத்துக் கொள்வது? என்ற சிந்தனையில் “நான் யார்?” என்ற வினாவை முன்வைக்கிறார்.

**புற உலகம் தொடர்பானவை:-**

உலக வாழ்வியலில் சில இயல்பான முரண்கள் இயங்குகின்றன. மனிதனின் வாழ்வியல் மரபிலும் சில முரண்கள் செயற்கையாகத் தோற்றுவிக்கப் பெறுகின்றன. நேர் X எதிர், நிலைத்தல் X நிலையாமை, உண்மை X பொய்மை, இருத்தல் X இன்மை, வளர்ச்சி X வீழ்ச்சி போன்றவைகளை இயல்பான முரண்களுக்கு எடுத்துக் காட்டுகளாகக் குறிப்பிடலாம். எளிமை X பகட்டு அடிமை X உரிமை, தனிமை X கூட்டு, மரபு X புதுமை, பெறுதல் X இழத்தல் போன்றவை வாழ்வியல் மரபுகளை ஒட்டி உருவாகின்றன.

அப்துல் ரகுமான் இவைகளை நுட்பமாக உணர்ந்து கவிதைப்படுத்துகிறநிலை அவரின் புலன் விசாரணை ஞானத்திற்குச் சிறப்புத் தன்மைகளாகும். அச்சிறப்புத் தன்மைகளைச் சில கவிதைகளின் சான்றுகளைக் கொண்டு உணரலாம்.

"நேர் X எதிர்" என்கிற முரணே வாழ்க்கைத் தத்துவம் என்பதை முரண் தொடை என்ற கவிதையின் வழி விளக்குகிறார்.

"அந்திப் பூவின் மகரந்தமானது
இருட்டின் வயிற்றில்
ஒளியின் கர்ப்பம்
புன்னகை பிறந்தது
கண்ணீர்ப் பாடையில்"[113]

என்கிற வரிகள் கருதத் தக்கவை.

வாழ்வியல் மரபுகளில் சில முரண்கள் இருப்பதைப் பல கவிதைகளில் சுட்டிச் செல்கிறார். எடுத்துக்காட்டாக, எளிமை X ஏழ்மை இவைகளுக் கிடையேயான முரணையும் அம்முரணில் கவிஞர்க்கு ஏற்பட்ட தத்துவ வீச்சினையும் காணலாம்.

எளிமை என்பது,

"பட்டினி அல்ல
பக்குவ விரதம்
ஊமை அல்ல,
உன்னத மௌனம்
கருமல டல்ல
கட்டுப் பாடு!"[114]

என்ற வரிகள் காந்தியம் குறிப்பிடுகிற எளிமையுடன் இணைத்துச் சிந்திக்கத் தக்கதாகும். உலகியல் வாழ்வில் எளிமையைத் தரம் தாழ்ந்ததாக நினைப்பது தவறு என்பதை இக்கருத்தின் வழி உணரலாம்.

**அறவியல்:-**

அறவியல் சார்ந்த கவிதைகள் கவிதைத் தொகுப்புக்களில் இடம் பெற்ற விதம் அட்டவணையில் குறிக்கப் பெற்றுள்ளன. அறவியல் சார்ந்த கவிதைகள் ஆலாபனையிலும் பால்வீதியிலும் மிகுந்திருப்பதைக் காணலாம். அப்துல் ரகுமான் பால்வீதியைப் பற்றிக் குறிப்பிடும் போது "விண்மீன்களைப் போல உயர்ந்த பொருள்களைச் சொல்வதால் பால்வீதி என்று பெயரிட்டேன்"[115] என்கிறார். ஏற்றாற்போல அறவியல் சார்ந்த சிந்தனைகள் இத்தொகுப்பில் மிகுந்துள்ளது.

அப்துல் ரகுமானின் தத்துவக் கவிதைகளில் அறவியல் தொடர்பான(15) கவிதைகள் கீழ்க்கண்டவாறு தொகுப்புகளில் இடம்பெற்றுள்ளன.

| | |
|---|---|
| பால்வீதி | - 5 |
| நேயர்விருப்பம் | - -- |
| சுட்டுவிரல் | - 2 |
| ஆலாபனை | - 8 |

அறவியல் சார்ந்த தத்துவக் கவிதைகளை இரண்டாகப் பகுத்துப் பார்க்கலாம்.

1. வாழ்வின் மேன்மையை மையமிட்ட கவிதைகள்
2. மேன்மையை அடைவதற்கான வழிகள் தொடர்பான கவிதைகள்

**1. வாழ்வின் மேன்மையை மையமிட்ட கவிதைகள்:-**

அறத்தில் காலூன்றி வாழ்வின் மேன்மையை எய்திட வேண்டுவதே மனிதப்பிறப்பின் நோக்கமெனக் கருதலாம். "மேன்மை" என்பது சாதனையுடன் தொடர்புடையதாகக் கருதலாம். பிறப்பதும் இறப்பதும் தொடர்பான உலகில் சாதனைகள் செய்யாதவர் பிறப்பினும் பிறவாதவர்கள் எனக் கூறுகிறார்.

"மக்கள் தொகைக் கணக்கில் மட்டும் தான்
இருந்தாயா? வேறு எந்தக் கணக்கிலும்
நீ தொகையாக இருந்ததில்லையா?
வரவாகக் கூட வேண்டாம் பற்றாகக் கூட
இருந்ததில்லையா?"[116]

எனக் கேட்கிறார். சாதனை, மனிதனுக்குப் புகழ் தருவது இயல்பாகிறது.

"கண்ணுக்கு அழகாக இருப்பவர்களைக்
காலம் சிதைத்து விடுகிறது
காதுக்கு அழகாக இருப்பவர்கள்
மரணத்தையும்
அலங்காரமாக்கிக் கொள்கிறார்கள்"[117]

அழியும் பொருட்கள் அலங்கரிக்கக் கூடாது, புகழ் நம்மை அலங்கரிக்க வேண்டும் அதுவே வாழ்க்கை என்கிறார். நாளை பூகம்பத்தால் அழிந்து போகாமல் இருப்பதற்குச் சாதனை சார்ந்த புகழ்தான் அடித்தளமாக இருக்கும் என்பதனைப் "பத்திரப்படுத்துங்கள்"[118] என்ற கவிதையில் வலியுறுத்துகிறார்.

"கனவுகளால் வாழ்கிறவர்களை
வாழ்த்துவோம்
கனவுகளில் வாழ்கிறவர்களுக்காக
அனுதாபப்படுவோம்"[119]

என்கிறார். இலட்சியத்துடன் மனிதன் வாழ்வின் மேன்மை அடைய வேண்டிய நிலையை வலியுறுத்துகிறார்.

**2. மேன்மை அடைவதற்கான வழிகள் தொடர்பானக் கவிதைகள்:-**

அன்பு, பணிவு, உழைப்பு, கொடை, காமவரம்பு, நன்மைதீமை போன்றவைகளைத் தனித்தன்மைச் சார்ந்த வழி முறைகளாகக் கவிதைகளில் குறிக்கிறார். குறிப்பாக அன்பு, பணிவு, உழைப்பு என்ற மூன்றையும் பல கவிதைகளில் வற்புறுத்தியுள்ள நிலையை ஆய்வின் வழி உணர முடிகிறது.

**அன்பு:-**

அறிவுக்கும் அன்பிற்கும் நிகழ்கின்ற நிரந்தரப் போரில் அறிவு தோல்வியுறும் அன்பு வெற்றிபெறும் சக்தி மிக்கது எனும் கருத்தை "நெற்றிக்கண்"[120] என்ற கவிதையில் சுட்டுகிறார். அந்த அன்பின் இடத்திற்கு மனிதன் செல்லப் "பாதை"[121] இருந்தும் போகவில்லையே என வேதனைப் படுகிறார். வாழ்வில் அன்பினால் உறவு ஏற்படுகிறது. அந்த உறவு முறைகளால் மனிதனும் இறைவனும் "காந்தக் கயிறாக"[122] கட்டப்படுகிறார் கள். அன்பின் அடையாளம் கண்ணீர்தான் என்பதைக் "கண்ணீரின் ரகசியம்"[123] எனும் தலைப்பில் பாடுகிறார்.

**பணிவு:-**

கீழ்ப்படியும் பணிவு நம்மை மேலே உயர்த்தவல்லது எனும் கருத்தைப் பல கவிதைகளில் உரைக்கிறார். இக்கருத்தை மேகம் கூறுவதாகக் குறித்த போது,

"மேகம்
'கடகட'வென்று சிரித்து விட்டு
மழையாக இறங்கியது
நனைந்து சிலிர்த்த
பூமி சொன்னது :
பெருமை
மேலே ஏறுவதில் இல்லை
கீழே இறங்குவதில் இருக்கிறது"[124]

என்கிறார். இது தொடர்பான கருத்தை "ஒரு மேகத்தைப் போல்"[125] எனும் கவிதையிலும் சுட்டுகிறார்.

**உழைப்பு:-**

அன்பு பணிவோடு உழைப்பிருந்தால் உயரலாம் என்கிறார். அடிமைப் பட்ட நிலையிலிருந்து விடுபட்டோம். நாம் சுதந்திரமாக ஆன நிலை வந்தது. சுதந்திர காலத்திலும் நாம் சுறுசுறுப்பாக இயங்காமல்

சோம்பியிருந்தால் அபாயம் நிகழும். கொடுமையான அடிமை நிலை உருவாகக் கூடும். ''பாதயாத்திரை'' என்ற தலைப்பில் இக்கருத்தினை உரைக்கிறார்.

''ஒரு வழியாய்
நம் எஜமானச் சுமையைத்
தூக்கி எறிந்து விட்டோம்''
''இப்பொழுது என்ன செய்யலாம்''
''சுதந்திரப் பாதங்கள் நாம்
நமக்காக நாமாக நடப்போம்''
''இப்பொழுதும் நாமே நடப்பதா
கூடாது
பாதையை நடக்கச் சொல்''[126]

உழைக்காமல் சோம்பேறியாக இருக்கும் மனிதர்களை எள்ளல் செய்கிறார். பாதையில் நடக்காமல் பாதையை நடக்கச் சொல்லும் மூடர்களை இக்கவிதையில் காட்டுகிறார்.

**கொடை:-**

உழைத்துச் சேர்த்த செல்வத்தை ஈகை செய்தல் வேண்டும். நாம் கொடுப்பவை நம்முடையவை அல்ல. நம் மூலம் கொடுக்கப்படுகிறது என்ற உணர்வு வேண்டுமென்பது கவிஞரின் சிந்தனையாகும்.

''கொடு
நீ சுத்தமாவாய்
கொடு
நீ சுகப்படுவாய்
கொடு
அது உன் இருத்தலை
நியாயப்படுத்தும்''[127]

என்கிற வரிகள் சிந்தனைக்குரியதாகும்.

**விடுதலை:-**

மனிதன் சுதந்திரமாக இயங்க வேண்டும் எனும் கருத்துடைய கவிஞர் எது விடுதலை எனவும் உரைக்கிறார்.

“சுதந்திரம் என்பதற்கும் வரையறை உண்டு. எல்லாக் கட்டுக் கோப்புகளிலிருந்தும் பொறுப்புகளிலிருந்தும் விடுபடுவதை விரும்பவில்லை”[128] இவ்வாறு விடுபடுவது உயர்வுக்கு வழிவகுக்காது எனும் கருத்தினடிப்படையில் கூறுகிறார்.

**காம வரம்பு:-**

மனிதனின் உயர்வுக்குக் காமம் பெரிய தடையாக இருக்கிறது. வரம்பற்ற காமத்தால் அழிவின் காட்சிகளே நிறைந்துள்ளன எனும் போது,

“மன்மதன் வெறிபிடித்து
முட்கணை தொடுத்தான்
பொறித் தேவதைகளுக்குக்
கோரைப் பல் முளைக்க
சொர்க்கத்தின் பால்மடியைக்
கடித்துத் தின்றன”[129]

என்று அழிவின் கோரக் காட்சிகளைக் காட்டுகிறார்.

**நன்மை தீமை:-**

“பாற்கடலரங்கம்”[130] எனும் தலைப்பில் வாழ்க்கை, சந்தர்ப்பச் சூழலுக்கேற்ப நன்மை தீமைகளை விளைவிக்கிறது. நன்மை தீமை என்று தனியே இல்லை என்ற அறக்கருத்தை வலியுறுத்துகிறார்.

**அழகியல்:-**

பிறர் பார்க்காத ஒன்றை அதன் இயல்புகளை மனக்கண்ணில் இரசித்துப் பார்த்துத் தான் பார்த்தவாறே பிறரும் இரசிக்கத் தருவது அழகியல் எனலாம்.

அழகியல் சார்ந்த தத்துவக் கவிதைகள் எண்ணிக்கையில் எட்டாக உள்ளன. குறிப்பாகப் "பால்வீதியில்" அவை மிகுந்துள்ளன(6). பால்வீதி இவரின் முதல் கவிதைத் தொகுப்பாகும். எனவே, அழகியல் சார்ந்த தத்துவங்களில் கவிஞர் தன்னை ஈடுபடுத்தியிருக்கிறார். ஆலாபனையில் அழகியலைத் தாண்டித் தர்க்கம், அறவியல் போன்ற கூறுகளுக்குச் சிறப்பிடம் கொடுத்திருக்கிறார். சுட்டுவிரல் கவிதைத் தொகுப்பு முழுவதும் சமுதாயச் சிந்தனையோடு தொடர்பு பெற்றதாகும். அழகியல் கவிதைகள் அதில் இடம் பெறவில்லை. சமுதாயத்தின் மீதுள்ள கோபம் குமுறல் வெறுப்பு வெளிப்படும் இடங்களில் அழகியல் இடம் பெறாத நிலை இயல்பானதாகும்.

இவரின் அழகியல் கவிதைகளை இரண்டாகப் பிரித்துரைக்கலாம்.

1. **செயற்கையில் அழகியல்:**

மெழுகுவர்த்தி, தந்திமரம், விளக்கு, கலை, அறிவியல் தொடர்பான செயற்கையானவற்றில் அழகியலை உரைக்கிறார்.

2. **இயற்கையில் அழகியல்:**

வேர்வை, கண்ணீர், மௌனம், சித்திர மின்னல்கள் போன்ற கவிதைகளில் இயற்கை சார்ந்த அழகியல் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

**செயற்கையில் அழகியல்:**

மெழுவர்த்தி உருகி வழிவதைக் கவிதையில் குறிக்கும் போது,

"ஒற்றை நெருப்பு உதட்டின்"
வாசிப்பில்
புல்லாங் குழலே
உருகுகிறது"[131]

என்கிறார். புல்லாங்குழலின் இனிமையினால் அடுத்தவரை உருகச் செய்யலாம். ஆனால் இங்கோ புல்லாங்குழலே உருகுகிறது என்கிறார். தீபம் உதடாகவும் மெழுகு புல்லாங்குழலாகவும் இருப்பதாய் அப்துல் ரகுமான் தன் அழகியல் பார்வையை வெளிப்படுத்துகிறார்.

கவிஞருக்குத் "தந்தி மரங்களின்"[132] தோற்றம் மரங்களின் தலைகீழ்த் தோற்றமாகத் தெரிகிறது. அத்தந்தி மரங்களில் பூக்கள் இல்லை. அம்மலட்டு மரங்களில் பூக்கள் போலக் குருவிகள் வசந்த வேஷம் கட்டும் என்கிறார்.

விளக்கு எனும் தலைப்பில் விளக்கு என்பதை பலவாறு விளக்கி, புதுமையின்பத்தைத் தருகிறார்.

"விளக்குகளே! விழிகளின் விழிகளே!
நீங்கள் இரவின் புன்னகைகளா?
இல்லை, கண்ணீர்த் துளிகளா?
நீங்கள் இரவின் நினைவுகளா?
இல்லை, கனவுகளா?
நீங்கள் இரவின் ஆபரணங்களா?
இல்லை ரணங்களா?"[133]

என்று அழகிய கற்பனைகளை வரிசையாக அடுக்கி உரைக்கிறார்.

கலை என்பது என்ன? என்பதற்கு அரிய விளக்கத்தை அழகியல் நோக்கில் தருகிறார்.

"இமைப் பீலிகளின்
கையெழுத்துப் பிரதிகளை
அச்சுக் கோக்க
நட்சத்திரங்களை அடுக்கி
அடைப்புக் குறிகளுக்காக
மேக அறையெல்லாம்
இன்னொரு பிறைக்குத்
துளாவும்
மனவிரல்கள்"[134]

கண் இமைப்பீலிகளின் கையெழுத்துக்களை அச்சுக் கோர்ப்பதற்கு விண்மீன்களை அடுக்கி ஒரு அடைப்புக் குறிக்குப் பிறையை வைத்து இன்னொரு அடைப்புக்குப் பிறையைத் துளாவுகிற மனவிரல்கள் என்று குறிப்பிடுகிறார்.

“மானுடத்தின் மகுடாபிஷேகம்” என்ற தலைப்பில் விஞ்ஞானத்தின் வியத்தகு மாற்றத்தால் நிகழ்ந்துவரும் சாதனைகளை அழகியலில் வெளிப்படுத்துகிறார்.

“பூமிக் கூட்டின்
மானுடக் குஞ்சுக்கு
காபிரியேலின் சிறகுகள்
முளைத்துவிட்டன.
ஏ .... கிரகக் கூடுகளே!
ஆரத்தியோடு காத்திருங்கள்
உங்கள் விதி எழுதுகோல்
இனி, அவன்கையில்”[135]

என்று சொல்வதில் கிரகக் கூடுகளுக்கே மானுடம் எச்சரிக்கை விடுப்பதை அழகியலில் வடிக்கிறார்.



**இயற்கையில் அழகியல்:-**

இயற்கையாக நிகழ்வனவற்றில் இருக்கும் அழகியல்சார் கவிதை களையும் பாடியுள்ளார்.

“வேர்வைத் தாலி” எனும் தலைப்பில் உழைப்பினால் உருவாகும் வேர்வைதான் மண்ணுக்குக் கட்டப்பெறும் தாலி; மாறாக மழையன்று என்று உழைப்பை மேன்மைப்படுத்துகிறார்.

“வியர்வையின்
சுயத்தாரைவார்ப்பில்
விசுவரூபமெடுக்கும்
இந்த வாமனனுக்கு
வானங்களே!
நீங்கள் போதமாட்டீர்கள்”[136]

என்று அழகியல் பார்வையில் பார்க்கிறார்.

கண்ணீரைப் பற்றி அப்துல் ரகுமான் குறிப்பிடும் போது,

"மூடிய கடிதத்தின் வாசகங்கள்
முகவரி யாகக் கசிகின்றன
மயானம் நோக்கிக் கனவுச்சவ
மௌன ஊர்வலம் போகிறது
நாட்டைப் பிரிந்த அகதிகளாய்
நட்சத் திரங்கள் நடக்கின்றன"[137]

என்பதில் மூடிய இமை கடிதமாகும். அதன் வாசகம் முகத்தில் முகவரியாகக் கசிகின்றது என்று அழகியலுடன் வெளிப்படுத்துகிறார்.

மௌனம் என்பது என்ன என்பதற்குத் தத்துவத்தின் முகம் காண மௌனம் எனும் சுடரை ஏற்றிவைத்தால் புகைவிட்டு எண்ணெயில் முழுகிவிடுகிறது நாக்குத் திரி[138] என்று கூறுகிறார்.

"சித்திரமின்னல்கள்"[139] என்ற தலைப்பில் திருக்குறளை "மும்முலைத் தாய்" என்றும், புன்னகையைப் பற்கள் என்ற முட்களே பூக்கும் மலர் என்றும் சுட்டுகிறார். "ரத்த சம்பந்தம்" என்ற தலைப்பில் மலர்களை விட எனக்கு முட்களைப் பிடிக்கும் ரத்த சம்பந்தம் கொள்வதால் என்றும் அழகியல் பார்வையைப் பல இடங்களில் காட்டுகிறார்.

**நிலையாமை:-**

மரணம் நிலையாமையைப் படம் பிடித்துக் காட்டும் கண்ணாடி எனலாம். அப்துல் ரகுமான் மரணத்தையே பேசவைப்பதாகக் கவிதை ஒன்றினை அமைத்துள்ளார்.

"மூச்சுத் தொடரின்
முற்றுப் புள்ளி நான்
இதயத் துடிப்போ
என் கடிகாரம்
நோய் என் வாசல்
காயம் என் புன்னகை
தூக்குக் கயிறு நான்

கட்டும் தாலி

. . . . . . . . .

. . . . . . . . .

ஜன்ம விழாவின்

ஜனகணமன நான்"[140]

அம்மரணத்திற்கு உறக்கம் ஒத்திகை; மயக்கம் முற்றுகை; விபத்து மரணத்தின் குறும்பு 'பாடை மரணத்தின் பல்லக்கு மயானம் மரணத்தின் வீடு' என்றெல்லாம் தத்துவார்த்த வீச்சாகப் பாடுகிறார். மரணத்திலும் அழகைப் பார்க்கும் விதத்தில்,

"மரணம் அவலட்சணம் என்று

அருவருக்கிறாய்

ஆனால் நாள்

அதன் மரணத்தில்

அழகாய் இருப்பதை

நீ கவனித்த தில்லையா

விடியலை அழகு என்கிறாய்

அது இரவின் மரணம் அல்லவா?"[141]

என்று கூறுகிறார். "நாத்திகர் கோயில்"[142] என்ற தலைப்பில் இறந்த குழந்தையைப் பெற்றெடுக்கும் பெண்ணின் மன நிலையில் நிலையாமையை எடுத்துரைக்கிறார்.

குழந்தைப் பேறு வண்டி மயான வாசலில் பழுதாகி நிற்கிறது என்கிற நிலையில்,

"மயான வாசலில்

பழுதாகி நின்றது

ஈனில் ஊர்தி"[143]

என்று கூறுகிறார். பிறப்பிற்கும் இறப்பிற்கும் உள்ள யதார்த்தத் தொடர்பை இவ்வாறு குறிக்கிறார். இதன் தொடர்பாக நிலையாமையை வலியுறுத்துகிறார்.

"இளமை நில்லா யாக்கை நில்லா" என்பார்கள் "முதுமை" என்ற தலைப்பிலேயே கவிதை செய்துள்ளார்.

"இறந்த காலத்தையே பாடும்
கீறல் விழுந்த இசைத்தட்டு
ஞாபகங்களின்
குப்பைக் கூடை
வியாதிகளின்
மேய்ச்சல் நிலம்"[144]

என்றவாறு நிலையாமையைக் காட்டும் முதுமையை விளக்குகிறார். முதுமையில் வில்லாக உடல் கூனி வளைவது மரணத்தை உடல் மணக்கவா? என்றும் உயிர்களில் முதுமை இறுதிக்கட்டம் என்பதைக் காட்ட அவர்களின் கால்சுவடோடு கோல்சுவடும் ஆய்த வடிவத்தைக் காட்டிடுதோ என வியப்புறும் கற்பனை நயத்தினை உணர்த்துகிறார்.

"உதிரும் சிறகுகள்"[145] எனும் கவிதையில் நாம் ஈசல் பூச்சிகளாக இருளை மோகித்து ஏதோ சாளர வழியே நுழைந்து உதிரும் சிறகுகளை உதிர்க்கிறோம் என்று நிலையாமைச் சிந்தனையை விளக்குகிறார்.

இவ்வாறு மரணம், முதுமை இவைகளின் நிலையாமை தத்துவத்தைப் புரிய வைக்கிறார். மரணத்தைக் கண்டு அஞ்சாமல் நேசிக்கும் மனநிலை கவிஞரின் ஆழந்த ஞானத்திற்குச் சான்றாகும்.

**இயலாமை:-**

இயற்கையில் உள்ள முரண்களில் இயலும் நிலை X இயலாமை நிலை என்கிற முரணும் ஒன்று. அம்முரணில் இயலாமையின் நிலையில் தத்துவப் பார்வையில் விவரித்துக் கவிதைக்குப் பாடுபொருளாக்கியுள்ளார்.

சந்திரன் சுயமாக ஒளியை உருவாக்கி உயிர் வாழ இயலாத இயலாமை நிலையைக் கிரகணமாகிய வெளிச்சம் எனும் கவிதையில் சுட்டுகிறார்.

"அந்த நாட்கள்
போய்விட்டன

சந்திரனே!

முல்லைநிறப் புரவிகள் பூட்டிய

உன் மூன்று சக்கரத் தேர்

நாக வீதியோடு

விபத்திற்குள்ளாகி விட்டது"[146]

என்று விரித்துரைக்கிறார்.

"கடற்கரையில் நின்று கொண்டு கடலைப் பற்றிப் பேசுவதும் கடலைப் பற்றிய கதைகளை உரைப்பதும் இயலுமே ஒழியக் கடலில் இறங்கி அதில் மூழ்கவும் மூச்சடக்கவும் நம்மால் இயலாது"[147] என்று குறிக்கிறார்.

"மாதிரி"[148] எனும் கவிதையில் மனிதன் பிறந்தவுடன் அவன் யாரைப் போல் இருக்கிறான் என்ற வினா கேட்கப்படுகிறது. அவன் சுயமாக இருக்க இயலாது முன்னோர்களைப் பின்பற்றாமல் அவனால் வாழமுடியாது என்ற தத்துவத்தைக் குறிக்கிறார். இதே கருத்து "முகமூடி" எனும் கவிதையிலும் இடம் பெற்றுள்ளது.

"நம் முகமூடிகளே

நம் மகுடங்கள்

அவை கழற்றப்பட்டுவிட்டால்

யாரும் அவரவர் அரியாசனத்தில்

அமர்ந்திருக்க முடியாது"[149]

இதில் மனிதர்களின் பொய்மையான முக மூடிகளே முகவரிகளைத் தந்து வாழ வழி செய்கிறது எனும் இயலாமையை உணர்த்துகிறார்.

பொருளாதார இயலாமை நிலையினால் அல்லல்படும் மனிதனின் இயலா நிலையைப் பழைய வீடு எனும் கவிதையில் காட்டுகிறார்.

ஒரு பழைய வீட்டில் உள்ள பல்வேறு செப்பனிட வேண்டிய வேலைகளை வரிசையாகச் சொல்லிக் கொண்டே வருகிறார். இறுதியில்

"ஆமாம்

இவ்வளவு சிரமப் படுவானேன்?

சனியனை

இடித்துத் தள்ளி விட்டுப்

புதியதாகவே கட்டிக் கொண்டாலென்ன

எல்லா வசதிகளோடும்?"[150]

என்று கூறுகிறார். இக்கவிதை பலதளத்திற்குள் பொருள் தரும் அற்புதமான குறியீட்டுக் கவிதை எனலாம்.

"எரியட்டுமே சுடர் எரியும் வரை எதுவரை எரியும் விடியும் வரை"[151] என்பதில் இயலாமை நிலையைப் பளிச்சிட வெளிப்படுத்துகிறார்.

இவ்வாறு வாழ்க்கையில் ஏற்படும் இயலாமை நிலைகளைத் தம் கவிதைகளில் செவ்வனே காட்டுகிறார்.

**சமூகம்:-**

கவிஞன் சமுதாயத்தில் ஓர் அங்கமாக இருப்பவன். கவிஞன் எழுதும் கவிதைகளில் சமுதாயத்தின் தாக்கம் இயல்பாகவே இருக்கும். இந்நிலையை விடுத்துக் "கலை கலைக்காகவே" என்று கூறுதல் ஏற்கத்தக்கதல்ல. சமுதாய வாழ்க்கைச் சூழலிருந்து கலை தோன்றுவதால், கலை வாழ்க்கைக்காக என்று கூறுவதுதான் சாலப் பொருந்தும் எனலாம்.

**கவிஞனும் சமுதாயமும்:-**

சமுதாயத்தில் நிகழும் பல்வேறு இன்ப துன்பங்கள் கவிஞனிடம் பதிவு பெறுகின்றன. அப்பதிவைக் கவிஞன் தன் கவிதைப் படைப்பிலும் இடம் பெறச் செய்கிறான். "எழுத்தாளன் சமூகத்தினால் பாதிக்கப்படுகிறான். சமுதாயம் அவனால் பாதிக்கப்படுகிறது. இலக்கிய வாழ்வை உருவாக்கித் தருவதோடு அதனைச் சீரமைக்கவும் செய்கிறது"[152] என்கிற கருத்து இங்கு நோக்கத்தக்கதாகும்.

காலச் சூழலைப் பொறுத்து மக்களின் மனவுணர்வுகளும் அமைகின்றன. மன உணர்வுகளுடன் சிக்கல்களும் தீர்வுகளும் தொடர்பு பெறுகின்றன. கவிஞன் அவைகளால் பாதிக்கப் பெற்றுத் தீர்வை அல்லது மேம்பாட்டை விரும்பிக் கவிதைகள் புனைகிறான். அவ்வகையில் சமுதாயக் கடமையுணர்வு மிக்கவனாகவும் கவிஞன் விளங்குகிறான். கவிஞன், சமுதாயம் காலம் இவைகளின் குரலாகத் திகழ்கிறான்.

**கவிதையால் சமுதாய மாற்றமா?**

கவிதையால் சமுதாயத்தை மாற்ற முடியும், மாற்ற முடியாது என்ற முரண்பட்ட சிந்தனைகள் உண்டு. மாற்ற முடியாது என்று கூறுகிற சிந்தனை ஏற்றுக் கொள்ளத் தக்கதல்ல. ஏனெனில், ஒரு சமூகத்தில் மொழி என்பது வாழ்வில் இரண்டறக் கலந்த தன்மையுடையது. அம்மொழியைக் கருவியாக்கி, கவிஞன் கலைப்படைப்பை உருவாக்குகிறான். எனவே, கவிஞரின் இயல்பான ஆற்றல், மொழியின் ஆற்றல், பாடுபொருள் வீச்சு போன்ற பல காரணங்களால் சமுதாயம் மாற்றத்தை அல்லது விழிப்புணர்வைச் சந்திக்க வேண்டியிருக்கும்.

ஒரு சமுதாயத்தின் விருப்பு, வெறுப்பு, நம்பிக்கை முதலியவற்றை வளர்க்கப் பயன்படுவது அந்தச் சமுதாயத்தின் இலக்கியமே. ஆகையால் அதுவே மனித வாழ்வைப் பெரிதும் மாற்றி அமைக்கிறது எனலாம்.

மனித வாழ்வையே மாற்றி அமைக்கும் வல்லமை பெற்ற கவிஞன் அல்லது எழுத்தாளன் பொறுப்புள்ளவனாகவும், கடமையுள்ளவனாகவும் இருக்க வேண்டும்.

கவிதையால் சமூகத்தைக் காப்பாற்ற முடியாது என்று கூறுபவர்களைக் கவிஞர் சாடுகின்ற நிலையும் உண்டு. "கவிதைகள் சமூகத்தைக் காப்பாற்றாது என்று கவிதையிலேயே சொல்லிக் கொண்டிருக்கும் கண்மூடிக் கவிஞர்களும் உள்ளனர். இவர்கள் வாளை ஏந்திய பேடிகள், அட்சய பாத்திரத்தை ஏந்திய பிச்சைக்காரர்கள் கல்யாணம் செய்து கொண்ட அலிகள்"[153] என்கிற வரிகள் கவிஞரின் சிந்தனை முற்சுட்டிய கருத்தை அரண் செய்யக் காணலாம்.

கவிதை சமூகத்திலிருந்து படைக்கப்படுகிறது. சமூகத்திற்காகப் படைக்கப்படுகிறது. அதனால் சமூகத்திற்கு அது பயன் அளிக்கிறது. கவிதைக்குச் சமூகப் பயன்பாடு இருக்கிறது.

**காலமும் கவிஞனும்:-**

குறிப்பிட்ட சமுதாயத்தின் குறிப்பிட்ட காலச்சூழலில் நிலவிய சமுதாய வாழ்க்கையின் குறுக்கு வெட்டுத் தோற்றத்தைக் கவிஞன் கவிதையில் வடித்தெடுக்கிறான். அம்முறையில் காலம் ஈன்றெடுத்த பிறப்பாகக் கவிஞன் இருக்கிறான். ஒரு கவிஞன் வாழும் காலத்தில் எந்தச் சக்தி சமுதாயத்தை ஆட்கொண்டிருக்கிறதோ அந்தச் சக்தி கவிஞனையும் ஆட்கொண்டே தீரும். அச்சக்தி நல்ல சக்தியாகவும் இருக்கலாம். தீய சக்தியான சீர்கேடாகவும் இருக்கலாம். நல்ல சக்தியைப் போற்றியும் தீய சக்தியான சீர்கேடுகளிலிருந்து எங்ஙனம் விடுபட வேண்டும் என்பதையும் கூறுபவன் கவிஞன் ஆவான்.

ஆய்வுக்குட்படுத்தப் பெற்ற அப்துல் ரகுமானின் கவிதைகள் 211 ஆகும். அவைகளில் சமுதாயம் சார்ந்த கவிதைகள் 102 கவிதைகளாகும். பிற கவிதைகளைவிடச் சமூகம் சார்ந்த கவிதைகள் இவரிடம் மேலோங்கி உள்ளன. இந்நிலையைக் கருத்தில் கொண்டு அப்துல் ரகுமானைச் சமுதாயக் கவிஞர் என மதிப்பிடலாம்.

தான் சமுதாயக் கவிஞன்தான் என்பதை அப்துல் ரகுமான் பல இடங்களில் முன் மொழிந்துள்ளார். கவிஞர் உன்னதத்தைத் தேடும் பணியில் ஈடுபட்டிருந்தாலும் அவரின் சமுதாயப் பணி எப்போதும் உடனிகழ்ந்து கொண்டே இருக்கும் என்பதை,

"என் சிம்மாசனம்
ஆகாயத்தில் என்றாலும்
என் பார்வை
பூமியின் மீதே -
ஒரு நட்சத்திரம் போல்
என் கானங்கள்
மேகங்களில் என்றாலும்
என் முட்டைகள்
மண் மீதே -
ஒரு வானம் பாடி போல்"[154]

என்கிறார்.

"ஒவ்வொரு மனிதனும் சமூக சமுத்திரத்தின் துளி. ஒவ்வொரு துளியிலும் சமூகத்தின் சாரம் அடங்கியிருக்கும்"[155] என்று சமுதாயத்தின் மீது கொண்டுள்ள அன்பை வெளிப்படுத்துகிறார்.

கவிதை எனில் அஃது சமுதாயத்திற்குப் பயன்பட வேண்டும் என்ற கருத்தை உரைக்கிறார். மேலும் "மனிதன் எழுத்தைப் போன்றவன். அவன் மற்ற மனிதர்களோடு அச்சுக் கோத்துக் கொண்டு வாக்கியமாகும் போதுதான் அர்த்தம் பெறுகிறான்"[156] என்று குறிப்பிடுவதும் இங்கு கருதத்தக்கதாகும்.

அப்துல் ரகுமானின் நான்கு கவிதைத் தொகுப்புகளில் சமூகம் சார்ந்த கவிதைகள் இடம் பெற்ற விவரம் பின்வருமாறு:-

| கவிதைத் தொகுப்பின் பெயர் | கவிதைகளின் எண்ணிக்கைகள் | சமுதாயம் சார்ந்த கவிதைகள் |
|---|---|---|
| பால்வீதி | 65 | 25 |
| நேயர்விருப்பம் | 44 | 12 |
| சுட்டுவிரல் | 60 | 54 |
| ஆலாபனை | 42 | 11 |
| மொத்தம் | 211 | 102 |

சுட்டுவிரல் என்ற கவிதைத் தொகுப்பில் சமூகம் சார்ந்த கவிதைகள் மிகுந்துள்ளன(54). அடுத்த நிலையில் பால்வீதியில் கவிதைகள் அமைந்துள்ளன(25). நேயர் விருப்பம்(12). ஆலாபனை (11) போன்ற தொகுப்புக்களில் சமூகம் சார்ந்த கவிதைகள் குறைவாகவே உள்ளன.

இந்நான்கு நூல்களும் பல்வேறு காலங்களில் வெளிவரப் பெற்றன. மேற்சுட்டிய அட்டவணையில் சமூகத் தொடர்பான கவிதைகள் மிகுந்தும், குறைந்தும் இடம் பெற்றிருப்பதற்குப் பல காரணிகள் உள்ளன.

**சமூகம் சார்ந்த கவிதைகள் மிகுந்திருப்பதற்கான காரணங்கள்:-**

1. சுட்டுவிரல் சமுதாயத்தை மட்டுமே மையமாக வைத்துப் பாடப் பெற்ற கவிதைத் தொகுப்பாகும்.

2. பால்வீதியில் பெரும்பாலான கவிதைகள் பரிசோதனை முயற்சிக்காக எழுதப் பெற்றவை. புதியன பல புரிதல் வேண்டும் என்பதைப் பெரிய நோக்கமாகக் கொண்டு படைக்கப்பெற்றவை என்பதால் இரண்டாம் நிலையில் உள்ளன.

**சமூகம் சார்ந்த கவிதைகள் குறைவாக இருப்பதற்கான காரணங்கள்:-**

1. நேயர் விருப்பம் என்ற கவிதைத் தொகுதியின் கவிதைகள் பலவும் கவியரங்கக் கவிதைகளாகும். எனவே, தலைப்புகளுக்காக மட்டும் பாடப்பெற்றதால் சமூக நோக்கம் சற்றுத் தொலைவில் உள்ளது.

2. "ஆலாபனை" முழுவதும் மானுடவியலைப் பற்றி விளக்கும் தத்துவப் பார்வை பொருந்திய கவிதைகளாகும். இயல்பாகவே இவரிடம் தேடல் உணர்வும் வித்தியாசமானப் போக்குச் சார்ந்த தத்துவ விசாரணையும் இடம் பெற்றிருப்பதால் தத்துவக் கவிதைகள் ஆலாபனையில் மிகுந்தள்ளன.

**சமூகம் தொடர்பான கவிதைகள்:-**

சமூகம் தொடர்பான கவிதைகளைக் கீழ்க்கண்ட வகைப்பாடுகளில் காணலாம்.

| வ. எண் | நூல்கள் | சாதிசமயம் | அரசியல் | பொருளாதாரம் | பெண்மை | சமுதாய சீர்கேடுகள் |
|---|---|---|---|---|---|---|
| 1. | பால் வீதி | | 3 | 7 | | 15 |
| 2. | நேயர்விருப்பம் | | 7 | 5 | | |
| 3. | சுட்டுவிரல் | 3 | 22 | 5 | 2 | 22 |
| 4. | ஆலாபனை | 2 | 1 | | 1 | 7 |
| | மொத்தம் | 5 | 33 | 17 | 3 | 44 |

மேற்குறித்த அட்டவணையின் வழிக் கவிஞர் சமுதாயத்தின் சீர்கேடுகள் குறித்து மிகுதியாகச் சிந்தித்துள்ளமையை (44) அறியலாம். அதற்கடுத்த நிலையில் அரசியல் (33), பொருளாதாரம் (17), சாதி சமயம் (5), பெண்மை (3) போன்றவைகளைப் பற்றிச் சிந்தித்துள்ளமையையும் அறியலாம்.

சமூகம் சார்ந்த கவிதைகள் கீழ்க்கண்டவாறு பகுக்கப் பெறுகின்றன.

1. சாதி சமயம்
2. அரசியல்
3. பொருளாதாரம்
4. பெண்மை
5. சீர்கேடுகள்

**1. சாதி சமயம்:-**

சாதி சமயங்கள் என வழக்கில் பரவலாகக் கூறப்பெறும் சாதியும் சமயமும் சமுதாயத்தில் முக்கிய அங்கம் வகிக்கின்றன. சமுதாயத்தின் மேன்மையும் தாழ்மையும் சாதி சமயத்தின் செயல்பாட்டைப் பொறுத்து அமைகின்றன.

வேலைப் பகிர்தலுக்காகத் தோற்றம்(Division of Labour) பெற்ற சாதி, பிற்காலத்தில் ஏற்றத் தாழ்விற்குக் காரணமாகிய நிலையை நடைமுறையில் காணலாம். சாதிப் பாகுபாடு தற்போது பிறப்பினையொட்டிக் கருதுகிற நிலை வருந்துதற்குரியது ஆகும். "இந்தியாவில் இன்று மூவாயிரத்துக்கும் மேற்பட்ட சாதிகள் காணப்படுகின்றன. இச்சாதிகள் ஒவ்வொன்றும் மற்ற சாதிகளிலிருந்து தாங்கள் மேம்பாடு உடையன என நிலை நாட்ட விழைகின்றன."[157]

சாதியமெனும் அபசுரம்:-

சமுதாயத்தின் தீமைகளால் சமுதாயம் சீர்கேடு உடையதாய்க் காணப்படுகிறது. இச்சூழல் கவிஞர்தம் மனதைப் பாதிப்பதும் இயல்பாகும்.

அம்முறையில் அப்துல் ரகுமானும் சாதியச் சூழலின் செயல்முறைப் பாட்டால் தாக்கம் பெற்றார். இதனைத் தம் கவிதை வழி வெளிப்படுத்தி மக்களைச் சிந்திக்க வைக்கிறார்.

சாதிப்பிரிவுகள் இல்லாமல் இக்காலத்தில் மனிதர்கள் கலந்து போய்விட்டார்கள். கலந்து போன நிலையில் சாதியைப் பார்ப்பது எங்ஙனம்? என வினா எழுப்புகிறார்.

"உன் ரத்தத்தைக் கிளறிப்பார்
நீயும் ஒரு
சமுத்திரம் என்பதை அறிவாய்
இல்லை
இன்னும் நான்
இந்தச் சாதிதான் என்கிறாயா?
அப்படி யென்றால்
பிரேதமே!
உயிருடையவர்கள் மத்தியில்
உனக்கென்ன வேலை?
ஒரு புதிய பூபாளத்திற்காகச்
சுரங்கள் சங்கமிக்கும் நேரமிது
அபசுரமே!
எட்டி நில்"[158]

இங்கு சாதியம் பார்க்கும் அபசுரத்தை எட்டி நிற்கும்படி கூறுகிறார். இந்திய வரலாற்றில் மதங்கள் படையெடுத்துக் கலந்திருக்கின்றன. போரில் வென்றவர்கள் தோற்றவர்களோடு கலந்து வாழ்தலையும் வரலாறு தெரிவிக்கிறது. பன்னெடுங்காலமாக மனித சமுதாயம் கலந்து சேர்ந்து வருகிறது. இந்நிலையில் வேதத்தில் பகுக்கப் பெற்ற பிரிவின் அடிப்படையில் இப்போது யாரும் தொழில் செய்யவில்லை. எல்லோரும் எல்லாத் தொழிலும் செய்கின்றனர். இந்தச் சூழலில் சாதி சமயம் அபசுரமாக இருந்து தலைவிரித்து ஆடுவதைக் கவிஞர் இடித்துரைக்கிறார்.

"சமுத்திரத்தில் எது
நதிகளின் விலாசம்?
நான் என்பதே
இப்போது
பன்மைதான்"[159]

என்ற வரிகளின் வழி மனித சாதியங்கள் கலந்து ஒருமையான நிலை இன்று இருப்பது காட்டப் பெறுகிறது.

"இதோ
நீயே மழித்துக் கொள்கிறாய்
இதோ
நீயே துவைத்துக் கொள்கிறாய்
ஏன்
கழிப்பறையைக் கூட
நீயே கழுவி விடுகிறாய்
இனி
யாரைப் பார்த்து
'எட்டி நில்' என்பாய்?"[160]

என்கிறார்.

தொழிலை வைத்துச் சாதியைப் பார்க்கத் தற்காலத்தில் இயலாது. இதன் வழியே தீண்டாமை இயங்க வழியில்லையென்றும் கவிஞர் குறிப்பிடுவது சிறப்புடையதாகும்.

**சமயமும் இன்றைய செயல்பாடும்:-**

"சமயங்கள் சமாதானப் புறாக்கள் என்றால் அவைகளின் கால் நகங்களில் மாமிசத்துண்டுகள் ஏன்? சமயங்கள் அமுதக் கலசங்கள் என்றால் அவற்றிலிருந்து ஆலகாலம் பொங்குவது ஏன்? சமயங்கள் பூக்கள் என்றால் அவற்றிலிருந்து பிணவாடை வீசுவது ஏன்? சமயங்கள் விளக்குகள் என்றால் அவற்றிலிருந்து இருள் பரவுவது ஏன்?"[161] என்று அப்துல் ரகுமான் வினவுகிறார். சமயத்தின் செயல்பாடு மேன்மை நோக்கத்திற்கு மாறாக இருப்பதை வினாவாக்கிச் சிந்திக்க வைக்கிறார்.

சமயங்கள் உண்மையைத் தேடுகின்றன. ஒவ்வொரு சமயத்தைச் சாந்தவர்களும் தங்கள் சமயத்தின் உண்மைப் பொருளே, உண்மையில் உண்மைப் பொருள் என்று கூறுகின்றனர்.

இந்நிலைமை "குருடர்களின் யானை"[162] என்ற தலைப்பில் கவிதையாகப் பாடுகிறார். யானையின் காலைத் தொட்ட குருடர் கால் உரல் போன்றது என்று கூறுவார். யானையின் துதிக்கையைத் தொட்ட குருடர் அது உலக்கை போன்று இருப்பதாகக் கூறுவர். யானையின் காதினைத் தொட்டவர்கள் அஃது முறம் போன்றது என்பர். ஒவ்வொருவரும் தாங்கள் அறிந்ததைப் போன்றே யானை இருப்பதாகக் கூறுகின்றனர். அவரவர் சமயங்களுக்குரிய தத்துவங்கள்தான் உயர்ந்தது என்று கூறுவது முற்கூட்டிய குருடர்கள் யானையைப் பார்த்த கதையுடன் ஒப்பிட்டு விளக்குகிறார்.

"எதையாவது பெற வேண்டும் என்பதற்காகவே மனிதர்கள் இறைவனை வணங்குகிறார்கள். இனிமேல் எந்தப் பிரார்த்தனையும் நான் கேட்கப் போவதில்லை என்று இறைவன் அறிவிப்பதாக இருந்தால் எந்த மத ஆலயத்திலும் ஜன நடமாட்டம் இருக்காது"[163] என்று கவிஞர் குறிப்பிடுவது கருதத்தக்கதாகும். இக்கருத்தின் வழி சமயம் உள்ளது என்றும் இறைவன் இருக்கிறான் என்பதிலும் கவிஞர் உடன்படுவதை அறியலாம். சமயமும் இறைவனும் சுயநலவாதிகள் சுக போகத்திற்காகச் செயல்படுவதைக் கவிஞன் விரும்பவில்லை.

உண்மையை உணராத கண்மூடிப் பார்வை சமயங்களில் மேலாண்மை ஆட்சி நடத்துகிறது என்பதைத் தெளிவாக உணர்த்துகிறார்.

சமயத்தில் உள்ள மூடநம்பிக்கைகளைச் சாடுவதிலும் கவிஞர் கவனமாக இருக்கிறார். மனித புத்தி, கோளுரை, நாத்திகன் போன்ற கவிதைகளில் முற்சுட்டிய இயல்புகளைக் காணலாம். இறைவனை வணங்குவதில் உள்ள ஏமாற்றுத் தனத்தில் வழிபடுதலைவிட வருமானத்தை நேசிப்பதில் மனிதன் நாட்டம் கொண்டிருப்பதை "நாத்திகன்" என்ற கவிதையில் தெளிவாகக் குறிப்பிடுகிறார்.

2. அரசியல்:-

அரசியல் சார்ந்த கவிதைகளை இருபகுப்பின் வழிக் காணலாம்.

1. தேசத் தலைவர்களைப் போற்றும் கவிதைகள்
2. தற்கால அரசியல் நிலை குறித்த கவிதைகள்

இவ்வகைப்பாட்டில் இரண்டாம் நிலையில் கவிதைகள் மிகுந்து காணப்படுகின்றன (29). முதல்வகைக் கவிதைகளின் வழி கவிஞரின் மனதில் பதிந்த தேசியத் தலைவர்களைப் பற்றிக் காணலாம்.

**1. தேசத்தலைவர்களைப் போற்றும் கவிதைகள்:-**

இந்திய அரசியலில் நேர்மையாக இருந்து, தேசிய எழுச்சிக்குப் பாடுபட்ட மகாத்மாகாந்தியும், நேருவும் கவிஞரின் மனதில் பதிந்த தேசியத்தலைவர்கள் ஆவார்கள்.

சத்தியத்தையும் அகிம்சையையும் அரசியலில் நுழைத்த புதுமைச் சிந்தனையாளர் காந்தி. அவரின் எளிமை கவிஞரின் மனதில் இடம் பிடித்திருக்கிறது. காந்தி மங்கையரின் தங்கமினுக்கல்ல, மங்கையரின் மங்கள மஞ்சள் மணிக்கயிறு என்று குறிப்பிடுகிறார். வர்ணப்பூ வானமாகக் காந்தி இல்லை. இளைத்த குடிசையின் அகல்விளக்குப் போன்றவர் எனக் குறிக்கிறார்.

"இமைக்கும் ஒளிச்சுடர் வைரமல்ல - அவன்
எல்லோரும் தேடும் எளிய உப்பு.
அமுதமோ தேனோ மதுவோ அல்ல - அவன்
அன்றாடம் தேவைப்படுகின்ற நீர்"[164]

என்கிற கவிதைவரிகள் காந்தியடிகளின் எளிமைத் தன்மைக்குச் சிகரங்களாகின்றன.

ஒவ்வொரு சாதனையாளரின் வெற்றிக்குப் பின்னரும் ஒரு பெண் இருப்பாள். காந்தியின் மாபெரும் வெற்றிக்குப் பின்னரும் "கஸ்தூரிபா காந்தி"[165] இருப்பதைக் கவிஞர் இனம் கண்டு குறிப்பிடுகிறார்.

காந்தியடிகள் இலக்கணமாக இருந்தால் இலக்கியமாகத் திகழ்ந்தவர் கஸ்தூாரிபா காந்தி ஆவார். காந்தியடிகளின் முயற்சிகளுக்குக் கைகொடுத்திருக்கிறார். தடைப்படுத்தியோ ஊக்கத்தைக் குறைத்தோ, எதிர்ப்புக் காட்டியோ செயல்படவில்லை. இச்செய்தியை உட்கருத்தாகக் கொண்ட கவிதை மிகச் சிறப்பாக உள்ளது.

கவிஞர் வார்தா நாயகனான காந்தியையும் வடலூர் நாயகனான வள்ளலாரையும் ஒப்பிட்டுப் பார்க்க விரும்பியிருக்கிறார். அரசியல் இருட்டை அகற்ற காந்தி வந்தார், சமுதாய இருட்டை அகற்ற வள்ளலார் வந்தார், என்கிற சிந்தனையை எடுத்துரைக்கிறார். இவர்கள் இருவரும் சரித்திரவானின் சகோதர ஒளிகள் ஆவார்கள். ஒருவர் அரசியல் வானில் நட்சத்திரமாகத் திகழ்ந்தவர். மற்றவரோ ஆன்மீக வானின் ஒளியாகத் திகழ்ந்தவர். இருதுருவங்களையும் ஒரு கவிதைக்குள் அடக்கக் கவிஞரால்தான் முடியும்.

“வள்ளலோ
தேக தேசத்தைத்
தின்று வந்த
பசியெனும் பழைய
பகையை எதிர்த்தே
அன்னக் கணைகளால்
அமர் புரிந்தவர்”[166]

என்று வள்ளலாரைக் கவிஞர் குறிப்பிடுவார்.

“தேக தேசத்தைத்
தீண்டிப் பரவிய
வெள்ளைக் குட்ட
வியாதியை விரட்ட
சத்தியாக் கிரக
சஞ்சீவி தந்தவர்”[167]

மகாத்மா காந்தி ஆவார். இருவரும் சமாதானச் சிந்தனையாளர்கள். இருவரும் சமரசம் என்பதோர் சத்தியமந்திரம் உச்சரிப்பதற்கென உருவான உதடுகள் என்று புகழ்கிறார்.

மகாத்மாவை அடுத்துக் கவிஞர் மனதில் இடம்பிடித்தவர் நேரு ஆவார். "நேரு"[168] என்ற தலைப்பில் கோபமும், திறந்த மனதும் நேருவின் இயல்புகள், காந்தீயத்தையும் காரல்மார்க்ஸையும் இணைத்த புரட்சிச் சிந்தனையாளர். குறிப்பாக இந்திய நாட்டை வரைந்த ஓவியன் என்று மதிப்பிட்டுக் கூறுகிறார்.

"விட்டில் கூட்டத்தை
விரும்பிச் சுற்றிய
அதிசயமான
ஆசிய ஜோதி!"[169]

என்று மகுடமான வரிகளில் நேருவைப் புகழ்கிறார். ஜோதியைச் சுற்றித் தான் விட்டில்கள் வரும். நேருவோ ஆசிய ஜோதி முட்டாள்களுக்கு மத்தியில் உலவியவர் என்பதை இவ்வாறு உரைக்கிறார்.

**தேசியச் சிந்தனை:-**

கவிஞர் தம் மனதில் பதிந்த தேசியத் தலைவர்களைப் பாடினார். ஆனால் இந்திய தேசத்தின் தற்போதைய நிலை அவருக்கு மகிழ்ச்சியைத் தரவில்லை. இந்திய தேசம் சுதந்திரம் பெற்ற அணுகு முறையை, "தாயைப் பெற்ற நாள்"[170] எனும் தலைப்பில், அது ஒரு முரண்பட்ட குருஷேத்திரம். அங்கே அர்ச்சுனர்கள் ஆயதம் ஏந்தத் துடித்தார்கள். ஆனால் கண்ணனோ ஆயுதங்களை நிராகரித்தான். அவன் புல்லாங்குழலே எதிரிகளைப் பணிய வைத்துவிட்டது என்று குறிப்பிடுகிறார். புல்லாங்குழல் காந்தியின் அகிம்சை முறையைக் குறிப்பதாகக் கருதலாம். காந்தியடிகளின் தலைமையில் பெற்ற சுதந்திரத்தை முரண் நோக்கில் உரைக்கிறார்.

சுதந்திரத்திற்குப் பிறகு தேசியத்தின் வளர்ச்சி நிலை முறையாக இல்லை. இதனை,

"பிள்ளைகள் கூடிப்

பிரசவித்த தாய் நீ

என்பதாலா உனக்கு

மார்பகம் இல்லாது

போயிற்று?"[171]

என்று சுதந்திர தேவதையின் அவல நிலையினைக் குறிப்பிடுகிறார். இந்திய தேசம் மக்களை ஆதரிப்பதற்குப் பதிலாகச் சுரண்டுகிற நிலைதான் தற்போது எங்கும் காணப்படுகிறது. இதனைக் குறிக்கும் வகையில் இந்தியக் குடிமகன் தன் உடைமைகளையெல்லாம் ஜனநாயக தேவிக்கு உயில் எழுதித் தருவதாக "இந்தியனின் உயில்"[172] என்ற கவிதையை எழுதியுள்ளார். பொருள்களை மட்டும் அல்லாமல் உழைப்பை மட்டுமல்லாமல் உயிரையுமே அவன் கொடுத்து விடுகிற நிலை உயிலில் சுட்டப்பெறுகிறது. இனிமேல் அவனிடம் சுரண்டுவதற்கென்று எதுவுமில்லை என்கிற பொருள் வெளிப்படுவதாய் அக்கவிதை உள்ளது.

சுரண்டுகிறவர்கள் யார்? அரசின் அதிகாரத்தில் உள்ளவர்கள்தான். அவர்களுக்கு அந்த அதிகாரத்தைக் கொடுத்தது யார்? என்ற வினாவை எழுப்பிக் கவிஞர் மக்களைச் சிந்திக்க வைக்கிறார்.

"நீங்கள் அல்லவா

திருடர்களிடம்

செங்கோலைத் தந்தீர்கள்?

இதோ, அது

கன்னக்கோல் ஆகிவிட்டதே"[173]

என்று பாடுகிறார். மக்களைப் பாதுகாப்பதற்காக உருவாக்கப் பெறுகிற அரசு அதிகாரமும், தலைவர்கள் செயல்பாடும் வேலி பயிரை மேய்ந்த கதையாக இருப்பதைச் "சோளக்கொல்லைப் பொம்மை"[174] என்ற கவிதையில் பாடுகிறார்.

2. **இக்கால அரசியல்:-**

கவிஞர் தான் வாழ்கிற அரசியல் சூழலைக் கவிதைகளில் இடம்பெறச் செய்கிறார். அவ்வகையில் அப்துல்ரகுமான் இக்கால அரசியலின் போக்கு களைச் சரியாக மதிப்பிட்டுள்ளார்.

**ஈநாயகம்:-**

"ஈநாயகம்"[175] என்று ஜனநாயகத்தைக் குறிப்பிடுகிறார். ஈநாயகம் செயல்படுகிற ஈநாட்டில் ஈக்கள் பெரும்பான்மையாக உள்ளன. ஈக்கள் என்பது அரசியல்வாதிகளைக் குறிப்பதாகும். ஈக்களுக்குக் கழிவுபிடிக்கும் என்கிற நிலையில் கழிவு என்பதைச் சீரழிந்த அரசியல் என்கிறார்.

எந்தக் கழிவில் நாற்றம் அதிகமோ? அந்தக் கழிவில் ஈக்கள் அதிகமாக இருக்கும் என்று கவிஞர் இழித்துரைக்கிறார். ஈக்களில் மூன்று வகைகள் உண்டு.

எந்தக் கழிவில் மவுசு அதிகமாக இருக்கும் என்பதைத் தெரிந்து கொண்ட ஈ புத்திசாலி ஈ ஆகும். எங்கே கூட்டம் இருக்கிறதோ, அங்கே போவது மந்த புத்தி ஈ ஆகும். ஏனெனில் மந்த புத்தி ஈக்குச் சொந்தமாகச் சிந்திக்கத் தெரியாது. இந்தக் கழிவுக்கும் அந்தக் கழிவுக்கும் மாறி மாறிப் போகும் ஈ சலன புத்தி ஈ ஆகும்.

ஈ நாட்டில் பத்திரிக்கைகள் உண்டு. தேசிய ஏடுகள் தேசியக் கழிவை ஆதரிக்கும் என்று கூறுகிறார். நல்லவர்கள் சிறுபான்மையாகவும், தீயவர்கள் பெரும்பான்மையாகவும் உள்ளனர். தேனீக்களையும் ஈக்களே ஆளும் என்று கவிச்சுவையுடன் அங்கதம் செய்கிறார்.

**மேடையும் சமாதியும்:-**

ஈநாட்டு அரசியல் பெரும்பான்மையால் தீர்மானிக்கப் பெறுவது முற்சுட்டிய கவிதையில் கூறப் பெற்றது. "பாலைவனத்துப் பிரமிடுகள்" என்ற கவிதையில் அரசியலில் கேலிக்கூத்தான நிலையை எள்ளி நகைத்து உரைக்கிறார்.

அரசியல் தலைவர்கள் இறக்கிறார்கள். ஆனால், நாற்காலிகள் காலியாக இருப்பதில்லை என்கிறார். தலைவர்கள் இறந்தால் தெய்வம் ஆகிறார்கள் பூசாரிகளும் (தொண்டர்கள்) உருவாகிவிடுகிறார்கள்.

"ஒவ்வொரு சமாதியும்

மேடையாகி விடுகிறது

ஒவ்வொரு மேடையும்

சமாதியாகி விடுகிறது"[176]

என்று கவிஞர் இடித்துரைக்கிறார். ஜனநாயப் பாலைவனத்தில் இருக்கிற பயணிகளாகிய மக்களுக்கு "சமாதி வழிபாடுதான்" கவர்ச்சியாக இருக்கிறது என்று கூறித் தற்கால அரசியல் போக்கைச் சாடுகிறார். பிணங்களைக் காட்டி அரசியல் நடத்துகிற நிலையை "வாய்க்கரிசி"[177] என்ற கவிதையில் குறிப்பிடுகிறார். வாக்குப் பெட்டியே பிணங்கள் என்றும் வாய்க்கரிசி வாக்குகள் என்றும் குறிப்பிடுகிறார்.

**பழைய பாரதத்துச் சகுனியும் புதிய பாரதத்தின் அரசியல்வாதியும்:-**

பழைய மகாபாரதக் கதையில் வரும் சகுனி இக்கால அரசியல் வாதிகளைப் பார்த்துப் பேசுவதாக "புதியபாரதம்" என்ற தலைப்பில் அப்துல் ரகுமான் கவிதையாத்துள்ளார். அதில் இக்கால அரசியல்வாதிகளின் தீத்திறன் சுட்டப் பெறுகிறது.

"நினைத்ததை முடிக்க எனக்குத் தெரிந்த கலையெல்லாம்

சூதாட்டம் ஒன்றுதான். ஆனால் நீங்களோ பல்கலைக்

கழகமாகவே இருக்கிறீர்கள்"[178]

என்று சகுனி பேசுகிற இடம் குறிக்கத் தக்கதாகும். ஏனென்றால், சகுனி சூதில் மட்டும்தான் வல்லவன். ஆனால் அரசியுல்வாதிகள் வாதிலும் வல்லவர்கள். அரசியலில் சூதாட்டத்தை அறிமுகப்படுத்தியவன் சகுனி, ஆனால் இக்கால அரசியல் வாதிகள் அரசியலையே சூதாட்டமாக ஆக்கிவிட்டார்கள். தருமனைத்தான் சகுனி வென்றான். இக்கால அரசியல் வாதிகளோ தருமத்தையே வென்றுவிட்டார்கள்.

இக்கால அரசியலில் திரைப்பட ஆதிக்கமிருக்கிறது. அக்காலத்தில் அது இருந்திருந்தால் சகுனி பகடைக்காயை உருட்டியிருக்க மாட்டான் என்கிறார். இவ்வாறு புதிய பாரதத்தில் சகுனியையே மிஞ்சும் வண்ணம் அரசியல்வாதிகள் திகழ்வதாகக் கூறுகிற இழிநிலை தற்கால அரசியல் வாதிகளின் நிலையாகும்.

"Be Indian Buy Indian" என்கிற போலிப் பிரகடனத்தைச் சொல்லி அரசியல்வாதிகள் மக்களை ஏமாற்றுகிறார்கள் என்பது அப்துல்ரகுமானின் கணிப்பு. இந்தியராக இருங்கள் என்று சொன்னாலே ஏமாளிகளாக இருங்கள் என்பது பொருள் என்கிறார் கவிஞர்.

"நாங்கள் ஆடும் சதுரங்கத்திற்குக்
காய்களாக இருங்கள்
நாங்கள் அருந்தும் மதுரசத்திற்குத்
திராட்சைகளாக இருங்கள்
நாங்கள் அணியும் ஆடைகளுக்குப்
பட்டுப் புழுக்களாக இருங்கள்
எங்கள் வெளிச்சத்திற்காக
எரிந்து கொண்டே இருங்கள்"[179]

இவ்வாறு இந்தியமக்களாக இருக்கச் சொல்லிவிட்டு, இருக்கச் சொல்லுகிறவர்கள் கொள்கைகளைக் காற்றில் பறக்க விடுகிற நிலையை இடித்துரைக்கிறார். "முகவரிச் சீட்டு" என்ற கவிதையில் அரசு மக்களிடம் லாட்டரிச் சீட்டு விற்கும் பரிதாபத்தைக் கண்டு குமுறுகிறார்.

"நம் நாட்டின் இப்போதைய முகவரிச் சீட்டு
ஒரே நாளில் லட்சாதிபதிகளை உருவாக்கும்
மந்திரச் சீட்டு"[180]

என்ற வரிகளின் வழி லாட்டரிகளை உழைப்பில்லா மந்திரச் சீட்டு என்று ஏளனப்படுத்துவதைக் காணலாம்.

இக்கால அரசியல்வாதிகள் உப்பு யாத்திரையை இழித்துரைப்பதாக "உப்பில்லாப் பண்டம்" என்ற கவிதை அமைகிறது. இக்கால அரசியல் வாதிகளின் யாத்திரையில் பாதை இல்லை. பாதங்கள் இல்லை, மகாத்மாவும் இல்லை என்று குறிப்பிட்டு,

"தரையில் இருந்ததைச்
சுருட்டிக் கொண்டீர்கள்
இப்போது
கடலிலும் கைவைக்கப் போகிறீர்களா?"[181]

என்ற வினாவை எழுப்பி விழிக்கவைக்கிறார்.

**அரசியலில் தொண்டர்களும் வாரிசுகளும்:-**

ஈநாட்டு அரசியலில் தேனீக்களுக்கு இடமில்லை. தலைவர்களின் இறப்புச் சமாதிகள் அரசியலில் போலி வழிபாடாகின்றன. புதிய பாரதத்து அரசியல்வாதிகள் பழைய பாரதத்துச் சகுனியைத் தோற்கடித்துவிட்டார்கள். திரைப்படக் கவர்ச்சியும் கொள்கையில்லாக் குரல்களும் இந்திய மக்களை ஏமாற்றுகின்றன. இத்தகு அரசியல் நடத்தும் அரசியல்வாதிகளுக்கேற்ற தொண்டர்கள் எப்படி இருப்பார்கள்?

"வழி நடப்பவர்களுக்கு
கால்கள் மட்டுமே உண்டு
கண்கள் இல்லை.
எனவே அவர்கள்
வழி நடத்திச் செல்லும்
நாய்களுக்குப் பின்னால்
நடந்து போகிறார்கள்"[182]

என்று தொண்டர்களைக் குறிப்பிடுகிறார். நாய்கள் என்பது அரசியல் தலைவர்கள் ஆவார்கள். இவர் குறிப்பிடும் நாய் நன்றியுள்ள நாயில்லை. பெட்டை நாய்களுக்குப் பின்னால் போகிற நாய்கள் என்று சாடுகிறார். பெட்டை நாய்கள் திரைப்படக் கவர்ச்சியோடு தொடர்புடையது. பெட்டை நாய்கள் எலும்புகளை (பணம்) நோக்கிப் போகிறவர்கள். தொண்டர்கள் சுயசிந்தனையில்லாமல் தலைவர்களைப் பின்பற்றிச் செல்லுவதை,

"குழலூதியின் பின்னால்
குழந்தைகள்"[183]

என்று கூறுகிறார்.

அரசியலில் அதிகாரத்தில் இருப்பவர்களை மக்கள் எதிர்க்கிறார்கள். அதிகாரத்தால் மக்களை நசுக்காதீர்கள் என்று குரல் கொடுக்கிறார்கள். குரல் கொடுத்தவர்கள் சந்தர்ப்பத்தில் அதிகாரத்திற்கு வரும்போது பழைய

அதிகார வர்க்கத்தாரின் செயல்பாடுகளையே பின்பற்றுகிறார்கள். இப்படியாக அரசியல் அதிகாரங்களுக்கு "வாரிசுகள்" உருவாகின்றன.

சிங்கம் ஒன்று செத்தது. அதன் சவத்தைச் சுற்றிச் சுண்டெலிகளின் கும்மாளம். ஒரு சுண்டெலி அதன் கறுப்பு இரத்தத்தைச் சுவைத்து விட்டது.

"உடனே
தடித்துப் பரிணமித்துப்
பிடரி மயிர் பீறிடக்
காடெலாம் அதிர
கர்ஜனை செய்தது"[184]

இவ்வாறு சிங்கம், அதன் இரத்தம் குடிக்கும் சுண்டெலி என்று அதிகார வாதம் தொடரத்தான் செய்கின்றது என்பதைக் குறிப்புப் பொருளால் கவிஞர் வெளிப்படுத்துகிறார்.

**கட்சி, கொடி, தேர்தல்:-**

அரசியல் செயல்பாட்டின் உட்கருவிகளாக இருப்பவை கட்சி, கொடி, தேர்தல் போன்றவைகளாகும். அரசியல் கட்சிகள் நாட்டின் முன்னேற்றத் திற்காகத் தோன்றுகின்றன. ஆனால் நல்ல கட்சிகளின் செயல்பாட்டில் மக்கள் மனம் கொள்ள மறுக்கிறார்கள். திரைப்படக் கவர்ச்சி, வாரிசு அரசியல், பதவி விரும்பும் போலி அரசியல் என்று அவைகளின் பகட்டிலும் பேச்சிலும் மக்கள் மயங்குகிறார்கள். மயங்குகிறவர்கள் பெரும்பான்மையாளராக இருப்பதால் நல்ல கட்சிகள் ஆட்சி அமைக்கும் சூழலை இழந்துவிடுவதைக் கவலையுடன் "நட்சத்திர பலன்"[185] எனும் தலைப்பில், தேர்தலில் நட்சத்திரங்களும் சூரியனும் போட்டியிட்டன. பெரும்பான்மை பலத்தால் நட்சத்திரங்கள் வென்றன சூரியனுக்கு டெபாசிட் பறிபோனது என்கிறார்.

நல்ல கட்சிகள் "டெபாசிட்" இழக்கிற நிலை நடைமுறையில் இருப்பதைக் குறிப்பாகச் சுட்டிக்காட்டுகிறார். நட்சத்திர அரசாங்கம் வெளிச்சத்தைப் பற்றிப் பேசக் கூடாது என்று சூரியனுக்குத் தடை போட்டது. எனவே இருள் அரசாங்கக் கொள்கையாயிற்று. தூக்கம் தேசியத் தொழிலாக அறிவிக்கப்பெற்றது. இருள் என்பது சத்தியத்திற்கும

உண்மைக்கும் புறம்பான போலிக்கொள்கைகளாகும். தூக்கம் என்பது ஆரோக்கியமில்லாத செயல் திறனற்ற நிலையைக் குறிக்கிறது. இந்நிலைதான் இன்றைய அரசியலில் கட்சிகளின் நிலை என்று கவிஞர் மதிப்பிடுகிறார்.

கட்சிகள் சிதறுண்டு புதுப்புது இயக்கங்களாகப் பெருகுகிற நிலையைக் கவிஞர் எள்ளி நகையாடுகிறார். "அலாவுதீன் விளக்கு"[186] என்ற தலைப்பில் சந்தையில் கூவி விற்பதுபோல இயக்கம் வேணுமா இயக்கம் தினுசு தினுசாகக் கிடைக்கும் எதனை எடுத்தாலும் எண்பது பைசா தான் என்று குறிப்பிடுகிறார்.

இயக்கங்களின் பெருக்கத்திற்கேற்றவாறு கொடிகளும் பெருகுகின்றன என்பதை "கொடிமரம்"[187] என்னும் தலைப்பில் சுட்டுகிறார். நச்சுத்தாவரமான பார்த்தீனியம் பல்கிப் பெருகுவதைப் போலக் கொடிகளும் பெருகுகின்றன. வயல்கள், வகுப்புகள், ஆலயங்கள், சாலைகள், சுடுகாடுகள் எங்கும் அவை பெருகி வளர்கின்றன.

நல்ல மலர் மரங்கள் பிடுங்கப் பெற்று இந்த மலட்டு மரங்களான கொடிமரங்கள் வளர்கின்றன. இந்தக் கொடிமரங்களில் பூக்கள் இல்லை. இருந்தாலும் மக்கள் தேன் நாடி மொய்க்கும் வண்டுகளாக வருகின்றனர். கொடி மரங்களில் கிளைகள் இல்லை. இருந்தும் கூடுகட்ட வருகிறார்கள்.

இயற்கையாகவே அசைந்து வரும் காற்றை, கொடி தான் அசைப்பதாக நினைத்துப் பெருங்கர்வம் கொள்கிறதாம். இந்த சமுதாயத்தில் கம்பங்களுக்கு ஆடை மனிதர்களுக்கு நிர்வாணம் என்று வேதனையை வெளிப்படுத்துகிறார். மனிதர்களின் மானத்தை மறைக்க முடியாத நிலையில் கட்சிகள் இருப்பதை வெளிப்படுத்துகிறார்.

கட்சிகளும் இயக்கங்களும் கூடி ஐந்தாண்டுக்கு ஒரு முறை தேர்தலைச் சந்திக்கின்றன.

> "புறத்திணை சுயம்வர மண்டபத்தில்
> போலி நளன்களின் கூட்டம்
> கையில் மாலையுடன்
> குருட்டுத் தமயந்தி"[188]

என்று பாடுகிறார். சமுதாய அக்கறையில்லாத போலி வேடதாரிகள் நளன்களாக வருகின்றனர். குருட்டுத் தமயந்தி என்பது அடையாளம் காணத் தெரியாத மக்கள் ஆவார்கள். இதுதான் இன்றைய தேர்தல் முறை. இத்தேர்தல் முறையினால்,

"எண்ணிக்கையே தர்மமாகிய
குருஷேத்திரத்தில்
வெற்றிகளெல்லாம்
கௌரவர்களுக்கே
போய்ச் சேர்கின்றன"[189]

என வருந்துகிறார்.

**அதிகாரமும் ஊழலும்:-**

பதவிக்காக அரசியல்வாதிகள் படும்பாட்டை "பதவி" என்ற கவிதைத் தலைப்பில் விரிவாகக் குறிப்பிடுகிறார்.

பதவி வெறி மனிதர்களுக்கு இருப்பதை, செத்தாலும் சிவலோக பதவி அடைந்தார் என்று கூறுவதை எடுத்துக்காட்டுகிறார். பதவிக்கு அலைவது பரத்தமை போன்றது. பதவி, தாலியைப் போலத் தானாக வரவேண்டும். பதவியில் தகுதி, உழைப்பு, பொருத்தம் இயல்பாக இருக்க வேண்டும். ஆனால்,

"வித்தெடுத்துத் தூவி
வியர்க்காமல் உமிச்சிப்பி
முத்தெடுக்க முந்தும்
மூடர்க்கு உரிமையுண்டா?"[190]

என்ற வினாவின் வழி உழைப்பில்லாமல் பதவிக்கு வருவதை வெறுக்கிறார். "சகதிக்கு எதற்காகத் தங்கமணிக்கிண்ணம்" என்ற வினாவை எழுப்பித் தகுதியில்லாதோர்க்குப் பதவி வருவதைச் சாடுகிறார்

விலங்கினத்திலிருந்து பரிணாமம் பெற்ற மனிதன் நாற்காலி செய்தான். நாற்காலியை அடைவதற்காக மறுபடியும் விலங்கினப் பண்புகளைப் பெறலானான். இக்கருத்தை உள்ளடக்கி,

"நாற்காலியாய் இருந்தவன்
இருகாலி ஆனான்
இருகாலி ஆனதால்
நாற்காலி செய்தான்
நாற்காலிக்காக
நாற்காலி ஆனான்"[191]

என்று நாற்காலியின் கதையைப் பாடுகிறார் கவிஞர். கட்சியினர் ஆளுங்கட்சியினராக வந்து அதிகார நிலைக்கு வந்து விட்டால் மக்களைப் பல வழிகளில் அலட்சியப் படுத்துகிற நிலை கவிஞரின் மனதில் பதிந்திருக்கிறது.

குடிகாரர்களைக் கைது செய்கிறார்கள். உடல்களைக் கசக்கிப் பிழிந்து வியர்வையைக் குடிக்கும் குடிகாரர்களைத் தண்டிப்பதில்லை என்று கருத்துத்தெரிவிக்கிறார். இங்கு மக்களின் நிலையும், சுரண்டும் அதிகாரிகளின் போக்கும் சுட்டப் பெறுவதைக் காணலாம். மதுக்குடிப்பவர்களைத் தண்டிக்கிற சட்டம் மதுவைக் காய்ச்சி விற்கும் வியாபாரிகளைத் தண்டிப்பதில்லை. இவ்வாறு சட்டத்தின் சப்பாணித்தனத்தையும் வலிமையுள்ளவர்களும் ஏமாற்றுக்காரர்களும் செய்யும் போலித்தனத்தையும் குறிப்பிடுகிறார்.

அதிகாரம் இருப்பது என்பது மக்களுக்கும், நாட்டிற்கும் நன்மை செய்தவற்குத்தான். நல்லதைக் கூடத் தீமைகளாக மாற்றிச் சுயலாபம் தேடுகிற அதிகாரப் போக்கைக் கீழ்வரும் கவிதைவரிகளில் காணலாம்.

"எங்களிடம்
தீயணைப்பு நிலையம்
இருக்கிறது
நாம் அணைப்பதற்குத்
தீ வேண்டும்
எனவே
வீடுகளுக்குப் பெட்ரோல் ஊற்றி
நாம் தீ வைக்கிறோம்

. . . . . .

. . . . . .

எங்களிடம்

வெள்ளைக் கொடி

இருக்கிறது

வெள்ளைக் கொடி அசைக்கப்

போர்க்களம் வேண்டும்

எனவே

நாம் சண்டை மூட்டுகிறோம்"[192]

அரசியலில் தீர்க்க முடியாமல் இயங்கும் நச்சுக் கிருமியான ஊழலைப் படம் பிடித்துக் காட்டுகிறார். ஊழலின் அளவு பதவிக்கேற்ப மாறுபடுவதாகக் கருதுகிறார். "போ.ஃபர்ஸ்"[193] பீரங்கி ஊழலை மட்டும் மையப்படுத்தி ஒரு கவிதை உள்ளது. நாட்டின் பாதுகாப்பிற்காக வாங்கப்பெற்ற பீரங்கி வியாபாரத்தில் அரசியல் தலைவர்கள் "கமிஷன்" என்கிற கையூட்டுப் பெற்றுவிட்டார்கள்.

விளையாட்டுத் துறையையும் ஊழல் விட்டு வைக்கவில்லை என்பதை "சவால்" என்ற கவிதையில்,

"திருவிளையாடலுக் கிடமில்லை நம்

திறமைக்கு வாய்ப்பில்லை - உங்கள்

ஒரு விளையாட்டும் சரியில்லை, இதற்கு

ஒலிம்பிக் பந்தயமா?"[194]

என்று அங்கத நயத்தோடு ஊழலை எடுத்துரைக்கிறார். எந்தச் செயலுக்கும் யோசனை விவாதம் நடத்திப் பயன்களை மக்கள் மத்தியில் நடமாடவிடாத முட அரசியலை மையமாக்கி "சிவப்பு நாடா"[195] "அது வரை"[196] என்ற கவிதைத் தலைப்புகளில் குறிப்பிடுகிறார்.

இவ்வாறு அரசியல் நிலையினையும் அரசியலில் உள்ள தேர்தல், கட்சிகள், கொடி இவற்றின் செயல்பாடுகளையும், அவைகளின் செயல் பாட்டினால் ஆட்சியின் அதிகாரத்திற்கு வந்தவர்களின் இயல்புகளையும் கருத்தில் கொண்டு அப்துல் ரகுமான் பாடிய கவிதைகள் குறிப்பிடத்

தக்கவை. இப்பாடல்கள் வழியாக மக்கள் மத்தியில் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த முயல்கிறார். மக்களின் மனமாற்றம் எப்போது நிகழும்? காலம்தான் சரியான பதிலைச் சொல்லுதல் வேண்டும்.

**3. பொருளாதாரம்:-**

மனித வாழ்வியலுடன் பொருளாதாரம் தொடர்பு கொண்டுள்ளது. ஒரு சமுதாயத்தின் ஏற்றத்திற்கும் தாழ்விற்கும் பொருளாதார நிலை ஆதாரக் காரணிகளுள் ஒன்றாக விளங்குகிறது.

நாட்டின் பொருளாதாரத்திற்கு உயிரோட்டமாகத் திகழ்வது நிதி., அந்நிதியைப் பற்றி,

"எங்கள்
வழிப்பயண விரைவுக்கு
வாகனத்தின் சக்கரமாய்
நாணயத்தைச் செய்தோம்
அதுவோ
வீதிவிடங்கன் தேர்ச்
சக்கரமாய் உருள்கிறது"[197]

மக்களின் வசதிக்கும் நலத்திற்கும் உருவாக்கப்பட்ட காசு கன்றை அரைத்த தேர்ச்சக்கரமாய் உருள்கின்றது என்கிறார்.

பொருளாதாரத்தின் இரு முனைகளாகத் திகழ்பவை வறுமை நிலையும் செல்வநிலையும் ஆகும். வறுமை நிலையில் மக்கள் வாழ்வதற்குப் பல காரணங்கள் உள்ளன. அரசும், அதிகார வர்க்கமும் சுரண்டி வாழும் செல்வர்களுக்கு நடுவில் உழைப்பை முதலாகக் கொண்டு வாழ்பவர்கள் வறுமையில் உழல வேண்டியிருக்கிறது. இந்நிலையைச் சமுதாயக் கடமையுணர்வு உடைய கவிஞர்கள் எப்போதும் வரவேற்பதில்லை. கவிஞர் அப்துல் ரகுமானும் சமுதாயக் கடமையுணர்வுடன் வறுமைநிலை குறித்துப் பல பாடல்களில் சிந்தித்துள்ளார்.

**வறுமைக் கோடும் வறுமை நிலைகளும்:-**

மனித இனத்தை இரக்கப்பட வைக்கும் "சமுதாய வறுமை என்பது சமுதாயத்தில் உள்ள மக்கள் அனைவரையும் பாதிக்கும் நிலையான

தேவைக்குறைவு எனப்படும். பொருள் பங்கீட்டில் உள்ள நேர்மையின்மை பொருள்களின் கிடைப்பருமையில் உள்ள நேர்மையின்மை ஆகியவை சமுதாய வறுமைக்குரிய காரணங்களாகக் கருதப்பட்டுள்ளன"[198] என்று கூறுவர். வறுமைக்குப் பொருள் பங்கீட்டில் உள்ள நேர்மையின்மை காரணமாகக் கூறப்பெறுவதை இங்குக் கருதலாம்.

"வறுமைக்கோடு" என்னும் தலைப்பில் கவிஞர் நாட்டின் வறுமை நிலையை விமர்சித்துப் பாடுகிறார். "நாற்பது ஆண்டு காலமாகக் கோலம் போட முயன்று முயன்று முடிந்தது இந்தக் கோடுதான். கூரை இல்லாதவர்கள் இதன் கீழ் வாழலாம். ஒருமைப்பாடு ஓங்குக என்பதற்கு அடிக்கோடாய்ப் போடலாம். இந்த வறுமைக்கோடு இருபத்தோறாம் நூற்றாண்டுக்குச் செல்லும் சாலையில் நடுக்கோடாய் வைக்கலாம். நாளைய நவபாரதத்தின் எல்லைக் கோடாய் எழுதிடலாம். நவீன ஓவியமாய் இந்திய விழாவில் கண்காட்சிக்கு வைக்கலாம்"[199] என்று வறுமைக்கோடு பற்றிப் பலவாறாக எள்ளல் உத்தியுடன் கவிஞர் பாடுகிறார்.

"வறுமைக்கோடு"[200] பற்றிப் பேசுகிறார்கள் வறுமையை ஒழிப்பதில்லை. செயல்முறை நடைபாட்டில் உள்ள அவலங்களைக் கவிஞர் மேற்குறித்தவாறு பாடுகிறார். இஃது நாட்டில் உள்ள பொதுவான நிலைமையாகும்.

பல்வேறு சூழல்களில் வறுமை ஆட்சி நடத்துவதைத் தம் கவிதையில் பாடுகிறார். வறுமையில் வாடும் பல்வேறு தொழிலாளிகளின் நிலை குறித்துத் தமக்கே உரிய பார்வையில் கவிதை பாடுகிறார்.

பிணம் புதைக்கும் தொழிலாளிகள், நகரங்களின் நடைபாதை வாசிகள், குழந்தைத் தொழிலாளி ஆகியோர்களின் நிலையை எடுத்துக்காட்டு விளக்கங்களின் வழிக்காணலாம்.

"முற்றுப்புள்ளியில் குடியேறிய அர்த்தம் போல் மண்ணில் பிணம் புதைக்கும் தொழிலாளர்களின் பிழைப்பு என்று கூறுகிறார். முற்றுப்புள்ளி என்பது இறுதிக் காலம். அந்தக் காலத்தில்தான் அம்மனிதர்களின் பிழைப்பே நடக்கிறது என்பதை மரணம் விட்டெறியும் சுவாசங்களை எச்சில்

பொறுக்க அதன் குப்பைத் தொட்டியில் ஆவலோடு காத்திருக்கும் அந்த மயானவாசிகளுக்காக"[201] மிகவும் இரங்குகிறார் கவிஞர்.

வறுமையில் நகர நடைபாதையில் வினாக்குறியாகச் சுருண்டு படுக்கிறவர்களை,

"இரவிலும் பகலிலும்
வாழ்க்கைப் பக்கத்தின்
அடியில் கிடக்கும் இவர்கள்
பாட பேதங்கள்!"[202]

என்று பாடுகிறார். புத்தகங்களின் அடியில் போடப்பெறும் பாட பேதங்களைப் போல வறுமையினால் அவர்கள் தள்ளப்பட்டிருப்பதைப் பாடற்கருத்துக்கள் கூறுகின்றன. வறுமை வயப்பட்ட நிலையில் கண்ணீர் வழியும் போது எப்படி வேலை செய்யமுடியும் என்பதைக் "கிழிசல்"[203] என்ற கவிதையில் பாடுகிறார்.

பொதுவாகக் குழந்தைத்தொழிலாளர்கள் உருவாக நாட்டின் பொருளாதார நலிவே காரணமாகும். குழந்தைத் தொழிலாளர்களின் வேதனை நிலையை மனம் உருக எடுத்துரைக்கிறார்.

"பூக்களை ஏந்த வேண்டிய இந்த மெல்லிய காம்புகளில் வாழ்க்கையின் பாரத்தை ஏற்றி வைத்தது யார்? வெளிச்சத்தைக் கற்கும் பருவத்தில் யாருடைய வெளிச்சத்திற்காகவோ இவர்கள் தீக்குச்சிகளாகி விட்டார்களே! போலித்தனம் புரியும் அரசியல்வாதிகளே! எதிர்காலத்தின் ஒளி விளக்கு என்று பேசுகிறீர்கள். இவர்கள் நிகழ்காலமே கரிந்து போய்விட்டதைக் காணவில்லையா? குழந்தை தினத்தைக் கொண்டாடுகிறவர்கள் குழந்தைகளை எப்போது கொண்டாடப் போகிறீர்கள்?"[204] என்ற நிலையில் வினாக்களை அடுக்கிக் குழந்தைத் தொழிலாளர்கள் நிலை குறித்துப் பாடுகிறார்.

தொழிலாளிகளின் ஒட்டுமொத்த உழைப்புகளை உறிஞ்சும் சக்திகள் முதலாளிகள் என்பது கவிஞரின் சிந்தனையாகும். இவர் கவனமெல்லாம் தொழிலாளர்களின் நலம்தான் எனக் கூறலாம்.

"மாலையெனும் தொழிலாளி
வடித்துவிட்ட வியர்வை நீர்
காலைஎனும் முதலாளி
கணக்கெடுக்கும் முத்துக்கள்"[205]

என்று குறிப்பிடுவார். "படைப்பின் உச்சியில் மானுடம் மகுடம். அதில் வியர்வைத் துளிகள் கோகினூர் வைரங்களாகும். உழைப்பின் வேர்வையால் இரத்தம் உறிஞ்சும் சில "ட்ராகுலாக்கள்" உயிர்ப்பிக்கப்படுகின்றன என்று சாடுகிறார். ட்ராகுலாக்கள்"[206] என முதலாளி வர்க்கத்தினைக் குறிக்கிறார்.

"யாருக்கு"[207] என்ற கவிதையிலும் உழைப்பைச் சுரண்டும் முதலாளி களை மறைமுகமாக எதிர்த்துரைக்கிறார்.

வணிகர்களாக விளங்கும் முதலாளிகளைப் பற்றி "மகரந்தச் சேர்க்கைக்கு உதவும் வண்ணத்துப் பூச்சிகளே! தேனை உறிஞ்சிக்கொண்டு பூக்களுக்குப் புழுதியைத் தருகிறீர்களே! என்று கூறிவிட்டு விற்பனை செய்வதுதான் வணிக முதலாளிகளின் வேலை; இருந்தாலும் மன சாட்சிகளை விற்காதீர்கள்"[208] என்று கூறுகிறார்.

**உழைப்பை மதித்தல்:-**

பொருளாதாரத்திற்கு ஆதாரமாக இருப்பவர்கள் உழைப்பாளர்கள். இவர்களின் உழைப்பைச் சுரண்டாமல் மதிக்க வேண்டும். அது பொருளாதார முன்னேற்றத்திற்கு வழிவகுக்கும். உழைப்பவரை மதிக்க வேண்டும் என்ற நிலையில்,

"உழைப்பவர்க்கே ஆள்கின்ற
உரிமையுண்டு என்பதொரு
உண்மையை உலகமெல்லாம்
உணரட்டும் என்றோ
உடலிலே எத்தனையோ
உறுப்பிருக்க - இயற்கை
நமது விரல்களுக்கே
நக மகுடம் சூட்டியது?"[209]

என்று பாடுகிறார். இக்கவிதையில் எல்லோரும் சேர்ந்துழைப்போம், ஏழ்மைக்கு விடை கொடுப்போம் என்ற சிந்தனையை முன்வைக்கிறார். "உழவர்களைப் பாடுவோம்"[210] என்ற தலைப்பிலும் விவசாய உழைப்பை மதிக்க வேண்டும் என வற்புறுத்துகிறார். உழைப்பைப் போற்றாமல் போலியான அறிவிப்புகளால் நாட்டின் முன்னேற்றத்திற்கு வழியில்லை என்கிறார்.

**4. பெண்மை:-**

சமுதாயத்தில் பெண்களுக்குக் குறிப்பிடத்தகுந்த இடமுண்டு. சமூகத்தின் மிக முக்கிய உறுப்பினர்களுள் பெண்கள் தலையானவர்கள். எனினும் பெண்கள் பல காரணிகளால் பின்தள்ளப்பெற்றே வருகிற நிலை தொன்று தொட்டு இருந்து வருவதைக் காணலாம்.

"பெண்கள் தங்கள் உரிமைகளைக் கேட்டுப் பெற வேண்டும் என்று காலங் காலமாய்க் கவிஞர்களும், அறிஞர்களும் போராடித்தான் இருக்கின்றனர். கவிமணி தேசிய விநாயகம்பிள்ளை, தேசியக் கவி பாரதியார், திரு.வி.க. போன்றோரை இந்த வரிசையில் குறிப்பிடலாம். அவர்களின் அமைதி முறை பாவேந்தருக்கு ஒத்து வரவில்லை. அதனால்தான் புரட்சி நெறியை மேற்கொண்டு உரத்துப் பாடுகின்றார். பெண்கள் நிலை கண்டு கொதிப்படைகிறார்."[211] இக்கவிஞர்களின் வரிசையில் அப்துல் ரகுமானுக்கும் இடமுண்டு.

**ஆணாதிக்கமும் பெண்கள் நிலையும்:-**

பெண் அடுப்பாக, விளக்காக, கணப்பாக எரிகிறாள். எரிகின்ற பெண்மை இருளுக்குள் கிடக்கிறது. சாம்பலிலிருந்து எரியும் விந்தையான எரிபொருளாகப் பெண் இருக்கிறாள். பெண் ஆணுக்காக, அவனால் அவனோடு எரிகிறாள் என்று பெண்ணின் அவல நிலைகளை "சதி"[212] என்ற தலைப்பில் அப்துல் ரகுமான் விரித்துரைக்கிறார். எரிந்து வீழ்ந்து காட்ட வேண்டும் என்ற எழுதப்பெறாத சமூகச் சட்டத்தைத் தகர்க்க விரும்புகிறார்.

"இந்திரனாகி

உன்னைக் கற்பழிப்பவர்களும் நாம்தாம்

கௌதமனாகி

உன்னைச் சபிப்பவர்களும் நாம்தாம்"[213]

என்ற வரிகளில் ஆணாதிக்க நிலையினால் பெண்கள் படும்பாடு குறிக்கப் பெறுவதைக் காணலாம். "கண்ணீர் பெண்ணுக்கு முன்னால் பிறந்து அவளுக்காகவே காத்திருக்கிறது. அவள் கண்ணீரில் பிறக்கிறாள். கண்ணீரிலேயே வாழ்கிறாள். அவள் ஒரு கண்ணீர் மீன்"[214] என்று குறிக்கிறார். கண்ணீர்தான் வாழ்க்கை என்கிற நிலை மனிதத்தில் எங்ஙனம் வரவேற்க இயலும்? என்கிற நிலையைச் சிந்திக்க வைக்கிறார்.

**பெண் உரிமையின் எல்லை:-**

பெண்ணியம் என்கிற இயக்கம் பெண்கள் உரிமைக்காகப் போராடுகிற இயக்கமாகும். பெண்களுக்குச் சமூகத்தில் உரிமையும் விடுதலையும் வேண்டும் என்பதில் கவிஞருக்குக் கருத்து மாறுபாடில்லை.

"பெண் ஆணால்தான் தன் அர்த்தத்தை அறிகிறாள். ஆண் என்ற கண்ணாடி இல்லை என்றால் அவளுடைய அழகுகளே அவளுக்குத் தெரியாது"[215] என்ற கருத்தை முன்வைக்கிறார். எனவே, ஆண், பெண் இணைப்பு, இயற்கையானது இந்தச் செயல்பாடுகளில் ஆதிக்கம் இருப்பது வரவேற்பதற்கில்லை.

பெண்களுக்கு உரிம்மையுண்டு. எல்லையுண்டு. ஆணுக்கு எதிராக மீசை வளர்ப்பதல்ல பெண்ணின் உரிமை என்றும் குறிப்பிடுகிறார்.

"மெல்லினமே!

வல்லினமாகும் முயற்சியில்

விகாரமாகி விட்டாயே"[216]

என்று தற்காலத்தில் உரிமை என்கிற போலியில் பெண்ணின் இயல்புகளை இழப்பதைக் குறிக்கிறார்.

"அலுவலகத் தொலைபேசி

சிணுங்கியவுடன் அள்ளியெடுக்கத்

தயாராய் இருக்கிறாய் நீ :

வீட்டிலோ

பாலுக்கு அழும் உன்

குழந்தையின் குரல்

அனாதையாக . . ."[217]

என்ற வரிகளில் அலுவல் மகளிர் குழந்தையைப் புறக்கணித்துப் பணிக்குப் போவதைச் சுட்டிக் காட்டுகிறார். பெண் பணிக்குப் போவதால் குழந்தையின் அரவணைப்புக் கடமையைப் புறக்கணிக்கிற நிலையைச் சுட்டிக்காட்டுகிறார்.

**சமுதாயச் சீர்கேடுகள்:-**

"தனிமனிதச் சிக்கலும் பொதுச் சிக்கலும் இணைந்து சமூகத்தைப் பாதிக்கும் போது அது சமூகச் சிக்கலாகிறது. ஒருவரையோ ஒரு பகுதியினரையோ அன்றி முழுமையாக ஓர் சமூகத்தையே பாதிக்கிறது"[218] அப்பாதிப்பு, அல்லது சீர்கேடு குறித்துச் சமுதாயக் கடமையுணர்வு மிக்க கவிஞர்கள் சீர்கேடுகளின் அவலங்களைச் சுட்டி, அதிலிருந்து மீட்சி அடைவது குறித்தும் சிந்திப்பதை அவர்தம் கவிதைகள் வாயிலாக அறியலாம்.

அப்துல் ரகுமான் இயல்பாகவே சமுதாயக் கவிஞராக இருப்பது, முன்னர் சுட்டிக்காட்டப்பெற்றது.

'வாழ்க்கையின் எந்த நிலைக்குப் போனாலும் கவிஞர்தம் சிந்தனை சமுதாயத்தை நோக்கியே குவிமையமாகக் கொண்டது என்று தெளிவுபட உரைப்பது'[219] கருதத்தக்கதாகும்.

**சமுதாயச் சீர்கேடுகள் வகைப்பாடு:-**

கவிஞருடையே சமுதாயச் சீர்கேடுகள் தொடர்பான கவிதைகளை இருவகைகளாகப் பகுத்துப் பார்க்கலாம்.

1. உலகச் சமுதாய நிலை
2. தாய் நாட்டுச் சமுதாய நிலை.

**1. உலகச் சமுதாயப் பார்வை:-**

உலகச் சமுதாயத்தின் இன்றைய போக்கும் சீர்கேடுகளும் கவிஞரின் உள்ளத்திற்கு நெருடலாக உள்ளன. நெருடலின் வெளிப்பாடாகக் கவிதைகளையாத்துள்ளார்.

நாட்டு மிராண்டிகள்:-

உலக மனித சமூகம் முன்னேறி நாகரிகம் அடைந்திருப்பது நடைமுறை நிலையாகும். எனினும் முன்னேற்றம் நாகரிகத்திலும் ஆடம்பரத்திலும் இருக்கிறது. வாழ்வியல் மற்றும் சமூக மதிப்புக்களில் இல்லை. காட்டு மிராண்டி மனிதன் நாகரிகம் அடைந்து நாட்டு மிராண்டியாவதுதான் வளர்ச்சியா? என வினா எழுப்பி சிந்திக்க வைக்கிறார் அப்துல் ரகுமான்.

"மலையின் மேல் இருந்த
ஆதி மனிதனே!
நீ உயரத்தில் இருந்தாய்
நம் நாகரிகமோ
நம்மைக் கீழே
இறக்கி விட்டுவிட்டது
உன்னிடம் இல்லாத
அறிவுத் தீபம்
எங்களுக்குக் கிடைத்தது
ஆனால் அதனால் நாம்பெற்ற
வெளிச்சத்தை விட
விபத்துக்களே அதிகம்"[220]

விபத்துக்கள் எனக் கவிஞர் காட்டுவது சமுதாயச் சீர்கேடுகளை எனக் கொள்ளலாம். ஆதிமனிதனையும், இக்கால நாகரீக மனிதனையும் ஒப்பிட்டுக் கூறுகிற நிலை நயமாக உள்ளது.

ஆதிமனிதன் சுதந்திரக் காற்று. இக்கால மனிதர்கள் பலூன்களில் அடைபட்ட காற்று. ஆதிமனிதன் நிர்வாணமாகத்தான் இருந்தான். இக்காலத்தவர் ஆடை அணிந்திருந்தாலும் ஆபாசமாக இருக்கிறார்கள். இக்கால மனிதர்கள் மின்சாரப் பிரகாசத்தில் வசித்தாலும் இருட்டில்தான் இருக்கிறார்கள். ஆதிமனிதன் காட்டு விலங்குகளிடம் பயமின்றி வாழ்ந்தான்.

இக்கால மனிதன் நாட்டு மனிதர்களிடமும் கூடப் பயத்துடன் இருக்கிறான் என்று கவிஞர் குறிப்பிடுகிறார். காட்டு மிராண்டிகள் முன்னேற்றமடைந்து நாட்டு மிராண்டிகளானது வளர்ச்சிநிலை என இயம்புகிறார்.

**இனவெறி அழிவுகள்:-**

உலகச் சமூகம் பெரும் முன்னேற்றம் கண்டிருக்கிற இக்காலத்திலும் சில நாடுகளில் இனவெறியை மையப்படுத்திப் பெரும் கொலைகள் நிகழ்கின்றன. கவிஞர் இப்போக்கினைக் கண்டிக்கிறார்.

"வெண்புள்ளி குத்திய
இரவு நீக்ரோவைப்
படுகொலை செய்கிறான்
வெள்ளையன்
தரையின்
பச்சை நாக்குகளில்
வார்த்தையாக முயலும்
ரத்தத் துளிகள்"[221]

இக்கவிதையில் நீக்ரோ மக்களுக்கும் வெள்ளையர்களுக்குமிடையே உள்ள இனவெறிச் சூழலைக் குறிக்கிறார். நீக்ரோ படுகொலையைக் கவிஞர் வன்மையாக எதிர்க்கிறார்.

இலங்கையில் நிகழும் சிங்களத் தமிழர் இனப் போராட்ட நிலைக்காகவும் கவிஞர் வருந்துகிறார். அங்கு தமிழர்கள் படுகொலை செய்யப் பெறுகின்றார். இதனைக் கண்டு தமிழ்நாட்டுத் தமிழர்கள் கவனம் கொள்ளாமல் இருக்கிற அவல நிலையினை "ரத்தம் வெவ்வேறு நிறம்" என்ற தலைப்பில் பாடுகிறார்.

இலங்கையில் இனப்போராட்டத்தினால் பிணங்கள் விழுகின்றன. இங்கு எத்தனை விக்கெட்டுகள் விழுந்தன எனத் தமிழர் எண்ணுகின்றனர். அங்கு குண்டு வெடிக்கிறது. இங்கு பட்டாசு வெடித்து மகிழ்கின்றனர். அங்குத் தமிழர் வேட்டையாடப்படுகிறார்கள். இங்குள்ள தமிழர் வெள்ளித்திரைக்கு முன் விசிலடிக்கிறார்கள். இவ்வாறு இங்குள்ள தமிழர்களின் கடமையற்ற

நிலைமையினையும் தமிழகம், மற்றும் இந்தியாவின் பொறுப்பற்ற நிலையினையும் சாடுகிறார்.

"இன்று
அசோக சக்கரத்தின்
குருட்டு ஓட்டத்தில்
கன்றுகளின் ரத்தம்
பெருகிக் கொண்டிருக்கிறது
தாய்ப் பசுவோ
கவர்ச்சியான சுவரொட்டிகளைத் தின்று
அசைபோட்டுக் கொண்டிருக்கிறது"[222]

**தாய்நாட்டுச் சமுதாயச் சீர்கேட்டு நிலை:-**

உலகச் சமுதாயச் சீர்கேடு பற்றிய சிந்தனைகளை விடத் தாய்நாடான இந்திய நாட்டின் சமுதாயச் சீர்கேடுகள் குறித்து மிகுதியாகப் பாடியுள்ளார். இந்நிலையைத் தன் சொந்தச் சமூகத்தில் கவிஞர் கொண்டுள்ள அக்கறையைக் காட்டுவதாக மதிப்பிடலாம். குறிப்பாகத் தமிழ்ச் சமூக நிலையின் சீர்கேடுகள் பலவற்றை இனம் காட்டி மீள வழிதேடும்படி விழிப்புணர்வைத் தூண்டுகிறார்.

இவ்வகையில் அமையும் கவிதைகளைக் கீழ்க்கண்ட தலைப்புகளில் பகுத்து விளக்கலாம்.

1. ஏமாற்றுநிலை
2. பல்விதமான சீர்கேடுகள்
3. சமூக முரண்பாடுகள்
4. உரிமையின்மை
5. நீதி நிலையில் சீர்கேடுகள்
6. பயன்பாடற்ற பழமை
7. விழிப்புணர்வை வளர்த்தல்
8. நம்பிக்கையும் புதியதொரு சமுதாயமும்

**1. ஏமாற்று நிலை:-**

சமூக மேம்பாட்டிற்குகந்த சூழல்கள் சொற்கள் அளவில் பேசப் பெறுகின்றன. நடைமுறையில் ஏமாற்றத்தை அளிக்கும் பயனைத்தான் விளைவிக்கின்றன. இத்தகு ஏமாற்ற நிலையைப் பொதுவாகச் சில கவிதைகள் சுட்டிச் செல்கின்றன.

"வரங்களே
சாபங்கள்
ஆகுமென்றால்
இங்கே
தவங்கள்
எதற்காக?"[223]

என்று அவர் கேட்கும் வினா சிந்தனைக்குரியதாகும். சமூக மேம்பாட்டிற்காகக் காத்திருந்து ஏற்படும் சீர்கேடுகளை அக்கவிதையில் குறிப்பிடுகிறார். ஏமாறுபவர்களைக் குறித்து, "சுட்டபழம்"[224] எனும் தலைப்பில், தீப மரத்தின் தீக்கனி உண்ண விட்டில் வந்தது கனியோ விட்டிலை உண்டது என்று குறிக்கிறார். ஏமாந்து கொண்டிருப்பவர்களின் மனநிலை மற்றும் இயல்புகளைச் சுட்டிக்காட்டி எப்போது மீட்சி அடையப் போகிறார்கள் என வினாக்குறி எழுப்புகிறார்.

'உன் பாட்டியின் வடையைத் திருடிய காக்கையா உன் கண்ணுக்கு மை கொண்டு வரும்? கண்ணாடியில் தன் நிழலுக்கு முத்தம் கொடுக்கும் குருவியா உன் கொண்டைக்குப் பூக்கொண்டு வரும். திரைப்படச் சுவரொட்டிகளை நக்கித் தின்னும் பசுவா உன் பசிக்குப் பால் கொண்டு வரும். ஒரு நெல் மணிக்காக யாருக்கோ சீட்டெடுத்துக் கொடுத்து விட்டுக் கூண்டில் போய் அடையும் கிளியா உனக்குப் பழம் கொண்டுவரும். நீ எப்போது வயதுக்கு வரப் போகிறாய்' [225] என்று வினவுகிறார். ஏமாறுபவர்கள் எப்போது பக்குவம் அடையப் போகிறார்கள் எனச் சிந்தித்துரைக்கிறார். பயனற்ற கல்வியினால் மாணவர்கள் ஏமாறுகிற நிலையை "புள்ளிக்குதவாதென்று"[226] என்ற தலைப்பில் குறிக்கிறார்.

தேச ஒற்றுமை, இந்தியன் போன்ற சொற்கள் ஏமாறுகிறவர்களை ஏமாற்றத்தான் பயன்படுத்தப்பெறுகிறது என்பது கவிஞரின் கணிப்பாக இருக்கிறது. தேசிய நீரோட்டம், Be Indian Buy Indian, இந்தியன் உயில் போன்ற கவிதைகளில் அந்நிலையைப் பாடியுள்ளார். "தேசிய நீரோட்டம்"[227] எனும் கவிதையில், நீர்களுக்குத் தனி விலாசங்கள் தேவையில்லை. நதிகள் குளங்கள் கிணறுகள் எல்லாம் மூழ்கிவிட்டன. கண்ணீரும் மூழ்கிவிட்டது என்று குறிப்பிடுகிறார். இதில் மாநிலங்களின் தனித்தன்மைகள் இந்தியா எனும் ஒருமையால் தெரியாமல் போவதாகச் சுட்டுகிறார். என்ற கருத்தில் மக்களுக்குத் தனித்துவம் இல்லை, தேசியம் என்ற ஓட்டத்தில் தனித்துவம் மூழ்கடிக்கப்படுவதாகக் கவிஞர் குறிப்பிடுகிறார். இந்தியன் என்ற தனிநிலைக்காகச் சில உயர்வுகள் இழக்கப்படுவதைக் கவிஞர் விரும்பவில்லை. தேசிய நீரோட்டத்தைப் பற்றிக் கீழ்க்கண்டவாறு பாடுகிறார்.

"அணைகளை உடைத்து
கரைகளைத் தகர்த்து
மரங்களைச் சாய்த்து
பிணங்களைச் சுமந்து
இதோ
பாய்ந்து வருகிறது
தேசிய நீரோட்டம்"[228]

தேசப்பற்று, தேச ஒருமைப்பாடு போன்ற சொற்களைப் பயன்படுத்தி மக்களை ஏமாற்றுகின்றனர். அச்சொற்கள் வெற்று முழக்கமாகத்தான் இருக்கின்றன. வெற்று முழக்கம் செய்யும் சுய நலக்காரர்களை எப்பொழுது மக்கள் இனம் காணப் போகிறார்கள் என்ற கவலை கவிஞருக்கு இருக்கிறது.

**பல்விதமான சீர்கேடுகள்:-**

சமுதாயத்தின் பல்வேறு சீர்கேடுகளை இருண்மை, கலியுக இதிகாசம் போன்ற கவிதைகளில் விரிவாக வெளிப்படுத்துகிறார். இரவைப் பார்த்துக் கவிஞர்,

"நிலா விளக்கை

தினமும் ஏன்

ஏந்தி வருவதில்லை?"

"பகல் வேஷம் களைந்த

முகங்களைப் பார்க்கப்

பயமாயிருப்பதால் . . . ."

"தினமும் ஏன்

கறுப்பு உடை

அணிகிறாய்?"

"பகலில் சாகும்

சத்தியங்களுக்காகத்

துக்கம் கொண்டாட. . ."[229]

என்று இரவிடம் வினா விடை நிகழ்த்துவதாகப் பாடுகிறார். இவ்வாறு இருண்மை நிலையின் வழியாகப் பல சீர்கேடுகளைச் சுட்டுகிறார்.

கலியுக இதிகாசத்தில் கம்சன், கோவலன், கண்ணகி, உதயகுமரன், இராமன், சீதை போன்ற பாத்திரங்களைக் குறியீடாகக் கொண்டு சமுதாயச் சீர்கேடுகளை அங்கதமாகக் குறிப்பிடுகின்றார். எடுத்துக்காட்டுக்குச் சில வரிகள் கீழே தரப்பட்டுள்ளன.

"மாயமான்களின் மோகத்தில்

இராவணர்களிடம்

சோரம் போகும்

சீதைகள்

விற்க எதுவும் இல்லாததால்

கண்ணகிகளைப்

பேரம் பேசும்

கோவலர்கள்

கோவலரின் படுகொலையை

மூடி மறைக்க

உயிரோடு கொளுத்தப்படும்

கண்ணகிகள்"[230]

சமுதாயச் சீர்கேடுகளுக்கான காரணங்களுள் அண்மைக்காலத் திரை உலகமும் ஒன்று என்பது கவிஞரின் சிந்தனையாகும்.

"ரசனைக் கேற்பப்

பக்தர்கள் பொறுக்கி எடுக்க

தினுசு தினுசான

தெய்வங்கள்

செல்லுலாய்ட் தெய்வங்கள்"[231]

என்று திரை உலக நடிகர்களைத் தெய்வங்களாக மக்கள் கருதுவதை இடித்துரைக்கிறார். வர்ணச் சுவரொட்டியில் அவர்கள் தரிசனம் தருகிறார்கள். திரையரங்கு மக்களுக்கு ஆலயம் போல இருக்கிறது என்று திரைத்துரையால் மக்கள் அடைந்திருக்கிற சீரழிவை மிக இழிவாகச் சுட்டுகிறார்.

சமூகச் சீர்கேடுகளைக் களைந்து பாதுகாப்புத் தர வேண்டிய காவலர்கள் சீர்கேடுகளுக்குக் காரணமாக இருப்பதைக் "காக்கிச் சட்டை"[232] என்ற கவிதையில் பாடியுள்ளார். காக்கிச் சட்டை போலிச் சாமியார்களின் காவி உடை போல் வேடமாகி விட்டது என்று அக்கவிதையில் குமுறுகிறார். "ஒருநாள் கூத்து"[233] என்ற கவிதையில் நாடகப் பாங்கில் சமுதாயச் சீரழிவுகளைக் குறிக்கிறார்.

சமூகத்தின் இழிந்த சீர்கேடுகள் நிறைந்த நிலையில் இயேசு பெருமான் இரண்டாம் முறையாக அவதாரம் செய்தால் எப்படி இருப்பார் என்பதை "இரண்டாம் வருகை"[234] என்ற கவிதையில் பாடியுள்ள திறம் கருதத்தக்கது.

இயேசு சமாதானமாக வரவில்லை. கலகமாக வந்திருக்கிறார். மன்னிப்பாக வரவில்லை. ஆக்கினையாக வந்திருக்கிறார். இப்போது அவர் அன்பினைப் போதிப்பதற்கு வரவில்லை. புரட்சி மிகுந்த கிளர்ச்சியினை உருவாக்க வந்துள்ளதாக "இரண்டாம் வருகை" கவிதையில் கவிஞர் குறிப்பிடுகிறார். சமூகத்தில் யூதாஸ்களின் எண்ணிக்கை பெருகிவிட்டதால்

இயேசுவின் வருகை முக்கியத் தேவையாகிறது, என்பதனை "கி.பி. யூதாஸ்"[235] என்ற கவிதையில் வலியுறுத்துகிறார்.

யூதாஸ்களின் இயல்பில் சமூகச் சீர்கேட்டாளர்கள் இருப்பதைக் கவிதையில் வடிக்கிறார். அவன் விற்பதற்கு ஏசுவின் இரத்தம் வேண்டும். ஏசுவின் இரத்தை மட்டுமல்ல, தாயின் முந்தானைகளையும் அவன் விற்கத் தயங்குவதில்லை. அவனுக்கு வேண்டியதெல்லாம் முப்பது வெள்ளிக் காசுகள்தான். அதில் இரத்தவாடை இருக்காது. அப்பாவத்தின் கூலியால் கோயில் வாங்குகிறான். அவன் வாங்கிய நிலத்தை "இரத்த நிலம்" என்று எவரும் அழைப்பதில்லை. இங்கு அவர் குறிப்பிடும் யூதாஸ்கள் சமூகச் சீர்கேட்டிற்குக் காரணியாக இருப்பவர்கள்.

சீர்கேடு நிறைந்த சமுதாயத்தில் காகிதவீதியில் கருட வாகனத்தில் சமாதான தேவதை ஊர்வலம் வருகிறாள்.

"சமாதான தேவதை
ஊர்வலம் வருகிறாள்
காகித வீதியில்
கருட வாகனத்தில்
சமாதான தேவதை
ஊர்வலம் வருகிறாள்"[236]

என ஏட்டளவில் இருக்கும் சமாதான தேவதையைத் தரிசனம் செய்க என மொழிகிறார்.

நாட்டில் மழையில்லை என்றாலும் கவலை வேண்டாம்.

"நமக்கென்ன குறைவு
மாதம் மும்மாரி பெய்கிறது
கண்ணீர் மழை
வேர்வை மழை
ரத்த மழை"[237]

என்று வேதனை உணர்வுடன் புலம்புகிறார்.

பொறுப்பற்றவர்கள் சீர்கேடுகளுக்குக் காரணம் என்பது கவிஞரின் மதிப்பீடாகும்.

"சமூகம் கட்டிய

கூரைகளின் அடியில்

குடியிருந்தவனே!

'தீ' விபத்து நடந்த போது

உன் பங்குக்கு ஒரு வாளி நீராவது

வீசினாயா?"[238]

என்ற வரிகளின் மூலம் சமூகச் சீர்கேடுகளை நீக்க ஒவ்வொருவரின் உழைப்பும் தேவை என மதிப்பிடுகிறார்.

மனிதன் சீர்கேட்டினால் அவலம் நிறைந்த கவலை வாழ்க்கை வாழ்கிறான். செயற்கையாக மனிதன் இருப்பதை வயலின் குயில் எனும் பாடலில் குறிப்பிடுகிறார்.

"வசந்த காலத்தை

நாம்

'வசந்த காலமே' என்ற

பாடலால் கொண்டாடுகிறோம்

இசைத் தட்டிலிருந்து வரும்

பூக்களின் நறுமணத்தை

முகருகிறோம்"[239]

என்று வெதும்புகிறார்.

நல்லவர்கள் சிலர் நல்ல பணிகளை மேற்கொள்ளும் போது தீயவர்கள் அவற்றை நிறைவேற விடாமல் தடுப்பதை "உங்களைத்தான்"[240] என்ற கவிதையில் சுட்டுகிறார்.

இவ்வாறு பல்வேறு விதமான சீர்கேடுகளை அப்துல் ரகுமான் தமக்கே உரிய தனித்திறமையின் வழி எடுத்து மொழிகிறார்.

### 3. சமூக முரண்பாடுகள்:-

சமூகச் சீர்கேடுகளுக்கு, முரணான இயக்கங்கள் காரணமாகின்றன. நன்மைக்கும் தீமைக்கும் முரண் அமைகின்றது. பொய்மை

வாய்மையை வென்று அரசாளும் நிலையை 'அசத்தியமே ஜயதே' என்ற தலைப்பில் பாடுகிறார்.

"பொய் சொன்னால் தான் இப்போதெல்லாம்
போசனம் கிடைக்குது வீட்டிலே - சிங்க
ஆசனம் கிடைக்குது நாட்டிலே
மெய்சொன்னால் வாய்க்கரிசி கிடைக்குது
வேறென்ன கிடைக்குமிக் காட்டிலே"[241]

என்று மொழிவதில் பொய்மையின் ஆளுமைநிலையை எடுத்துரைக்கிறார். விழிப்பிற்கு முரணான உறக்கமும் விழிக்காத அறியாமையும் சீர்கேட்டை உருவாக்கும் என்பதில் கவிஞர் கருத்தாக உள்ளார்.

இந்நாட்டில் நல்லமைப்புகள் பலவும் உருவாகின்றன. ஆனால் காலப்போக்கில் தீய அமைப்புக்களாக மாறிவிடுவதை "சபிக்கப்பட்ட பூவனத்தில்"[242] குறிக்கிறார். பல்வேறு சமயங்கள், அறிவியலுலகம், அரசியல் கட்சிகள் முதலியன தன்னலத்தையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்கின்றன. மேற்குறித்த நல்லமைப்புகள் சமுதாயத்தில் எதிர் விளைவுகளைத் தருகின்றன என்று குறிப்பிடுகிறார். சபிக்கப்பட்ட பூவனத்தில் இருவேறு நிலைகள் இருப்பதை "இருபக்கங்கள்" என்ற தலைப்பில் விரிக்கிறார்.

தீயசக்திகளின் ஆதிக்கச் சூழலில் நல்லவர்களும் தீயவர்களிடம் இணங்கிப் போகிற கொடுமை நிலையை "நீர்ப்பரீட்சை" என்ற கவிதையில் பாடுகிறார். இக்கருத்தினைத் தொன்மக் குறியீட்டுக் கவிதையின் வழி விளக்குகிறார்.

"நெருப்பின் நாக்கு
நிரூபித்த கற்பை
ஒரு வண்ணானின் நாக்கு
அழுக்காக்கியது
மானம் காக்கத்
தன் விரத ஆடையைக்
களைந்தெறிந்தான் இராமன்"[243]

என்று பாடுகிறார். மனிதனின் "ஆறாவது அறிவு"[244] சாத்தானின் எச்சிலா? என்று வினா எழுப்புகிறார். ஏனெனில் உயிரினங்களில் மனிதன் மட்டும் தானே பாவம் செய்கிறான் என்று சிந்திக்க வைக்கிறார். உயிரினங்களில், "ஆறாவது அறிவு என்பது நோயா?"[245] எனக் கடிந்துரைக்கிறார்.

மனித மேம்பாட்டிற்கு எழுத்தாற்றல் பெருங் காரணியாகும்.

"தீக்குச்சியாகக்
குனிய வேண்டிய உங்கள் பேனா
தூண்டிலாகக் குனிகிறதே!"[246]

என அவலப்படுகிறார்.

மனிதன் தீமைக்கு முயல்கிற போது எதிர்பாராத வகையில் நன்மையும் கிடைக்கலாம். ஆனால் மனிதன் அதையும் நலிவிற்கே பயன்படுத்துகிறானே என "இறப்பு எங்கள் பிறப்புரிமை"[247] என்ற கவிதையில் வேதனைப்படுகிறார். ஆலகாலத்திற்காக மனிதன் பாற்கடலைக் கடைந்தபோது அமுதம் வந்தது. அதனை அவசரமாகக் குடித்து இறந்து போகிறான் என்று குறிக்கிறார்.

**உரிமையின்மை:-**

மனிதர்களுக்கும் மனித சமூகத்தினர்க்கும் உரிய உரிமைகள் மறுக்கப்படுவதும் அடக்கப் பெறுவதும் நடைமுறையில் சமூகச் சீர்கேடுகளாக உள்ளன. ஆனால் உரிமைகளை அடக்கலாம்; அழிக்கவோ அகற்றவோ முடியாதென்பதில் கவிஞர் அசையாத நம்பிக்கையுடன் இருக்கிறார்.

"வேலிக்கு வெளியே
தலைகளை நீட்டிய என்
கிளைகளை வெட்டிய
தோட்டக் காரனே!
வேலிக்கு அடியில்
நழுவும் என் வேர்களை
என்ன செய்வாய்?"[248] என்று அப்துல் ரகுமான் குரல் கொடுக்கிறார். சமூகத்தில் எழுத்தாளர்களுக்குரிய உரிமை மறுக்கப் பெறுகிற சீர்கேட்டை "என்ன செய்யப் போகிறாய்" என்ற கவிதையில் குறிக்கிறார்.

"என்ன செய்ய போகிறாய் எழுது கோலை?
சுட்டுவிரல் போல அதை
நீட்டக் கூடாதாம் - பணம்
சுருட்டுகின்ற திருடர்களைக்
காட்டக் கூடாதாம்
ஒட்டுக் கேட்ட உண்மைகளைப்
பேசக் கூடாதாம் - எந்த
ஊழலையும் நாறுதென்றே
ஏசக் கூடாதாம்"[249]

என்று எழுத்தாளன் உரிமைச் சுதந்திரத்தைப் பறிக்கும் கெடுபிடிகளைச் சுட்டி எழுத்தாளர்களின் எழுதுகோல் உண்மையைச் சொல்ல முடியவில்லை என்றால் எதனைச் சாதிக்கப் போகிறது எனக் கேட்கிறார்.

உரிமைகளைக் கேட்கும் பிரிவினர் இயல்பாக இருந்தால் கூட எதிர்ப்புக் காட்டுகிறார்கள் எனக் கூறி அடக்கப்படுகிற நிலையை "கொம்பு"[250] என்ற கவிதையில் வடிக்கிறார். பசு என்றால் அமைதியாகத்தான் இருக்க வேண்டும் முட்டக் கூடாது "அம்மா" என்று கூட கத்தக் கூடாது என்ற நிலையில் அடக்குமுறையின் உச்சத்தை - உரிமையிழந்த நிலையினை அக்கவிதையில் எடுத்துரைக்கிறார்.

உரிமையற்று ஊமைகளாக வாழுகின்ற மனிதனுக்கு விழிப்பில்லை ஏன் அலாரம்? வெளிச்சத்தைப் பார்க்கப் போவதில்லை ஏன் சாளரம்? குப்பைகளைக் கூட்டி எறியப் போவதில்லை ஏன் துடைப்பம்? எதுவுமே தேவையில்லை என்று "உங்களுக்கு எதற்கு?"[251] என்ற கவிதையில் ஆவேசமடைகிறார்.

இவ்வாறு மனிதர்களுக்குரிய உரிமைகள் மறுக்கப்படுகிற நிலைமையை எடுத்துரைக்கிறார்.

**நீதி நிலையில் சீர்கேடுகள்-**

நீதி தேவியின் திருவுருவைக் கவிஞர் வருணிக்கிற முறையை "நீதி தேவதை"[252] என்ற கவிதையில் காணலாம். 'கொலைவாள் உன் கைக்கு மட்டும் எப்படி ஆபரணமானது? ரத்தம் உன் நகங்களில் எப்படி மருதாணி

ஆகியது. நீதி தேவதையே உன் வாள் முதலில் உன் கண்கட்டை அறுக்கப்படும். முடவர்கள் மட்டுமே அகப்பட்டுக் கொண்டிருக்கும் கண்ணாமூச்சியை எப்போது நிறுத்துவாய்?' எனக் கேட்கிறார்.

திருடியவனைக் கண்டு திருடர் என்று கத்தியமைக்காக "இவன் அமைதியைக் குலைத்தவன் எனச் சிறையில் தள்ளினார்கள், வருமானத்தைக் கேட்ட போது வேலையில்லாப் பட்டதாரி என்று கூறியதற்காக வருமானத்தை மறைத்ததாக வழக்குப் போட்டார்கள், கரி மூட்டை தூக்கி கூலிப்பணம் பெற்றுக் கருப்பாக இருந்தது. கருப்புப் பணம் வைத்திருக்கிறான் என்று கைது செய்து விட்டார்கள். வயலுக்கு வரப்பு வெட்டிக் கொண்டிருந்தவனைப் பிரிவினைவாதி என்று கூறி கைது செய்தனர்"[253] நாட்டின் சட்டம் ஒழுங்குப் பிரச்சனையின் நிலைமை இவ்வாறுதான் இருக்கிறது என்பதைக் கவிதையின் வழியே காட்டுகிறார்.

"தேன் கூட்டைக் கட்டுவது தேன் கூட்டின் கடமை. அதைக் கலைத்தால் தேனீக்கள் கொட்டிவிடும். அந்தத் தேனீக்கள் கொட்டுவது எங்ஙனம் வன்முறையாகும்?[254] என்று சிந்திக்க வைக்கிறார்.

**பயன்பாடற்ற பழமை:-**

பயன்பாடற்ற பழைமையை வீணாக நாட வேண்டாம் என்று அப்துல் ரகுமான் கருதுகிறார். "எங்கள் நதிக்கரையில்" என்ற கவிதையில் இக்கருத்தை மையப்பொருளாகக் கொண்டு கவிதையாக்கியுள்ளார். பழமை வாதிகளின் போக்கினை,

> "புராதனமான தென
> நாசியால் சுவாசிப்பதை மறுத்துக்
> காதால் சுவாசிக்க முயலும்
> யோகிகள்"[255]

என்று சாடுகிறார். வாழ்க்கை என்பது எதிர்காலத்தை நோக்கிச் செல்லும் பயணம். அந்தப் பயணத்தில் கடந்த காலத்திற்கு வேலையே இல்லை என்கிற கருத்தில்,

> "வாழ்க்கை என்பது

எதிர்காலத்தை நோக்கிச் செல்லும்

பயணம்

நீயோ

கயிறு திரிப்பவனைப் போல

பின்னால் போய்க் கொண்டிருக்கிறாய்"[256]

என்று பழமைவாதியைப் பற்றி "காலவழு" என்ற தலைப்பில் குறிப்பிடுகிறார்.

பழமை பேசுபவர்கள் மூடர்கள் சோம்பல்காரர்களைவிடக் கேவலமானவர்கள் என்று கவிஞர் கூறுவது சிந்திக்கத்தக்கதாக உள்ளது. ஏனென்றால் இயற்கை கூட புதுமையை இயற்கையாய் கற்றுக் கொள்கிற நிலை இருக்கும்போது பழம்பஞ்சாங்கம் பேசுவது எதற்காக? என்ற சிந்தனையில்

"மரங்கள் கூடப்

பழைய இலைகளை

உதிர்த்து விடுகின்றன

நீ ஏன்

சருகுகளைச் சுமந்து கொண்டு திரிகின்றாய்?"[257]

என்று வினா எழுப்புகிறார். இறைவனுக்குச் செய்கின்ற செயல்களில் பழம் மூட நம்பிக்கைகள் இருப்பதை "சுப்ரபாதம்"[258] என்ற கவிதைவழியே கண்டிக்கிறார். பழம் மூடத்தில் இருப்பவர்களிடம் புது அவதாரம் எடுக்கவும் அச்சமாக இருக்கிறது என்று கூறுகிற நிலை பழமையின் ஆதிக்கத்திலிருந்து விடுபடுவதற்கு உள்ள தடைகளைச் சுட்டுவதாகக் கருதலாம்.

**விழிப்புணர்வை வளர்த்தல்:-**

சமுதாயச் சீர்கேடுகளைக் கண்டு அவலப்பட்டும் வேதனைப்பட்டும் நொந்தும் பல கவிதைகளைப் பாடிய கவிஞர் அப்துல் ரகுமான் அந்நிலைகளிலிருந்து மீட்சி அடைய விழிப்புணர்வை வளர்க்கும் கவிதை களையும் இயற்றியுள்ளார். சிக்கல்களை மட்டும் கவிதைப் பொருளில் கூறிக்கொண்டிருந்தால் கவிஞன் சமுதாயக் கடமை நிரம்பியவன் என்று மதிப்பிட்டுவிட முடியாது. சிக்கல்கள் குறித்த விழிப்புணர்வினையும்,

சிக்கல்களுக்கான தீர்வினையும் சுட்டுகிற கவிஞனையே சமுதாயக் கடமையுணர்வுடன் கூடிய கவிஞன் என மதிப்பிட இயலும்.

அப்துல் ரகுமான் சமுதாயச் சீர்கேடுகள் பலவற்றை எடுத்துக் கூறினாலும் அந்நிலை குறித்துச் சமுதாய மக்கள் விழிப்புணர்வு பெற வேண்டும் என்பதிலும் கவனமாக இருக்கிறார். “டி.வி. பார்க்கும் ராமர்கள்”[259] என்ற தலைப்பில், உங்கள் அரியாசனம் அபகரிக்கப்பட்டதை நீங்கள் காட்டுக்கு அனுப்பப்பட்டு விட்டதை அறியவில்லையா நீங்கள்? என்று கூறி விழிப்புணர்வை வளர்க்கிறார். சமுதாயச் சீர்கேடுகள் பல; அவற்றைச் சிந்தித்துச் சீர்கேட்டுச் சிக்கல்களிலிருந்து விடுபட விடையைத் தேட வேண்டும் என்ற நோக்கில் “விடைகளைத் தேடி”[260] என்ற கவிதையை எழுதியுள்ளார். விடைகளைத் தேட வேண்டும் என்கிற நிலை குறித்த விழிப்புணர்வை இக்கவிதையில் வளர்க்கிறார்.

வாழ்க்கைக்கு உதவாத இக்காலக் கல்வித் திட்டத்திலிருந்து விழிப்புப் பெற வேண்டியதைப் “புள்ளிக்கு உதவாதென்று”[261] என்ற தலைப்பில் குறித்துச் செல்கின்றார்.

மானுடம் ஆற்றல் மிக்கது. அவ்வாற்றலைக் கூறி மனித சமூகத்திற்கு விழிப்புணர்வு ஊட்ட விரும்புகிறார் கவிஞர். இதனை இயற்கைக்கும் மனிதனுக்கும் போட்டி என்கிற முரணை வளர்க்கிற விதமாய்க் கவிதை இயற்றிச் சிந்திக்க வைக்கிறார்.

“ஒரு நாள், எனக்கும் வானத்திற்கும்
போட்டி நடந்தது
நான் புன்னகையை எடுத்து வைத்தேன்
அது வைகறையை எடுத்து வைத்தது
நான் கண்ணீரை எடுத்து வைத்தேன்
அது மழையை எடுத்து வைத்தது

. . . . . . . . . . .

இறுதியில் நான்
புதுப்புது இலட்சியங்களை
நோக்கி நடக்கும்

என்பாதங்களை எடுத்து வைத்தேன்

வானம் தோற்றது"[262]

என்கிறார். புதுப்புது இலட்சியங்களைப் படைக்கும் ஆற்றல் மனித சமூகத்திற்கு உண்டு. எனவே சீர்கேடுகளைக்களையும் ஆற்றல் மனித சமூகத்திற்கு உண்டு என்கிற சிந்தனையையும் முன்னிறுத்துகிறார்.

குழந்தைப் பருவம் கள்ளங் கபடமற்றதாக இருக்கிறது. வயதான பருவம் மூடப் பழக்கம், சுயநலம், தீய பழக்கங்களால் சூழப்பட்டுள்ளது. இக்கருத்தினை மனதில் நிறுத்தி, "பௌர்ணமிப் பிறை" [263] எனும் கவிதையில், குழந்தைகளே! உங்கள் விரல்களை நாங்கள் பிடித்துக் கொள்கிறோம். எங்களை உங்கள் தேவ தேசத்திற்கு அழைத்துச் செல்லுங்கள் என்று பாடுகிறார். குழந்தை போன்ற மனம் சமுதாய மக்களிடம் இருப்பின் சிக்கலே எழ வாய்ப்பில்லையல்லவா? எனக் கூறி வியக்கவைக்கிறார்.

**நம்பிக்கையும் புதியதொரு சமுதாயமும்:-**

நம்பிக்கையூட்டும் கவிதையாக "வேர்களும் கிளைகளும்" [264] என்பதில் நீ சிறிய விதைதான். ஆனால் உனக்குள் ஒளிந்திருக்கிறது பிரமாண்டமான மரம். நீ பரிணாமத்தால் ஆசிர்வதிக்கப்பட்டிருக்கிறாய். பஞ்சபூதங்களும் உனக்குச் சேவகம் செய்யக் காத்திருக்கின்றன. வெளிப்படு, உன்னை மூடிய மண்ணைப் பிளந்து என்று கூறுகிறார். மேலும், பாறைகளையும் பிளந்து செல்லும் சக்தி உன் வேர்களுக்கு உண்டு; ஆழங்களில் இறங்கு நீ; எவ்வளவு ஆழமாக இறங்குகிறாயோ அவ்வளவு உயரமாக வளர்வாய் என்று தன்னம்பிக்கை ஊட்டுவதை இக்கவிதையில் காணலாம்.

நம்பிக்கையூட்டிய கவிஞர் ஒரு புதிய சமுதாயம் காண அவாக் கொள்கிறார். அவர் காணும் 'அப்புதிய சமுதாயத்தில் எழுத்துக்குத் தடையிருக்கும் இழிந்த தலையெழுத்துக்கு', 'பேச்சுக்குத் தடையிருக்கும், பெருந்திண்ணைப் பேச்சுக்கு' என்றவாறு புதிய சமுதாயம் ஒன்றை "ஒப்பில்லாத சமுதாயம்" என்ற கவிதையில் காட்டுகிறார்.

"கண்ட கண்ட இடத்தில்
கட்சிக் கொடி யேற்றக்
கட்டாயம் தடையுண்டு
உடைக்குப் பயன்படாது
ஊதாரித்தனமாக
துணிச் செலவு ஆவதனால்!
அங்கே -
பதுக்கலுக்கு நிச்சயம்
பாராட்டுக் கிடைக்கும்
பாட்டில் நயங்களைப்
பதுக்கி வைப்பதற்கு!
கள்ளக் கடத்தலுண்டு
காதற்கண் நடத்துகின்ற
உள்ளக் கடத்தலது
கலப்படம் செய்பவர்க்கும்
கை நிறையப் பரிசுண்டு
கல்யாணத் தால்சாதிக்
கலப்படத்தைச் செய்பவர்க்கு"[265]

என்று அவர் காணும் சமுதாய இயல்புகளை வரிசையாகச் சுட்டிச் செல்கிறார்.

பெண்ணுரிமையும், அனைவருக்கும் அடிப்படை உரிமைகளும் கிடைக்க வேண்டும் என்றும், சட்டம் குற்றத்திற்கான காரணங்களை விசாரிக்கும் என்றும், சமதர்மம் மிக்க அங்கு மக்களுக்காக மக்களால் மக்கள் நடத்துகின்ற மக்களாட்சி நிகழும் என்றும், நீதி மன்றம், காவல்துறை, அதிகார அலுவலகங்கள் யாவும் சமூகப் பொறுப்புடன் நடந்தேறும் என்றும், சமயங்கள் யாவும் மனிதனைப் பக்குவப்படுத்தும என்றும் அச்சமுதாயம் கடமை, உரிமை சத்தியம் நிறைந்ததாக இருக்கும் என்றும் பெரும் ஆசை கொண்டு அப்துல் ரகுமான் குறிப்பிடுகிறார்.

## வடிவம்

“கவிதைகளின் உத்திகள், உள்ளடக்கம் போன்றவற்றை ஒருங்கிணைக்கும் முழுமைக்கு வடிவம் என்று பெயர்.”[266] ஒரு படைப்பாளன் தன்னுள் உருவானதை வெளிப்படுத்தும்போது அவனுக்குள் ஏற்பட்ட அனுபவம் வடிவம் பெறுகிறது. அவ்வடிவத்தை நன்முறையில் பிறருக்கு வெளிப்படுத்துகிறவன் கலைஞன். எனவே, கலையாக்கங்கள் வடிவம் கொண்டு திகழ்கின்றன.

வடிவம் என்பதற்கு “1. புற உருவ அமைப்பு, புறத்தோற்றம் (Form Shape)

2. உள்ளடக்கத்திற்குத் தகுந்த புற அமைப்பு உருவம் (Form that is suitable to the content)[267] என்று க்ரியாவின் தற்காலத் தமிழகராதி குறிப்பிடும்.

ஒவ்வொரு கலைக்கும் வடிவம் (Form) உண்டு. பொருள் (content) உண்டு. இலக்கியக் கலைக்கும் வடிவமும் பொருளும் பல வகையாக உண்டு”[268] என்கிற கருத்து இவண் கருதத்தக்கதாகும்.

வடிவம் இவ்வாறுதான் இருக்கவேண்டும் என்று வரையறுத்துக் கூறுதல் சற்றுச் சிக்கலான நிலையாகும். குறிப்பாக அச்சிக்கலான நிலை புதுக்கவிதையில் மிகுந்தே காணப்பெறுகிறது. எனினும் அறிஞர்கள் தரும் வடிவம் குறித்த சில விளக்கங்களைக் காணுவதின் வழிப் பொதுவான கருத்துக்களைக் காணலாம்.

“இலக்கியத்தில் வடிவம் என்பது எழுத்தாளன் தன் கருத்துக்களை அல்லது தான் உணர்ந்த உணர்வுகளை நெளிவு, சுழிவு இல்லாமல் அப்படியே அச்சு அடையாளமாகப் படிப்போர்க்குக் கொடுக்கக் கையாளும் வழிமுறை”[269] என்பர். இலக்கியத்தில் இடம்பெறும் இத்தகைய வடிவம் காலந்தோறும் பல மாற்றங்களைக் கண்டு வந்துள்ளது.

"ஆதிகால மனிதனுக்கு ஒருவிதமாகவும், சங்க காலப் புலவனுக்கு மற்றொரு விதமாகவும், ஒரு வேத விற்பன்னருக்கு வேறுவிதமாகவும், கம்பனுக்கு இன்னொரு விதமாகவும், பாரதிக்கு வேறொரு விதமாகவும் அமைகிறது. இதன் மூலம் வடிவத்தில் மாற்றம் ஏற்படுகிறது. இதற்குரிய காரணங்கள்தான் சரித்திரம் சொல்கிறதே"[270] எனச்சுட்டுவர். வடிவமாற்றம் மாறி மாறி இடம்பெறுவது கவனிக்கத்தக்கதாகும். வடிவமாற்றத்தின் விளைச்சல்களில் ஒன்றுதான் புதுக்கவிதை என மதிப்பிடலாம்.

பாரதியார் தமிழ்க் கவிதை மரபை மீறிப் பரிசோதனைப் புதுமைகள் பல நிகழ்த்தியவர். பாரதியைத் தொடர்ந்து ந.பிச்சமூர்த்தி, க.நா.சுப்பிரமணியன் போன்றோர் புதுக்கவிதைகளில் பல புதுவடிவங்களைப் படைத்தனர். பிற்காலத்தில் புதுக்கவிதைகள் பற்பல வடிவங்களைத் தாங்கி வரலாயிற்று.

**புதுக்கவிதை வடிவம்:-**

"புதுக்கவிதையின் உருவத்தைக் காட்டுவது என்பது புராணத்தில் வரும் மன்மதனை ஓவியத்தில் எழுதிக் காட்டுவதற்கு ஒப்பானதாகும். சிவனால் எரிக்கப்பட்ட மன்மதன் ரதிதேவியின் கண்களுக்கு மட்டுமே தென்படுவானாம். அதுபோல் இலக்கணத் தெய்வத்தின் நெற்றிக்கண் நெருப்புக்கு இரையான புதுக்கவிதையின் உருவமும் உண்மையான இலக்கிய ரதிகளுக்கே தென்படக் கூடும்"[271] என்று கவிஞர் மீரா குறிப்பிடுகிறார். இக்கருத்தின் வழி புதுக்கவிதைக்கும் வடிவம் உண்டு என்ற கருத்தினைக் குறிப்பாகக் குறிப்பிடுகிறார்கள்.

"புதுக்கவிதைகளுக்கு வடிவம் கிடையாதென்று சிலர் தவறாக மதிப்பிடுகின்றனர். பழைய செய்யுள்களுக்கு உள்ள மாதிரி இறுக்கமான யாப்பு விதிகள் புதுக்கவிதைகளுக்கு இல்லை என்பதாலேயே இப்படி ஒரு குழப்பமான முடிவு ஏற்படுகிறது. எல்லா விதமான இலக்கியங்களிலுமே ஒரு உருவச்சிறப்பு நிலவவே செய்கிறது"[272] எனும் கருத்தும் முற்சுட்டிய கருத்தை அரண் செய்யக் காணலாம். "கடல் அலையிலும், கால் நடையிலும் ஒருவகை ஒலி நயம் உள்ளதே அதே போல் புதுக்கவிதையிலும் உயிராய் அமைந்திருப்பது ஒலிநயம்தான்"[273] என்று சுட்டியுள்ளமை கருதத்தக்கதாகும்.

மேலும், "புதுக்கவிதைக்கெனத் தனிஉருவம் என்றில்லாமல் அதன் உருவம் வளர்ந்து வந்திருக்கிறது"[274] என்கிறார் கலைச்செல்வன். "உள்ளடக்கத்திற்கேற்ப வடிவம் என்பதால் ஒவ்வொரு கவிதையும் ஒவ்வொரு வடிவம் பெறும் பன்முகத் தன்மையால் பல வடிவக் கோட்பாடு உருவாயிற்று"[275] என்று கருத்துரைப்பதும் கவனிக்கத்தக்கதாகும்.

மேற்கூறிய செய்திகளின்வழி புதுக்கவிதைக்கென "தனித்த வடிவம்" இல்லை என்றும், பன்முக வடிவத் தன்மை கொண்டது என்றும் புதுக்கவிதைக்கு உயிராய் இருப்பது ஒலிநயம்தான் என்பதும் அறியப் பெறுகிறது.

மரபுக்கவிதை, புதுக்கவிதை ஆகிய இரண்டிலும் புகழ்பெற்ற அப்துல்ரகுமான் கவிதைகளில் இடம்பெறும் வடிவங்களைக் காணலாம்..

**அப்துல் ரகுமான் கவிதைகளில் வடிவங்கள்:-**

அப்துல் ரகுமானின் நான்கு கவிதைத் தொகுப்புகளிலும் இடம் பெற்ற வடிவங்களை மூன்று பிரிவுகளில் அடக்கலாம். அவை,

1. யாப்பு வடிவங்கள்
2. யாப்பின் திரிந்த வடிவங்கள்
3. புதிய வடிவங்கள்

என்பவையாகும்.

மேற்குறித்த மூன்றுவகை வடிவங்களின் எண்ணிக்கையை அட்டவணையில் காணலாம்.

| | மொத்தக் கவிதைகள் | யாப்பு வடிவங்கள் | யாப்பின் திரிந்த வடிவங்கள் | புதிய வடிவங்கள் |
|---|---|---|---|---|
| பால்வீதி | 65 | -- | 1 | 64 |
| நேயர்விருப்பம் | 44 | 11 | 15 | 18 |
| சுட்டுவிரல் | 60 | 10 | -- | 50 |
| ஆலாபனை | 42 | -- | -- | 42 |
| | 211 | 21 | 16 | 174 |

அப்துல் ரகுமான் கவிதைகளில் யாப்பு வடிவமும் யாப்பின் திரிந்த வடிவமும் பெரும்பாலும் கவியரங்கங்களுக்காக எழுதப்பெற்றவை என்பது சுட்டத்தக்கது. இவர் புதுமை விரும்புபவர் என்பதால் புதிய வடிவங்களில் மிகுதியான கவிதைகள் எழுதியுள்ளார்.

**1. யாப்பு வடிவங்கள்:-**

அப்துல் ரகுமான் யாப்பு வடிவங்களில் சந்தப்பா, ஆசிரியப்பா, சிந்து, கொச்சகக் கலிப்பா, எண்சீர்விருத்தம் போன்ற வடிவங்களைக் கையாண்டுள்ளார். யாப்பு வடிவங்களில் இருபத்தியொரு கவிதைகளை வடித்துள்ளார். அவைகளின் முறையே சந்தப்பாக்களில் 11 கவிதைகளும்,[276] ஆசிரியப்பாவில் நான்கு கவிதைகளும்,[277] சிந்துவடிவில் மூன்று கவிதைகளும்,[278] கொச்சகக் கலிப்பாவில் இரண்டு கவிதைகளும்,[279] ஓர் எண்சீர் விருத்தமும் எழுதியுள்ளார். விரிவு கருதி ஒரு சில எடுத்துக்காட்டுகளின் வழி யாப்பு வடிவங்களை இனி வரும் பகுதிகளில் காணலாம்.

**சந்தப்பா:-**

ஓசை ஒழுங்குடன் பாடப்பெறும் பாக்கள் சந்தப்பாக்கள் எனலாம். இசை இனிமையும் பிறழாத ஓசை நயமும் இதன் சிறப்பம்சமாகும். இவ்வகைக் கவிதைகளை இவர் அதிகமாக எழுதியமை சிந்திக்கத்தக்கது. கவியரங்கிற்கு உகந்த வடிவம் என்பதாலும், இயல்பாகவே இவர் யாப்பிசையை விரும்புபவர் என்பதாலும் இக்கவிதைகளை மிகுதியாகப் பாடியிருக்கலாம்.

காட்டாக,

“மதியை மதித்தவன்
வானத்தில் ஏறி
மதியை மிதித்துவந்தான் - தலை
விதியை நம்பி
விழுந்தவனே! நீ
விழுந்தே கிடக்கின்றாய்”[280]

இக்கவிதையில் சந்த நயமிக்க ஓட்டத்தை உணரலாம்.

**ஆசிரியப்பா:-**

ஆசிரியப்பா வகையில் சில கவிதைகள் எழுதியுள்ளார். எளிதாக எழுதவும், கவியரங்கிற்கு ஏதுவாக அமைவதுமான வடிவம் இக்கவிதை வடிவமாகும்.

எடுத்துக்காட்டாக,

முன்கோப முள்ளுடன்
முளைத்த ரோஜா!
முரண்தொடைச் செய்யுள்
மூடாத கடிதம்
கார்ல் மார்க்ஸைக்
காந்தீ யத்துடன்
திருமணக் கலப்புச்
செய்த புரோகிதன்''[281]

எனும் கவிதை வடிவைக் குறிக்கலாம்.

**சிந்து:-**

சிந்து வடிவமான மூன்று சீர்களால் அமைந்த கவிதைகளைக் கவிஞர் வடித்துள்ளார்.

எடுத்துக்காட்டாக,

''சங்கீத வித்தகர் ஓசையல்ல - அவன்
தாயின் மலரிதழ்த் தாலாட்டு !
மங்கையர் தங்க மினுக்கல்ல - அவன்
மங்கல மஞ்சள் மணிக்கயிறு!''[282]

என்று பாடுவதைக் குறிப்பிடலாம்.

**கொச்சகக் கலிப்பா:-**

இனிய ஓசையும் எளிமையுமுடைய இவ்வடிவத்தில் சில பாடல்களைப் படைத்துள்ளார்.

(காட்டாக)

சிலப்பதிகாரம் எனும் தலைப்பில்,

"பால்நகையாள் வெண்முத்துப்

பல்நகையாள் கண்ணகிதன்

கால்நகையால் வாய் நகைபோய்

கழுத்துநகை இழந்த கதை"[283]

எனும் கவிதையைக் குறிக்கலாம்.

**எண்சீர்விருத்தம்:-**

மரபுக்கவிஞர்கள் விரும்பி எழுதும் இப்பாவடிவத்தில் ஒரு கவிதை மட்டும் இவர் எழுதியுள்ளார். கஸ்தூரிபா காந்தியைப் பற்றி,

"குறுகாத குளிர்நிலவே! உன்ம ணாளர்

கொதித்தெழுந்து புரட்சித்தீ ஆன போது

விறகானாய் தண்ணீராய் இருந்த தில்லை;

விடுதலைவான் வெளியிலவர் பறந்த போது

சிறகானாய் ! சிறைக் கூண்டாய் இருந்த தில்லை

சீர்திருத்த எழுத்துக்கள் எழுதும் போதோ

இறகானாய் ; கைவிலங்காய் இருந்த தில்லை;

இலக்கணத்தை உண்டாக்கும் இலக்கி யம்நீ"[284]

என்று கவிபாடியுள்ளார்..

**2. யாப்பின் திரிந்த வடிவங்கள்:-**

யாப்புக் கவிதைகள் சில, இலக்கண மீறல்களால் வடிவம் திரிகின்றன. இவ்வகையில் அப்துல் ரகுமான் பதினாறு கவிதைகளைப் படைத்துள்ளார். இவற்றில் ஆசிரியப்பாவில் எட்டுக் கவிதைகளும்,[285] கொச்சகக் கலிப்பாவில் எட்டுக் கவிதைகளும்[286] காணப்பெறுகின்றன.

இத்தகைய திரிந்த வடிவங்களின் நோக்கம், கவியரங்குகளில் வசதிக்கேற்ப அமைப்பதுவதுவே என மதிப்பிடலாம்.

**ஆசிரியப்பாவின் திரிந்த வடிவம்:-**

"அரசியல் இருட்டை

அகற்ற ஓர் 'காந்தி'

சமுதாய இருட்டைச்

சாய்க்க ஓர் 'சோதி'

எங்கள்

சரித்திர வானின்

சகோதர ஒளிகள்!"[287]

என்பதில் "எங்கள்" என்பது தனிச் சொல்லாக நிற்கிறது. "பல கவிதைகள் கருத்துக்களின் வசதிக்காகத் தங்கள் பழைய வடிவங்களிலிருந்து விரிந்து கொடுத்துப் புது உருவங்களை ஈன்றெடுத்துள்ளன. அந்த நேரத்தில் புது வடிவத்தின் பிறப்புத் தேவையென உணரப்பட்டது"[288] எனும் கருத்து இதனுடன் இணைத்துப் பார்க்கத்தக்கது.

**கொச்சகக்கலிப்பாவின் திரிபு வடிவம்:-**

மூவசைகளுடன் நான்கு சீர்களாக அமையப் பெற்ற கொச்சகக் கலிப்பாவின் வடிவத்தில் பல திரித்தலைச் செய்துள்ளார்..

"வானத்துச் சூரியன்

வர்ணங்களின் தலைவன்

அதனால் தான்

அந்தி மயானத்தில்

அவன் சிதையின் அருகே

அத்தனை நிறங்களின்

அனுதாபக் கூட்டம்"[289]

"அதனால்தான்" எனும் சொல்லின் மூலம் கலிப்பாலின் திரிபைக் காணலாம்.

**3. புதிய வடிவங்கள்:-**

அப்துல் ரகுமானின் கவிதைகளின் புதிய வடிவங்களை மூன்றாகப் பிரிக்கலாம். அவையாவன,

1. புதுக்கவிதை வடிவங்கள்
2. வசனகவிதை வடிவங்கள்
3. பரிசோதனைக் கவிதை வடிவங்கள்

என்பனவாகும்.

புதிய வடிவக் கவிதைகளின் அட்டவணை:-

| | புதுக்கவிதை வடிவங்கள் | வசனகவிதை வடிவங்கள் | பரிசோதனைக் கவிதை வடிவங்கள் |
|---|---|---|---|
| பால்வீதி | 57 | -- | 7 |
| நேயர்விருப்பம் | 7 | -- | 11 |
| சுட்டுவிரல் | 33 | 4 | 13 |
| ஆலாபனை | -- | 40 | 2 |
| மொத்தம் | 97 | 44 | 33 = 174 |

1. புதுக்கவிதை வடிவம்:-

யாப்பு விதிகளுக்கு அப்பாற்பட்டுப் பேச்சுச் சந்தத்தை மட்டுமே கொண்ட வடிவத்தைப் புதுக்கவிதை என்பர். அவ்வகையில் "சாவி இருக்கும் வரை" எனும் தலைப்பில்,

"ஞாபக முட்கள்
காயங்களைச் சுட்டி
வட்டமிடும்
என் ஏகாந்தத்தின்
இதயத்துடிப்பாக,
பிரிந்து சென்ற உன்
காலடி ஓசை"[290]

எனும் ஒரு கவிதையைச் சான்றாகக் காட்டலாம். இவ்வகையில் 97 கவிதைகளை எழுதியுள்ளார். புதுக்கவிதையில் மேலும் பல வடிவங்களில் வடித்துள்ளார்.

**2. வசன கவிதை வடிவம்:-**

"வசன கவிதை சொற்றொடர் அமைப்பில் வசன வடிவத்தைக் கொண்டிருக்கும். மரபு யாப்பின் சந்த ஒழுங்குகள் இதில் காணமுடியாது. அழுத்தத்தையோ குரல் ஏற்ற இறக்கத்தையோ காட்டும் வகையில் வாக்கியங்கள் அடிகளாகப் பிரிக்கப்பட்டிரா. ஆனால் சொல்லும் பொருளாலும், முறையாலும் கவிதைத்தன்மை பெற்றிருக்கும். அதாவது வசன வடிவில் இருந்தாலும் கட்டுரை வடிவம் இராது"[291] என்று அப்துல் ரகுமான் வசன கவிதைக்கு வரைவிலக்கணம் குறிக்கிறார். கவித்தன்மை பெற்றது, கட்டுரையாக இருக்காது என்று குறிப்பது பொருத்தமாகும். ஆலாபனை எனும் நூலின் முழுமையும் இவ்வடிவம் இடம்பெற்றுள்ளது. "வாழ்க்கையை இதுவரை யாரும் காணாத புதிய கோணத்திலிருந்து பார்க்கும் 'கவிக்கோ'வின் அற்புதமான தரிசனங்கள் வசன கவிதையின் வசந்த நடையில் வியப்பூட்டுகின்றன."[292]

வசன கவிதையை எழுதாத கவிஞர்கள் இல்லை எனும் அளவிற்கு இவ்வடிவம் எளிமையானது.

அப்துல் ரகுமான் கவிதைகளில் 44 கவிதைகள் வசன வடிவக் கவிதைகளாகும்.

(காட்டாக) "மனித புத்தி" எனும் தலைப்பில்,

> "அன்றொரு நாள் பார்த்தேன்
> மரத்தடியில்
> கூண்டுக்குள்ளிருந்து
> வெளியே நடந்து வந்த கிளி
> ஒரு மனிதனுக்கு
> 'வருங்காலத்'தை
> எடுத்துக் கொடுத்து விட்டுக்
> கூண்டுக்குள் சென்றது"[293]

எனும் வசன கவிதையை எழுதியுள்ளார்.

3. பரிசோதனைக் கவிதை வடிவங்கள்:-

அப்துல் ரகுமான் தமிழ் இலக்கியத்தில் சில புதிய பரிசோதனைகளைச் செய்துள்ளார். அவர் செய்த பரிசோதனை வடிவங்களைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தலாம்.

1. ஹைக்கூ வடிவம்,[294] 2. இருசீர் வடிவக் கவிதைகள்,[295] 3. உருது, கீத், ஹிந்தி இசைப் பாடல்கள் வடிவங்கள்,[296] 4. உருவகக் கதைக் கவிதை வடிவம்,[297] 5. நாடக வடிவம்,[298] 6. உரைநடை வடிவம்,[299] 6. சொற்பொழிவு வடிவம்,[300] போன்ற வடிவங்களைப் பரிசோதனைக் கவிதை வடிவங்களாக அப்துல் ரகுமான் செய்துள்ளார்.

அப்துல் ரகுமானின் 'பரிசோதனை முயற்சிகள்' எனும் தலைப்பில் மேற்சுட்டியவை விரித்துணரப் பெறுகிறது. எனவே இக்கவிதை வடிவங்களைத் தற்போது குறிக்கவில்லை.

அப்துல் ரகுமான் கவிதைகளின் வடிவங்களில் கவிதை அல்லாத பிற வடிவங்களான நாடக வடிவம், சொற்பொழிவு வடிவம் போன்றவற்றைக் கவிதையில் செய்து காட்ட முயன்றிருப்பது சிறப்பானதாகும்.

பரிசோதனைக் கவிதை வடிவங்களின் அட்டவணை

| | பால்வீதி | நேயர்விருப்பம் | சுட்டுவிரல் | ஆலாபனை | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| ஹைகூ வடிவம் | 5 | | | | 5 |
| இருசீர் வடிவம் | | 6 | | | 6 |
| பிறமொழி இசைப் பாடல் வடிவம் | | 5 | | | 5 |
| உருவகக் கதை வடிவம் | 2 | | 3 | | 5 |
| நாடக வடிவம் | | | 4 | | 4 |
| உரைநடை வடிவம் | | | 2 | 2 | 4 |
| சொற்பொழிவு வடிவம் | | | 4 | | 4 |
| மொத்தம் | 7 | 11 | 13 | 2 | 33 |

பரிசோதனைக் கவிதைகள் உத்திநிலையில் பால்வீதியில் அதிகக் கவிதைகள் உள்ளன. வடிவ நிலையில் குறைந்து இருப்பதைக் காணலாம். சமுதாயத்தின் சீரழிவுகளைச் சாடுவதற்குப் பல்வேறு நிலைகளில் தன் உணர்வை வெளிப்படுத்தியதால் சுட்டுவிரலில் பல வடிவக் கவிதைகள் உள்ளன.

# முடிவுகள்

கவிதையின் கரு உள்ளடக்கமாகும். உள்ளடக்கத்தின் வெளிப்பாட்டிற்கு வடிவமும், உத்திகளும் துணை நிற்கின்றன.

கவிதை கூறுகிற உள்ளடக்கம் அல்லது பொருள் காலந்தோறும் ஒன்று போல இருப்பதில்லை. இந்நிலையைக் கருத்தில் கொண்டு இலக்கி யத்தைப் பொருள் விளக்கிப் பகுத்தாய்தல் வேண்டும். இலக்கியப் புலமை பெறுவதற்கு அத்தகு ஆய்வு தொடக்க நிலையாகும்.

இலக்கிய வரலாற்றில் பொருள் நிலையில் மூன்றுவிதக் காலங்கள் உண்டு. அவையாவன:

1. பொருள் தனித்த காலம்
2. பொருள் இணைவுக்காலம்
3. பொருள் விரிவுக்காலம் என்பனவாகும். ஐரோப்பியர் வருகைக்குப் பிறகு உருவான புதுக்கவிதையில் பொருள் விரிவுக்காலம் இடம் பெற்றுள்ளது.

புதுக்கவிதையின் தோற்றத்திற்கான காரணிகளுள் உள்ளடக்கமும் வடிவமும் குறிப்பிடத்தகுந்தவைகளாகும்.

புதுக்கவிதையின் உள்ளடக்கத்திற்கு வரலாறு உண்டு. புதுக்கவிதைக் கவிஞர்கள் குழுவாக இயங்கிக் கவிதைகளை வளர்த்தனர். அல்லது இதழ்களைச் சார்ந்து கவிதைகளை வெளியிட்டனர். இரண்டிலும் சாராமல் புதுக்கவிதைக் கவிஞராக வளர்ந்தவர் அப்துல் ரகுமான்.

“குழு” எனில் குறிப்பிட்ட நோக்கம் அல்லது கொள்கைகள் உள்ளடக்கத்தில் வெளிப்படும். “இதழ்களுக்கும்” அந்நிலை பொருந்தும்.

அப்துல் ரகுமான் அந்நிலைகளைச் சாராத நிலையில் உள்ளடக்கத்தில் தனித் தன்மைகளைப் பெற்றிருப்பவராக உள்ளார்.

கவிதைப் பொருள்வகைப்பாட்டு நிலையில் பொருள் விரிவு காலத்திற் குரிய கவிதைகளாகக் கவிஞரின் கவிதைகள் உள்ளன. செயல்திறம் மிகுந்த வீறுணர்ச்சிக் கவிதைப் போக்கைச் சார்ந்தவராக அப்துல் ரகுமான் விளங்குகிறார்.

ஆய்விற்குட்படுத்தப்பெற்ற இவரது கவிதைகளில் தற்சார்பு பெறாத கவிதைகள் மிகுந்துள்ளன. தற்சார்பு பெற்ற கவிதைகள் குறைவாகவே உள்ளன. குறிப்பாக ''பால்வீதியில்'' தற்சார்பு மிகுந்துள்ள நிலை மதிப்பிடப் பெற்றது.

''பால்வீதி'' கவிஞரின் முதல் தொகுப்பு ஆகையால் தற்சார்பு மிகுந்துள்ளது.

தற்சார்பு பெறாத கவிதைகளை இயற்கை, இறைமை, தனிமனிதம், குடும்பம், சமூகம், தத்துவம் என்ற வகைப்பாட்டில் பகுக்கலாம். வகைப் பாட்டில் சமூகக் கவிதைகள் முதல் நிலையிலும் தத்துவக் கவிதைகள் இரண்டாம் நிலையிலும் காணப்பெறுகின்றன. தனிமனிதம், இயற்கை போன்றவை சமஅளவாக உள்ளன. இறைமை, குடும்பம் சார்பான கவிதை கள் மிகுதியாக இல்லை.

''தற்சார்பு'' கவிஞரைப் பற்றியும் கவிஞரின் கவிதைகளைப் பற்றியுமாக அமைந்துள்ளன. ''சுயமோகம்'' சமூகக்கும்பலில் ஒரு மனிதனைத் தனிமைப் படுத்திக் காட்டும் என்பது இவரது சிந்தனை. ஓவியம், சிற்பம், இசை போன்ற கலைகளில் கவிஞருக்கு ஈர்ப்பு இருப்பதைத் தற்சார்புக் கவிதைகள் உணர்த்தியுள்ளன. கவிஞர் தன்னுடைய கவிதைகளை உயர்ந்ததாகக் கருதும் இயல்புடையவர்.

''கவிஞரின் ஆறாவது விரல்வழியே சிலுவையிலிருந்து வடிகிறது இரத்தம். கவிஞரது மாம்சம் வார்த்தையாகிறது'' என்று கவிதைப் பிறப்பின் கோட்பாட்டைக் குறிப்பிட்டுள்ளார். வாழ்க்கை என்பது சிலுவை, அதில் கவிஞர் அறையப்பெற்றிருப்பதாகவும் ஒவ்வொரு அனுபவமும் ''ஆணி'' என்றும்

குறிப்பிட்டுள்ளார். கவிதைக்குப் பொருள் முதன்மையானது. சந்தமல்ல என்பது கவிஞரின் கவிதைக் கோட்பாடு ஆகும்.

இயற்கையை இயற்கையாகப் பார்க்கிற இயல்பு கவிஞரிடம் குறைவு. இயற்கையைச் சமூகத்துடன் இணைத்துப் பார்க்கிற இயல்பு மேலோங்கி உள்ளது. எனினும் இயற்கையை இயற்கையாகவே நோக்கும்போது கவிஞரிடம் கற்பனைத் திறமும் வருணனைத் திறமும் மிகுந்துள்ளன.

இறைவனுக்கு உருவமும் பெயரும் இல்லை என்கிற கருத்தும் இறைவன் ஒருவனே என்பதும் கவிஞரின் இறைக்கோட்பாடாகும். இறைவன் சமயம் கடந்தவராகவும், மானுடர்க்கு அரிய ஆற்றல்களை வழங்கியவராகவும் உள்ளார் என்று அப்துல் ரகுமான் குறிப்பிட்டமை கருதத்தக்கதாகும்.

தனிமனித வகைப்பாட்டில் காதல் உணர்வு குறிப்பிடத்தகுந்தது. மனதைப் பக்குவப்படுத்தும் ஆற்றல் காதல் நெருப்பிடம் உண்டு. ஆனால், காதல் நெருப்பில் மாள்வது பொருத்தமில்லை என்பது கவிஞர் கருத்தாக உள்ளது. காதலுக்குள் “காமம்” ஒரு கூறுதான். காமம் பெருகினால் காதலின் “ தெய்வீகம்” சிதைந்துவிடும் என்பது கவிஞரின் காதல் பற்றிய கோட்பாடாகும்.

குடும்பம் பற்றி இரு கவிதைகள் இருந்தாலும் முத்தாய்ப்பான சிந்தனை வாசகரின் சிந்தனைவளத்திற்குக் காரணியாக அமைந்துள்ளன. ஒன்றேபோல் இருப்பதைப் பொருத்த முடியாது. முரணாக இருப்பதைத் தான் பொருத்த இயலும். ஆண்-பெண் முரணின் சங்கமத்தில்தான் குடும்ப உருவாக்கம் நிகழ்கிறது என்பது கவிஞரின் கருத்து.

கவிதைகளில் தத்துவ வீச்சு இடம் பெற்றிருப்பது கவிஞரின் தனித் தன்மையாகும். தத்துவக் கவிதைகளில் தர்க்கக் கவிதைகளும் அடுத்த நிலையில் அறவியல் கவிதைகளும் மிகுந்துள்ளன. ஆய்விற்கு எடுக்கப்பெற்ற கவிதைத் தொகுப்புக்களில் “ஆலாபனையில்” தர்க்கம், அறவியல் தொடர்பான கவிதைகள் மிகுந்திருப்பது மதிப்பிடப் பெற்றது. தர்க்கக் கவிதைகள் முரணோடு அமைந்துள்ளன. அகவுலகையும் புற உலகையும் தர்க்க ரீதியாகச் சிந்திப்பதற்கு ஞானத்திற்கு முதன்மை தரப்பெற்றுள்ளது.

அப்துல் ரகுமான் கவிதைகளில் சமூகச் சார்பு மேலோங்கியுள்ளது. குறிப்பாகச் "சுட்டுவிரல்" கவிதைத் தொகுப்பிலும், "பால்வீதியிலும்" மிகுந்திருப்பது இனங்காணப்பெற்றது.

சமூகச் சார்பான கவிதைகளில் சமூகச் சீர்கேடுகள், அரசியல், பொருளாதாரம் போன்ற நிலைகளில் மிகுதியாகச் சிந்தித்துள்ளார். சாதி, சமயம், பெண்மை குறித்த சமூகச் சார்புச் சிந்தனைகள் மிகக் குறைவாக இருப்பது ஆய்வின் வழி உணரப் பெற்றது.

காந்தி, நேரு போன்ற தேசியத்தலைவர்களைப் போற்றியுள்ளார். இக்கால அரசியல் சீர்கேட்டை மிகுதியாகச் சாடியுள்ளார். குறிப்பாக அரசியல் நிலை, அரசியலில் உள்ள தேர்தல், கட்சிகள், கொடி இவைகளின் செயல்பாடுகளையும், ஆட்சி செய்பவர்களின் அதிகாரங்களையும் கவிதைகளின் வழி விமர்சித்து, மக்களுக்கு விழிப்புணர்ச்சி ஊட்ட முயன்றமை கருதத்தக்கதாகும். கவிஞர் சமுதாயக் கடமையுணர்வு மிக்கவர். ஆகையால் வறுமையின் ஆட்சி, தொழிலாளர் நிலை போன்றவைகளைப் பாடியுள்ளார். வேர்வை சிந்த உழைக்கும் உழைப்பு நாட்டிற்கு விடியல் தரும் என்றும், போலியான அறிவிப்புகளால் பயனில்லை என்பதிலும் உறுதியான பிடிப்புக் கொண்ட தன்மையைக் கவிதைகளில் புலப்படுத்தியுள்ளார்.

பெண்ணியம் குறித்த சிந்தனைகள் ஓங்கியிருக்கும் இக்காலத்தில் கவிஞரின் சிந்தனை வித்தியாசமாக உள்ளது. பெண்களுக்குச் சமூகத்தில் உரிமையும் விடுதலையும் வேண்டும் என்பதில் கவிஞர் உடன்பட்டுள்ளார். உரிமை என்ற போலியில் பெண்ணிய இயல்புகளைப் பெண்கள் இழப்பதைக் கவிஞர் வரவேற்கவில்லை. குழந்தைகளைப் புறக்கணித்துப் பெண்கள் அலுவல் செய்யப் போவதை கவிஞர் வரவேற்கவில்லை.

உலகை மையமிட்டச் சமுதாயச் சீர்கேடுகளில் மனிதன் நாகரீகம் அடைந்திருப்பதைச் சுட்டி, காட்டுமிராண்டி நாட்டுமிராண்டி ஆகியுள்ளான் எனத் தம் பார்வையில் மதிப்பிட்டுள்ளார். இனவெறி அழிவுகள் குறித்து வேதனைப்படும் நிலையினைக் கவிதைகளின் வழி உணரப் பெற்றது.

இந்தியநாட்டின் சமுதாயச் சீர்கேடுகள் குறித்து மிகுதியாகச் சிந்தித்து, அதிலிருந்து மீள்வதற்கான வழிகளைப் பொறுப்புணர்வுடன் கவிதைகளில் புலப்படுத்தியுள்ளார்.

அப்துல் ரகுமான் கவிதைகளில் யாப்புவடிவம், யாப்பின் திரிந்த வடிவம், புதிய வடிவம் என்ற மூன்று பாகுபாடு நடைமுறைப்படுத்தப் பெற்றுள்ளது. யாப்பு வடிவங்களில் சந்தப்பா, ஆசிரியப்பா, சிந்து, கொச்சகக்கலிப்பா, எண்சீர் விருத்தம் போன்ற வடிவங்களைப் பாடியுள்ளார். குறிப்பாகச் சந்தப்பாக்களை மிகுதியாகப் பாடியுள்ளார். கவியரங்கிற்கேற்றவை என்பதால் ஆசிரியப்பா வடிவிலும் கவிதை பாடியுள்ளார்.

யாப்புக் கவிதைகள் சில இலக்கண மீறல்களால் வடிவம் திரிந்துள்ளன. திரிந்த வடிவங்களின் நோக்கமும் கவியரங்குகளின் வசதிக்கேற்ப அமைந்ததாகும்.

புதிய வடிவங்களில் புதுக்கவிதை வடிவங்கள், வசன கவிதை வடிவங் கள், பரிசோதனைக் கவிதை வடிவங்கள் என்ற மூன்று நிலையில் அமைந் துள்ளன. குறிப்பாக, புதுக்கவிதை வடிவங்களில் மிகுதியாகப் பாடியுள்ளார். இதற்கு அடுத்த நிலையில் வசன கவிதை வடிவங்களில் பாடியுள்ளார்.

ஹைகூவடிவம், இருசீர்வடிவக்கவிதைகள், உருது, ஹிந்தி இசைப்பாடல் களில் ''கீத்'' எனும் வடிவக்கவிதைகள், உருவகக்கதைக் கவிதைவடிவம், நாடகவடிவம், உரைநடைவடிவம், சொற்பொழிவு வடிவம் போன்ற வடிவங்களில் கவிஞர் பரிசோதனை முயற்சிகளை நிகழ்த்தியுள்ளார். கவிதை அல்லாத பிற வடிவங்களாக நாடகவடிவம், சொற்பொழிவுவடிவம் போன்றவற்றைக் கவிதைகளில் கையாள முயன்றிருப்பது கவிஞரின் தனித்தன்மையாகும்.

# குறிப்புகள்

1. பி. கோதண்டராமன், இலக்கியமும் விமர்சனமும், ப.157.
2. பா.ரா. சுப்பிரமணியன்(மு.ப.ஆ) கிரியாவின் தற்காலத் தமிழகராதி, ப.471.
3. தொல்காப்பியம், இளம்பூரணம், நூ.எண்.383.
4. நன்னூல், முகவை ராமானுசக் கவிராயர், நூ.எண்.268.
5. பா.ரா.சுப்பிரமணியன், (மு.ப.ஆ), கிரியாவின் தற்காலத் தமிழகராதி, ப.706.
6. அ.மு. பரமசிவானந்தம், கவிதையும் வாழ்க்கையும், ப.28.
7. எஸ். வையாபுரிப்பிள்ளை, இலக்கியச் சிந்தனைகள், ப.17.
8. ஜி.ஜான்சாமுவேல், ஷெல்லியின் கவிதைக் கலை, ப.2.
9. ரெனிவெல்லாக் ஆஸ்டின்வாரன், எல்.குளோரியா சுந்தரமதி(மொ.பெ.ஆ)இலக்கியக்கொள்கை ப.197.
10. ஆ.வேலுப்பிள்ளை,தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், முகவுரைப.V.
11. மேலது, முகவுரை, ப.VI.
12. ச. சிவகாமி, இலக்கியப் பொருட்பகுப்பாய்வு, ப.32.
13. மேலது, ப.33.
14. ஜி.ஜான்சாமுவேல், ஷெல்லியின் கவிதைக் கலை, ப.2.
15. மேலது, ப.8.
16. மேலது, ப.8.
17. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப.147.
18. மா. இராமலிங்கம், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், ப.151.
19. ந.வீ. செயராமன், புதுக்கவிதையியல், பக்.26-27.
20. மீரா(ப.ஆ), புதுக்கவிதை ஒரு கருத்தரங்கம், ப.6.
21. சு. அரங்கராசு, தமிழ்ப் புதுக்கவிதை ஒரு திறனாய்வு, ப.104.
22. மேலது, ப.105.
23. மேலது, ப.123.

24. ந.வீ. செயராமன், புதுக்கவிதையியல், ப.26.
25. சு. அரங்கராசு, தமிழ்ப் புதுக்கவிதை ஒரு திறனாய்வு, ப.124.
26. வல்லிக்கண்ணன், புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும், ப.80.
27. மேலது, ப.17
28. சு. அரங்கராசு, தமிழ்ப் புதுக்கவிதை ஒரு திறனாய்வு, ப.158
29. நா. வானமாமலை, புதுக்கவிதை முற்போக்கும் பிற்போக்கும், ப.37.
30. மேற்கோள் காட்டப் பெற்றது, ஞானக்கூத்தன், கசடதபற,((முதல்இதழ்)ப.2.
31. சிற்பி, வெளிச்சங்கள், (நாங்கள்), ப.VII.
32. அப்துல் ரகுமான், பால் வீதி, ப.3.
33. W.B. Yeats, Selected Criticism, P.107.
34. சுப. கணபதி, (ஆங்கிலப் பேராசிரியர் அழகப்பா கலைக்கல்லூரி) அவர்களுடன் கலந்துரையாடலில் பெற்ற செய்தி. 25.11.98.
35. பாரதியார், பாரதியார்கவிதைகள், ப.72.
36. மேலது, ப.207.
37. அப்துல் ரகுமான்,(என் பேனாவின் அடிச்சுவட்டில்), முத்தாரம்,(22.2.96),ப.10.
38. மேலது, பால்வீதி, ப.42.
39. மேலது, முத்தாரம், (26.7.96) ப.24.
40. அப்துல் ரகுமான், ஆலாபனை, பக். 136-138.
41. மேலது, பக்.133-135.
42. மேலது, பக்.34-37.
43. அப்துல் ரகுமான், ப.45.
44. மேலது, ப.26.
45. மேலது, ப.23.
46. மேலது, ப.24.
47. மேலது, ப.7.
48. மேலது, ப.7.
49. மேலது, ப.7.

50. மேலது, ப.5.
51. அப்துல் ரகுமான், மரணம் முற்றுப்புள்ளி அல்ல, ப.11.
52. புதிய ஏற்பாடு, யோவான், (தி. கதியோன்ஸ் இன்டர்நேசனல்ஸ்), ப.124.
53. அப்துல் ரகுமான் பால்வீதி, ப.6.
54. அப்துல் ரகுமான் பால்வீதி, ப.8.
55. ” நேயர் விருப்பம், ப.68.
56. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.39.
57. மேலது, ப.36.
58. Words worth, Nature in Romantic poetry, P.18.
59. ச. சிவகாமி, இலக்கியப் பொருட்பகுப்பாய்வு, ப.51.
60. அப்துல் ரகுமான், ஆலாபனை, பக்.51-54.
61. மேலது, ப.76.
62. மேலது, ப.145.
63. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், பக்.12-13.
64. மேலது, ப.14.
65. மேலது, ப.79.
66. அப்துல் ரகுமான், ஆலாபனை, ப.44.
67. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.39.
68. மேலது, பக்.20-22.
69. மேலது, ப.83.
70. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.78.
71. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.85.
72. மேலது, ப.35.
73. மேலது, ப.31.
74. மேலது, ப.31.
75. மேலது, ப.33.
76. அப்துல் ரகுமான், ஆலாபனை, ப.27.
77. மேலது, ப.28.
78. மேலது, ப.28.

79. மேலது, ப.29.

80. மேலது, பக்.61-64.

81. தமிழண்ணல், காதல் வாழ்வு, ப.47.

82. தொல்காப்பியம், இளம்பூரணம்,(பொருளதிகாரம்) நூா.எண்.219.

83. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.232.

84. அப்துல் ரகுமான், நேயர் விருப்பம், ப.89.

85. அப்துல் ரகுமான் ஆலாபனை, பக்.126-127.

86. அப்துல் ரகுமான், ஆலாபனை, பக்.129.

87. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.82.

88. மேலது, ப.87.

89. மேலது, ப.75.

90. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.33.

91. மேலது, ப.34.

92. மேலது, ப.22.

93. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.73.

94. மேலது, ப.69.

95. மேலது, ப.87.

96. மேலது, ப.81.

97. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.9.

98. ” நேயர்விருப்பம், ப.90.

99. அப்துல ரகுமான், பால்வீதி, ப.17.

100. மேலது, ப.19.

101. மேலது, ப.20.

102. அப்துல் ரகுமான், மரணம் முற்றுப்புள்ளி அல்ல, ப.26.

103. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.20.

104. மேலது, ப.21.

105.மா.கணேசன்,(தத்துவத்தின் பயன்),கருத்து,4, மாதஇதழ் ஜுலை,1995 ப.50.

106.மா.கணேசன்,(பிரக்ஞையின் வெற்றி),கருத்து,4 மாதஇதழ், ஜுலை,1995ப.56.

107. மேலது, ப.56.

108. சஜ்ஜாத் புகாரி, (கவிக்கோவின் கவிதைகளில் உருது பாரசீக இலக்கியத்தின் தாக்கம்), கவிக்கோ மணிவிழா மலர், 1998, ப.197.

109. மா. கணேசன், (தத்துவத்தின் பயன்) கருத்து 4 மாத இதழ் ஜுலை,1995, ப.51.

110. மேலது, ப.51.

111. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.25.

112. ” ஆலாபனை, ப.34.

113. ” பால்வீதி, ப.18.

114. ” நேயர் விருப்பம், ப.23.

115. ” பால்வீதி,முன்னுரை.

116. ” சுட்டுவிரல், ப.66.

117. அப்துல் ரகுமான், ஆலாபனை, ப.25.

118. மேலது, ப.139.

119. மேலது, ப.16.

120. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.11.

121. அப்துல் ரகுமான், ஆலாபனை, ப.104.

122. மேலது, ப.69.

123. மேலது, ப.130.

124. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.148.

125. ” ஆலாபனை, ப.65.

126. ” பால்வீதி, ப.56.

127. ” ஆலாபனை, ப.114.

128. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.62.

129. மேலது, ப.30.

130. மேலது, ப.73.

131. மேலது, ப.53.

132. மேலது, ப.76.

133. அப்துல் ரகுமான், ஆலாபனை, பக்.11-12.

134. ” பால்வீதி, ப.25.

135. மேலது, ப.95.

136. மேலது, ப.95.

137. மேலது, ப.38.

138. மேலது, ப.14.

139. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.91.

140. மேலது, ப.24.

141. அப்துல் ரகுமான், ஆலாபனை, பக்.120-121.

142. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.28.

143. மேலது, ப.27.

144. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.52.

145. ” சுட்டுவிரல், ப.142.

146. ” பால்வீதி, ப.63.

147. அப்துல் ரகுமான், ஆலாபனை, ப.115.

148. மேலது, ப.80.

149. மேலது, ப.125.

150. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.101.

151. ” நேயர்விருப்பம், ப.78.

152. ரெனிவெல்லக் & ஆஸ்டின் வாரன், குளோரியா சுந்தரமதி, (மொ.பெ.ஆ) இலக்கியக் கொள்கை, ப.102.

153. அப்துல் ரகுமான், முட்டை வாசிகள், ப.36.

154. ” பால்வீதி, ப.14.

155. ” முட்டைவாசிகள், ப.143.

156. ” (ஆறாவது விரல்), கவிக்கே மணிவிழா மலர், 1998, ப.16.

157. டி. யோகீஸ்வரன், தமிழ்க் கவிதைகளில் சமுதாயச் சிக்கல்கள்,ப.128.

158. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், பக்.25-27.

159. மேலது, ப.25.

160. மேலது, பக்.5-26.

161. அப்துல் ரகுமான், முட்டை வாசிகள், ப.73.

162. ” ஆலாபனை, பக்.92-93.

163. ” கவிக்கோ மணி விழா மலர், 1998, ப.16.

164. அப்துல் ரகுமான், நேயர் விருப்பம், ப.42.

165. மேலது, ப.43.

166. மேலது, ப.45.

167. மேலது, ப.45.

168. மேலது, ப.47.

169. மேலது, ப.47.

170. மேலது, ப.50.

171. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.85.

172. ” சுட்டுவிரல், ப.114.

173. அப்துல் ரகுமான், ஆலாபனை, பக்.153-154.

174. மேலது, பக்,139-140.

175. மேலது, ப.54.

176. மேலது, ப.75.

177. மேலது, பக்.143-144.

178. மேலது, ப.61.

179. மேலது, ப.59.

180. மேலது, ப.56.

181. மேலது, ப.77.

182. மேலது, ப.82.

183. மேலது, ப.83.

184. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.70.

185. ” சுட்டுவிரல், ப.48.

186. மேலது, ப.129.

187. மேலது, ப.16.

188. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.72.

189. மேலது, ப.51.

190. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.17.

191. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.42.

192. மேலது, ப.109.
193. மேலது, ப.111.
194. மேலது, ப.127.
195. மேலது, ப.32.
196. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.133.
197. ” நேயர்விருப்பம், ப.88.
198. வி. உண்ணாமலை, புதுக்கவிதையில் சமுதாயம், ப.139.
199. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.46.
200. மேலது, பக்.46-47.
201. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.60.
202. மேலது, ப.71.
203. மேலது, ப.44.
204. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், பக்.88-89.
205. ” நேயர்விருப்பம், ப.34.
206. ” பால்வீதி, பக்.46-48.
207. ” நேயர்விருப்பம், ப.29.
208. ” சுட்டுவிரல், பக்.93-94.
209. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.40.
210. மேலது, பக்.26-28.
211. இரத்ன வெங்கடேசன், பாவேந்தரின் சமூகப்புரட்சி, பக்.77-78.
212. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.9.
213. ” ஆலாபனை, ப.9.
214. அப்துல் ரகுமான், கவிக்கோ மணிவிழாமலர், ப.244.
215. மேலது, ப.84.
216. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.80.
217. மேலது, ப.81.
218. ந. கடிகாசலம், சமூகச் சிக்கல்களும், தீர்வுகளும், பக்.64-65.
219. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.41.
220. ” ஆலாபனை, பக்.149-150.

221. ” பால்வீதி, ப.76.

222. ” சுட்டுவிரல், ப.19.

223. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.79.

224. மேலது, ப.16.

225. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், பக்.135-136.

226. ” பால்வீதி, ப.68.

227. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.20.

228. மேலது, ப.21.

229. மேலது, பக்.145-146.

230. அப்துல் ரகுமான், பால்வீதி, பக்.50-52.

231. ” சுட்டுவிரல், ப.35.

232. அப்துல் ரகுமான், ப.39.

233. மேலது, ப.149.

234. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.38.

235. மேலது, ப.107.

236. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.87.

237. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.105.

238. அப்துல் ரகுமான், ஆலாபனை, ப.32.

239. ” சுட்டுவிரல், ப.141.

240. ” பால்வீதி, ப.74.

241. ” சுட்டுவிரல், ப.113.

242. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.88.

243. மேலது, ப.49.

244. அப்துல் ரகுமான், ஆலாபனை, ப.47.

245. ” ஆலாபனை, ப.50.

246. ” சுட்டுவிரல், ப.71.

247. ” பால்வீதி, ப.59.

248. ” பால்வீதி, ப.13.

249. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.118.

250. மேலது, ப.102.

251. மேலது, ப.131.

252. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.83.

253. ” சுட்டுவிரல், பக்.11-12.

254. மேலது, பக்.86-87.

255. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.58.

256. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.97.

257. மேலது, ப.97.

258. மேலது, ப.137.

259. மேலது, ப.84.

260. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.93.

261. மேலது, ப.68.

262. அப்துல் ரகுமான், ஆலாபனை, பக்.17-18.

263. மேலது, ப.22.

264. மேலது, பக்.105-106.

265. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், பக்.59-65.

266. அ. செகந்நாதன், புதுக்கவிதை திறனாய்வு, ப.46.

267. ப.ரா. சுப்பிரமணியன்(மு.ப.ஆ), க்ரியாவின் தற்காலத் தமிழகராதி, ப.895.

268. மு. வரதராசன், இலக்கிய மரபு, பக்.9-10.

269. தமிழவன், இருபதில் கவிதை, ப.9.

270. ” புதுக்கவிதை நாலு கட்டுரைகள், ப.23.

271. மீரா(ப.ஆ), புதுக்கவிதை ஒரு கருத்தரங்கம், ப.8.

272. சு. அரங்கராசு, புதுக்கவிதை ஒரு திறனாய்வு, ப.255.

273. மீரா(ப.ஆ), புதுக்கவிதை ஒரு கருத்தரங்கம், ப.9.

274. கலைச்செல்வன், புதுக்கவிதையில் நடையியல் ஆய்வு, ப.3.

275. சு. அரங்கராசு, புதுக்கவிதை ஒரு திறனாய்வு, ப.256.

276. 1. வரவேண்டும் நீ (நேயர்விருப்பம்)
    2. அசத்தியமே செயதே (சுட்டுவிரல்)

3. இந்தியனின் உயில் ( " )

4. பீரங்கிப் பாட்டு ( " )

5. என்ன செய்யப் போகிறாய் ( " )

6. கோளுரை ( " )

7. தொலைந்துபோனவர்கள் ( " )

8. இருபக்கங்கள் ( " )

9. சவால் ( " )

10. நாத்திகர் ( " )

11. அலாவுதீன் விளக்கு ( " )

277. 1. உரிமை (நேயர் விருப்பம்)

2. எளிமை ( " )

3. நேரு ( " )

4. தட்டுங்கள் திறக்கப்படும் ( " )




278. 1. காந்தியடிகள் (நேயர்விருப்பம்)

2. சக்கையில்லாத கரும்பு ( " )

3. மாலை வந்தது ( " )

279. 1. பதவி (நேயர்விருப்பம்)

2. முத்துக்கள் ( " )

280. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.120.

281. அப்துல் ரகுமான், நேயர் விருப்பம், ப.47.

282. மேலது, ப.42.

283. மேலது, ப.91.

284. மேலது, ப.43.

285. 1. மண் (நேயர்விருப்பம்)

2. ஆயள்தண்டனை ( " )

3. மரணம் ( " )

4. கேள்வி ( " )

5. மரங்கள் ( " )

6. நகமுகுடம் ( " )

7. முதுமை ( " )

8. மின்னல் ( " )

286. 1. குளம் (நேயர்விருப்பம்)

2. உழவர்களைப் பாடுவோம் ( " )

3. ஆயிரம் திருநாமம் பாடி ( " )

4. அந்தி ( " )

5. வடலூரும் வார்த்தாவும் ( " )

6. தானாப் பெற்ற நாள் ( " )

7. ஒப்பில்லாத சமுதாயம் ( " )

8. யாருக்கு ( " )

287. அப்துல் ரகுமான், நேயர் விருப்பம், ப.44.

288. தமிழவன், இருபதில் கவிதை, ப.11.

289. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.39.

290. " பால்வீதி, ப.9.

291. " விலங்குகள் இல்லாத கவிதை, ப.26.

292. " ஆலாபனை, பின்அட்டை.

293. " ஆலாபனை, ப.109.

294. " பால்வீதி, ப.27.

295. " நேயர்விருப்பம், பக்.91-94.

296. யாரவள் கனவில் வருகிறாள் (நேயர்விருப்பம்)

எரியட்டுமே சுடர் எரியும் வரை ( " )

| | | |
|---|---|---|
| | மனம் வாடும் முன்னே | ( „ ) |
| | இளவேனில் | ( „ ) |
| | மாலை வந்தது | ( „ ) |
| 297. | சிகப்பு நாடா | (சுட்டுவிரல்) |
| | கொம்பு | ( „ ) |
| | ஈநாடு | ( „ ) |
| | வியர்க்கும் சாமரைகள் | (பால்வீதி) |
| | நெற்றிக் கண் | ( „ ) |
| 298. | புதிய பாரதம் | (சுட்டுவிரல்) |
| | சிகப்பு நாடா | ( „ ) |
| | முகவரிச்சீட்டு | ( „ ) |
| | பாருக்குள்ளே நல்ல நாடு | ( „ ) |
| 299. | பழைய வீடு | (சுட்டுவிரல்) |
| | இரவின் கண்ணீர் | (ஆலாபனை) |
| | ஒரு மேகத்தைப் போல் | ( „ ) |
| | தவறான எண் | ( „ ) |
| 300. | கல்லின் காயம் | (சுட்டுவிரல்) |
| | இரண்டாம் வருகை | ( „ ) |
| | Be Indian Buy Indian | ( „ ) |
| | டி.வி. பார்க்கும் ராமர்கள் | ( „ ) |

# இயல் 4

## புதுக்கவிதை உத்திகள்

### உத்தி வகைகள்

அ) பருப்பொருள் வடிவ உத்திகள்

அங்கதம்
அப்துல் ரகுமான் கவிதைகளில் அங்கதம்
முரண்
அப்துல் ரகுமான் கவிதைகளில் முரண் உத்திகள்
தலைப்பு
அடுக்கு வர்ணனை
சொல்லாடல்

ஆ) நுண்பொருள் வடிவ உத்திகள்

குறியீடு
தமிழில் குறியீடு
குறியீடு அமையும் முறை
குறியீட்டுக் கவிதை
குறியீட்டின் வகைப்பாடு
சொந்தக் குறியீடு
இயற்கைக் குறியீடு
தொன்மக் குறியீடு
இலக்கியக் குறியீடு
வழக்குக் குறியீடு
இடம், காலம் பற்றியக் குறியீடு
படிமம்
படிமம் சொற்பொருள் விளக்கம்
படிமம் வரைவிலக்கணச் சிந்தனைகள்
படிமமும் காட்சித் தன்மையும்
உவமை - உருவகம் - படிமம்.
படிமம் குறியீடாதல்
படிம இயக்கமும் கவிதை நிலையும்
தமிழிலக்கியமும் படிமமும்
படிமத்தின் வகைகள்
அப்துல் ரகுமான் கவிதைகளில் படிமங்கள்
வினைப் படிமம்
பயன் படிமம்
மெய்ப் படிமம்
உருப்ப படிமம்
வினைப்படிமும் பயன் படிமமும்
குறியீட்டுப் படிமங்கள்

## 4. புதுக்கவிதை உத்திகள்

கவிதையின் சிறப்பிற்கு அதன் உருவாகிய அமைப்பு முறை மட்டும் போதுமானதன்று. வெளிப்படுத்தும் முறையுடன் தொடர்புடைய உத்திமுறையும் தேவையானதெனலாம்.

“இலக்கியம் இலக்கணம் முதலியவற்றில் திறம்பட வெளிப்படுத்தும் முறைக்கு உத்தி”[1] என்று அகராதி குறிப்பிடும். கூற வந்த பொருளை நேராகக் கூறாமல் சொல்லும் விதத்தில் புதுமையை ஏற்படுத்துகிற நிலையில் உத்தி (Technique) உருவாகியது. “ஒரு கலைஞன் தன் துறையின் செவ்விய வெளியீட்டிற்குப் பயன்கொள்ளும் ஆற்றலும் ஆக்கமுறையும் உத்தி எனப்படுகிறது. இலக்கியக் கலைக்கும் இது ஒக்கும்”[2] என்று குறிப்பிடுவர்.

மேலும், “உத்தி என்பது கலை ஆக்க முறை, படைப்பில் கலைஞனின் முத்திரைப் பதிவாய் அமைவது, அவன் ஆளுமைத் திறத்தின் தத்துவங்களைச் சுட்டிக்காட்ட வல்லது”[3] என்று உத்தியைக் கவிஞனின் ஆளுமைத் திறத்தோடு இணைத்துக் கூறுவர்.

கலை நேர்த்திமிக்கதாக ஓர் உள்ளடக்கம் திகழ அடிப்படையாக அமைவது உத்தியெனக் கூறலாம். உத்தியில் படிப்பவரை மனங்கொள்ளச் செய்யும் செயல்பாடு உள்ளது.

### புதுக்கவிதையில் உத்திகள்:

இலக்கியத்தில் உத்திகள் இடம் பெறுவது பொதுவான இயல்பெனினும் எல்லாக்காலங்களிலும் இலக்கியத்தின் உத்திகள் ஒன்றுபோல இருக்கும் என்று கூறுவதற்கில்லை. அவ்வக்காலத்தின் சமூகச் சூழல், சிந்தனைப் போக்கு போன்றவைகளுக்குத்தக இலக்கிய வகையின் உருவாக்கம் நிகழும். அவ்விலக்கிய வகையில் இடம்பெறும் உத்திகளும் புதுப்புதுப் பரிணாமங்களுடன் தொடர்புறுவது இயல்பாக அமையும்.

“சங்கப் புலவர்கள் தம்காலப் படைப்பில் தாம் வாழும் சமூகத்தையும் பிரபஞ்சத்தையும் வரலாற்றையும் இணைத்துத் தம் கவிதையை முப்பரிணாமம் உள்ளதாக்கினர். உவமையின் மூலம் ஒரு உத்தியாகத் தொடங்கி வளர்ச்சிப் போக்கில் உருவகம், அணிகள் எனப் பற்பல உத்திகளின் வாயிலாகத் தமிழ் மரபுக் கவிதை தன்னை அழகுப்படுத்திக் கொண்டது.”[4] இவ்வாறு மரபுக் கவிதைகளில் உத்திகள் தொடர்புபெற்றன.

இன்றையச் சமூகச் சூழலில் மரபுகளை விட்டு விலகி புதுக்கவிதை உருவாகியுள்ளது. “புதுக்கவிதை உள்ளடக்கத்திற்கேற்ற வடிவத்தை மட்டுமல்லாமல் உத்திகளையும் நாடியது. உள்ளடக்கத்தை வேகத்துடனும் உரிமைச் செறிவுடனும் வெளியிட புதிய உத்திகளை நாடியது.”[5] சமூகப் போக்கின் விளைவாக மறைமுகமாகக் கருத்துக்களைக் கூறவும் உத்திகள் பயன்படுத்தப்பெற்றன. நயம்படப் பேசவும் உத்திகள் இலக்கியத்தில் உதவின.

யாப்புச் சிறையிலிருந்து வெளியேறிய கவிதை, உரைநடை வடிவத்தில் இயங்கும்போது, புதியஉத்தி முறைகளை நாடும் தேவை கவிஞர்களுக்கு நேர்ந்தது. அதனுடன் இன்றைய உள்ளடக்கத்திற்கு இசைந்து வரும் வெளியீட்டு முறையையும் கவிஞன் கடைப்பிடிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இதன் விளைவாக இன்றைய கவிதை தனக்கெனத் தனித் தன்மையான வெளியீட்டு உத்திகளைக் கவிஞனிடம் வேண்டி நின்றது”[6] என்கிற சிந்தனையும் முற்சுட்டிய கருத்தை வலியுறுத்துவதாக அமையும்.

**உத்தி வகைகள்:-**

புதுக்கவிதை உத்திகளை இரண்டாகப் பகுத்துக் கூறுவர்.

1. பருப்பொருள் வடிவ உத்திகள்
2. நுண் பொருள் வடிவ உத்திகள்

என்பனவாகும்.

**1. பருப்பொருள் வடிவ உத்திகள்:-**

“கவிதையைப் படைக்கும் போக்கிலேயே வெளிப்படையாகத் தோன்றிக் கவிதைப் பொருளைச் கருவாக்கித் தருபவை பருப்பொருள் உத்திகளாகும்.”[7]

இவ்வுத்திகள் சொற்களின் பின்னால் பொருள் நிழலாகத் தோன்றும் இயல்பினது எனக் கூறலாம்.

பருப்பொருள் உத்திகள் பல்திறத்தன. அவைகளை ஏழாகப் பகுத்து சு. அரங்கராசு குறிப்பிடுவார்.[8] அவை,

1. சித்திர முறை, 2. முரண், 3. தலைப்பு, 4. சொல்லுடைப்பு, 5. சொல்லாடல், 6. அடுக்கு வருணனை, 7. அங்கதம்.

**2. நுண் பொருள் வடிவ உத்திகள்:-**

நுண்பொருள் வடிவ உத்தியில் பொருள் சொல்லுக்குள்ளேயே உறைந்து நிற்பதாக அமையும். இந்நிலையால் கவிதைப் பொருள் கடினப்படவும் வாய்ப்புண்டு. "கவிதையின் படைப்பு நிகழ்வில் இடம்பெறும் நுண்பொருள் உத்திகளே கவிதையின் அனுபவத்தை ஓடுபாதையிலிருந்து மேலுயர்த்தி விரிந்த வானத்தில் பறக்கச் செய்யும் சிறகுகள் போன்றவை"[9] எனக் குறிப்பிடுவர்.

இவ்வகை உத்திகளுக்குக் குறியீடு, படிமம் போன்றவைகளை எடுத்துக்காட்டுக்களாகக் கூறலாம். கவிஞன் பயன்படுத்தும் சொற்களின் பொருள்களுக்குட்பட்ட எல்லையிலிருந்து, அதே சமயத்தில் கவிஞன் உணர்த்த விரும்பும் பொருளின் எல்லைக்குள் படிப்போரை அழைத்துச் செல்லும் உத்திகள் இவ்வகை உத்திகளாகும்.

கூறவந்த பொருளைக் கவிஞன் நயம்பட அழுத்தமாக உணர்த்துவதற்கு நுண்பொருள் உத்திகள் பயன்படுவதாக அமையும். "கவிதைக்குரிய இறுக்கத்தையும் செறிவையும் உருவாக்கும் சொற்சிக்கனம், புதக்கவிதைகளில் படிமங்களாகவும் குறியீடுகளாகவும் வெளிப்பட்டுக் கவிதைப் பொருளைச் சிறப்பிக்க வைக்கின்றன.

மேலே குறிப்பிடப்பெற்ற பருப்பொருள் உத்திகள் கவிதையின் தோலாக இயங்கும் தன்மையன. நுண் பொருள் உத்திகள் தோலுக்கு உள்ளே எலும்பும் தசையுமாக இணைந்து கவிதைக்கு வடிவம் தருபவை.

**1. பருப்பொருள் உத்திகள்:-**

அப்துல் ரகுமான் கவிதைகளில் இடம்பெறும் பருப்பொருள் உத்திகள் கீழ்க்கண்டவாறு அட்டவணைப்படுத்தப் பெற்றுள்ளன.

## கவிதைத்தொகுப்புகளும் பருப்பொருள் உத்திகளும்:-

| கவிதைத் மொத்தம் தொகுப்பு | சித்திரமுறை | முரண் | தலைப்பு | சொல்லுடைப்பு | சொல்லாடல் | அடுக்கு வருணனை | அங்கதம் | |
|---|---|---|---|---|---|---|---|---|
| பால்வீதி | -- | 32 | 12 | -- | -- | -- | 77 | |
| நேயர் விருப்பம் | -- | 15 | 3 | -- | 1 | 3 | 34 | |
| சுட்டுவிரல் | -- | 40 | 2 | -- | -- | -- | 59 | |
| ஆலாபனை | -- | 9 | -- | -- | 2 | 2 | 15 | |
| [illegible] | | [illegible] | [illegible] | | [illegible] | [illegible] | [illegible] | [illegible] |

பருப்பொருள் உத்தகளில் அங்கத உத்தியை மிகுதியாகக் கையாள்கிறார்(185) அதற்கடுத்த நிலையில் முரண் உத்திகளைக் கையாள் கிறார்(96) தலைப்பு(17) சொல்லாடல்(3) போன்ற உத்திகளை அளவாகப் பயன்படுத்தியுள்ளமையை அட்டவணையின் வழி அறியலாம். சித்திர முறை, சொல்லுடைப்பு போன்ற உத்திகள் இவரிடம் இடம் பெறவில்லை.

கவிதைத் தொகுதிகளில் மேற்கண்ட உத்திகள் இடம்பெற்றுள்ள விவரம் பின்னிணைப்பில் அட்டவணைபடுத்தப் பெற்றுள்ளது.[10]

**1. அங்கதம்:-**

கவிதையின் சிறந்த உத்திகளில் அங்கதமும் ஒன்று. புலவனின் வெளிப்பாட்டுமுறையைச் (Expression) சார்ந்த இலக்கியக் கொள்கைகளோடு இணைத்துப் பார்க்கத்தக்கது. தொல்காப்பியர் காலத்திலிருந்தே அங்கதம் குறித்த சிந்தனை உண்டு. அவர் யாப்பின் வகைகளில் அங்கதத்தைக் குறிப்பிடுவர். செம்பொருள் அங்கதம், பழிகரப்பு அங்கதம் என்ற வகையினைத் தொல்காப்பியர் சுட்டிச் செல்கிறார்.

“கயமைத்தனத்தை வெளிக்கொணர்வது, போலியான பாவனைகளைத் தோலுரித்துக் காட்டுவது, முட்டாள்தனத்தை வெளிப்படுத்துவது, ஒரு

நபரையோ, சமுதாயத்தையோ கேலிக்கும் கிண்டலுக்கும் உட்படுத்துவது"[11] என்று ஆங்கில அகராதி அங்கதத்திற்கு (Satire) விளக்கம் கூறுகிறது. அங்கதமாவது உவமை, உருவகம், குறியீடு, படிமம் போன்ற பிற உத்திகளைக் கொண்டு மலர்கிறது.

"குற்றங்களைத் திருத்துவது அங்கதத்தின் நோக்கமாகும். அங்கதத்தின் நோக்கம் சீர்திருத்துவது எனலாம். நகைச்சுவை, சிரிக்க வைத்தல் என்ற எல்லையோடு நிற்கிறது. அங்கதமோ நகைச்சுவையை ஓர் ஆயுதமாக்குகிறது. அங்கதத்தின் அழகு, இலக்கு நகைச்சுவைக்கு இல்லை."[12] இக்குறிப்பிலிருந்து அங்கதத்தின் பயனை உணர்வது மட்டுமின்றி அவ்வங்கதம் நகைச்சுவையிலிருந்து எங்ஙனம் வேறுபடுகிறது என்பதனையும் அறியலாம்.

**அப்துல் ரகுமான் கவிதைகளில் அங்கதம்:-**

பருப்பொருள் உத்திகளில் அங்கத உத்தியை அப்துல் ரகுமான் மிகுதியாகக் கையாண்டுள்ளார். சீர்கேடுகளை அங்கதத்துடன் குறிப்பிடுவது இவரின் இயல்பெனத் துணியலாம். உள்ளடக்கப் பகுப்பாய்வின் வழி இவரிடம் சமுதாயம் சார்ந்த கவிதைகள் மிகுந்திருப்பது அறியப்பெற்றது. எனவே, சமுதாயக் கவிஞரான அப்துல் ரகுமான் சமுதாயக் கடமை உணர்வோடு அங்கத உத்தியைக் கையாள்கிறார். அங்கதமாகச் சீர்கேடுகளைப் புலப்பட வைப்பது மட்டும் அவரது நோக்கமல்ல; சீர்கேட்டிலிருந்து மீட்சி அடைய வேண்டும் என்றும் விரும்புகிறார்.

இவரது கவிதைத் தொகுப்புக்களில் பால்வீதி, சுட்டுவிரல் போன்ற தொகுதிகளில் அங்கத உத்தி மிகுதியாக இடம்பெற்ற நிலையை அட்டவணையின் வழி அறியலாம். நளினமாகத் தாக்கும் அங்கத உத்தி இவரிடம் மேலோங்கியுள்ளது.

பால்வீதி பரிசோதனை முயற்சியுடன் கூடிய கவிதைத் தொகுப்பாகும். இதில் சமுதாயச் சிந்தனைகளும் மிகுதியாக உள்ளன. சுட்டுவிரலில் சமுதாயச் சீரழிவு, அரசியல் சீரழிவு ஆகியன காட்டப்பட்டுள்ளன. எனவே

இத்தொகுப்புக்களில் அங்கதப்போக்குடைய உத்தியைச் சிறப்பாகக் கையாளுகிறார்.

அங்கத உத்தியை அப்துல் ரகுமான் மிகத் திறமையாகக் கையாளும் பாங்கினைக் கீழ்வரும் எடுத்துக்காட்டுக்களின் வழி காணலாம்.

பால்வீதியில் "இறப்பு எங்கள் பிறப்புரிமை" என்ற கவிதை இடம் பெற்றுள்ளது. அக்கவிதையில் மக்களின் அறியாமையை அங்கதமாகக் குறிப்பிடுகின்றார். இயல்பாகவே தீவினைகளில் உழலும் மக்கள் நன்மை வெளிப்படும்போது அதனைப் பயன்படுத்தத் தெரியாமல் அழிகின்றனர் என்கிற குறிப்புப்பொருளை இக்கவிதையின் வழி உணர்த்தியுள்ளார்.

"ஆலகாலத்திற்கே
பாற்கடல் கடைந்தோம்
அமுதம் வந்தது
அவசரமாய்க் குடித்து
விக்கிச் செத்தோம்"[13]

அமுதம் என்பது தற்செயலாகக் கிடைக்கும் நன்மை என்றும் அதனை எவ்வாறு பயன்படுத்துவது என்று தெரியாத மக்கள் அறியாமையில் உள்ளனர் என்றும் குறிப்பாகச் சுட்டுகிறார்.

இக்கால அரசியலை நுண்மையான அங்கத உணர்வோடு குறிப்பிடும் போக்கினை "எங்கள் நதிக்கரையில்" என்ற கவிதைத் தலைப்பில் காணலாம்.

"துரட்டியில்
கொடியேற்ற,
கோவணங்களை அவிழ்க்கும்
செம்மறி மேய்ப்பர்கள்"[14]

என்கிறார். இதில் இன்றைய அரசியலில் அநாகரிகப் போக்கு அங்கதமாகச் சுட்டப்பெறுவதை நோக்கலாம்.

இந்நாட்டில் அரசியல் மற்றும் இயக்கங்கள் புற்றீசல்கள்போல் தோன்றுவதை அங்கதப்பாங்கில் கீழ்க்கண்டவாறு குறிக்கிறார்.

"இயக்கம் வேணுமா இயக்கம்?

தினுசு தினுசாகக் கிடைக்கும்

எதை எடுத்தாலும் எண்பது பைசா

இயக்கம் வேணுமா இயக்கம்?”[15]

இப்பாடல் வரிகளின் மூலம் சந்தையில் விலைமலிவாக விற்கும் பொருள்களுக்கு நிகராக இயக்கங்கள் இருப்பதைச் சுட்டிச் செல்கிறார்.

பொதுவாகச் சமூகம் மற்றும் அரசியல் சீர்கேடுகளைக் கவிதையில் புலப்படுத்த அங்கத உத்தியை அப்துல் ரகுமான் பொருத்தமாகக் கையாண்டுள்ளதாக மதிப்பிடலாம். வெளிப்பார்வையில் அவரின் சிந்தனைகள் நகைப்பூட்டுவது போல இருப்பினும் ஆழ்ந்து நோக்குகையில் பயன்படக்கூடிய ஆழ்ந்த கருத்தாக இருப்பதைப் படிப்பவர்கள் உணர்வர். நளினமாகக் குறிப்பு நிலையில் அங்கதத்தைப் பயன்படுத்துவதில் தனித் தன்மை கொண்டவராக அப்துல் ரகுமான் விளங்குகிறார்.

**2. முரண்:-**

கவிதைக்கு இனிமையையும் அதிர்ச்சியையும் தரும் உத்தி முரண் எனலாம். தொல்காப்பியர் செய்யுளியலில் முரண் குறித்து சுட்டிய போது,

“மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே”[16]

என்கிறார்.

முரண் உத்தியினை எண்வகையாகச் சிற்பி பாலசுப்பிரமணியன் பிரித்துரைப்பார். அவையாவன,

“1. சொல்முரண், 2. பொருள் முரண், 3. நிகழ்ச்சி முரண், 4. உணர்ச்சி முரண், 5. தத்துவமுரண், 6. உவமை உருவக முரண், 7. நோக்குமுரண், 8. தலைப்பு முரண்”[17] என்பவையாகும்.

மேற்சுட்டிய எண்வகை முரண்கள் அப்துல் ரகுமான் கவிதைகளில் இடம் பெற்றமையைக் காணலாம்.

**அப்துல் ரகுமான் கவிதைகளில் முரண் உத்திகள்:-**

அப்துல் ரகுமான் கவிதைகளில் இடம்பெற்றுள்ள முரண் உத்திகளின் எண்ணிக்கைக் கீழ்க்கண்டவாறு அட்டவணையில் விளக்கப் பெற்றுள்ளன.

## முரண் உத்திகளின் அட்டவணை:-

| கவிதைத் தொகுப்பின் பெயர்கள் | சொல் முரண் | பொருள் முரண் | நிகழ்ச்சி முரண் | உணர்ச்சி முரண் | தத்துவ முரண் | உவமை உருவக முரண் | நோக்கு முரண் | தலைப்பு முரண் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| பால்வீதி | -- | 5 | 21 | 1 | 2 | 3 | -- | -- | 32 |
| நேயர் விருப்பம் | -- | -- | 11 | -- | 1 | 3 | -- | -- | 15 |
| சுட்டுவிரல் | -- | 1 | 34 | -- | -- | 2 | -- | 3 | 40 |
| ஆலாபனை | -- | 2 | 4 | -- | 3 | -- | -- | -- | 9 |
| | | 8 | 70 | 1 | 6 | 8 | | 3 | 96 |

அப்துல் ரகுமான் நிகழ்ச்சி முரண் உத்தியை மிகுதியாகக் கையாண்டிருப்பதை அட்டவணையின் வழி உணரலாம்(70). பொருள் முரண் (8) உவமை உருவக முரண் (8) தத்துவ முரண் (6) தலைப்பு முரண் (3) உணர்ச்சி முரண் (1) போன்ற முரண்களையும் தம் கவிதைகளில் பயன்படுத்தியுள்ளார். சொல்முரணும், நோக்கு முரணும் இவரிடம் இடம் பெறவில்லை என மதிப்பிடலாம்.

இம்முரண்கள் கவிதைகளில் இடம்பெற்றிருக்கும் விதம் பின்னிணைப்பின் அட்டவணையில் குறிக்கப்பெற்றுள்ளது.[18]

**1. நிகழ்ச்சி முரண்:**

முன்னமே நடந்து முடிந்த அல்லது அனைவராலும் பரவலாக அறியப்பெற்ற நிகழ்ச்சி ஒன்றை முரண்படுத்தி அமைப்பது நிகழ்ச்சி முரண் ஆகும்.[19] அப்துல் ரகுமானிடம் இயல்பாகவே இந்நிகழ்ச்சி முரண் ஓங்கியுள்ளது.

நிகழ்ச்சி முரண் மேலோங்கி இருக்கக் காரணம் எதையும் மாறுபட்ட நோக்கில் பார்க்கும் இவரது புதுமைப் பார்வையே எனலாம். அப்துல்

ரகுமான் நிகழ்ச்சி முரணைக் கையாளும் பாங்கினைச் சில எடுத்துக் காட்டுக்களின் மூலம் காணலாம்.

இந்தியநாடு விடுதலை பெற்றது எனினும் இந்தியச் சமுதாயம் துயரத்திலேயே ஆழ்ந்து வருவதாக இருக்கிறது. சுதந்திரத்தில் உரிமை, பாதுகாப்பு, நன்மை, உயர்வு, வளர்ச்சி போன்றவைகள் தொடர்பு பெற்றிருக்க வேண்டும். ஆனால் நடைமுறையில் முற்சுட்டிய நிகழ்வுகளுக்கு முரணான நிகழ்வுகளே நிகழ்கின்றன. இதனைக் கருத்தில் கொண்டு "சுதந்திர தேவதை" எனும் தலைப்பில் நிகழ்ச்சி முரண்களில் பல காட்சிகளைக் காட்டுகிறார்.

"பிள்ளைகள் கூடிப்
பிரசவித்த தாய்நீ
என்பதாலா உனக்கு
மார்பகம் இல்லாது
போயிற்று?"[20]

என்று பாடுகிறார். இவ்வாறு நாட்டின் சுதந்திரநிலையை நிகழ்ச்சி முரணில் காட்டுகிறார்.

இயக்கங்களின் பெருக்கங்களாலும் அரசியல் மோசடிகளாலும் பாதிக்கப் பெறும் ஏழை மக்களின் அவல நிலையை முரண் உத்தியில்,

"கம்பங்களுக்கு ஆடை
மனிதர்களுக்கு நிர்வாணம்
விசித்திரமான தேசம்!"[21] என்று குறிப்பிடுகிறார்.

வயது வந்தவர்கள் முன்மாதிரியாக நடந்து குழந்தைகளுக்கு வழிகாட்ட வேண்டும். ஆனால் நாட்டில் வயதானவர்கள் நடைமுறையில் பொய், சூழ்ச்சி, கள்ளம் கபடமான குணம் போன்றவைகளையே கையாண்டு வாழ்ந்து வருகின்றனர். குழந்தைகளிடம் முற்குறித்த குணங்கள் இல்லை. அத்தகு குழந்தைகளை முன்மாதிரிகளாகக் கொண்டு வழி நடப்போம் எனப் பாடும் விதம் மனதில் பதியும் நிகழ்ச்சி முரணாக அமைகிறது.

"குழந்தைகளே ! உங்கள் விரல்களை
நாங்கள் பிடித்துக் கொள்கிறோம்

எங்களை உங்கள் தேவ தேசத்திற்கு

அழைத்துச் செல்லுங்கள்''[22]

இவ்வாறு சமுதாய நிகழ்ச்சிகள், அரசியல் நிகழ்ச்சிகள் போன்றவற்றை நிகழ்ச்சி முரணில் அமைத்துப் பாடுகிறார். நிகழ்ச்சி முரணை ஒரே கவிதையில் பலவாறு அமைத்துப் பாடுகிறார். இவ்வியல்பு இவரது கவிதைகளில் பெரிதும் காணப்பெறுகிறது. எடுத்துக்காட்டாக, ''கலியுக இதிகாசம்'' என்ற கவிதையில் இடம் பெறும் நிகழ்ச்சி முரண்கள் பின்வருமாறு குறிக்கப் பெறுகின்றன.

''விற்க எதுவும் இல்லாததால்
கண்ணகிகளைப்
பேரம் பேசும்
கோவலர்கள்
. . . . . . . . . . .
. . . . . . . . . . .
கோவலரின் படுகொலையை
மூடி மறைக்க
உயிரோடு கொளுத்தப்படும்
கண்ணகிகள்
. . . . . . . . . . .
. . . . . . . . . . .
உதய குமரர்களுக்குத்
தங்கள் உடல்களையே
அட்சய பாத்திரமாக்கித்
தம் வயிற்றுப் பசியைத்
தணித்துக் கொள்ளும்
மணிமேகலைகள்''[23]

என்றும் குறிப்பிடுகிறார். இவ்வுத்தி படிப்பவர்களுக்கு அதிர்ச்சியூட்டிப் புதுமை அமைப்பால் கவர்ந்திழுப்பதை உணரலாம்.

2. பொருள் முரண்:-

கவிதையின் சொல்லளவில் மட்டுமல்லாது கருத்தளவிலும் மாறுபட்டிருப்பது பொருள் முரணாகும். இவ்வகையில் எட்டு கவிதைகள் உள்ளன.[24]

பொருள் முரண் உத்தியைக் கவிதைகளில் அப்துல் ரகுமான் பயன்படுத்தியுள்ள பாங்கினைச் சில எடுத்துக்காட்டுக்களின் வழிக் காணலாம்.

சமுதாயத்தின் நல்ல அமைப்புகள் தீயவையாக மாறிவரும் நிலையை,

"மூலிகைகளில்
நாகப்பற்கள்,
அரும்புகின்றன"[25]

எனச்சுட்டுகிறார். கருத்தளவில் மூலிகை என்பது நற்பயனுக்கு உதவுவது. இங்கு பொருள் முரணில் மூலிகை நச்சுத்தன்மை உடையதாக உணர்த்துகிறார்.

உலகம் அன்பு, காதல், பாசம், நட்பு, பக்தி என்ற காந்தக் கயிற்றினால் பின்னப் பெறுகிறது. இவற்றினால் இழப்பு நமக்கு ஏற்பட்டாலும் நன்மையே நிகழ்கிறது எனும் கருத்தை அப்துல் ரகுமான் பொருள் முரணில் குறிப்பிடும் போது,

"அது ஒரு
விசித்திரமான வியாபாரம்
அதில்
நஷ்டமே லாபமாகிறது"[26]

என்று குறிப்பிடுகிறார். இக்கவிதையில் பொருள் முரணைக் காணலாம்.

ஒருவரிடம் மட்டும் செல்வம் இருந்தால் உலகம் ஏற்காது. மாறாக அருவருத்துத் தூற்றும் இந்நிலையை "தனதேவதை" எனும் தலைப்பில்,

"தாலிகட்டிக் கொண்டதால்
நீ கற்பிழந்தாய்"[27]

என்கிறார். ஒருவரிடம் மட்டுமே குவிந்துள்ள செல்வத்தால் சமுதாயத்தில் ஒழுக்கக் கேடுகள் ஏற்படுவதை இவ்வாறு சுட்டுகிறார். தாலி கட்டிக்

கொண்டால் கற்பிழந்தாள் என்று இங்கு பொருள் முரணில் உரைப்பதைக் காணலாம்.

**3. உவமை உருவக முரண்:-**

கவிஞரின் கருத்தை வெளியிட உதவும் உவமை உருவகங்கள் முரணில் சுட்டப்பெறுவது உவமை உருவக முரணாகும். இவ்வகை கவிதைகள் எட்டாகும்.[28]

இவ்வுத்தியைக் கவிஞர் மிகச் சிறப்பாகப் பயன்படுத்தியுள்ளமையைச் சில சான்றுகளின் வழிக் காணலாம்.

"வண்டுகளையே சூலாக்கும்
மகரந்தம்
என் பூக்களில்
இவைகளை -
அர்ச்சனைக்காகப்
பறித்துவிடாதீர்கள்"[29]

எனும் கவிதையின் வழி உவமை உருவக முரண் அழகினைக் காணலாம்.

இயல்பான உவமையில் வண்டுகள் தான் சூலாக்கும் என்பர். இங்கு முரண் உவமையில் வண்டுகளையே சூலாக்கும் என் மகரந்தம் என்கிறார். தன் கவிதையின் பேராற்றல் தன் கவிதையைக் கற்கும் படைப்பாளிகளுக்கே அரிய படைப்பினைத் தரவல்லது என்கிறார்.

**4. தத்துவ முரண்:-**

சொல், கருத்து நிகழ்ச்சிகளில் மட்டுமல்லாது கவிஞரின் தத்துவச் செய்திகளில் முரண் இருக்க அமைப்பது தத்துவ முரண் ஆகும். தத்துவக் கருத்துக்களை முரண் உத்தியில் தரும் பாங்கும் கவிஞரிடம் தனித்தன்மையுடன் இடம்பெற்றுள்ளதாக மதிப்பிடலாம். ஆய்விற்கு எடுத்துக் கொண்ட அப்துல் ரகுமான் கவிதைகளில் ஆறு கவிதைகளில்[30] இவ்வகை

உத்தி இடம் பெற்றிருக்கின்றது. காட்டாக மரணம் என்பது என்ன என்று தத்துவ விளக்கம் தருகையில்,

"காயம் என்புன்னகை
தூக்குக் கயிறு நான்
கட்டும் தாலி
குருதி என் மருதாணி
நஞ்சு என் அமுதம்"[31]

என்று சுட்டுகிறார். மரணத்தை எவரும் விரும்புவதில்லை. கவிஞர் மரணத்தை முரண் நோக்கில் விரும்பிப் பார்க்கிறார். மரணம் தொடர்பாக அரிய தத்துவ விளக்கம் தருகிறார்.

"மரணம் அவலட்சணம் என்று
அருவருக்கிறாய்
ஆனால் நாள்
அதன் மரணத்தில்
அழகாய் இருப்பதை
நீ கவனித்ததில்லையா?"[32]

எனக் கேட்பதில் முரணைக் காணலாம். மரணம் தொடர்பாக விளக்கம் தர முயல்கிறார்.

**5. தலைப்பு முரண்:-**

தலைப்பு, முரண் அமைப்பில் இருப்பது தலைப்பு முரண் ஆகும். இவ்வகையில் மூன்று கவிதைகள் இடம் பெறுகின்றன.[33] காட்டாக "பாருக்குள்ளே நல்ல நாடு" எனச் சுட்டும் கவிதையில் பல்வேறு சீரழிவுகளைப் பட்டியலிட்டு உரைக்கிறார். சீர்கேடுகள் நிறைந்த நாடு நல்ல நாடு என்று செப்புவது தலைப்பு முரணாக இடம் பெறுவது சுட்டத் தக்கதாகும். இக்கவிதையில்,

"அவர்களைச் சிறையில் சந்தித்தேன்
"என்ன குற்றம் செய்தீர்கள்?"
என்று கேட்பேன்
ஒவ்வொருவராகச் சொன்னார்கள்:

. . . . . .

"என் வயலுக்கு வரப்பெடுத்துக் கொண்டிருந்தேன்

பிரிவினைவாதி, என்று பிடித்துக் கொண்டுவந்து

விட்டார்கள்"

"அதிகாரி லஞ்சம் வாங்கினான், தடுத்தேன்

அரசுப் பணியாளரை அவருடைய கடமையைச்

செய்யவிடாமல் தடுத்ததாகத் தண்டித்துவிட்டார்கள்"[34]

என்று வரிசையாகக் குறிப்பிடுகிறார்.

**6. உணர்ச்சி முரண்:-**

நிகழ்ச்சிகளைப் போலவே உணர்ச்சியிலும் முரண் இருப்பது உணர்ச்சி முரண் ஆகும். இவ்வகையில் ஒரு கவிதை காணப் பெறுகிறது. கவிஞர் தன் கவிதைக்கு இறப்பில்லை என்பதால் தானும் அழிய மாட்டேன் எனும் கருத்தில்,

"இங்கே . . . ஒரு நாள்

மரணத்தைக் குடித்து

மலரும் ஒரு பூவாக

என்னைக் காண்பீர்கள்"[35]

என்று குறிக்கிறார். இக்கவிதையில் மரணத்தைக் குடித்து உயிர்க்கும் நிலை உணர்ச்சி முரணாக அமைவதை அறியலாம்.

பருப்பொருள் உத்திகளில் அங்கதத்திற்கு அடுத்த நிலையில் முரண் உத்தியை அப்துல் ரகுமான் பயன்படுத்தியுள்ளார். முரண் உத்திகளில் குறிப்பாக நிகழ்ச்சி முரணை மிகுதியாகக் கையாளுகிறார். நிகழ்ச்சிகளை முரண்படுத்திப் பார்க்கும் இயல்பு இவரின் புதுமை நோக்குடன் அமைந்த தனித்தன்மைக்குச் சான்றெனத் தெரிகிறது. பொருள் முரண், உவமை உருவக முரண், தத்துவ முரண், தலைப்பு முரண், உணர்ச்சி முரண் போன்றவைகளை அளவாகப் பொருத்தமான இடங்களில் பயன்படுத்தியுள்ளார். இவருடைய கவிதைகளில் சொல் முரணும் நோக்கு முரணும் பெரும்பாலும் இவரின் கவிதைப் புலப்பாட்டு முறையில் இல்லையெனக் கருதலாம்.

**3. தலைப்பு:-**

கவிதைகளின் பல்வேறு உத்திகளில் இதுவும் ஒன்றாகும். "தலைப்பைப் பார்த்தால் மட்டும் கவிதை புரிவது தலைப்பிடல் உத்தியாகும்"[36]

தலைப்பு உத்தியில் 17 கவிதைகள் உள்ளன. பால்வீதியில் 12 கவிதைகளும்,[37] நேயர் விருப்பத்தில் மூன்று கவிதைகளும்,[38] சுட்டுவிரலில் இரண்டு கவிதைகளும்[39] இடம் பெற்றுள்ளன.

காட்டாக, சிலவற்றைக் காணலாம். கண்ணீரைப் பற்றிக் குறிக்கும் போது,

> "மூடிய கடிதத்தின் வாசகங்கள்
> முகவரியாகச் கசிகின்றன.
> . . . . . . . .
> ஞாபக வெளிச்சத்தின் சந்நிதியில்
> சுய ஞானக் குளியல் நடக்கின்றது"[40]

என்று குறிப்பிடுகிறார். தலைப்பின்றி இக்கவிதையைப் படித்தால் புரிவது கடினம். "கண்நதி மூலம்" எனும் தலைப்பில் இவ்வாறு குறிக்கிறார்.

மூடிய இமை மூடிய கடிதமாக இருக்கிறது. கண்ணீர் கடிதத்தின் வாசகமாகும். அக்கண்ணீர் முகவரியாகக் கசிகிறது. கண்ணீர் சவ ஊர்வலமாக மௌன ஊர்வலம் போகிறது. சொந்த நாட்டைவிட்டு அகதிகளாய்ப் பிரியும் நட்சத்திரங்கள், பால் குடிக்கச் சிசுக்கள் இல்லாத காரணத்தால் இமைகள் அனாதை மார்பகங்களாக உள்ளன. அதிலிருந்து வழியும் கண்ணீரைப் பாலாக வடிகின்றன என்கிறார். மேலும், கண்ணீர் பாற்கடலாகும் அதிலிருந்து அமுதத்தை நஞ்சாக உமிழ்கிறது, என்றும், கண்ணீர் உலகமெலாம் புரிந்து கொள்ளும் திரவமொழியாக உள்ளது என்றும், கண்ணீர் மனிதனின் ஞானஸ்நான நீராகத் தெரிகிறது என்றும், அதோ, சுயஞானக் குளியல் நடக்கின்றது என்றும் இக்கவிதையில் குறிப்பிடுகிறார்.

இக்கவிதையை உணர்வதற்குக் கவிதையின் தலைப்பை உணர்ந்தால் தான் புரிய இயலும். கண்ணீரை அப்துல் ரகுமான் பல கோணங்களில் சிந்தித்து உரைப்பது புதுமையாகும்.

> "பேனாக்களே !
> கிரீடங்களைக் கழற்றிவிட்டுத்
> தலைகுனியுங்கள்
> நீங்கள் இருப்பது
> தாள்களுக்காக
> பைகளுக்காக அல்ல !" [41]

என்கிறார். இக்கவிதையின் தலைப்பு "அரசியல்வாதிகளுக்கு" என்பதாகும். இக்கவிதையும் தலைப்பினை அறிந்த பின்னரே கவிதையின் முழு அழகும் காட்சி தருகிறது. இக்கவிதையில் கிரீடங்கள் - பதவி, குனிதல் - உழைத்தல் என்று பொருள் தருவதை உணரலாம். பைகளுக்காக அல்ல என்பது கையூட்டு வாங்க அல்ல என்னும் கூடுதல் பொருள் தரும் நுட்பத்தைக் காணலாம்.

கவிதையைத் தலைப்பிலிருந்து முடிவுவரை உற்று நோக்கினால்தான் பொருள் புலப்பாடு சிறப்பாக இருக்கும். அத்தகு பொருள் புலப்பாட்டிற்குக் கவிஞன் தலைப்பில் திறவுகோலை வைக்கும் திறத்தை இவ்வகை உத்திகளில் காணலாம். இவ்வுத்தி வாசகனை விழிப்புடன் செயல்பட வைக்கிறது.



**4. அடுக்கு வருணனை:**

கவிதைக்குரிய ஒரு தலைப்பில் கவிதை எழுதும்போது அப்பொருள் தொடர்பாகத் தொடர்ந்து அலை அலையாக வருணனைகளை அடுக்கி உரைப்பது அடுக்குவருணனை உத்தியாகும்.

இவ்வகை உத்தி, எழுதும்கவிதைகளை விடக், கவியரங்கக் கவிதைகளிலேயே மிகுந்து காணப்பெறுகிறது. "அடுக்கு வர்ணனை உத்தி கவியரங்குகளுக்கு ஏற்ற உத்தியாக அமைந்தது. ஒரு தலைப்பில் பாடச்

சொல்வதால் தலைப்புப் பற்றிய தங்களது பல எண்ணங்களை வரிசையாக அடுக்கி வெளியிட நேர்ந்தது"[42] என்று கூறுகிற கருத்து முற்சுட்டிய கருத்தை உறுதிப்படுத்துகிறது. இவ்வுத்தியில் ஐந்து கவிதைகள்[43] எழுதியுள்ளார். இவற்றில் கவியரங்கக் கவிதைகள் மூன்று உள்ளன. 'முதுமை': கோவை, வேளாண் பல்கலைக் கழகத்தில் 8.4.1976 அன்று பாடப் பெற்றது[44] என்று குறிக்கப் பெற்றுள்ளமையை நோக்கலாம்.

முதுமையை அடுக்கு வருணனையில் கவிஞர் உரைத்த போது,

ஞாபகங்களின்
குப்பைக் கூடை
வியாதிகளின்
மேய்ச்சல் நிலம்
காலத்தின் குறும்பாய்
'கார்ட்டூன்' ஆகிவிட்ட
மாமிச ஓவியம்[45]

எனச் சுட்டுவதில் காணலாம். இவ்வுத்தி கவிஞரின் கற்பனை சக்தியின் அளவைக் காட்டவல்லது.

5. **சொல்லாடல்:-**

"சொல்லாடல் என்கிற உத்தி ஒரு சொல்லையே திரும்பப் பயன் படுத்தும் நேர்த்தியிலும் தொடரைத் திரும்பத் திரும்பத் தந்து உணர்வெழுப்பு கிற போக்கிலும் எதுகைச் சொற்களையும் ஒலி ஒப்புமையுடைய சொல்லாட்சி களிலும் உணர்வெழுப்புகிற ஆற்றலிலும் அடங்கியுள்ளது."[46]

இவ்வுத்திகளில் மூன்று கவிதைகள் மட்டும் இவரிடம் காணப் பெறுகின்றன. அவை,

1. நட்சத்திரங்களில் கூடுகட்டி (நேயர் விருப்பம்)
2. கனவு (ஆலாபனை)
3. தற்கொலை செய் (ஆலாபனை)

என்பனவாகும்.

காட்டாக, "நட்சத்திரங்களில் கூடுகட்டி" எனும் தலைப்பில் நட்சத்திரங் களில் வசிப்போம் எனும்போது சொல்லாடுகிறார்.

"நட்சத்திரங்களில் கூடுகட்டி அவை

நம்சத்திரங்கள் என்போம்"[47]

என்கிறார்.

அப்துல் ரகுமான் கவிதைகளில் காணப்பெறும் பருப்பொருள் உத்திகளில் அதிக எண்ணிக்கையின் அடிப்படையில் முதல் நிலையில் அங்கத உத்தியும் அதனை அடுத்தடுத்த நிலைகளில், முரண், தலைப்பு, அடுக்குவருணனை, சொல்லாடல் உத்திகளும் இடம் பெறுகின்றன.

எதையுமே அங்கத நோக்குடனும் புதுமை நோக்குடனும் பார்க்கும் இவரின் இயல்பை இவ்வுத்திகளின் எண்ணிக்கை காட்டுகின்றன. புதுமை செய்ய முரண் அணுகுமுறையை இவர் பெரிதும் நாடுகிறார். இவ்வுத்தியே இவரை மற்ற கவிஞர்களிடமிருந்து வேறுபடுத்திக்காட்டுகிறது.

குறிப்பாக, சித்திரமுறை, சொல்லுடைப்பு இவரின் கவிதைகள் காணப் பெறவில்லை. இவை இரண்டும் கவிதை உலகில் வரவேற்கத் தக்கனவல்ல. சிறப்பானவையல்ல என்பதனால் இவற்றை அப்துல் ரகுமான் எழுதவில்லை என்பது புலனாகிறது.

**2. நுண் பொருள் வடிவ உத்திகள்:**

(கவிஞன் உணர்த்த விரும்பும் கருத்தை அல்லது அனுபவ உணர்வை அழுத்தமாக வெளிப்படுத்துவதற்கு நுண்பொருள் உத்திகள் பயன்படுமெனக் கூறலாம். பிரஞ்சுக்கவிதை வரலாற்றில் குடியாட்சிப் புரட்சியின் தோல்விக்குப் பின் கவிஞர்கள் மிகை எதார்த்தவியலாளராகி குறியீட்டு இயக்கத்தைத் தோற்றுவித்தனர்.) உலகப் போரின் வெற்றிக்குப்பின் மேலை முதலாளியம் மனித நேயத்தின் மீது மாசாகப் படிந்த சூழலில் அமெரிக்க ஆங்கிலக் கவிஞர்கள் அந்நியர்களாகிப் படிமஇயக்கத்தைத் தோற்றுவித்தனர். அப்துல் ரகுமானுக்கு மேலை நாட்டு இலக்கிய அறிவும், அதில் ஆழ்ந்த புலமையும் இருந்ததால் மேற்குறித்த போக்குகளை எல்லாம் உள்வாங்கினார். தம் பன்மொழிப் புலமையின் துணையால் தன்கவிதைப் புலப்பாட்டில் குறியீடு, படிமம் போன்ற நுண்பொருள் உத்திகளைச் செறிவாகப் பயன்படுத்தியுள்ளார். அப்துல் ரகுமான் கவிதைகளில் இடம்பெறும் இவ்வுத்திகளை இங்கு நோக்கலாம்.

குறியீடு:

இலக்கியத்திற்கு அழகு சேர்க்கின்ற உத்திகளில் குறியீடும் ஒன்றாகும். இக்குறியீடு ஒன்றை மறைத்துக் குறிப்பாக உணர்த்தும் தன்மையுடையது. இதனால் உலகம் எங்கிலும் குறியீட்டுச் சிந்தனை நிறைந்துள்ளது.

தமிழ் இலக்கியத்தில் குறியீடு தொடர்பான சிந்தனை பண்டுதொட்டு இருந்து வந்திருக்கிறது. "சுட்டியொருவர் பெயர் கொளப்பெறார்"[48] என்பது வெளிப்படக் குறிக்காத இயல்பினைக் கொண்டது. சங்க இலக்கியத்தில் இயற்கைப் பொருள்களைக் குறியீடுகளாகப் பயன்படுத்தியுள்ளனர். சங்கம் மருவிய காலத்திலும் பக்தி இலக்கிய காலத்திலும் குறியீடுகள், சமயக் குறியீடுகளாக மாற்றம் பெற்றன. சித்தர்கள் காலத்தில் குறியீடு செம்மையான நிலையை அடைந்தது. பாரதியின் காலத்தில் தான் குறியீடு முழுமையான உத்தியாக உருவெடுத்தது.

குறியீடு என்ற சொல்லிற்குத் தமிழ்ப் பேரகராதி "நாமதாரணை, பெயரிடுவைபவம், நிறுத்தற்குறியிடுதல், அடையாளமிடுதல்"[49] போன்ற பொருள் களைச் சுட்டுகிறது. இவைகளில் அடையாளமிடுதல் என்ற பொருள் கருதத் தக்கது. "குறி", "குறியீடு" என்ற சொற்கள் ஒன்று போல இருந்தாலும் நுட்பமான பொருள் வேறுபாட்டைக் கொண்டவை.

'குறி' என்பது ஒன்றைச் சுட்டி இனம்கண்டு கொள்வதற்கான அடையாளச் சின்னமாகும். குறியீடு என்பது மற்றொரு பொருளுக்காக அப்பொருளின் இடத்தில் தானே நிற்பது ஆகும்.

"குறியீடு என்ற சொல்லிற்கு இணையாக ஆங்கிலத்தில் 'Symbol' என்ற சொல்லைக் குறிப்பிடுவர். குறியீடு (Symbol) என்பதற்கு ஒன்றிற்காக நிற்கும் வேறொன்று ஒன்றின் சார்பாக நிற்கும் மற்றொன்று (அ) வேறொன்றைச் சுட்டி நிற்கும் ஒன்று"[50] என்று ஆக்ஸ்போர்டு ஆங்கில அகராதி குறிப்பிடும். இக்கருத்தினை ஒட்டியே கலைக்களஞ்சிய விளக்கங்களும் அமைகின்றன.

"குறியீடு என்பது ஒரு பொருளுக்காக நிற்பது; அப்பொருள் வழியே மெய்ம்மை அல்லது கருத்தைப் புலப்படுத்துகிறது"[51] என்ற கருத்தை நோக்கலாம்.

**தமிழில் குறியீடு:-**

குறிப்பு மொழியால் சொல்லும் போது நேரடியான பொருளைத் தராமல் தொனிப்பொருளையே தரும் சிலவற்றைத் தமிழில் காணலாம். "இடக்கரடக்கல், மங்கலம், குழுஉக்குறி என்ற தகுதி வழக்கு, ஆகுபெயர், அன்மொழித்தொகை, முதற்குறிப்பு, தொகைக்குறிப்பு ஆகியன மிகுந்த பொருளவாவுதல், பிறிதொன்றைச் சுட்டல் என்ற குறியீட்டுப் பண்புகளைப் பெற்றுள்ளன."[52] )

குறியீட்டு நிலையில் அமைந்த பிசி, முதுமொழி, மந்திரம், குறிப்பு என்ற நான்கு செய்யுள் வகை பற்றியும் தொல்காப்பியத்தில் காணமுடிகிறது"[53] என்கிறார் அப்துல் ரகுமான்.

பிசி என்பது விடுகதையாகும். இது கூறும் சொல்லாலும் உவமை யாலும், ஒன்று சொல்ல, பிறிதொன்று தோன்றுவதாகும். ஒருவர் சொல்லவந்த பொருளை மறைபொருளாக்கி மறைத்து, அதைப் பிறிதொருவர் கண்டுபிடித்துக் கொள்வதற்கு ஏதுவாக வினாவாக்கித் தருவது விடுகதை.

முதுமொழி என்பது பழமொழியாகும். இது கூர்மையாகச் சுருங்கி குறித்த பொருள் ஒன்றை முடித்தற்கு வருவது. அதாவது நிறைவாக இருப்பதைச் சுருக்கி உரைப்பது பழமொழி எனலாம். நிறைமொழி ஆணையிற் சொல்லப்பட்டுப் புறத்தார்க்குப் புலப்படாமல் மறைத்து உரைப்பது மந்திரம். இது பிறர் எதையும் எளிதில் தெரிந்துகொள்ள முடியாததாகும். சொல்லில் இல்லாமல் வேறு பொருள் குறித்து நிற்பது குறிப்பு என்பர். சொல்லவந்த திலிருந்து வழுவி வேறு ஒன்றைச் சொல்லுகின்ற நிலையில் எதைச் சொல்ல நினைக்கிறார்களோ அதுவாகவே அதுமாறி நிற்பதைக் குறிப்பு எனலாம்.

இவ்வாறு குறிப்புப்பொருள் என்ற பாங்கில் இவை தமிழில் அமைந்துள்ள நிலையை அறியமுடிகிறது. "குறிப்புப் பொருள் பற்றிய தமிழ் நூலார் கருத்துக்களேயன்றி அணிநூல்கள் வாயிலாகப் பெற்ற வடநூலார் கருத்துக்களும் மேனாட்டு இலக்கிய அறிமுகத்தால் பெற்ற கருத்துக்களும்

புதுக் கவிதையின் குறியீட்டியத்தை உருவாக்கியதில் இன்றியமையாத பங்கு வகிக்கின்றன"[54] என்கிறார் அப்துல் ரகுமான்.

இலக்கியத்தில் ஒரு பொருளையோ ஒரு நிகழ்ச்சியையோ குறிப்பிட வரும் ஒரு சொல் அல்லது ஒரு சொற்றொகுதி தன் இயல்பான பொருளைத் தவிர்த்துப் பிறிதொன்றைக் குறிப்பிடுவதே குறியீடு ஆகும். அதாவது சொல்லக் கருதிய ஒரு பொருளின் தன்மையைக் கிட்டத்தட்ட அதனை ஒத்த வேறு ஒரு பொருளின் மூலம் விளக்கிடும் உத்தியே குறியீடு எனலாம்.

"குறியீடுகள் உணர்ச்சிகளையும் எண்ணங்களையும் துல்லியமாக வெளிச்சம் பாய்ச்சிக் காட்டுகின்றன"[55] என்று அறிஞர்கள் குறிக்கின்றனர்.

கருத்து வெளிப்பாட்டிற்கு சுதந்திரம் எப்போதெல்லாம் வரலாற்றில் மறுக்கப்படுகிறதோ, அப்போதெல்லாம் குறியீடு முதன்மை உத்தியாகப் பயன்பட்டு வருகிறது"[56] என்று மதிப்பிடுவர்.

கருத்துக்களைச் சுருங்க உரைக்க ஆற்றல் வாய்ந்த உத்தியாகக் குறியீடு உள்ளது. இக்கருத்தின் வழி கருத்து வெளிப்பாட்டிற்கும், சுதந்திரமில்லாச் சூழலில் கருத்து வெளிப்பாட்டிற்கும் குறியீடு தலைமை உத்தியாக இருப்பதை அறியமுடிகிறது. இந்நிலையில் நேரடியாகச் சொல்லும் கூற்றால் அதனோடு தொடர்புடையவர்கள் மனம் புண்படாமல் இருக்க இக்குறியீடு பெரிதும் உதவுகிறது.

**குறியீடு அமையும் முறை:**

குறியீடு ஒப்புறவு, ஒட்டுறவு என்ற இரு விதத்தில் அமையும் என்பர்.[57]

**ஒப்புறவு** (Association of Similarity):-

ஒரு பொருளோடு மற்றொரு பொருள் ஒத்திருந்தால் இரண்டிற்கும் இடையே உறவு தோன்றும். இதனை ஒப்புறவு எனலாம். இந்த ஒப்புமை உருவ அருவ ஒப்புமையாக அமைகிறது.

பெண் முகத்தைப் பூக்களோடு ஒப்பிடுவது உருவ ஒப்புமையாகும்.

பெண் மணத்தை - பூக்களின் நறுமணத்தோடு ஒப்பிடுவது அருவ ஒப்புமையாகும்.

**ஒட்டுறவு: (Association of Contiguity):-**

இரண்டு பொருள்கள் ஒன்றோடு ஒன்று தொடர்புடையதாக அமைவது ஒட்டுறவு. இவ்வொட்டுறவு மூன்று வகைகளில் ஏற்படலாம். சில பொருட்கள் இயற்கையாகச் சேர்ந்திருப்பன; சில செயற்கையாகச் சேர்த்து வைக்கப்பெறுவன; சில தற்செயலாக இணைவன. இந்த மூவகை உறவாலும் பொருட்கள் குறியீடாகலாம்.

(எ.கா) இயற்கை - புகை நெருப்புக்கு இயற்கையாகச் சேர்ந்திருப்பது.

செயற்கை - வணிக நிறுவனங்களின் சின்னங்கள் குறிகள் போல்வன.

தற்செயல் - ஆகஸ்ட் 15-இல் சுதந்திரம்.

ஒப்புறவு, ஒட்டுறவு என இருவகையில் அமையும் குறியீடுகள் உருவ, அருவ நிலையில் அமைந்து வருவதைக் காணலாம்.

குறியீடு நுண்ணிய கருத்துக்களைச் சுருங்க உரைப்பதற்குப் பயன்படும் உத்தியாக இருக்கிறது. தேவையற்ற வெற்றுச் சொற்களைத் தவிர்த்துக் கவிதைக்கு இறுக்கத்தையும் செறிவையும் ஏற்படுத்துவதற்கும் காரணமாகிறது. இவ்வுத்தி மூலம் கவிதைப்பொருளை நேரடியாகச் சொல்லாமல் குறிப்பாகக் காட்டுவதில் கவித்துவம் மிளிர்கிறது. குறியீட்டுக் கவிதை தன் இயல்பான பொருளைத் தவிர்த்துப் பிறிதொன்றைக் குறிப்பிடுகிறது. இக்குறியீட்டுக் கவிதையின் தலைப்பை அகற்றிவிட்டால் பல தளங்களுக்குப் பொருள்தரும் பன்முகப்பொருள் ஆற்றல் உடையது எனலாம்.

**குறியீட்டுக் கவிதை:-**

குறியீட்டு உத்தியின் விளக்கத்திற்காகக் குறியீட்டுக் கவிதை யொன்றைக் காணலாம். அப்துல் ரகுமானின் “சுட்ட பழம்” என்ற கவிதை பின்வருமாறு :

> “தீப மரத்தின்
> தீக்கனி உண்ண
> விட்டில் வந்தது
> கனியோ
> விட்டிலை உண்டது”[58]

இக்கவிதையில் தீபமரத்தின் கனி விட்டிலை உண்கிறது என்பது காட்சிப் பொருளாகும். இந்த இயல்பான பொருளைத் தவிர்த்து இக்கவிதை காட்சியின் வழியே பல பொருள்கள் கிடைக்கின்றன.

குறியீடு வெளிப்படக் கூறாதது. மேலும் பல பொருள்கள் தரக் கூடியது. தலைப்பை அகற்றிவிட்டு நோக்கினால், அக்கவிதை பல தளங்களுக்குப் பொருத்தமாக இருப்பது என்பது குறியீட்டின் இலக்கணமாகும்.

அரசியல்வாதி-தீபமரத்தின் தீக்கனியாகவும், மக்கள் - விட்டில்களாகவும் கருத வாய்ப்புண்டு. காதல் என்னும் களத்தில் இதனை வைத்துப் பார்க்கலாம். காமுகர்கள் தீபமரத்தின் தீக்கனியாகவும், அவர்களின் வலையில் அறியாது விழும் பெண்கள் விட்டில்களாகவும் கருதப்பெறலாம்.

மேற்குறித்தவாறு அமைவது குறியீட்டுக் கவிதையாகும். வெளிப்படக் குறிக்காத குறியீட்டின் அழகு சிறப்பாகக் கருதப் பெறும்.

**குறியீட்டின் வகைப்பாடு:-**

"புதுக்கவிதையில் இக்குறியீடு இயற்கை, தொன்மம், வழக்கு, சமயம், வரலாறு, இலக்கியம் ஆகிய ஆறவகைகளில் காணப்படுகிறது"[59] என்று வகைப்படுத்தி விளக்குவர். மேற்குறித்தவைகளைத் தவிரப் புதுக்குறியீடு களும் இனங்காணப்பெற்றுள்ளன.

"இப்புதுக்காலக் குறியீடுகள் மரபினை அடிப்படையாகக் கொண்டு அமையாமல் கவிஞர்களின் கற்பனை ஆற்றல்களாலும் படைப்புத் திறத்தாலும் சுய விளைச்சலில் உருவாக்கப்படுகின்றன. இப்புதுக்காலக் குறியீடு இடம் காலம் பற்றிய குறியீடு, சொந்தக் குறியீடு என இருவகைப்படும்."[60]

இவ்வகையில் முற்சுட்டிய ஆறுடன் இவ்விரண்டையும் சேர்க்கின்ற போது குறியீடுகள் எட்டு வகைகளில் இடம் பெறுகின்ற நிலை தெளிவாகிறது. இவ்வாய்வில் இவ்வகைப்பாட்டை ஒட்டியே குறியீடுகள் மதிப்பிடப்பெறுகின்றன. குறிப்பாக வரலாற்றுக் குறியீடு இவரின் கவிதைகளில் காணப்பெறவில்லை. வரலாற்றுக் குறியீட்டைத் தவிர மேலே குறித்த ஏழு வகைப்பாடுகள் அப்துல்ரகுமான் கவிதைகளில் இடம் பெற்றிருக்கும் நிலை மதிப்பிடப் பெற்றது. அப்துல் ரகுமான் கவிதைகளில் குறியீடுகள் இடம் பெற்ற நிலை

அட்டவணைப்படுத்தப் பெற்றுள்ளன.[61] அட்டவணையில் கிடைத்த விவரங்கள் பின்வருமாறு.

| | | |
|---|---|---|
| 1. | சொந்தக் குறியீடு | 45 |
| 2. | இயற்கைக் குறியீடு | 34 |
| 3. | தொன்மக் குறியீடு | 31 |
| 4. | சமயக் குறியீடு | 13 |
| 5. | இலக்கியக் குறியீடு | 11 |
| 6. | வழக்குக் குறியீடு | 11 |
| 7. | இடம் காலம் பற்றிய குறியீடு | 18 |
| | | 153 |

## 1. சொந்தக் குறியீடு:

"கவிஞர்கள் தாமே உருவாக்கும் குறியீடுகளைத் தற்குறியீடுகள் (Private Symbols) எனலாம்."[62] "ஒரு படிமமோ அல்லது உருவகமோ ஒரு ஆசிரியரின் நூலில் அடிக்கடி பயன்படுத்தப் பெறும்போது அது சொந்தக் குறியீடு ஆகிறது. ஆசிரியனே புதிதாகப் படைத்து வழங்கும் குறியீடுகளும் இதனுள் அடங்கும்"[63] என்ற கருத்து இங்கு கருதத்தக்கதாகும்.

"இக்குறியீடுகள் தமிழ்ப் புதுக்கவிதையில் குறிப்பிடும்படியான அளவுக்குக் காணப்படுகின்றன. கவிஞர்களுக்கு இருக்கக் கூடிய குறியீட்டார்வமும், கொள்கைச் சார்புமே இதற்குக் காரணம் எனலாம். மேலும் சிலர் தனிப்பட்ட உத்திகளைக் கையாள்வதன் மூலமும் புதிய குறியீடுகளை உருவாக்குகின்றனர்."[64]

இக்கருத்துக்களை எல்லாம் சிந்திக்கிறபோது கவிஞர்கள்தாமே உருவாக்கும் குறியீடுகள் சொந்தக் குறியீடுகள் என மதிப்பிடலாம். இக்குறியீட்டிற்குத் தற்குறியீடுகள் என்ற பெயரும் ஆய்வுலகில் நிலவுகிறது. இக்குறியீட்டை இருவகைகளில் பகுத்துப் பார்க்கலாம்.

1. ஆசிரியன் அடிக்கடிப் பயன்படுத்துவதால் உருவாகும் சொந்தக்குறியீடு.
2. ஆசிரியனே புதிதாகப் படைத்து வழங்கும் சொந்தக்குறியீடு.

அப்துல் ரகுமான் குறியீட்டு உத்திகளை மிகுதியாகக் கையாள்பவராவார். அதனால் "குறியீட்டுக் கவிஞர்" என்ற சிறப்பிற்குரியவராகக் கருதப்பெறுகிறார். இக்குறியீட்டு உத்தி அப்துல் ரகுமானுக்குத் தனித்துவத்தைத் தந்துள்ளது. "அப்துல் ரகுமான் தமிழ்க் கவிஞர்களில் தமது குறியீட்டு உத்தியால் உயர்ந்து நிற்கிறார்"[65] எனும் கருத்து சிந்திக்கத்தக்கதாகும்.

பெரும்பாலான கவிஞர்கள் படிமக் கவிஞர்களாகத் திகழ்வர். அப்துல் ரகுமான் குறியீட்டுக் கவிதைகளைப் படிமக் கவிதைகளைவிட அதிக அளவில் கையாள்கிறார். அப்துல் ரகுமானின் இவ்வியல்பினை அறியப் பல காரணங்களைச் சிந்திக்க வேண்டியுள்ளது. அப்துல் ரகுமானின் தாய்மொழி உருது. உருதுவில்தான் குறியீட்டுக் கவிதைகள் நிறைந்துள்ளன என்பர். "இந்திய மொழிகளில் குறியீடுகளின் பயன்பாடு அதிகமாகக் காணப்படுவது உருது, ஒரிய மொழி மற்றும் வங்காள மொழிகளில் தான். அப்துல் ரகுமானின் கவிதைகளைப் பார்த்த பிறகு தமிழ் மொழியிலும் குறியீடுகளின் பயன்பாடு மிக பண்பட்ட நிலையில் உள்ளது என்று தெரியவருகிறது. இது மிகவும் ஏற்புடைய வரவேற்கத்தக்க விஷயமாகும்"[66] எனும் கருத்து இங்கு இணைத்து நோக்கத்தக்கதாகும்.

மேற்சுட்டிய காரணம் மட்டுமின்றி, புதுமை நோக்கமும், பன்மொழி அறிவும் காரணங்களாகலாம். குறியீட்டுக் கவிதைகள் எழுதுவது அரிது. குறிப்பாகச் சொந்தக் குறியீட்டை உருவாக்கி எழுதுவது மிக அரிதாகும். அப்துல் ரகுமான் சொந்தக் குறியீட்டை மிகுதியாகக் கையாள்வது கவிஞரின் சிறப்பினைக் காட்டுவதாகும்.

**சொந்தக் குறியீட்டின் வகைப்பாடு:**

ஆய்விற்குட்படுத்தப்பெற்ற அப்துல் ரகுமான் கவிதைகளில் சொந்தக் குறியீடுகள் இடம்பெற்ற விதம் பின்வருமாறு அட்டவணைப்படுத்தப் பெற்றுள்ளன.

## சொந்தக் குறியீடுகள்

| வ.எண் | கவிதைத் தொகுப்பும் கவிதைத் தலைப்பும் | சமுதாயம் | அரசியல் | தத்துவம் | குறியீட்டு எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| | **பால்வீதி** | | | | |
| 1. | சுட்ட பழம் | சீர்கேடு | -- | -- | 1 |
| 2. | எங்கள் நதிக்கரையில் | பழைமை சாடல் | -- | -- | 4 |
| 3. | ஞானதேவதை | சீர்கேடு | -- | -- | 1 |
| 4. | சுதந்திர தேவதை | சீர்கேடு | -- | -- | 5 |
| 5. | சபிக்கப்பட்டபூவனம் | முரண்பாடு | -- | -- | 1 |
| | **நேயர் விருப்பம்** | | | | |
| 6. | தாயைப்பெற்றநாள் | சீர்கேடு | -- | -- | 1 |
| 7. | அரசியல்வாதிகளுக்கு | சீர்கேடு | -- | -- | 1 |
| | **சுட்டுவிரல்** | | | | |
| 8. | இரத்தம் வெவ்வேறு நிறம் | சீர்கேடு | -- | -- | 1 |
| 9. | வெள்ளையடித்தத்தாமரை | கல்விச் சீர்கேடு | -- | -- | 1 |
| 10. | அபசுரம் | சீர்கேடு | -- | -- | 1 |
| 11. | சிகப்பு நாடா | -- | காலதாமதம் | -- | 1 |
| 12. | நாற்காலி | | பதவி மோகம் | -- | 1 |
| 13. | முற்றுப்புள்ளியா | | சீர்கேடு | -- | 4 |
| 14. | ஒழுகும் பேனாக்கள் | எழுத்தாளர் சுயநலம் | -- | -- | 2 |
| 15. | டி.வி.பார்க்கும் ராமர்கள் | ஏமாளி மக்கள் | -- | -- | 1 |
| 16. | பொம்மலாட்டம் | வாழ்க்கை | -- | -- | 1 |
| 17. | காலவழு | பழைமை சாடல் | -- | -- | 1 |
| 18. | கொம்பு | உரிமையின்மை | -- | -- | 1 |
| 19. | ஒப்பந்தம் | -- | முரண்பாடுகள் | -- | 2 |
| 20. | உங்களுக்கு எதற்கு | விழிப்புணர்வின்மை | -- | -- | 9 |
| 21. | வயது வராதவர்களுக்கு மட்டும் | விழிப்புணர்வின்மை -- | -- | -- | 3 |
| 22. | ஒருநாள் கூத்து | -- | அரசியல்சீர்கேடு | -- | 1 |
| | **ஆலாபனை** | | | | |
| 23. | பற்றுவரவு | சமுதாயச் சீர்கேடு | -- | -- | 1 |

சுட்டுவிரல் தொகுதியில் அப்துல் ரகுமான் சொந்தக் குறியீடுகளை மிகுதியாகக் கையாண்டுள்ளமையை அட்டவணையின் வழி அறியலாம்.

அதற்கடுத்த நிலையில் பால்வீதியில் சொந்தக் குறியீடுகள் இடம் பெற்றுள்ளன. சமகாலச் சீர்கேடுகளைச் சுட்டிக் காட்டும் வகையில் அமைந்த கவிதைகள் சுட்டுவிரல் தொகுதியில் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. இந்நிலையைக் கருத்தில் கொண்டு கவிஞர் "சுட்டுவிரல்" என்ற தலைப்பினைக் கவிதைக்குக் கொடுத்துள்ளார்.

சமுதாயத்தின் அக்கிரமங்களைக் குறிக்க அப்துல் ரகுமானுக்குச் சொந்தக் குறியீடுகள் தேவைப்பட்டுள்ளன என்பதால் சுட்டுவிரலில் அதிகமாக கவிஞர் உருவாக்கிய சொந்தக் குறியீடுகள் உள்ளன எனலாம். சுட்டுவிரல் நூலின் முன்னுரையில் கவிஞர் குறித்த போது,

"இது -

உள்ளே கொந்தளித்துக் குமுறி முகடு உடைத்துச் சிதறிய என் கோபாக்கினி.

என் தவம் கலைக்கப்பட்ட போது திறந்த என் நெற்றிக் கண்.

நான் கலக்கப்பட்ட போது துப்பிய ஆலகாலம்.

என் மையின் பிரளயம்.

அசிங்கங்களை அக்கிரமங்களை, அவலங்களை நோக்கி நீண்ட என் சுட்டுவிரல்[67] என்ற கவிஞரின் கூற்றை வைத்து மதிப்பிடும் போது சொந்தக் குறியீடு மிகுந்திருப்பதற்கான காரணத்தை ஒருவாறு உணரலாம்.

சமுதாயம், அரசியல், பொருளாதாரம், தத்துவம் போன்ற தளங்களில் சொந்தக் குறியீடுகள் அமைந்திருக்கக் காணலாம். இவைகளில் சமுதாயம் சார்ந்த நிலையில் முதல் நிலையிலும், அரசியல் சார்ந்த நிலையில் அடுத்த நிலையிலும் சொந்தக் குறியீடுகள் காணப் பெறுகின்றன. பொருளாதாரம், தத்துவம் சார்ந்த குறியீடுகள் வகைக்கு ஒன்றாகக் காணப் பெறுகின்றன.

**1. சமுதாயம்:**

அப்துல் ரகுமான் இயல்பாகவே சமூகக் கடமை மிக்கக் கவிஞராக விளங்குகிறார். இக்கருத்து உள்ளடக்கப் பகுப்பாய்வின் வழியும் முன்பு உறுதி செய்யப் பெற்றதாகும். சமுதாயத்தின் சீரழிவுகள் மற்றும் அவலங்கள் கவிஞரின் மனத்தைப் பாதிக்கின்றன. இந்நிலையிலிருந்து மீட்சியடைய வேண்டும் என்பது கவிஞருடைய விருப்பமாகும். எனவே, கவிதைகளில்

சமகாலச் சூழலைக் குறியீட்டு முறையில் வெளிப்படுத்துகின்றார். இவரது கவிதைகளில் குறிப்பிடப்பட்டவர்களையும், குறிப்பிட்டவைகளையும் குறித்து அவர் கூறும் போது, "அந்தக் குறிப்பிட்டவர்களும் குறிப்பிட்டவைகளும் இந்த நாட்டின் கலாச்சாரச் சீரழிவுக்கு என் சமகாலக் குறியீடுகளாக இருந்தனர்/இருந்தன என்பதே இதற்கான காரணம்[68] என்று கூறுகிற கருத்து மிகப் பொருத்தமானதென்று மதிப்பிடலாம்.

சீர்கேடுகள், பழைமை சாடல், முரண்பட்ட சமூகப் போக்கு, உரிமையின்மை, விழிப்புணர்வின்மை போன்ற நிலைகளில் சமுதாயம் சார்ந்த சொந்தக் குறியீடுகளை அமைக்கின்றார். குறிப்பாகச் சீர்கேடுகளை மையமிட்ட குறியீடுகள் மிகுந்திருப்பதை அட்டவணையின் வழி உணரலாம்.

சமுதாயம் சார்ந்த சொந்க் குறியீடுகளைச் சில எடுத்துக்காட்டுகளின் வழிக் காணலாம்.

"எங்கள் நதிக்கரையில்" என்ற தலைப்பில் பழைமையை நாடி புதுமையை ஏற்காமல் ஏற்படும் சமூக முரண்களின் சீரழிவுகளைப் பல சொந்தக் குறியீடுகளில் விளக்கிச் சொல்கிறார்.

"எங்கள் நதிக்கரையில்
பெங்குவின் பறவைகள்
முதுமக்கள் தாழிகளில்
முட்டையிடும்" [69]

என்கிற வரி கருத்தாழமிக்க வரியாகும்.

பெங்குவின் பறவைகள் பின்னோக்கி நடக்கும் இயல்பினை உடையன. மக்களும் முன்னோக்கி முன்னேறாமல் பழைமையில் சிக்கிச் சீரழிவதை இவ்விடத்தில் பெங்குவின் பறவையைக் குறியீடாகக் காணக் கூறுகிறார். இலக்கியம், மொழி போன்றவைகளில் பழைமையிலிருந்து விடுபட்டு ஆக்கப் பணிகளில் ஈடுபடாதவர்களைக் குறிப்பிடும் போக்கில்,

"அக்கரையில் சந்தை
கூடியிருக்க -
பாசி பிடிக்கிற தென்று
படகைத் தரையயிலேற்றிக்

கழுவிக் கொண்டிருக்கும்

ஓடக்காரர்கள்''[70]

என்று குறிப்பிடுகிறார்.

இங்கு படகு என்பது மொழி. ஓடக்காரர்கள் என்பவர்கள் மொழியை வெறும் வழிபாட்டிற்குரியதாக மட்டும் நினைப்பவர்கள் என்று சொந்தக் குறியீட்டை அமைத்து உரைக்கிறார்.

ஆற்றின் அக்கரையில் சந்தை நடந்து சமுதாயம் முன்னேறிக் கொண்டிருக்கிறது. இக்கரையில் மொழியின் பழமையில் சிக்கி ஆக்கப் பணியில் ஈடுபடாமல் இருப்பதை மிக்க வேதனையுடன் வெளிப்படுத்துகிறார்.

"காலவழு" என்ற தலைப்பில் பழைமையைச் சுமக்கும் பழைமைவாதி களைத் திருத்த முயல்கிறார்.

"உன் முப்பாட்டன்

அணிந்தது என்பதற்காக

விலங்குகளை அணிகிறாய்

உன் பாட்டன் குடித்தது

என்பதற்காக

நஞ்சைக் குடிக்கிறாய்

எந்தப் பிணத்தையும்

எரிக்க மறுக்கிறாய்''[71]

என்பதில், விலங்குகள், நஞ்சு, பிணம் என்பன பல்வேறு பொருள்களைத் தந்து நிற்கின்றன. எப்போதும் இறந்த காலத்திடமே நிற்பவர்களை, முன்னோரின் புகழை மட்டுமே கூறிக் கொண்டிருப்பவர்களை இக்கவிதையில் சாடுகிறார். விலங்குகள் பழமைத் தன்மையையும், நஞ்சு கழிவினையும் பிணம் அப்புறப் படுத்த வேண்டியதனையும் குறிக்கும் சொந்தக் குறியீட்டுச் சொற்களாகும். பழமைவாதிகளில் சமுதாயம் சீர்கேடு அடைந்து முன்னேராத நிலையில் இருப்பதை இக்கவிதையின் வழிக் கவிஞர் புலப்படுத்துகிறார்.

**விழிப்புணர்வின்மை**

உங்களுக்கு எதற்கு? என்ற கவிதைத் தலைப்பின் வழி விழிப்புணர்வே இல்லாமல் இருக்கிறீர்கள் இந்நிலையில் விழிப்புணர்வைத் தரக்கூடிய அலாரம், வெளிச்சத்தைத் தரக்கூடிய சாளரம் போன்றவை உங்களுக்கு எதற்கு என்ற வினாவினை எழுப்பிச் சிந்திக்க வைக்கிறார்.

"நீங்கள்
விழிக்கப் போவதில்லை
உங்களுக்கு எதற்கு
அலாரம்?
நீங்கள்
வெளியே பார்க்கப் போவதுமில்லை
வெளிச்சத்தை
உள்ளே விடப் போவதுமில்லை
உங்களுக்கு எதற்கு
சாளரங்கள்?" [72]

என்று குறிப்பிடுவதைக் காணலாம்.

**அரசியல்**

அரசியல்வாதிகளின் சீர்கேடுகள், பதவி மோகம், பதவிக்கு வந்த பின் காலதாமதம், முரண்பாடுகள் போன்ற நிலைகளை அப்துல் ரகுமான் கவியாத்துள்ளார்.

அரசியல்வாதிகளின் படைப்பாகிய கட்சிக்கொடிகள் எங்கும் நிறைந் திருப்பதையும் அதனால் ஏற்படும் கேட்டினையும் "பார்த்தீனியம்" எனும் நச்சுச் செடியுடன் ஒப்பிடுகிறார்.

"ஒன்றாய்..., பத்தாய்..., நூறாய்..., ஆயிரமாய்
முளைத்துப் பெருகுகின்றன
இந்த மரங்கள்
பார்த்தீனியம் போல்" [73]

என்கிறார். பார்த்தீனியச் செடி எதற்கும் பயன்படாததும், சூழலுக்குக் கேடுவிளைவிப்பதுவும், மாடு ஆடுகள் கூட முகர்ந்து பார்க்காத கொடிய நச்சுச் செடியாகும். இதனைக் கொடிமரங்களுக்குச் சொந்தக் குறியீடாய் காட்டுகிறார்.

**தத்துவம்**

அப்துல் ரகுமானிடம் இயல்பாகவே ஆழ்ந்த சிந்தனை சார்ந்த தத்துவ நோக்கு உண்டு. எனினும் தத்துவ நோக்கில் குறியீட்டு உத்தியினை மிகுதியாகப் பயன்படுத்தவில்லை. இந்நிலைக்குக் காரணம் ஆழ்ந்த தத்துவப் பொருளே, பொருள் இருண்மையுடன் தொடர்புடையதாக இருக்கும். அத்தகு பொருள் இருண்மையுடைய கவிதைகளில் குறிப்பாகச் சொல்லும் குறியீட்டு முறையைப் பொருத்தினால் பொருள் புலப்பாடு மேலும் கடினமாகலாம். எனவே, அப்துல் ரகுமான் சொந்தக் குறியீட்டில் தத்துவக் குறியீட்டை மிகுதியாகப் பயன்படுத்தவில்லை என் உறுதி செய்யலாம்.

சொந்தக் குறியீடு இடம் பெற்றுள்ள பொம்மலாட்டம் எனும் தத்துவக் குறியீட்டுக் கவிதையைக் காணலாம். குழந்தைப் பருவத்தில் மட்டுமல்ல எப்போதும் மனிதர்களுக்கு ஒரு பொம்மை தேவைப்படுகிறது. அந்த பொம்மை, மரத்தால் செய்தது, மாமிசத்தால் செய்தது. வார்த்துச் செய்தது, வார்த்தைகளால் செய்தது எனச் சுட்டுகிறார்.

“பொம்மைகளிடம் சிக்க
பொம்மைகள் உன்னை
ஆட்டுகின்றன.
ஆடுகிறாய்
ஒரு விபரீதம் நடக்கிறது
நீ செய்த பொம்மைகளுக்கு
நீயே பயப்படுகிறாய்
நீ செய்த பொம்மைகளின் முன்
நீயே விழுந்து வணங்குகிறாய்”[74]

என்கிறார். கடவுள், குழந்தை, மனைவி போன்றவர்களை வாழ்க்கை ஓட்டத்தில் மனிதன் உருவாக்குகிறான். உருவாக்கியவைகளுக்காக உருவாக்கியவனே பயந்து வாழ்கிறான்.

பொம்மைகள் என்பது உயிருள்ளவைகளையும் குறிக்கும்; உயிரற்றவைகளையும் குறிக்கும்.

உயிருள்ளவைகளோடு உறவுகள் தொடர்பு பெறுகின்றன. உயிரற்றவைகளோடு எண்ணங்களும் தொடர்பு பெறுகின்றன. உறவுகளும் எண்ணங்களும் சேர்ந்து அலைக்கழிக்கப்படுவதே வாழ்க்கையாகிறது. இங்கு பொம்மைகள் என்பது அவரின் சொந்தக் குறியீடாகும்.

அப்துல் ரகுமானின் கவிதைத் தொகுப்புகளாகிய நான்கில் இருபத்தி நான்கு கவிதைத் தலைப்புகளில் நாற்பத்தைந்து சொந்தக் குறியீடுகள் இடம் பெற்ற நிலை முன்னர் விளக்கம் பெற்றுள்ளன. இக்கவிதைகளில் சில கவிதைகளில் ஒரு குறியீடே இடம் பெற்றிருக்கக் காணலாம்.

பதினாறு கவிதைகளில் ஒரு குறியீடு இடம் பெற்றிருக்கக் காணலாம். மூன்று கவிதைகளில் இரு குறியீடுகள் இடம் பெற்றுள்ளன. ஒரு கவிதையில் மூன்று குறியீடும், நான்கு குறியீடும் ஒன்பது குறியீடும் இடம் பெற்ற நிலை பின்னிணைப்பு அட்டவணையில் காண முடிகிறது.[75] இவ்வாறு அப்துல் ரகுமான் கவிதைகளில் சொந்தக் குறியீட்டின் இடம் மதிப்பிடப் பெறுகிறது.

**2. இயற்கைக் குறியீடு:**

இயற்கைக் குறியீடுகள் உலகில் உள்ள அனைத்து மக்களுக்கும் பொதுவானவை. மொழி இனம் பண்பாடு என வேறுபாடு கருதாமல் அனைத்து மக்களுக்கும் ஒரே பொருள் தரக் கூடியவை. இக்குறியீடுகள் பெரும்பான்மை இயற்கையைச் சார்ந்து தோற்றம் பெறுவதால் இயற்கைக் குறியீடு என அழைக்கப் பெறுகிறது.

(எ.கா) ஒளி இன்பத்தையும் இருள் துன்பத்தையும் குறித்து நிற்பது. எல்லா இனத்தவருக்கும் உரியதாய் இருக்கிறது.இயற்கையின் மீது கவிஞருக்குள்ள ஈடுபாட்டை உள்ளடக்கத்தில் விரிவாகக் காணப்பெற்றது. கவிஞர்கள் இயற்கைக் குறியீட்டை இரு பிரிவுகளில் கையாள்வது வழக்கம்.

1. இயற்கையை இயற்கையாக மட்டும் நோக்குதல், 2. இயற்கையுடன் சமுதாயத்தையும் இணைத்து நோக்குதல். இவற்றில் இரண்டாவது வகையை அப்துல் ரகுமான் கவிதைகளில் காணலாம். ஒரு இயற்கைக் குறியீட்டுக் கவிதையில் கூட இவர் இயற்கையை இயற்கையாக மட்டும் நோக்கவில்லை என்பது குறிக்கத்தக்கதாகும்.

அப்துல் ரகுமானின் கவிதைகளில் இடம்பெறும் இயற்கைக் குறியீட்டை ஆறுவகைகளில் பகுத்துக் காணலாம்.

ஆய்வுக்குரிய தொகுப்புகளில் முப்பத்தி நான்கு கவிதைகள் இயற்கைக் குறியீட்டுக் கவிதைகள் ஆகும்.

இவரின் இயற்கைக் குறியீட்டினை, வான், காற்று, தீ, நீர், மண், தாவரங்களும் உயரினங்களும் என்றவாறு விளக்கிக் காணலாம். ஆயினும் குறிப்பாக, நீர், மண் பற்றிய இவரின் கவிதைகள் படிமக் கவிதைகளாக மட்டும் உள்ளன.

இயற்கைக் குறியீடு பால்வீதி தொகுப்பில் மிகுந்துள்ளன. அதற்கடுத்த நிலையில் சுட்டுவிரலிலும் மற்றும் நேயர்விருப்பம், ஆலாபனை போன்ற தொகுதிகளிலும் ஒவ்வொரு இயற்கைக் குறியீடுகள் இடம் பெற்றுள்ளன. பால்வீதி என்ற பெயரே ஆகாயத்துடன் தொடர்புடையது. அதனையே கவிதை நூலின் தலைப்பாகவும் அப்துல் ரகுமான் ஆக்கியுள்ளார். எனவே, அக்கவிதைத் தொகுப்பில் இயற்கை சார்ந்த குறியீடுகள் மிகுந்திருப்பது பொருத்தமெனலாம்.

இயற்கைக் குறியீட்டைப் பஞ்சபூதங்கள் வரிசையில் நோக்குகிறபோது ஆகாயம் சார்ந்த இயற்கைக் குறியீடுகளே இவரிடம் மிகுந்திருக்கக் காணலாம். ஒன்பது கவிதைகளில்[76] முற்சுட்டிய இயல்பு இடம் பெற்றிருக்கக் காணலாம். காற்றுத் தொடர்பாக ஒரு குறியீட்டுக் கவிதையே காணப் பெறுகிறது.

**வானத்துக் கவிஞர்**

சூரியன், சந்திரன், விண்மீன்கள், மேகம், சந்திரகிரகணம், வெளிச்சம், இருள் போன்ற நிலையில் வானத்துப் பொருள்கள் குறியீட்டு நிலையில்

தொடர்பு பெறுகின்றன. அக்குறியீடுகளில் இயற்கையுடன் சமுதாயத்தையும் இணைத்து நோக்குகிற போக்கு இடம் பெற்றிருக்கிறது.

எடுத்துக் காட்டு விளக்கங்களுக்காக சில கவிதைப் பகுதிகளைக் காணலாம். ''சபிக்கப் பட்ட பூவனம்'' என்னும் கவிதையில்,

''ஒரு சங்காரத்தால்
இந்த பூமி பண்படுத்தப்பட்டபின்
நட்சத்திர விதைகளைத்
தூவுவோம் இங்கே''[77]

என்று பாடுகிறார். இப்பூமி சபிக்கப்பட்ட பூமியாக இருக்கிறது என்கிறார். இங்கு நல்ல அமைப்புகள் தீமை உடையதாக மாறி வருவதை மாற்ற வேண்டும் என்று விரும்புகிறார். இப்பூமியை முற்றிலும் அழித்துவிட்டு நட்சத்திர விதைகளைத் தூவிப் புதிய பூமியை உருவாக்க வேண்டுமென்று கூறுகிறார். இங்கு நட்சத்திரம் என்பவை ''உயர்ந்தவை'' என்கிற குறியீட்டுப் பொருளைத் தருகிறது.

**காற்று:**

ஐம்பூதங்களில் உயிரினங்களின் உயிராக விளங்குவது காற்றாகும். மேற்குறிப்பிட்ட கவிதையில் நல்லியல்புடையன தீயவற்றுடன் இணைகிறபோது தன்நிலை திரிந்து போகின்றமையை வேதனையுடன் வெளிக்காட்டத் தென்றலைக் குறியீடாக்குகிறார்.

''நறுமணங்களில் நீராடவரும்
தென்றல்
நாற்றப் புதைச் சேற்றில்
சிக்கிக் கொள்கிறது''[78]

என்கிறார். நல்ல நிறுவனங்கள் தன் தனித்தன்மை குன்றும் நிலையைத் தென்றலுடன் ஒப்பிடுகிறார்.

**தாவரங்களும் உயிரினங்களும்:**

தாவரங்கள் உயிரினங்கள் போன்ற இயற்கை நிலைகளைச் சார்ந்து இயற்கைக் குறியீடுகளை அமைக்கிறார். மரம், பூ, மூலிகை, இலை, கனிமரம்,

தாமரை போன்ற நிலைகளில் தாவரங்களைச் சார்ந்த குறியீடுகளை அமைக்கிறார்.

மரம் சார்ந்த இயற்கைக் குறியீட்டினைச் சற்று விளக்கமாகக் காணலாம். "தாகம்" என்ற தலைப்பில் மரத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறார். அவ்வகையில்,

"வேலிக்கு வெளியே
தலையை நீட்டிய என்
கிளைகளை வெட்டிய
தோட்டக் காரனே!
வேலிக்கு அடியில்
நழுவும் என் வேர்களை
என்ன செய்வாய்?"[79]

என்று மரம் கேட்பது போலப் பாடலை அமைக்கிறார். மரம் பேசுவது போல அமைத்திருக்கும் இப்பாடலில், மனிதர்களுடைய இயற்கை உணர்வுகளைச் சமுதாயத்தின் சட்டதிட்டங்கள் அடக்க முடியாது என்ற பொருளை மேற்குறித்த கவிதையின் வழிக் குறியீட்டுப் பொருளாக அமைக்கிறார்.

கிளைகளை வெட்டுதல் - உரிமைகளை அடக்கி ஒடுக்குதல், வேர்கள் - இயற்கை உணர்வுகள் எனக் குறியீட்டுப் பொருள் இக்கவிதையில் தொனிப்பதைக் காணலாம்.

இவ்வாறு இயற்கைக் குறியீட்டிலும் சமுதாயத்தை இணைத்துச் சிந்திக்கிறார்.

பறவை, பாம்பு, வண்ணத்துப்பூச்சி, வண்டு, காக்கை, குருவி, பசு, கிளி, ஈசல் போன்ற உயிரினங்களைக் குறியீடாகப் பயன்படுத்தியுள்ளார். அவ்வகையில் குறியீடுகள் அமைக்கின்றன. உயிரினங்களில் பறவைகளிடம் கவிஞருக்கு மிகுந்த சார்பு இருப்பதைப் பரவலான எண்ணிக்கையின் வழி அறிய முடிகிறது. இவ்வகைக் குறியீட்டு விளக்கத்திற்காக "ஒப்பில்லாத சமுதாயம்" எனும் கவிதையைக் காணலாம்.

"சிறைகளும் அங்குண்டு
செல்லும் புழுக்களை

வண்ணத்துப் பூச்சியாய்

மாற்றி அனுப்புவதற்கு!"[80]

என்பது கவிதை வரியாகும். கவிஞர், ஒப்பில்லாத சமுதாயம் ஒன்று அமைக்க விரும்புகிறார். அச்சமுதாயத்தில் அறியாத மனிதர்கள் சிறையில் அடைக்கப் பெற்றாலும் விடுதலை பெறும் போது அறிவாளிகளாக மாறுவார்கள். சிறைச்சாலை அறச்சாலையாக இருக்கும் என்கிறார். இச்செய்தியை வண்ணத்துப் பூச்சியின் மூலம் குறியீடாக உணர்த்துகிறார்.

ஒன்பது கவிதைகள் வானம் தொடர்பாகவும், ஒரு கவிதை காற்றுத் தொடர்பாகவும், எஞ்சிய இருபத்திநான்கு கவிதைகள் தாவரங்களும் உயிரினங்களும் தொடர்பாகவும் இடம் பெற்றுள்ளமை கண்டறியப் பெற்றது. பிற இயற்கைப் பொருள்களைவிட கவிஞரைத் தாவரங்களும் இயற்கை உயிரினங்களும் பெரிதும் ஈர்த்தமை இக்கண்டறிதலின் வழி உணரலாம்.

## இயற்கைக் குறியீட்டின் வகைப்பாடு

| வ.எண். | கவிதை நூலும் கவிதைத் தலைப்பும் | வான் | காற்று | தாவரங்களும் உயிரினங்களும் | குறியீடு எண் |
|---|---|---|---|---|---|
| | **பால்வீதி** | | | | |
| 1. | தாகம் | | | மரம் | 1 |
| 2. | எங்கள் நதிக்கரையில் | | | பறவை, பாம்பு, மரம் | 3 |
| 3. | சுதந்திர தேவதை | | | சிறகு | 2 |
| 4. | சபிக்கப்பட்ட பூவனம் | கிரணம் சூரியன் | தென்றல் | பூக்கள், மூலிகை இலைகள், பறவை மரம், வசந்தம், கனிமரம், பூமி | 12 |
| | **நேயர்விரும்பம்** | | | | |
| 5. | ஒப்பில்லாத சமுதாயம் | | | வண்ணத்துப் பூச்சி | 1 |
| | **சுட்டுவிரல்** | | | | |
| 6. | கொடிமரம் | | | பூ, தேன் | 1 |
| 7. | நட்சத்திரப் பலன் | வெளிச்சம் இருள் சூரியன் | | தாமரை | 3 |
| 8. | முற்றுப்புள்ளியா? | சூரியன் விண்மீன் | | | 1 |
| 9. | துலாபாரம் | | | மலர், வண்டு | 1 |
| 10. | ஒப்பந்தம் | இருள், சந்திரன் | | | 1 |
| 11. | வயதுவராதவர்க்கு மட்டும் | | | காக்கை, குருவி பசு, கிளி | 4 |
| 12. | சோளக்கொல்லை பொம்மை | | | பறவை | 1 |
| 13. | உதிரும் சிறகுகள் | | | ஈசல், சிறகு | 1 |
| 14. | அவதாரம் | மேகம் | | | 1 |
| | **ஆலாபனை** | | | | |
| 15. | பற்றுவரவு | மேகம் சூரியன் | | | 1 |
| | | | | | **34** |

### 3. தொன்மக் குறியீடு:-

தொன்மக் கதைகளில் இடம்பெறும் நிகழ்ச்சிகளும் பாத்திரங்களும் குறியீடாகப் பயன்படுத்தப்படுவது தொன்மக் குறியீடாகும். இந்திய நாட்டில் தொன்று தொட்டு நிலவிவரும் இந்தியத் தொன்மப் பாத்திரங்களும் நிகழ்வுகளும் மக்கள் மனதில் கலந்து விட்டன. தொன்மப் பாத்திரத்தின்

பெயரையோ நிகழ்வையோ குறிப்பிட்டவுடனேயே அதனோடு தொடர்புடைய உணர்வுகள் உள்ளத்தில் எழுகின்றன.

"எந்த நாட்டிலும் தொன்மத்திற்கும், கவிதைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. உணர்வு மிகுந்த கவிதைகள் பெரும்பாலும் தொன்மத்தை ஆதாரமாக உடையன"[81] என்பர். இன்றைய காலச்சிக்கல்கள் பலவற்றைச் சுட்டிக்காட்டத் தொன்மப் பாத்திரங்கள் துணைபுரிகின்றன. "நம் இந்திய தொன்மங்கள் இக்காலத்து உணர்வுகளையும் சிக்கல்களையும் வெளிப்படுத்துவதற்கேற்ப மூலமாதிரிகள் பலவற்றைக் கொண்டுள்ளன."[82] தொன்மக் கவிதைகளின் வழி புதிய பல பொருள்களை வாசகர்களுக்குப் புலப்படுத்தலாம்.

புதுக்கவிதையில் தொன்மக் குறியீடு பயன்படுத்தப் பெறும் தொன்மங் கள் பழைய பொருளைத் தான் தரவேண்டும் என்ற நிலையில்லை. கவிஞரின் ஆளுமைத் திறத்திற்கு ஏற்றவாறு புதிய பொருளும் அமையலாம். தொன்மங்கள் சமயச்சார்புப் பொருளை விடுத்து, தொன்மக் கதை நிகழ்ச்சிகளின் போக்கில் விளையும் சூழற் பொருளிலேயே புதுக்கவிதையில் ஆளப்படுகின்றன. இந்திய குறியீட்டிய உத்திகளுக்குக் கிடைத்த பெருஞ் செல்வம் இராமாயணமும், மகாபாரதமும் ஆகும்.

அப்துல் ரகுமான் முப்பத்தொன்று (31) தொன்மக் குறியீடுகளைக் கையாண்டுள்ளார்.

அப்துல் ரகுமான் கவிதைகளில் இந்து சமயத்தைச் சார்ந்த குறியீடுகள் மிகுந்து காணப்படுகின்றன(22). அதற்கடுத்த நிலையில் பைபிளிலிருக்கும் தொன்மத்திலிருந்து குறியீடுகளை (8) அமைத்துக்கொள்கிறார். இசுலாமியத்திற்கானத் தொன்மப் பாத்திரங்களில் ஒன்றை மட்டும் பயன்படுத்தியுள்ளார்.

"இந்தியக் கவிஞர்களுக்கு மற்ற நாட்டினரைவிட அதிகமான புராணச் செல்வம் இருக்கிறது. "பால்வீதி" கவிதையில் முழுக்க முழுக்க இந்தத் தொன்மங்களின் ஆற்றலைப் பயன்படுத்தியிருக்கிறேன். ஒரு கவிஞன் புராணத்தைக் கைக்கொள்ளும்போது அதுமதத்திலிருந்து வெளி வந்துவிடுகிறது. அது இந்திய கலாச்சாரத்திற்கு உரியதாகி விடுகிறது.

ஆனால் பிரச்சினை என்னவென்றால் தொன்மம் என்றால் என்னவென்று தெரியாத சில அசிங்கமான மதவாதிகள் இந்து மதக் கடவுள்களை நான் கிண்டல் செய்வதாகக் கூறியிருக்கிறார்கள். பகுத்தறிவுவாதிகளோ நான் பழைய புராணங்களைப் புதுப்பித்துத் தூக்கி வைத்துக் கொண்டாடுகிறேன் என்று தூற்றியிருக்கிறார்கள். இசுலாமியரோ இந்துப் புராணங்களை எழுது கிறேன் என்று கண்டிக்கிறார்கள்''[83] என்று அப்துல் ரகுமான் குறிப்பிடுவது இவண் சிந்தனைக்குரியதாகும்.

வேறொரு வினாவுக்கு விடையாக, ''கவிதைக்குரிய இசுலாமியக் குறியீடுகளை என் கவிதைகளில் அளவோடு பயன்படுத்தியிருக்கிறேன். குர்-ஆனில் உள்ள காபிரியேல் சிறகு பற்றி எழுதியிருக்கிறேன். நான் ஆதாம் ஏவாள் பற்றி எழுதியிருக்கிறேன். நான் மதப்பழக்க வழக்கங்களைச் சொல்லவில்லை. ஆனால் தத்துவங்களைச் சொல்கிறேன். ஒரே கடவுள் அவனுக்கு ரூபமில்லை என்ற இஸ்லாமியக் கொள்கையை சொல்லியிருக் கிறேன்''[84] என்று கூறியிருப்பது குறிக்கத்தக்கது. மேலும் இது தொடர்பாக ''உளவியல் பார்வை'' யில் தெளிவாக விளக்கப் பெறுகிறது.

அப்துல் ரகுமானிடம் இந்து சமயத்தோடு தொடர்புடைய தொன்மத்தி லிருந்து பாத்திரங்களையும் கதையில் இடம்பெற்ற நிகழ்வுகளையும் குறியீடு களாக அமைக்கும் போக்குக் காணப்படுகிறது. வாமனன், மேனகை போன்ற பாத்திரங்களையொட்டிக் குறியீடுகளை அமைக்கிறார். பாற்கடல் கடைந்த நிகழ்வு அடிமுடிதேடிய நிகழ்வு போன்ற நிகழ்ச்சிகளையும் குறியீடாகக் கையாண்டுள்ளார். இராமாயணம், மகாபாரதம் போன்ற கதைகளில் இருந்தும் தொன்மக் குறியீடுகளைக் கையாள்கிறார்.

**புராணக்குறியீடுகள்:-**

மாபலி அரசனுடைய ஆணவத்தை அடக்குவதற்காகத் திருமால் வாமன அவதாரம் எடுக்கிறார். திருமால் கொடைமனம் உள்ள மாபலியிடம் மூன்றடி மண் கேட்கிறார். மன்னனும் இசைவு தருகிறான். வாமனனாக வந்தவர் விண்ணை ஓர் அடியிலும் மண்ணை ஓர் அடியிலும் அளந்து விட்டு மூன்றாவது அடிக்காக அவன் தலைமேல் திருவடியை வைக்கிறார். சிறிய உருவமான வாமனன் விசுவரூபம் எடுக்கிறார். இக்கதையை ''மானுடத்தில்

மகுடாபிஷேகம்'' என்ற கவிதையில் குறியீட்டு நிலையில் அப்துல் ரகுமான் பயன்படுத்துகிறார்.

''வியர்வையின்
சுயத்தாரை வார்ப்பில்
விசுவரூபமெடுக்கும்
இந்த வாமனனுக்கு
வானங்களே !
நீங்கள் போத மாட்டீர்கள்''[85]

என்று பாடுகிறார். மனித இனத்தின் அறிவுழைப்பும் உடலுழைப்பும் நிகழ்த்தி வரும் சாதனைகளைக் குறியீட்டுப் பொருளாக உணர்த்துகிறார். மனிதனின் உருவம் சிறு உருவமாக இருக்கலாம். ஆனால் சாதனைகள் விசுவரூபமாகத் திகழ்கின்றன.

பிறிதொரு தற்சார்புக் கவிதையில் விசுவரூபம் எடுக்கும் நிகழ்வை-

''யதார்த்த பகலில்
குறளாய்க் கொடையிரந்து
ஏகாந்த இரவில்
விசுவரூபம் கொண்டு
என்னையே புதைக்கும்
நிழல் நீ''[86]

என்று பகலில் பார்த்த காதலியின் நிழல் தனிமையான இரவில் விசுவரூபம் கொண்டு, தன்னை அந்த நிழல் புதைக்கிறது என்று கூறுகிறார். தான் தன்னை இழந்து அவளுக்குள் சமாதியாகிவிடுகின்ற நிலையை இவ்வாறு காட்டுகிறார்.

தொன்மக்கதை நிகழ்வைக் குறியீடாகப் பயன்படுத்தும் நிலைக்கு ஓர் எடுத்துக்காட்டினைக் காணலாம்.

''மன்மத இரவைச்
சுட்டெரிக்கும்
நெற்றிக் கண்ணாய்
கனல்கிறாய்''[87]

என்ற கவிதை வரிகள் “திருஷ்டி பரிகாரம்” என்ற கவிதையில் இடம் பெறுகின்றன.

மன்மதன் சிவனின் தவத்தைக் கலைத்த காலத்தில் சிவன் தன் நெற்றிக் கண்ணால் மன்மதனை அழிக்கிறான். இந்நிகழ்வை சூரியனின் இயற்கை நிகழ்வோடு தொடர்புபடுத்தி குறியீடமைக்கிறார். சூரியனின் ஒளிக் கதிர்களால் இரவு அழிகிறது. பகலின் பிறப்பை இப்படிப் பார்க்கிறார். மேலும் இரவை மன்மதஇரவு என்று குறிப்பிடுகிற சொல்லாட்சி குறிப்பிடத்தகுந்தது. ஏனெனில் இரவு இன்ப நுகர்ச்சிக்குத் தொடர்புடைய பொழுதாகும்.

“நெற்றிக்கண்” என்ற தலைப்பில் அறிவுக்கும் அன்புக்கும் இடையே உள்ள முரண்பாட்டில் அறிவு தோல்வியுறும் என்ற கருத்தைக் கீழ்க்கண்ட வரிகளில் குறியீடாக்கித் தருகிறார்.

> “திலகமாக நடிக்கும்
> நெற்றிக் கண்ணே
> நானும்
> நக்கீர வேடமிட்ட
> மன்மதன் தான்”[88]

என்று கூறுகிறார்.

நெற்றிக் கண்ணுக்கு மன்மதனை எரிக்க வேண்டும் என்று வெறி. நெற்றிக்கண் எனத் தெரிந்தால் மன்மதன் அதன் முன் வரமாட்டான். எனவே, மன்மதனை ஒளிந்திருந்து தாக்க நெற்றிக்கண் திலகமாக நடிக்கிறது. மன்மதனோ நெற்றிக் கண்ணை ஏமாற்ற நக்கீர வேடம் தரித்துக் கொள்கிறான். இந்த நிகழ்ச்சியின் குறியீட்டுச் செய்தி அறிவியலான நெற்றிக்கண் கட்டுப்பாடின்றி அழித்தல் தொழிலைச் செய்யுமாயின் இறுதியில் அழிவையே ஏற்படுத்தி அழியும் என்றும் அன்பு என்றென்றும் அழியாதது என்றும் குறிப்பிடுகிறார். இவ்வாறு குறியீட்டு உத்தியில் இரண்டு தொன்மப் பாத்திரங்களும் இணைப்புப் பெறுகின்றன. இது கவிஞருடைய தனித்த ஆளுமைத் தன்மையாகும். இது புதிய முயற்சி எனலாம். சொல்ல வந்த

கருத்தை மறை பொருளாக்கித் தருவது மட்டுமின்றி வடிவத்திலும் கருத்திலும் புதிய பார்வை தெரிகிறது.

**இதிகாசப் பாத்திரங்கள்:-**

இராமாயணக் கதையில் இடம் பெறும் பாத்திரங்களைக் கூறியவுடன் அந்தப் பாத்திரத்தை ஒட்டிய மதிப்பீட்டுச் செய்திகளும் தோன்றுகின்றன. இராமன் என்றால் அறத்தின் வழியில் நிற்பவன், சீதை என்றால் கற்பின் கனலி போன்ற மதிப்பீட்டுச் செய்திகளைக் குறிப்பிடலாம்.

"கலியுக இதிகாசம்" என்ற தலைப்பில் வேறுபட்ட கோணத்தில் இதிகாசக் கதைகளைக் குறியீடாக்கித் தருகிறார்.

"பாரங்களைத் தானே துறந்து
சுய ஆரண்யங்களில்
சூர்ப்பணகைகளுடன்
அம்மணமாய்த் திரியும்
இராமர்கள்"[89]

என்று கவிதை பாடுகிறார். இங்கு தொன்மக்கதை திரித்தாள்கின்ற இயல்புக்கு உள்ளாகிறது. கடமைகளைப் புறக்கணித்து வயிற்றுப் பிழைப்பிற்காக எந்த எல்லைக்கும் சென்று வாழத் துடிக்கும் அவலத்தை மேற்குறித்த பாடலில் பொருட்செறிவுடன் பாடுகிறார்.

வாழ்க்கைச் சுகங்களுக்காகத் தங்கள் கொள்கைகளை விட்டுச் சோரம் போகிறவர்களை,

"மாயமான்களின் மோகத்தில்
இராவணர்களிடம்
சோரம் போகும் சீதைகள்"[90]

என்று பாடுகிறார்.

குறியீட்டுக் கவிதையில் அரிய கற்பனை உள்ள கவிதைகளைப் படைக்கும் திறன் இவரிடம் இயல்பாக உள்ளது. "முதுமை" எனும் தலைப்பில்,

"இந்தவில் வளைகிறது
மரணத்தை

உயிர்மணக்க

இந்த வில்

ஒடிய வேண்டுமோ?"[91]

என்கிறார். முதுமையின் காலத்தில் உடல் கூனுவதை வில்லோடு பொருத்தி மரணம் உயிரை மணக்க உடல்வில் ஒடிய வேண்டுமோ? என்று கேட்கிறார்.

**மகாபாரதம்:-**

மகாபாரதத்தில் இடம் பெற்ற குருஷேத்திரப் போரின் நிகழ்ச்சியை "கலியுக இதிகாசம்" என்ற தலைப்பில் குறியீடாக்கித் தருகிறார். இக்காலத்தில் எண்ணிக்கையே வெற்றிக்குக் காரணமாக இருக்கின்ற சனநாயக அமைப்பிலுள்ள தேர்தல் முறையை அங்கதமாகச் சாடுவது போல உள்ளது.

"எண்ணிக்கையே தர்மமாகிய

குருஷேத்திரத்தில்

வெற்றிகளெல்லாம்

கௌரவர்களுக்கே

போய்ச்சேருகின்றன

அவர்கள் விருந்து மண்டபத்தில்

காபரே ஆடுகிறாள்

பாஞ்சாலி"[92]

என்று குறிப்பிடுகிறார்.

கண்ணன் ஆயதங்களை நிராகரித்தான் என்பது காந்தியடிகள் ஆயுதம் மூலம் சுதந்திரத்திற்கான அணுகுமுறையை அமைக்கவில்லை என்ற பொருளினைத் தருகிறது. அவருடைய புல்லாங்குழல் எதிரிகளைப் பணிய வைத்தது என்பது அகிம்சையும், சத்தியமும் போரில் வெற்றி பெற்றது என்ற பொருளைத் தருகிறது.

பாரதத்தாய், ஆங்கிலேயரிடம் அடிமைப்பட்டு இருந்ததற்குப் பாரதமக்களின் ஒற்றுமையின்மையே காரணம். இந்தப் பொருளைக் குறிக்கும் வகையில்,

"கௌரவர்களின்

காமக் கண்களின் முன்

பாஞ்சாலியின் துயிலைப்

பாண்டவரே உரித்த

பரிதாபப் படலமிது"[93]

என்று பாடுகிறார்.

இங்கு கௌரவர்கள்-ஆங்கிலேயர்கள்; பாஞ்சாலி-இந்தியத்தாய்; பாண்டவர்கள்-இந்திய மக்கள் ஆவார்கள் தொன்மக் கதையில் கௌரவர்கள் பாஞ்சாலியின் துகிலை உரிக்கத் துன்பப்படும் பாண்டவர்களுக்காகக் கிருஷ்ணன் காத்தளிக்கிறார். இங்கு பாண்டவர்களே பாஞ்சாலியின் துகிலை உரித்து துரியோதனன் காமக் கண்களுக்கு விருந்தளிக்கின்றனர்.

**பிற தொன்மக் குறியீடுகள்:-**

"நீதி தேவதை" என்ற கவிதையில் சிபியின் கதையைக் குறியீடாக அமைக்கிறார். நாட்டின் நீதி நெறி பிழிந்து சீரழிந்து வரும் நிலையைக் குறிக்கும் வகையில் இக்கதையைப் பயன்படுத்துகிறார்.

"என் தராசுத் தட்டுகளைக்

கொஞ்சம் கண்திறந்துபார்

அங்கே !

புறாவின் மாமிசத்தை

சிபிகள் உண்ண ஆரம்பித்துவிட்டார்கள்"[94]

புறாவிற்காகத் தன் மாமிசத்தைக் கொடுத்தவன் பழைய சிபி. தற்கால சிபிகளோ அடைக்கலமாய் வந்த புறாக்களின் மாமிசத்தையே உண்ணு கிறார்கள். இங்கு தராசுத்தட்டு "தர்மத்தைக்" குறிக்கிறது.

தொன்மப் பாத்திரங்களும் தொன்ம நிகழ்வுகளும் தொன்றுதொட்டு மக்கள் மனதில் ஆழப்பதிந்தவைகளாகும். பலதரப்பட்ட உணர்வுகளின் தொகுப்பான தொன்மக் குறியீடுகளால் கவிஞர் தான் கூறவந்ததை முழுமையாகக் குறித்துச் செல்கிறார். மேற்சுட்டப்பெற்ற கவிதைகளில் ஒரு தொன்மக் குறியீட்டைக் குறிப்பிட்டவுடன் அதனோடு தொடர்புடைய பல

உணர்வுகள் எழுவதை உணரலாம். இந்து சமயக் குறியீடுகள் போன்று கிறிஸ்தவத் தொன்மக் குறியீடுகளையும் கவிஞர் கையாண்டுள்ளார்.

**கிறித்தவத் தொன்மக் குறியீடு:-**

கிறித்தவர்களுக்கு மூலமான தொன்மக் கதைகள் பல பைபிளில் இடம் பெற்றிருக்கின்றன. விலக்கப்பட்ட கனியை ஆதாம் ஏவாள் உண்ணும் நிகழ்வுகள் (2) மோசே, மெஸியா, ஜின் போன்ற தொன்மப் பாத்திரங்கள் அப்துல் ரகுமான் கவிதைகளில் குறிக்கப்பட்டுள்ளனர்.

"புள்ளிக்கு உதவாதென்று" என்ற தலைப்பில்,

"விலக்கப்பட்ட கனிக்கும்
உண்ண வற்புறுத்தும்
அரவுக்கும் அஞ்சி
ஏதெனை விட்டு
வெளியேறுகிறார்கள் ஆதாம்கள்"[95] என்கிறார்.

தொன்மக் கதையில் இறைவனால் விலக்கப்பட்டக் கனியைத் திண்ணுமாறு சாத்தான் ஆதாம் ஏவாளிடம் கூறுகிறான். இந்நிகழ்வு ஏதேனில் நிகழ்கிறது. இக்கதையில் சாத்தானின் பேச்சைக் கேட்டு இவர்கள் உண்டு விடுகிறார்கள்.

இக்கவிதையில் விலக்கப்பட்ட கனி பொருந்தாத கல்விப் பாட திட்டத்திற்குக் குறியீடாக அமைக்கப் பெறுகிறது. அரவு என்பது கல்வியைத் தரும் அமைப்பு முறையைக் குறிக்கும். ஏதென் இன்றைய நிகழ்கால நாட்டைக் குறிக்கும் பழைய தொன்மக் கதையில் சாத்தானின் பேச்சை ஆதாம் கேட்டார். ஆனால் இப்போது அதைக் கேட்காமல் நகரைவிட்டே வெளியேறுகிறார்கள் என்கிறார். பொருந்தாத கல்வித் திட்டத்தில் விருப்பமில்லாமல் இருக்கும் மாணவர்களைக் குறிப்பதாக "ஆதாம்" என்ற சொல்லாட்சி வருகிறது.

பிரிதொரு கவிதையில் இன்றைய அறிவியலின் வளர்ச்சியைக் கண்டு வியந்து ஆதாமின் சந்ததியினராக விளங்கும் இன்றைய அறிவியல் அறிஞர் களைத் தீயசக்திகளின் (ஜின்) தலைவன் சாத்தான் வந்து வணங்குகிறான் என்கிற பொருள் வேறு ஒரு குறியீட்டுப் பொருளைக் குறிக்கிறது. இன்றைய

அறிஞர்கள் அறிவியலில் மித மிஞ்சிய வளர்ச்சியைப் பெற்றுள்ளார்கள். அந்த வளர்ச்சிக்கு முன் தீயசக்திகள்தலைவணங்குகின்றன.பஞ்சபூதங்களை வென்று வானத்தைச் சுற்றிவரும் மானுடத்தின் வியக்கத்தகும் ஆற்றல்களைக் கண்டு, இயற்கைகளின் தீய சக்திகளெல்லாம் தன் ஆற்றல் குன்றியிருப்பதை உணர்த்துகிறார்.

"இன்று
ஆதாமின் பிள்ளையின்
பாதங்களில்
'ஜின்'களின் தலைவன்
தானே வந்து
தலை பணிகிறான்"[96]

என்று கவிதையில் மேற்குறிப்பிடப்பெற்ற கருத்தை வற்புறுத்துகிறார்.

இதே கவிதையில் மோசஸின் 'சீஸேம்' முழக்கத்தில் நடக்கும் நிகழ்வுகளை இன்றைய அறிவியல் வளர்ச்சியின் சாதனைகளோடு ஒப்பிட்டுப் பார்க்கிறார். மானுடத்தின் இத்தகு வியத்தகு சாதனைகளை "மானுடத்தின் மகுடாபிஷேகம்" என்ற கவிதைத் தலைப்பின் வழி விரிவாகச் சிந்திக்கிறார்.

**4. சமயக்குறியீடு:-**

தொன்மக் குறியீடும் சமயக் குறியீடும் நெருங்கிய தொடர்புடையன. தொன்மக் கதைகள் சார்ந்த பாத்திரங்களும் நிகழ்வுகளும் தொன்மக் குறியீட்டில் பெரும்பாலும் இடம் பெறுகின்றன. அப்துல் ரகுமான் கவிதைகளில் 13 சமயக் குறியீடுகள் இடம் பெற்றுள்ள நிலையை மதிப்பீட்டின் வழி உணரமுடிகிறது.

தெய்வத்திருவுருவங்கள், கோயில், அர்ச்சனை வரம், சாபம், பூசாரி, பக்தன், சொர்க்கம், நரகம் போன்றவைகளைச் சார்ந்து இந்து சமயக் குறியீடுகள் கவிதைகளில் அமைக்கப் பெற்றுள்ளன. பௌத்த சமயத்தைச் சார்ந்த போதிமரம் குறியீட்டுப் பொருளாக அமைகிறது. எடுத்துக்காட்டு விளக்கமாக சில கவிதை வரிகளைக் காணலாம். "ஞான தேவதை" என்ற கவிதையில் கல்வியின் சீரழிவைக் குறிப்பதாய்,

"ஒரு கையில்

பச்சோந்திக் கொடி

ஒரு கையில்

காசுமாலை

வீணையை உடைத்த கைகள்

கறுப்பு அங்கியை நெய்யும்"[97]

என்று பாடுகிறார். இக்கவிதை சரசுவதியினுடைய திருவுருவத்தைக் குறிக்கும். இயல்பாய் அவள் வெள்ளை ஆடை அணிந்திருப்பவள், கைகளில் வீணை, அக்கமாலை, கல்வி ஏடு போன்றவைகளைத் தாங்கியிருக்கிறாள்.

ஆனால் கல்விச் சீரழிவில் சரசுவதி ஒரு கையில் பச்சோந்திக் கொடியையும், மறுகையில் காசுமாலையையும் கொண்டிருக்கிறாள். அவள் வீணையை உடைத்துவிடுகிறாள். கருப்பு ஆடையை அணிந்துள்ளாள். கருப்பாடை சோகத்திற்குக் குறியீடாகவும், அக்கமாலைக்குப் பதில் காசு மாலை என்பது கல்வி விற்கப்படுவதையும் குறிக்கிறது. சரசுவதி தானே நிலைத்தவளாக இல்லாமல் பணச் சூழலுக்கேற்ப மாறுகிற நிலையை நிறம் மாறும் பச்சோந்தியின் வழிக் குறியீடாக்கியுள்ளார்.

ஆண்டாண்டு காலமாகப் பெண்டிரை ஆடவர் தாழ்த்தி அடக்கி வரும் மன இயல்பைக் கடிந்துரைக்கும் போது இந்து சமயக் கடவுளரின் மூலம் குறியீடாக்குகிறார்.

"சக்தியே !

காலைத்தூக்கி ஆடி

உன்னை ஜெயித்த

வெக்கங்கெட்ட வரலாறு

எங்களுடையது"[98]

என்கிறார்.

இவ்வுலகம் சபிக்கப்பட்டுவிட்டது என்று தோன்றும்படியாக நல்லவைகள் கூடத் தீயவைகளாகச் செயல்படுகின்றன. இக்கருத்தோட்டத்தில் "சபிக்கப் பட்ட பூவனம்" என்ற கவிதையில்,

"ஒரு சின் முத்திரையில்

ஞான சூட்சுமத்தையே

அபிநயித்த விரல்களின்

சலங்கையில்லாத நடனத்தை

அரங்கேற்றிய

அதே கல்லாலின் கீழ்

நிமிர்ந்து நின்ற

திரிசூல விரல்கள்

எண்ணாயிரம் எலுமிச்சம்பழங்கள்

செருகும்

கழுமரங்களாயின"[99]

ஞானத்தை அறிவுறுத்திய கல்லாலின் கீழ் உள்ள கடவுளுக்கு முன் எண்ணாயிரம் எலுமிச்சைப் பழங்கள் திரிசூலத்தில் சொருகப்பட்டன என்ற செய்திகள் மூலம் எண்ணாயிரம் சமணர்களைக் கழுவேற்றியது குறிக்கப்பட்டு ஞானத்தைக் காட்டும் கடவுளின் முன் (நல்ல அமைப்பு) பெரியதொரு கொலைகளல்லவா நிகழ்ந்துள்ளன என்கிறார். மேம்பாட்டை ஏற்படுத்தும் அமைப்புகள் எதிரிடை விளைவுகளை உண்டாக்கும் வேதனையை இவ்வாறு வெளிப்படுத்துகிறார்.

"செலுலாய்ட் தெய்வங்கள்" எனும் தலைப்பில் வீடுகளில் உணவுக்கு வழியின்றிப் போனாலும் திரையரங்குகளில் மூன்று காட்சிகளும் பார்க்கின்ற நிலையையும், இருட்டில் நடக்கும் திரைப்படத்தைப் பார்த்து தரிசிக்கத் திரைப்பட நுழைவுச் சீட்டுக்கு முண்டி அடித்துச் சண்டை போடும் மயக்க வாழ்வையும் கண்டித்து நகைக்கிறார்.

வீடுகளில்

அடுப்பெரியாவிட்டாலும்

ஆலயங்களில்

திரிகால பூசை

அர்ச்சனைச் சீட்டுக்கு

முண்டி அடிக்கும்

சேவார்த்திகள்

இருளில்

திருவிளையாடல்கள்"[100]

என்று சமயக் குறியீட்டின் வழிக் குறிப்பிடுகிறார்.

"வீழ்ந்த தேவதைகள்" என்ற தலைப்பில்,

வரங்களே

சாபங்கள்

ஆகுமென்றால்

இங்கே

தவங்கள்

எதற்காக"[101]

என்கிறார். வரம், சாபம் என்ற சமயச்சொற்கள் தமக்குரிய பொருளை அன்றி வேறு ஒரு பொருளைக் குறிக்கின்றன. தவம் செய்தால் வரம் பெறலாம். வரத்தின் வழி உயரலாம். ஆனால் இன்றைய சூழலில் தவம் செய்வதில் வரத்திற்குப் பதில் சாபமல்லவா கிடைக்கிறது. இங்கு வரம், சாபம் என்பது பல நிலைகளில் பொருத்திப் பார்ப்பதற்கு ஏதுவாக அமைந்துள்ளன.

**5. இலக்கியக் குறியீடு:-**

தமிழ் இலக்கியங்களில் உள்ள பாத்திரங்கள் நிகழ்வுகள் ஆகியவற்றை மையப்படுத்தி இலக்கியக் குறியீடுகள் அமைகின்றன. அப்துல் ரகுமான் பண்டை இலக்கியம், சிலப்பதிகாரம், மணிமேகலை, நளவெண்பா, தேவாரம், பெரியபுராணம் போன்ற இலக்கியத் தளங்களிலிருந்து குறியீடுகளை அமைக்கிறார். இவ்வகையில் பதினொரு கவிதைகளில் இலக்கியக் குறியீட்டை அமைத்துள்ள நிலையை ஆய்வின் வழி உணரமுடிகிறது.

எடுத்துக்காட்டாகச் சிலவற்றைக் காணலாம். பண்டை இலக்கியத்தைச் சார்ந்த புறநானூற்றில் ஒளவையார் அதியமானுக்கு நெல்லிக்கனி கொடுத்த வரலாறு உண்டு. மாங்காய் ஒன்றை எடுத்ததற்காக இளஞ்சிறுமி நன்னனால் தண்டிக்கப்படுகிறாள் என்ற வரலாறும் உண்டு.

இவைகளைத் தொடர்புபடுத்தித் தத்துவப் பார்வையுடன் இலக்கியக் குறியீடுகளை அப்துல் ரகுமான் குறிப்பிடுகிறார்.

வாழ்க்கையில் சந்தர்ப்ப சூழலுக்கு ஏற்றவாறு நன்மை தீமைகள் விளைகின்றன. நன்மை தீமை என்று தனியே இல்லை என்கிற கருத்தை ஒட்டி இந்தக் கவிதையை அமைக்கிறார். "பாற்கடலரங்கம்" என்ற தலைப்பில்

"கூர்ந்து பார்த்ததில்
அடையாளம் புரிந்தது
எல்லோரும்
நேற்றைய நாடகத்தின்
பாத்திரத் தாங்கிகளே
இதோ
இளம் பெண்ணாக
ஔவைக் கிழவி
நன்னனாக
அதிகமான்
மாங்காயாக
நெல்லிக்கனி"[102]

என்கிறார். நீண்ட காலம் வாழ்வு தரக்கூடிய நெல்லிக்கனியை அதியமான் பெற்றும் நீண்டநாள் ஔவையார் வாழவேண்டும் என்ற விருப்பத்தில் அவரிடம் கொடுக்கிறார். ஒரு மாங்காய் எடுத்ததற்காக நன்னன் சிறுமியை உயிர்க்கொலை செய்கிறான். இங்குச் சந்தர்ப்ப சூழல்கள் நன்மை தீமையைத் தீர்மானிக்கின்றன என்ற தத்துவத்தை வலியுறுத்துகிறார்.

சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற காப்பியங்களிலிருந்து சற்றுக் கூடுதலான இலக்கியக் குறியீடுகளை அமைக்கிறார்.

கண்ணகியிடம் சிலம்பு இல்லை என்றால் கண்ணகியையே விற்றுவிடத் தயாராக இருக்கின்ற கோவலர்களாகக் கொடியவர்கள் நிறைந்த சமூக அமைப்பைச் சிலப்பதிகார இலக்கியக் குறியீட்டின் மூலம் தோலுரித்துக் காட்டும் போது,

"விற்க எதுவும் இல்லாததால்

கண்ணகிகளைப்

பேரம்பேசும்

கோவலர்கள்''[103] என்கிறார்.

செல்வர்களான சில வஞ்சகர்களின் சூழ்ச்சியினால் நடக்கின்ற படுகொலையை மறைப்பதற்காகவே அழிக்கப்படுகின்ற நிலையை,

''கோவலரின் படுகொலையை

மூடி மறைக்க

உயிரோடு கொளுத்தப்படும்

கண்ணகிகள்''[104] என்று குறிப்பிடுகிறார்.

''ஐந்தாண்டுக்கு ஒருமுறை'' என்ற தலைப்பில் வாக்கெடுப்பு நடத்தி தலைவர்களைத் தேர்ந்தெடுக்கும் ஜனநாயக ஆட்சிமுறையை ''நள வெண்பா''வில் இடம்பெறும் பாத்திரங்களின் வழி குறியீடுகளாக்கி விளக்குகிறார்.

''புறத்திணைச் சுயம்வர மண்டபத்தில்

போலி நளன்களின் கூட்டம்

கையில் மாலையுடன்

குருட்டுத் தமயந்தி''[105]

என்கிறார். இக்கவிதையில் ''புறத்திணைச் சுயம்வர மண்டபம்'' என்பது வாக்குக்காக வேட்பாளர்கள் நிற்கும் இடம். போலி நளன்களின் கூட்டம் என்பது வேட்பாளர்கள் கையில் மாலையுடன் குருட்டுத் தமயந்தி என்பது வாக்காளர்களாகும்.

## 6. வழக்குக் குறியீடு:-

சமகால வழக்கு முறை, மக்களின் வாழ்க்கை முறை, பழமொழிகள், விடுகதைகள், பேச்சு வழக்குகள், புதிர்கள், சடங்குகள், நம்பிக்கைகள் போன்றவற்றலிருந்தும் தோன்றும் குறியீடுகள் வழக்குக் குறியீடுகள் எனப்பெறும். 11 கவிதைகள் இவ்வகையில் உள்ளன.

குடும்பக் கட்டுப்பாட்டிற்குச் ''சிவப்பு முக்கோணம்'' என்னும் சின்னத்தை அரசு வழக்கில் வழங்கி வருகிறது. இதனைக் கவிஞர் குறியீடாக்கும் போது,

"அவதார வாசல் தோறும்

சிவப்பு முக்கோணக்

கம்சர்கள்"[106] என்கிறார்.

ஆங்கிலப் படத்தில் 'ட்ரகுலா' என்பது ரத்தம் குடிக்கும் பேய் என்பது வழக்கு. இதனைப் பயன்படுத்தி,

"சில வேலைகளில்

ட்ரகுலாவை உயிர்ப்பிக்கும்

ரத்தத் துளிகளும் இவைகளே"[107]

என்கிறார். உழைக்கும் மக்கள் உழைத்து வியர்வை சிந்த அதனால் உறிஞ்சும் பேர்வழிகள் உயிர்பெற்று வாழ்வதை இவ்வாறு குறிப்பிடுகிறார்.

குரங்கு அப்பத்தைப் பங்கு போட்டுத் தருவதாகக் கூறி, பூனைகளை ஏமாற்றும் வழக்கிலுள்ள கதையைக் குறியீடாக்கும் போது,

"சமரச வேஷமிட்ட குரங்கிடம்

அப்பத்தைப் பறிகொடுத்த

பூனைகள் நாம்"[108] என்கிறார்.

இலங்கைத் தமிழர்கள் கொல்லப்படும் நிலையில் சிலர் தவறு செய்யாதவர்கள் மீது வீண் பழியைச் சுமத்துவதை,

"இதோ !

ரத்தப் பற்களை மறைத்த ஓநாய்கள்

நீரைக் கலக்கிய பழியை

ஆடுகளின் மீது சுமத்திக் கொண்டிருக்கின்றன"[109]

என்று வழக்குக் கதையைக் குறியீடாக்குகிறார்.

மக்களை ஏமாற்றிக் கொள்ளை லாபம் அடையும் வணிகர்களை அவர்கள் சம்பாதித்த செல்வமே தண்டிக்கும் எனும் போது,

"நாய்விற்ற காசு

குரைக்காது

ஆனால் கடிக்கும்

என்றாவது"[110]

என்றுரைப்பதில் வழக்கு மொழி இடம்பெறுவதை நோக்கலாம்.

பீரங்கி ஊழலில் அகப்பட்டவர்கள் அவ்வூழலை மறைப்பதை நகைக்கும் போது,

“ஒலெ வாயை மட்டுமல்ல

ஊருவாயும் மூடுறான்”[111]

என்ற பழமொழியைக் கையாள்கிறான்.

மக்களின் வழக்குமுறையில் இடம்பெறும் பாடலான ‘காக்கா காக்கா மைகொண்டுவா குருவி குருவி பூக்கொண்டுவா’ எனும் வழக்குப் பாடலை,

“உன் பாட்டியின்

வடையைத் திருடிய

காக்கையா

உன் கண்ணுக்கு

மை கொண்டு வரும்?

கண்ணாடியில்

தன் நிழலுக்கே

முத்தம் கொடுக்கும்

குருவியா

உன் கொண்டைக்குப்

பூக் கொண்டு வரும்?”[112]

என்று ஏமாறுகிறவர்களுக்கு அறிவுரையாக அமைத்துப்பாடுகிறார். “ஒப்பில்லாத சமுதாயம்” என்ற தலைப்பில்,

“குடியானவன் வீட்டுக்

கோழி முட்டையை

அதிகாரி வீட்டு

அம்மி அடைகாக்கும்”[113]

என்று வழக்கு மொழியைக் கையாள்கிறார்.

பழங்காலம் தொட்டே சிங்கம், சுண்டெலிகள் கதை கூறப்பெற்று வருகிறது. “வியர்க்கும் சாமரைகள்”[114] என்ற தலைப்பில் சமுதாய

மாற்றத்தில் அதிகாரவர்க்கம் நிலைபெற்று இருந்துவருவதை விளக்குகிறார். அடிமை வர்க்கத்திடம் அதிகாரம் வரும்போது அவர்களும் அதிகாரம் செலுத்துவதை உணர்த்துகிறார்.

**7. இடம் காலம் பற்றிய குறியீடு:-**

ஒரு சொல்லோ தொடரோ ஓர் அனுபவமோ பொருளோ, கனவோ கற்பனையோ அது அமைந்திருக்கும் இடத்தைப் பொறுத்தும் வழங்குகின்ற காலத்தைப் பொறுத்தும் பிறிதொன்றைச் சுட்டி நிற்கும் போது இடம் காலம் பற்றிய குறியீடாகத் தோன்றுகிறது. இவ்வகையில் பதினெட்டு கவிதைகள் உள்ளன.

சொற்கள் கவிதையில் இடம்பெற்றுள்ள சூழலுக்கேற்பக் குறியீட்டின் தன்மையைப் பெறுவதை இக்குறியீட்டின் வழி அறியலாம்.

''வேர்களும் கிளைகளும்'' என்ற தலைப்பில் சிறிய விதைதான் மனிதன், ஆனாலும் அவனுக்குள் மிகப் பெரிய ஆலமரம் ஒளிந்திருக்கிறது என்கிறார். மனிதனை ஊக்கப்படுத்துகிற போது,

''பாறைகளையும்
பிளந்து செல்லும் சக்தி
உன் வேர்களுக்கு உண்டு
ஆழங்களில் இறங்கு
நீ எவ்வளவு ஆழமாக
இறங்குகிறாயோ
அவ்வளவு உயரமாக வளர்வாய்''[115]

என்று குறிக்கிறார். இதில் வேர்கள் - தன்னம்பிக்கை மிகுந்த முயற்சியையும், உயரம்-உயர்ந்த இடத்தையும் இடம்பெற்ற சூழலுக்கேற்பச் சுட்டுவதை உணரலாம்.

அன்பு, பாசம் ஆகியவற்றிற்கும் வறண்ட அறிவியலுக்கும் இடையே நிகழ்ந்துவரும் போராட்டத்தில் அன்பு வெற்றிபெறும் என்பதை ''நெற்றிக் கண்'' என்ற தலைப்பில் குறிப்பிடுகிறார்.

அறிவியல் இறுதியில் ஆபத்தையே விளைவிக்கும் எனும் கருத்தில்,

''ஒரு நாள்

நெற்றிக்கண் அலறியது

கோபவெறியில்

என் இமைகளையே

எரித்துக் கொண்டேன்

யாரேனும்

இமைகளைக் கொடுங்கள்

என்னால்

உறங்க முடியவில்லை”[116]

என்று குறிப்பிடுகிறார். இங்கு நெற்றிக்கண், இமைகள், உறக்கம் என்பன இடம் பெற்ற சூழுலுக்கேற்பப் பொருள்களைத் தருகின்றன. நெற்றிக்கண்-அறிவு அறிவியல், இமைகள்-காப்பாற்றுவது, உறக்கம்-மன அமைதி என்றவாறு பொருள்கள் அமைந்து நிற்பதைக் காணலாம்.

புதுமைத் தாகம் கொண்ட கவிஞர் பழைய வீட்டை மாற்றி அமைப்பதை விட அதை இடித்துத் தள்ளிவிட்டுப் புதிதாக வீடு கட்டுவது மிக நன்று என்கிறார். “பழைய வீடு” எனும் தலைப்பில்,

“ஆமாம்

இவ்வளவு சிரமப்படுவானேன்?

சனியனை

இடித்துத் தள்ளிவிட்டுப்

புதியதாகவே கட்டிக்கொண்டாலென்ன

எல்லா வசதிகளோடும்”[117]

என்கிறார்.

இடித்துத் தள்ளப்படும் பழைய வீடு-மூடப் பழக்கவழக்கங்களையும், புதிய வீடு-ஒப்பில்லாத உயரிய வாழ்க்கை முறையையும் உணர்த்துவதைக் காணலாம். இக்கவிதைகள் பல்வேறு தளங்களில் பொருள்தரும் சிறப்பையும் அறியலாம்.

ஒப்பில்லாத சமுதாயம் காணுகின்ற ஆவல் கவிஞரிடம் காணப்படுகிறது.

"இந்தப் பிறந்த நாள் விழாவில்

ஊதி அணைக்க

மெழுகு திரிகளைக்

கொளுத்தாதீர்கள்

கலங்கரை விளக்குகளை

ஏற்றுங்கள்

இன்னும் சில கப்பல்கள்

இருட்டில் தத்தளிக்கின்றன"[118]

என்பதில் சுதந்திரத் திருநாளில் காப்பாற்றும் சுடர்களை உருவாக்குவோம். மாறாகச் சிறு விளக்குகளை அழுது மாய்ந்து போனவற்றை ஆக்குவது ஏன்? என்ற வினாவை எழுப்புகிறார்.

எந்த ஒன்றிலும் இரண்டு உண்டு என்ற விதியின் அடிப்படையில் சமுதாயத்தின் நிகழ்வுகளை,

"புத்தனுக்காகப்

பொன்னிழல் விரிக்கும்

போதிகள் ஒரு பக்கம்

சித்தன் ஏசுவின்

செம்புனல் குடிக்கும்

சிலுவைகள் ஒரு பக்கம்"[119]

என்று விளக்குகிறார். இக்கவிதையின் பொருள் பல தளங்களுக்குப் பொருத்திப் பார்க்குமாறு பன்முகப் பொருளாற்றல் தரவல்லது.

"தேசியம்" என்ற பெயரில் நடத்தும் போலித்தனத்தை,

"அணைகளை உடைத்து

கரைகளைத் தகர்த்து

மரங்களைச் சாய்த்து

பிணங்களைச் சுமந்து

இதோ

பாய்ந்து வருகிறது

தேசிய நீரோட்டம்"[120]

என்கிறார். அணைகள், கரைகள், மரங்கள், பிணங்கள் போல்வன இடம் பெற்ற சூழலிற்கு ஏற்பப் பல பொருள்களைத் தருவதாக உள்ளன.

2. படிமம்

புதுக்கவிதையின் நுண்பொருள் உத்திகளுள் படிம உத்தியும் ஒன்று. படிமத்தைக் குறிப்பதாக "Image" என்ற ஆங்கிலச் சொல் அமைகிறது. "சமயத்துறை முதல் விளம்பரத்துறை வரை இச்சொல்லுக்குக் காலந்தோறும் ஏற்பட்ட பொருட்செறிவையும் மாறுதலையும் ஆங்கில அகராதிகள் தெரிவிக் கின்றன."[121] இக்கருத்தின் வழிப் படிமம் பல்துறையுடன் தொடர்பு கொண்டிருப்பதை அறியலாம்.

**படிமம் சொற்பொருள் விளக்கம்:-**

"இமேஜ்" என்ற சொல்லிற்கு உருவம், படிமம், உருமாதிரி, ஒத்த வடிவம், கருத்துரு ஆகிய பொருள்களைச் சென்னைப் பல்கலைக் கழக ஆங்கிலத் தமிழ்ப்பேரகராதி தருகிறது."[122] அப்பொருள்களில் படிமம் என்கிற வழக்குப் பயன்பாட்டு நிலையில் பரவலாக இருப்பதைக் காணலாம். "தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் 'படிமம்' என்ற சொல்லை முதன் முதல் இலக்கிய ஆட்சிக்குக் கொண்டு வந்தவராகக் கருதப்படுகிறார்."[123]

படிமம் என்ற சொல்லிற்கு "ஒரு காட்சியை ஒரு காட்சி சார்ந்த உணர்வுகளை நேரிடையாக மனதில் ஏற்படுத்துகிற மற்றொரு காட்சி"[124] என்று கிரியாவின் தமிழகராதி விளக்கம் தருகிறது. டி.இ. ஹியூம் படிமம் பற்றி விரிவாகச் சிந்தித்தவர் ஆவார். இவர் "காட்சியுணர்வு தருகிற வகையில் எழுதுகிற கவிதையே படிமமக் கவிதை"[125] என்று குறிப்பிடுவதும் கருதத் தக்கது.

**படிமம் வரைவிலக்கணச் சிந்தனைகள்:-**

"படிமத்தைப் பொறிகளின் வழியாகப் புறவுலகப் புலனுணர்வுத் தூண்டுதல்களால் மனத்தில் எழும் பிரதிபலிப்பே "படிமம்"[126] என்று வரையறை செய்கிறது" பிரின்ஸ்டன் கலைக்களஞ்சியம். மனதில் எழும் பிரதிபலிப்பு இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

மனதில் எழும் பிரதிபலிப்பு, காட்சியோடு தொடர்புடையதாகும். அவ்வகையில் காட்சியாக அமையும் கலைவெளிப்பாடு படிமம் எனலாம். உள்ளம் உணர்ந்த ஒரு சொல்லோவியம் படிமம் என மதிப்பிடலாம். கவிஞர் மனதில் பல காட்சிகளும் அனுபவங்களும் பதிகின்றன. அவன் தன்னுடைய புலப்பாட்டுத் திறனாலும் கற்பனைத் திறத்தாலும் சொற்களைக் கொண்டு பிறர்க்கு உணர்த்துகிற நிலையில் அமைவதே படிமம் ஆகும்.

"புலன் உணர்வுகளோடும் மன உணர்வுகளோடும் தொடர்புகொண்ட காட்சிப் பொருள், கருத்துப் பொருள் ஆகியவற்றின் மன உருக்காட்சி நிலையே படிமம்"[127] என்று சி.சு. செல்லப்பா குறிப்பிடுவார்.

படிமம் பற்றிய அறிஞர்தம் கருத்துக்களை எல்லாம் உற்றுணர்ந்து பொது வரைவிலக்கணம் வகுத்துள்ளனர்.[128]

1. காட்சிப்பொருள், கருத்துப்பொருள் ஆகியவற்றைக் காட்சியாக்கும் ஒரு சொற்கூட்டம்.
2. அக்காட்சியை மனக் கண்ணில் உருவாக்கும் சொல்லோவியம்.
3. உவமை, உருவகம், முற்றுருவகம் போன்ற அணிகளையும் பொருள் களையும் உள்ளடக்கக் கூடிய மூலச் சொல்.
4. பல எண்ணங்களைத் தூண்டும் ஆற்றல் வாய்ந்தது.
5. புலன்கள் மூலமாக வாசகர் உள்ளத்தில் உணர்வினைத் தொட்டு உணர்ச்சியை எழுப்பி அறிவு நிலைக்கு அழைத்துச் செல்வது.

என்றவாறு குறிப்பது கருதத்தக்கது.

**படிமமும் காட்சித் தன்மையும்:**

படிமத்திற்குக் காட்சித்தன்மை அடிப்படைப் பண்பெனலாம். "படிமம் எனில் காட்சி தரவேண்டும் என்ற அடிப்படையில் இவ்வுத்தி, சொல்லும் முறையால் சொல்ல வந்ததைக் காட்சிப்படுத்திக் காட்டுகிறது. அது, கண்ணால் காணக்கூடிய உருவப்பொருள்களைத் தெளிவாகக் காட்சிப்படுத்து கிறது. கண்ணால் காண முடியாத அருவப் பொருள்களையும், (கண் தவிரப் பிற புலன்களால் உணரக்கூடியவை) கருத்துக்களையும் காட்சிப்படுத்துகிறது. காட்சி தருவதற்காக அது சொற்றொடர்களையும் உவமைகளையும் உருவகங்களையும் பயன்படுத்துகிறது"[129] என்ற கருத்து படிமத்திற்கும்

காட்சித் தன்மைக்கும் இடையேயான உறவைத் தெளிவாகப் புலப்படுத்துவதாகக் கூறலாம்.)

**உவமை - உருவகம் - படிமம்:-**

மேற்குறித்த மூன்றும் கவிதைக்கு அணி சேர்ப்பவை. ஒன்றோடொன்று தொடர்பானவை. ஆயினும் வேறுபட்டவை. உவமை ஒப்பிட்டுக் காட்டுவதை இன்றியமையாத நோக்கமாகக் கொண்டது. எ.டு. மதி முகம், மதி போன்ற முகம் என உவமை காட்டுகிறது.

உருவகம் என்பது உவமை, பொருள் என்ற இரண்டும் தனித்தனி என்ற நிலை மாறி இரண்டுமே ஒன்றுதான் என்ற நிலையில் உருவகம் அமைகிறது எனலாம். எ.டு. முகமதி, முகத்தாமரை என்றவாறு அமைவது உருவகம் ஆகும்.

உவமை, உருவகம் இவற்றினின்று படிமம் வேறுபட்டு நிற்கிறது. உவமைப் பொருளும், உவமிக்கப்படுபொருளும் காட்சித் தன்மை உடையதாக இருப்பது படிமம் எனச் சுட்டப்பெறுகிறது. எ.டு. காதலன் காதலியைப் பார்த்து, தன்னை விரும்புகிறாயா? இல்லையா? என வினவும் போது,

> "என்னைக் கண்டதும்
> கவிழும் உன் இமைகள்
> கொசு வலையா?
> மீன் வலையா?"[130]

என்று கேட்கிறான். இங்கு காதலியின் இமைகள் படிமப்படுத்தப் பெறுகின்றன. கொசுவலையுடனும், மீன்வலையுடனும் இமைகளைப் படிமப்படுத்தும் இக் கவிதையில் மீன் வலை, கொசுவலை எனும் காட்சிப் பொருள்கள் காட்டப் பெறுகின்றன.

"படிம உருவாக்கத்திற்கு உவமை உருவகம் போன்றவை உதவினாலும் எல்லா உவமை உருவகங்களுக்கும் படிமத்தில் இடமில்லை. படிமம் கருத்துத் தன்மையில் அமைவதில்லை என்பதால் உவமை உருவகம் ஆகியவற்றில் காட்சித்தன்மை கொண்டவற்றுக்கே அதிக இடமுண்டு. இந்த வகையில், உவமேயம் (உவமிக்கப்படுபொருள்) காட்சித் தன்மை கொண்ட

தாகவோ கருத்துத்தன்மை கொண்டதாகவோ இருக்கலாம். ஆனால் உவமானம் காட்சித்தன்மை கொண்டதாக மட்டுமே இருக்க வேண்டும். இக்கருத்தை ஸ்டிபன் உல்மேன், எஸ்ராபவுண்டு, ஹீயம், கென்னர், மர்ரே பர் பேங்ஸ், லூயிஸ் ஆகியோர் வலியுறுத்துகின்றனர்''[131] எனும் கருத்து கவனிக்கத்தக்க தாகும். ''காட்சித்தன்மை'' என்பதில் உவமை உருவகம் படிமத்திலிருந்து மாறுபடும் இயல்பை உணரலாம்.

உவமை, உருவகம் தரும் பயன்பாட்டினைவிடப் படிமம் தரும் பயன்பாடு செறிவானதாகும். படிமம் காட்சித்தன்மையை இலக்கணமாகக் கொண்டிருப்பதால் படிப்போரின் எண்ணங்களுக்குத் தகுந்தாற்போன்று சிந்தனையைத் தூண்டும் ஆற்றல் நிறைந்ததாகும். மேலும் மனதில் எளிதில் பதியச்செய்வது எனலாம். காட்சித் தன்மையாகிய உருவமே படிமத்தின் தலையாய கொள்கை ஆகும்.

''படிமம்'' என்பதை விளக்குவதற்கு மேற்குறித்த கருத்துரைகள், விவாதங்களை அறிந்த பின்னர்ப் படிமம் என்பதை விளக்கிக் காட்டுவதற்கான சுருக்க விளக்கத்தைப் பின்வருமாறு காட்டலாம்.

| உவமேயம் (உவமிக்கப்படுபொருள்) | | உவமானம் (உவமைப் பொருள்) |
|---|---|---|
| 1. அருவம் | + | அருவம் = வெறும் உவமை உருவகம் |
| 2. உருவம் | + | அருவம் = வெறும் உவமை உருவகம் |
| 3. அருவம் | + | உருவம் = கருத்துப் படிமம் |
| 4. உருவம் | + | உருவம் = காட்சிப் படிமம் |

என்று குறிப்பது பொருத்தமாக அமையும்.

1. அருவம் + அருவம் = வெறும் உவமை உருவகம்

''குயில் மொழிபோல் தமிழ் மொழிதான்'' இதில் அருவமான குயில் மொழியும், தமிழ்மொழியும் சுட்டப் பெறுகிறது.

2. உருவம் + அருவம் = வெறும் உவமை உருவகம்

''கந்தல் துணியாய் நைந்தேன்''

கந்தல் துணி - உருவம்

நைந்தேன் - அருவம்

3. அருவம் + உருவம் = கருத்துப் படிமம்

"நினைவுகளில் புதைந்தேன்"

நினைவு - அருவம், புதைதல் - உருவம்

4. உருவம் + உருவம் = காட்சிப் படிமம்

இரு காட்சிப் பொருள்களைக் கொண்ட ஒப்புமையே சிறந்த படிமமாக்க் கொள்வர்.

"அந்திச்சிலுவையில்
அன்றாடம்
அறையப்பட்டுப்
புதைக்கப்பட்டும்
புத்துயிர்பெற்று
எழுந்து விடுகிறாய் நீ
சூரியனே!"[132]

என்பதில் சிலுவை அறையப்பட்டு, மீண்டும் புத்துயிர்பெற்று எழுந்த நிகழ்வு, சூரியன் மறைந்து எழுவதுடன் காட்டப்பெறுகிறது. இதில் இரு நிகழ்வுகள் காட்சிப்படுத்தப்பெறுவதை நோக்கலாம். இதுவே சிறந்த படிமமாகச் சுட்டப் பெறுகிறது.

**படிமம் குறியீடாதல்:**

படிமம் சில வேளைகளில் குறியீடாக மாறுகிறது. "படிமங்கள் வெறும் வருணனையாக இருக்கும்போதும் நேரே ஒரு பொருளை உணர்த்தும் போதும் அவை வெறும் படிமங்களே குறியீடு அல்ல. மற்றொரு பொருளை உணர்த்தும்போது படிமம் குறியீடாகிறது"[133] என்று படிமம் குறியீடாகும் இயல்பினை அறிஞர் சுட்டுகின்றார்.

**படிம இயக்கமும் கவிதை நிலையும்:**

படிம இயக்க வரலாற்றைக் கீழ்க்கண்டவாறு பாகுபடுத்துவர்.

1. டி.இ. ஹல்மின் படிம இயக்க நிலை.
2. எஸ்ராபவுண்டின் படிம இயக்க நிலை.
3. அமிலோவல்லின் படிம இயக்க நிலை.

“மரபிலிருந்து விடுபட்டுக் கவிதைக்குப் புதுமை சேர்க்க வேண்டும் என்ற வேட்கையே இம்மூன்று பாகுபாட்டு இயக்க நிலைகளிலும் பொதுவான பண்பாகக் காணப்பட்டது”[134] என்று கூறுவர். படிம இயக்கம் புதுக்கவிதையின் தரத்தைப் போற்றியது எனினும் 1909-ஆம் ஆண்டு முதல் செல்வாக்குப் பெற்று வந்த இப்படிம இயக்கம் 1917 ஆம் ஆண்டு சிதையத் தொடங்கியதாகக் கூறுவர். இருப்பினும் புதுக்கவிதையில் படிம உத்தியின் சிறப்பு தரமான கவிதையின் வளர்ச்சிக்குக் காரணமாக இருந்த நிலை மறுப்பதற்கில்லை.

**தமிழிலக்கியமும் படிமமும்:-**

படிமம் பற்றிய கோட்பாடுகள் புதிதாக இருக்கலாம். எனினும் படிமம் பற்றிய சில சிந்தனைகள் தொல்காப்பியந் தொட்டு இருந்து வந்ததெனக் கூறலாம்.

தொல்காப்பியர் உவமை, உருவகம், சுட்டிக்கூறா உவமம், உள்ளுறை உவமம், இறைச்சி போன்றவற்றைக் குறிப்பிடுகிறார். இவ்வாறு குறிப்பிடும் போக்கில் படிமம் பற்றிய சில செய்திகளும் இடம் பெறுவதாகக் கருதலாம்.

“வினை பயன்மெய் உரு என்ற நான்கே
வகை பெறவந்த உவமத் தோற்றம்”[135]

என்று தொல்காப்பியர் உவமைத் தோற்றம் குறித்துக் குறிப்பிடுகிறார். தொல்காப்பியர் குறிப்பிடும் “மெய்”, “உரு” போன்ற சொற்கள் படிமத்தின் அடிப்படை இயல்புகளைச் சுட்டுவதாகக் கருதலாம். குறிப்பாக இவை காட்சிப் பொருள்களாகும்.

“மாயோன் அன்ன மால்வரைக் கவாஅன்
வாலியோன் அன்ன வயங்குவெள் அருவி”[136]

இதில் மாயோன் போல் கருநிற மலையினிடையே-பலராமன் நிகர்த்த வெண்ணிற அருவி வீழ்கிறது என்ற இரு காட்சிகள் மலைக்கும் அருவிக்கும் காட்டப்பெறுகிறது. சங்க காலத்தில் காட்சிப் படிமம் இடம் பெற்ற சிறப்பினை இதில் காணலாம்.

சங்க இலக்கியங்கள் இயற்கையைப் பின்புலமாகக் கொண்டவை. எனவே காட்சிப் படிமங்கள் மிகுந்திருக்கின்றன எனலாம். சங்கம் மருவிய

காலத்தில் கருத்துக்கள் எழுச்சி பெற்றன. இக்காலங்களில் கருத்துப் படிமங்கள் செல்வாக்குப் பெற்றிருந்ததைக் காணலாம்.

எ.டு. “குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி

கணமேயுங் காத்தலரிது”[137]

என்பதில் கருத்துப்படிமம் இருப்பதைக் காணலாம்.

(குணம் - அருவம், குன்று - உருவம் = கருத்துப் படிமம்)

காப்பியங்களில் முற்குறித்த இரு படிமங்களும் மிகுந்திருக்கின்றன. பக்தி இலக்கியங்களிலும் அந்நிலையே தொடர்ந்தது. குறிப்பாகச் சிற்றிலக்கியங்களில் வினை, பயன், மெய், உருப்படிமங்கள் சிறப்பாக இடம் பெற்றுள்ளன.

எ.டு “வானுறு மதியை அடைந்ததுன் வதனம்

மறிகடல் புகுந்ததுன் கீர்த்தி

கானுறு புலியை அடைந்ததுன் வீரம்

கற்பகம் அடைந்ததுன் கரங்கள் !

தேனுறு மலராள் அரியிடம் புகுந்தாள்

செந்தழல் அடைந்ததுன் தேகம்”[138]

என்று நந்தி மன்னனின் சிறப்புகள் கீழ்க்கண்டவாறு குறிக்கப் பெறுகின்றன.

“வானுறு மதியை அடைந்ததுன் வதனம் - மெய்ப்படிமம்

கானுறு புலியை அடைந்ததுன் வீரம் - வினைப்படிமம்

கற்பகம் அடைந்ததுன் கரங்கள் - பயன்படிமம்

செந்தழல் அடைந்ததுன் தேகம் - உருப்படிமம்

இக்கவிதையில் காட்சிப் படிமம் சிறந்து நிற்பதைக் காணலாம்.

பாரதியின் காலத்தில் கருத்துப் படிமமே மேலோங்கி இருந்துள்ளது எனலாம்.

பயமெனும் பேய்தனை யடித்தோம் - பொய்மைப்

பாம்பினைப் பிளந்துயிரைக் குடித்தோம் ![139]

என்கிறார். பயம்-பேய், பொய்மை-பாம்பு என்றவாறு அருவப்பொருள்களுக்கு உருவங்களை ஒப்புமையாக்கிக் கருத்துப்படிமத்தை வடித்தமையை இக்கவிதையில் காணலாம்.

இவ்வாறு தமிழ் இலக்கியங்களில் படிமம் காலந்தோறும் பயின்று வந்தமையை அறியலாம். மேலை நாட்டில் செல்வாக்குப் பெற்ற படிம இயக்கத்தின் தாக்கம் தமிழ்ப் புதுக்கவிதைத் துறையிலும் தடம் பதிக்கத் தொடங்கிற்று. எனவே புதுக்கவிதைக் கவிஞர்கள் பெரிதும் இப்படிம உத்தியைக் கையாள்வதில் முனைப்புக் காட்டினர்.

**படிமத்தின் வகைகள்:-**

படிம வகைப்பாடு குறித்து மேலை நாட்டறிஞர்கள் பலவாறு சிந்தித்துள்ளனர். தமிழிலும் படிம வகைப்பாடு குறித்து ஒருமித்த கருத்துக்கள் எழவில்லை. புதக்கவிதைகளில் காணப்பெறும் படிமங்களைக் கீழ்க்கண்டவாறு பத்து வகைகளாகப் பகுத்துக் கூறுவர் சி.இ. மறைமலை.[140]

1. அழகியல்படிமம், 2. கொள்கை முழக்கப் படிமம், 3. அங்கதப் படிமம், 4. நிகழ்ச்சிப் படிமம், 5. முரண் பொருட் படிமம், 6. புதுமையியற்படிமம், 7. தொன்மவியற்படிமம், 8. மிகை நவிற்சிப் படிமம், 9. தத்துவப் படிமம், 10. இளிவரற்படிமம் என்று குறிப்பிடுகிறார்.

சிலர் மூவகை வகைப்பாட்டில் படிமத்தை அடக்குவர்.[141] அவ்வகைப்பாடு பின்வருமாறு:




"படிமங்களை வகைப்படுத்துவது என்பதில் திறனாய்வாளர்கள் ஒரே முறையைப் பின்பற்றவில்லை"[142] என்ற கருத்தையும் அறிஞர்கள் சுட்டு கின்றனர். ஒரு கோட்பாடு வளர்கின்ற நிலையில் முற்சுட்டிய சிக்கல் இடம் பெறுவது தவிர்க்க முடியாதது எனக்கூறலாம்.

பல்கிப் பெருகியுள்ள படிமங்களைத் தொல்காப்பிய மரபினையொட்டி நான்கு வகைகளில் வகைப்படுத்துவது பொருத்தமுடையதாகலாம். உவமையின் நிலைக்களன்களாக வினை, பயன், மெய், உரு என்று சுட்டப்படுபவை இங்குக் கருதத்தக்கதாகும். உவமையின் வளர்ச்சி நிலைதான் படிமம் என்கிறபோது உவமையின் வகைப்பாட்டு நிலைக்களன்களைக் கருத்தில் கொள்வது தேவையான முயற்சியாகும்.

“தமிழ் இலக்கண இலக்கியங்களையொட்டிய உவமையின் வகைகளாகச் சொல்லப் பெறுகின்ற வினை, பயன், மெய், உரு ஆகியவை படிம வகைகளாகக் கொள்ளத்தக்கன”[143] என்ற கருத்தும் முற்சுட்டிய கருத்தை மேலும் அரண் செய்கிறது.

தொல்காப்பியர் சுட்டிய உவமையின் நிலைக்களன்களின் அடிப்படையில் எல்லாவிதமான படிமங்களையும் அடக்கிவிடலாம். தொல்காப்பியர் உவமையினை வகைப்படுத்தி உரைக்கும் போது,

“வினை பயன்மெய் உருஎன்ற நான்கே
வகை பெறவந்த உவமத் தோற்றம்”[144]

எனச் சுட்டுகிறார்.

1. வினை உவமம் - வினையாவது தொழிலாகும்.

   எ.டு. புலி போலப் பாய்ந்தான்.

2. பயன் உவமம் - பயன் என்பது தன்மையாகும்.

   எ.டு. மாரியன்ன வண்கை.

3. மெய் உவமம் - மெய் என்பது வடிவமாகும்.

   எ.டு. துடிபோலும் இடை.

4. உருஉவமம் - உரு என்பது நிறமாகும்.

   எ.டு. தளிர் போலும் மேனி.

மேற்குறித்த உவமைகளை அடிப்படையாகக் கொண்டு படிமங்களை வகைப்படுத்தலாம். 1. வினைப் படிமம், 2. பயன் படிமம், 3. மெய்ப் படிமம், 4. உருப்படிமம் என நான்கு வகைப்படும். அப்துல் ரகுமான் கவிதைகளில் வினைப்படிமமும் பயன்படிமமும் சேர்ந்து கவிதைகளில் இருப்பதால், ஐந்தாவதாக வினைப்பயன் படிமம் என்று ஐந்து வகைகளில் படிமங்களை வகைப்படுத்திப் பார்க்கலாம்.

**அப்துல் ரகுமான் கவிதைகளில் படிமங்கள்**

அப்துல் ரகுமான் மேலைநாட்டு இலக்கியங்களை நன்கு அறிந்தவர். மேலை நாட்டு இயக்கங்களை நன்கு விளங்கிக் கொண்டவர். எனவே இவரது கவிதைகளில் குறியீடுகளைக் கையாள்வது போலவே படிமங்களையும் கையாள்கிறார். ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப் பெற்ற நான்கு தொகுப்புகளில்

79 படிமக்கவிதைகள் இடம்பெற்றுள்ளன. குறிப்பாகப் பால்வீதியில் 33 கவிதைகள் இடம்பெறக் காணலாம். பால்வீதி இவரது பரிசோதனை முயற்சியில் விளைந்த கவிதைத் தொகுப்பாகும். இக்கவிதைத் தொகுப்பில் படிமங்கள் மிகுந்துள்ளன. நேயர்விருப்பத்தில் 25 படிமக்கவிதைகளும், ஆலாபனையில் 15 கவிதைகளும், சுட்டுவிரலில் 5 படிமக்கவிதைகளும் இடம்பெற்றுள்ளன. சுட்டுவிரலில் குறைவாக இடம் பெற்றமைக்குக் காரணம் சமுதாயச் சீர்கேடுகளை நேரடியாகத் தாக்குவதால் உத்திகளுக்கு முன்னுரிமை அளிக்கவில்லை என மதிப்பிடலாம்.

**படிமக் கவிதைகளின் எண்ணிக்கை:**

| வ.எண். | தொகுப்பின் பெயர் | வினைப் படிமம் | பயன் படிமம் | மெய்ப் படிமம் | உருப் படிமம் | வினைப்படிமமும் பயன்படிமமும் | |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | பால்வீதி | 15 | 10 | 3 | - | 5 | 33 |
| 2. | நேயர்விருப்பம் | 5 | 12 | 4 | 1 | 3 | 25 |
| 3. | சுட்டுவிரல் | 2 | 1 | 2 | - | - | 5 |
| 4. | ஆலாபனை | 8 | 3 | - | 1 | 4 | 16 |
| மொத்தம் | = 79 | 30 | 26 | 9 | 2 | 12 | 79 |

**வினைப்படிமம்:-**

வினைப்படிமம் என்பது வினைகளை ஒப்பிட்டுச் சொல்வதாகும். அதாவது உவமேயம் உவமானம் ஆகிய இரண்டும் வினையாக அமைவது வினைப்படிமம் எனலாம். இவர் கவிதைகளில் வினைப்படிமக் கவிதைகள் 30 உள்ளன. அவைகள் சமுதாயம் (15) காதல் (7) இயற்கை (2) இறைமை (2) தத்துவம் (3) தற்சார்பு (1) போன்ற நிலைகளில் அமைந்துள்ளன. சமுதாயக் கவிஞராக விளங்குவதால் சமுதாயம் சார்ந்த படிமங்கள் மிகுந்துள்ளன என மதிப்பிடலாம்.

# வினைப்படிமம் அட்டவணை

| கவிதைத் தொகுப்பும் | வினைப்படிமம் | | | | | |
|---|---|---|---|---|---|---|
| கவிதைத் தலைப்பும் | சமுதாயம் | காதல் | இயற்கை | இறைமை | தற்சார்பு | தத்துவம் |
| பால்வீதி | | | | | | |
| 1. பலிபீடம் | +2 | | | | | |
| 2. பாவைச் சமாதி | | + | | | | |
| 3. தீக்கடைக் கோல்கள் | | + | | | | |
| 4. சிந்தர் | | + | | | | |
| 5. மூடிய இமை | | + | | | | |
| 6. கண் நதி மூலம் | | | | | | + |
| 7. எனக்கு அந்திகள் இல்லை | | | | | + | |
| 8. வேர்வைத் தாலி | +2 | | | | | |
| 9. திருஷ்டி பரிகாரம் | | | + | | | |
| 10. கிரகணமாகிய வெளிச்சம் | | | + | | | |
| 11. சாட்சி | + | | | | | |
| 12. அறிதுயில் | + | | | | | |
| 13. மானுடத்தின் மகுடாபிசேகம் | + | | | | | |
| **நேயர்விருப்பம்** | | | | | | |
| 14. யாருக்கு | + | | | | | |
| 15. அந்தி | + | | | | | |
| 16. தீக்கோழி | | + | | | | |
| 17. கண்ணாமூச்சி | | + | | | | |
| 18. இப்பொழுதெல்லாம் | | + | | | | |
| **சுட்டுவிரல்** | | | | | | |
| 19.இரத்தம் வெவ்வேறு நிறம் | + | | | | | |
| 20. பாலைவனத்துப் பிரமிடுகள் | + | | | | | |
| **ஆலாபனை** | | | | | | |
| 21. தவறான எண் | | | | + | | |
| 22. இரவின் கண்ணீர் | + | | | | | |
| 23. சிறகுகள் | | | | + | | |
| 24. ஒரு மேகத்தைப்போல் | + | | | | | |
| 25. காந்தக் கயிறு | + | | | | | |
| 26. அதுதான் | + | | | | | |
| 27. முகமூடி | | | | | | + |
| 28. சாத்தானின் சந்நிதி | | | | | | + |
| மொத்தம் 30 | 15 | 7 | 2 | 2 | 1 | 3 |

**சமுதாயம்:-**

சமுதாயத்தில் உழைப்பவர்களே உயர்ந்தவர்கள். மண்ணுக்குக் கட்டப் பெறும் தாலிக்கயிறு மழை நீரன்று. வேர்வைதான் எனும் கருத்தில்,

"இடிகளே!
ஒன்று கூடி முழங்குங்கள்
உங்கள் பிரகடன
அதிர்ச்சியிலே
பூமிப் பெண்ணின்
பதிவுத் திருமணங்கள்
ரத்தாகட்டும்
இனி எப்போதும் அதற்கு
வேர்வையே தாலி"[147] என்கிறார்.

மழை பொழிதல்-பதிவுத் திருமணத்துடனும், இடிமுழக்கம் மேள முழக்கத்துடனும் வேர்வை சிந்துதல் தாலி கட்டுதலுடன் ஒப்புமையாக்கப் பெறுவதைக் காணலாம். இங்கு கூறப்பெற்ற வினைகள் வினைப் படிமமாக மலர்ந்துள்ளன.

தைமாதம் வந்த பின்னர் வழி பிறக்கும் என்பார்கள். "யாருக்கு"? எனத் தலைப்பிட்டு,

ஆண்டுக்கோர் முறைவரும்
அஞ்சறக்காரியே !
வியர்வை முகவரிக்கு
வந்த 'பணவிடை' யைப்
பொய்க்கை எழுத்துப்
போடுவோர்க் கல்லவா
கொடுத்துவிட்டுப் போகின்றாய்
கொடுமையிது ஒழிவதென்று"[146]

என்கிறார். தைமாதம் தபால்காரனைப் போலப் பொய்க் கையெழுத்துப் போடுவோர்க்கு ஏமாந்து பொருள் தந்து போகிறதே என வேதனையுடன் வினைப்படிமத்தைக் காட்டுகிறார்.

பொய்மையில் உலவும் மனிதர்களை நாடக மேடையில் உலவுகின்றவர்களுடன் இணைத்து உரைத்த போது,

"பகல் நாடக மேடை
மனிதர்கள் அதில்
வேடம் தரித்து உலவுகிறார்கள்
நான் அவர்கள் வேடம் களையும்
அந்தரங்க அறையாக
இருக்கிறேன்"[147]

என்று ஏமாற்று மனிதர்கள் இயங்கும் சமுதாயத்தைக் காட்டுகிறார். மறுபுறம் வறுமையில் உழல்பவர்களையும் காண்பிக்கிறார். "அறிதுயில்" எனும் தலைப்பில்,

"இரவுத் தொட்டியில்
எச்சில் இலையின்
நட்சத்திரப் பருக்கையை
நக்கிய சூரிய நாய்
என்னையும் கடித்துத்
தொலைக்கிறதே"[148]

என்று பிச்சைக்காரனின் வினைகள் வானின் வினைகளுடன் காட்சிப் படுத்தப் பெற்றுப்படிமமாகின்றன.

இவ்வாறு காதல், இயற்கை, இறைமை, தத்துவம், தற்சார்பு போன்றவைகளுடன் தொடர்புபடுத்தி வினைப் படிவங்களை அமைத்துச் செல்கிறார். இவரிடம் இடம்பெறும் வினைப் படிவங்கள் சில பின்வருமாறு.

அப்துல் ரகுமான் தம் கவிதைகளில் தாம் கூற விழைந்த செய்திகளை உணர்த்தப் பல்வேறு வினைகளைப் படிமப்படுத்துகிறார். குறிப்பாக, குரவையாடுதல், சவ அடக்கம் செய்தல், பிச்சை எடுத்தல், கொசுக் கடித்தல், சவஊர்வலம் போதல், இரவு விடியலைப் பிரசவித்தல், அம்மைக் கொப்புளங்களை ஆற்றுதல், நிலவின் தோலுரிதல், பகல் இரவைக் கொலை செய்தல், குப்பைத் தொட்டியில் நாய் பருக்கைகளை நக்குதல், தபால்காரர் வருதல், அனுதாபக் கூட்டம் போடுதல், அலை கரை வந்து மீளுதல், தீக்கோழி தலையைப் புதைத்தல், கண்ணாமூச்சி ஆடுதல், கூடையில் விற்றல், கவரி வீசுதல், உடன்கட்டை ஏறுதல், கண்ணீர் பொங்கிவருதல், சிலந்தி கூடுகட்டுதல், கோழிமுட்டை உடைத்தல், ஓடிப்பிடித்து விளையாடுதல் போன்ற வினைகள் படிமப் படுத்தப்பெற்று வினைப்படிமமாக உள்ளன.

**பயன் படிமம்:-**

ஒரே தன்மையுள்ள இரு பயன்களை ஒப்பிட்டு உரைப்பது பயன் படிமமாகும். அப்துல் ரகுமான் கவிதைகளில் 26 கவிதைகள் பயன் படிமமக் கவிதைகளாக உள்ளன. சமுதாயம் (7), காதல் (3) தத்துவம் (7) தற்சார்பு (4) இயற்கை (4) அரசியல் (1) என்றவாறு அமைந்துள்ளன.

## பயன்படிமம் அட்டவணை

| கவிதைத் தொகுப்பும் கவிதைத் தலைப்பும் | பயன் படிமம் | | | | | |
|---|---|---|---|---|---|---|
| பால்வீதி | சமுதாயம் | காதல் | தத்துவம் | தற்சார்பு | இயற்கை | அரசியல் |
| 1. முன்னுரையாக ஒரு விண்ணப்பம் | | | | $+_2$ | | |
| 2. தீக்கடைக் கோல்கள் | | + | | | | |
| 3. நாத்திகக் கோயில் | | | + | | | |
| 4. எரித்தக் காட்சி | + | | | | | |
| 5. மூடிய இமை | | + | | | | |
| 6. சடங்குகளின் கைதிகள் | | + | | | | |
| 7. ஒற்றை முலை | | | | + | | |
| 8. வேர்வைத் தாலி | + | | | | | |
| 9. மானுடத்தின் மகுடாபிசேகம் | + | | | | | |
| **நேயர் விருப்பம்** | | | | | | |
| 10. மண் | | | + | | | |
| 11.பதவி | | | | | | + |
| 12. குளம் | | | | | + | |
| 13. மரணம் | | | + | | | |
| 14. கேள்வி | | | + | | | |
| 15. மரங்கள் | | | | | + | |
| 16. தட்டுங்கள் திறக்கப்படும் | $+_2$ | | | | | |
| 17.காந்தியடிகள் | | | | | | + |
| 18. கஸ்தூரிபா காந்தி | | | | | | + |
| 19. வடலூரும் வார்த்தாவும் | + | | | | | |
| 20. முதுமை | | | + | | | |
| **சுட்டுவிரல்** | | | | | | |
| 21. கூடு துறக்கும் பறவைகள் | + | | | | | |
| **ஆலாபனை** | | | | | | |
| 22. வெற்றி | | | + | | | |
| 23. குருடர்களின் யானை | | | + | | | |
| 24. சுயப்பிரசவம் | | | | + | | |
| மொத்தம் 26 | 7 | 3 | 7 | 4 | 4 | 1 |

எடுத்துக்காட்டு விளக்கத்திற்குத் தத்துவ நிலையில் பயன்படுத்தப் பெற்றுள்ள பயன்படிமங்கள் சிலவற்றைக் காணலாம்.

தோல்விதான் நம்முடைய முழுவடிவத்தையும் காட்டவல்லது. நம் பலவீனத்தையும் பலத்தையும் தோல்வி நமக்குக் காட்டுகிறது. தோல்வியின் இத்தன்மையைக் கண்ணாடியுடன் ஒப்பிட்டுக் காட்சிப்படுத்தித் தத்துவக் கவிதையாகக் கவிஞர் வடித்துள்ளார்.

"தோல்வியே நீ என் கண்ணாடி
என்னையே நான் பார்த்துக் கொள்ள
உதவுவது நீயல்லவா?
தோல்வியே நீ பரிணாமச் சிற்பி
மனிதனைச் செதுக்குவது
நீயல்லவா?"[149]

சிற்பியின் தன்மையையும் தோல்வியுடன் ஒப்பிட்டு விளக்குகிறார்.

"சுயப் பிரசவம்" எனும் தலைப்பில்,

"இந்த உலகத்திற்கு நீ
வெறும் வெள்ளைத் தாளாகவே
வருகிறாய்
அதில் நீ தான்
உன்னை எழுதிக் கொள்ள வேண்டும்"[150]

என்பதில் உலகிற்கு நாம் வருவது வெள்ளைத் தாளின் தன்மையுடன் காட்டி இங்கு பயன்படிமம் ஆக்கப் பெறுவதை உணரலாம்.

இவ்வாறு சமுதாயம், காதல், தத்துவம், தற்சார்பு, இயற்கை, அரசியல் போன்ற நிலைகளில் பயன்படிமக் கவிதைகளைப் படைத்துள்ள பாங்கினை அறிய முடிகிறது.

அப்துல் ரகுமான் சில பயன்படிமங்களைத் தம் கவிதைகளில் பயன்படுத்தியுள்ளார். அவற்றில் சில பின்வருமாறு. சிலந்தி வலை பின்னுதல், பூ சிதையில் வண்டு பிணமாக இருத்தல், திரைப்படம் ஓடுதல், சருகுகள் புலம்பல், அகலில் சுடர் எரிதல், விழிப்பூவாளியில் நீர் தெளித்தல், ஞானப்பால் ஊட்டுதல், அசுவமேதயாகம், தொட்டில் கட்டில் தன்மை,

சகதியில் தங்கமணிக் கிண்ணம், தூக்குக்கயிறு தாலிக்கயிறு, பூப்படைதல், வேசியர் வீட்டுக் கதவு போன்ற படிமங்கள் தன்மை நிலையில் காட்சிப் படுத்தப் பெற்று பயன்படிமக் கவிதைகளாக மலர்ந்துள்ளன.

**மெய்ப்படிமம்:-**

மெய்ப்படிமமாவது வடிவ ஒப்புமையுடைய இரு வேறு பொருள்களின் ஒப்புமையை உணர்த்துவதாகும். இவ்வகைக் கவிதைகளின் எண்ணிக்கை ஒன்பதாகும். இயற்கை (3), அரசியல் (1), சமுதாயம் (3), தற்சார்பு (1), இறைமை (1) என்ற வகைப்பாட்டில் மெய்ப்படிமங்களைப் படைத்துள்ளார்.

## மெய்ப்படிமம் அட்டவணை

| கவிதைத் தொகுப்பும் கவிதைத் தலைப்பும் | மெய்ப்படிமம் | | | | |
|---|---|---|---|---|---|
| பால்வீதி | இயற்கை | அரசியல் | சமுதாயம் | தற்சார்பு | இறைமை |
| 1. ஒற்றை முலை | | | | + | |
| 2. மெழுகுவர்த்தி | | | + | | |
| 3. தந்திக் கம்பங்கள் | | | + | | |
| **நேயர் விருப்பம்** | | | | | |
| 4. குளம் | + | | | | |
| 5. ஆயிரம் திருநாமம் பாடி | | | | | + |
| 6. முத்துக்கள் | + | | | | |
| 7. மரங்கள் | + | | | | |
| **சுட்டுவிரல்** | | | | | |
| 8. கொடி மரம் | | + | | | |
| 9. கொம்பு | | | + | | |
| மொத்தம் 9 | 3 | 1 | 3 | 1 | 1 |

இயற்கை என்ற வகையில் இடம்பெற்றுள்ள மெய்ப்படிம உத்தியை எடுத்துக்காட்டு விளக்கத்திற்காகக் காணலாம்.

“மரங்கள்” எனும் தலைப்பில் மரம் குடையினைப் போன்ற வடிவினை உடையது எனும்போது,

“பனி நிழல் மழை பொழியும்
பச்சைப் பசுங்குடைகள்”[151]

என்று படிமப் படுத்துகிறார். மேலும் இலைகளின் வடிவம் நாவின் வடிவத்தை ஒத்தது எனும் போது,

“இலைகளெல்லாம் உன் பெயரை
இசைக்கின்ற நாவுகளே”[152]

என்றும் வடிவ ஒப்புமையைக் காட்டுகிறார்.

இவ்வாறு அரசியல், சமுதாயம், தற்சார்பு, இறைமை போன்ற வகைகளிலும் மெய்ப்படிம உத்தியைக் கவிஞர் பயன்படுத்தியுள்ளார்.

கவிஞர் பல்வேறு வடிவ ஒப்புமையைக் காட்டி இவ்வுத்தியை நுட்பமாகக் கையாண்டுள்ளார். சில மெய்ப்படிமங்கள் பின்வருமாறு,

படகுகள்-வண்டுகள், சுதை மண்டபம்-மொட்டு, மெழுகு-புல்லாங்குழல், தீபம்-நாக்கு, தந்திமரம்-தலைகீழ்மரம், வியர்வை-முத்துக்கள், விதை வளர்ச்சி-வாமன விசுவரூபம் என்பனவற்றைக் குறிக்கலாம்.

**4. உருப்படிமம்:-**

வண்ணங்களோடு வண்ணங்களை ஒப்பிட்டுச் சொல்வது உருப்படிமம் என்பர். உருப்படிமக் கவிதைகள் “இரண்டு” மட்டும் உள்ளன.

“விளக்குகள்” என்ற தலைப்பில், விளக்குகளின் வண்ணம் ஆபரணங் களுடனும், இரணங்களுடனும், சூரியனின் எச்சில்களுடனும் நிலவின் வேர்வைத்துளிகளுடனும் மஞ்சள்நிற வண்டுகளுடன் மின்மினிகளுடனும் ஒப்புமையாக்கப் பெறுகின்றன.

விளக்குகளைப் பார்த்துக்கவிஞர் வினவுகிற போது,

“நீங்கள் இரவின் ஆபரணங்களா?
இல்லை ரணங்களா?

நீங்கள் சூரியனின் எச்சில் துளிகளா?

இல்லை நிலவின் வேர்வைத் துளிகளா?

நீங்கள் இருட்டு மலரை மொய்க்கும்

மஞ்சள் வண்டுகளா?

இல்லை பறக்காத மின்மினிகளா?"[153]

என்றவாறு வண்ண ஒப்புமை செய்வதை நோக்கலாம். "மரணம்" என்ற தலைப்பில்,

"நோய் என்வாசல்

காயம் என் புன்னகை"[154]

என்கிறார். இதில் காயம் - பூவின் புன்னகை எனும் வண்ண ஒப்புமையைக் காணலாம்.

**5. வினைப்படிமமும் பயன்படிமமும்:-**

சில படிமங்கள் காட்சி தருகின்றபோது வினையை ஏற்று வினைப்படிம மாகவும், அதனோடு சேர்ந்த தன்மையை ஏற்றுப் பயன்படிமமாகவும் காட்சி தருகின்றன. 12 கவிதைகள் இவ்வியல்புடைய கவிதைகளாக உள்ளன. சமுதாயம் (4) காதல் (4) கலை (1) தத்துவம் (2) இயற்கை (1).

வினைப்படிமமும் பயன் படிமமும்

| கவிதைத் தொகுப்பும் கவிதைத் தலைப்பும் | | | | | |
|---|---|---|---|---|---|
| பால்வீதி | சமுதாயம் | காதல் | கலை | தத்துவம் | இயற்கை |
| 1. பாவைச் சமாதி | | + | | | |
| 2. என் செவியின் சுவாசம் | | | + | | |
| 3. சிந்தர் | | + | | | |
| 4. ஈர்ப்பு | + | | | | |
| 5. திருஷ்டி பரிகாரம் | + | | | | |
| **நேயர் விருப்பம்** | | | | | |
| 6. மண் | | | | | + |
| 7. வேதியியல் | | + | | | |
| 8. கண்ணும் எழுதேம் | | + | | | |
| **ஆலாபனை** | | | | | |
| 9. பற்று வரவு | + | | | | |
| 10. இழந்தவர்கள் | | | | $+_2$ | |
| 11. மாதிரி | + | | | | |
| மொத்தம் 12 | 4 | 4 | 1 | 2 | 1 |

இவ்வகைப் படிமத்தில் சமுதாய வகைப்பாட்டில் இடம்பெறும் கவிதைகளை மட்டும் காணலாம்.

பழைய சமுதாய அமைப்பை விரும்பிப் பின்னோக்கி நடக்கும் தன்மையைப் பின்னோக்கி நடக்கும் பெங்குவின் பறவையுடன் ஒப்பிட்டுக் காட்டுகிறார். இக்கவிதையில் வினைப்படிமமும் பயன்படிமமும் இடம் பெற்றுள்ள நிலை கருதத்தக்கது.

"எங்கள் நதிக்கரையில்
பெங்குவின் பறவைகள்
முதுமக்கள் தாழிகளில
முட்டையிடும்"[155]என்கிறார்.

பெங்குவின் தன்மையும் அதன் வினையும் மூடர்களின் தன்மைக்கும், வினைக்கும் ஒப்புமையாகக் காட்டப் பெறுகிறது.

முற்சுட்டியது போன்றே காதல், கலை, தத்துவம், இயற்கை போன்ற வகைகளில் இவ்வகைப் படிமங்களைக் கையாண்டுள்ளார்.

அப்துல் ரகுமான் வினைப் படிமங்களையும், பயன்படிமங்களையும் இணைத்துக் கவிதைகளில் கையாண்டுள்ளார். அவற்றில் சில பின்வருமாறு.

கல்லறைச் சடங்கு-காதல் தோல்வி, கனவு அதிகரித்தல்-மது பொங்குதல், கொசுக்கடித்தல்-காதலி நினைவு தூங்கவிடாமை, பறக்கும் பறவை முட்டையில் கவனம் செலுத்துதல்-கவிஞரின் சமுதாய நோக்கம், மண் சுமத்தல்-தாய் சுமத்தல், விளக்காக சுடர்தல்-காதல் தந்து பிரகாசமாக்குதல் கண்ணில் மை தீட்டல்-சூரியனில் கரி பூசுதல், தேன் கூட்டில் தேன் எடுத்தல்-வாழ்க்கையில் சுகம் பெறல், பிச்சை எடுத்தல்-மூளைக்கு அறிவு சேர்த்தல், முட்டை கொண்டு திட்டை ஏறும் எறும்பு-காதலியின் பொறுப்பான கடிதம் என்பனவாகும்.

**குறியீட்டுப் படிமங்கள்:-**

படிமத்தின் பயன்பாடு ஒரு காட்சியின் மூலம் நமக்கு அரிய செய்தி களைத் தருவதாகும். அப்படிமமே குறியீட்டுக்குப் பயன்படுமாறு அமைந்தமை சிறப்பாகக் கருதப்பெறுகிறது. குறியீட்டுப் படிமம் இரு வகைகளில் அமைகிறது.[156]

அ) ஒரே படிமம் திரும்பத் திரும்ப வருதல்

ஆ) ஒரு படிமக் காட்சி இன்னொரு கருத்தை உணர்த்தல்.

என்று இருவகைகளில் படிமம் குறியீடாகிறது.

அ) ஒரு குறியீட்டைப் பயன்படுத்தும்போது கவிஞன் ஒரு பொருளின் மூலமாகத் தன் கருத்தை வெளிப்படுத்துகிறான். அடிக்கடி ஒரே படிமத்தைக் கவிஞன் திரும்பத் திரும்பப் பயன்படுத்தும்போது குறியீட்டின் தன்மையான பல பொருள்களைத் தருவதாக அப்படிமம் அமைகிறது. இத்தன்மை அப்துல் ரகுமான் கவிதைகளில் இல்லை.

ஆ) படிமக் காட்சிகளின் வழிக்குறியீட்டை உணர்த்துகிற முறையில் மேலோட்டமாகப் பார்ப்பவர்களுக்குப் படிமமாகவும், நுட்பமாக நோக்குகின்றவர்களுக்குக் குறியீடாகவும் தோன்றும்.

ஒரு படிமக் கவிதை இயல்பான காட்சிகளை விடுத்து இன்னொரு கருத்தையும் கூடுதலாகக் குறிப்பது குறியீட்டுக் கவிதையாகும். கவிதையில் கவிதைத் தலைப்போ அல்லது பிற குறிப்புக்களிலோ அது குறியீடு என்பதற்கான குறிப்பைக்காட்டும். அவ்வாறு குறிப்புகள் இன்றி இருப்பின் அது வெறும் படிமமேயாகும். அப்துல் ரகுமான் இரண்டின் நிலையில் கட்டப்பெற்றுள்ள வகையில் படிமக் குறியீட்டுக் கவிதைகள் எழுதியுள்ளார்.

படிமங்களைத் தாண்டி வேறு ஒரு கருத்தனுபவத்தைப் பெற்றுத் தரும் இக்கவிதைகள் பின்வருமாறு.

1. நெற்றிக் கண் (பால்வீதி)
2. வியர்க்கும் சாமரைகள் (பால்வீதி)
3. சுட்டபழம் (பால்வீதி)
4. வீழ்ந்த தேவதைகள் (பால்வீதி)
5. குற்றவாளிகள் (சுட்டுவிரல்)
6. துலாபாரம் (சுட்டுவிரல்)
7. ஆறாத அறிவு (ஆலாபனை)
8. முகமூடி (ஆலாபனை)

என்பன குறியீட்டுப் படிமக் கவிதைகளாகும்.

“குற்றவாளிகள்” எனும் தலைப்பில் ஒரு படிமக் காட்சியைக் காட்டுகிறார்.

“பூப்பூவாய்த் தேடிச்
சேகரித்த தேனை
எடுக்க வந்தனர்
குறவர்.
கூட்டைத் தொட்ட
குறவர்களைக்
கொட்டிவிரட்டின தேனீக்கள்.

கொட்டிய தேனீக்கள்

கொல்லப்பட்டன

சட்டம் சொன்னது;

"கொட்டுவது வன்முறை"[157]

பூப்பூவாய்த் தேடித் தேனைச் சேகரித்தத் **தேனீக்கள்-மக்கள்,** நெருப்பைக் காட்டித் தேனீக்களை விரட்டித் தேன் எடுக்கும் குறவர்கள்-ஏமாற்றும் அதிகார வர்க்கம். அதிகார வர்க்கத்தை மக்கள் விரட்டி மோதுவது சட்டத்தின் படிக்குற்றம் என்ற நிலையை இப்படிமக் கவிதையின் வழி விளக்கிக் காட்டுகிறார். சட்டம் திருடர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதை அப்துல் ரகுமான் தேனீக்கள், தேன்கூடு, குறவர் என்ற படிமக் காட்சிகளின் மூலம் பல செய்திகள் பட விரித்துரை வைக்கிறார்.

## முடிவுகள்

புதுக்கவிதை உத்திகள் இரு திறத்தன. கவிதைப் படைப்பில் வெளிப் படையாகத் தோன்றிக் கவிதைப்பொருளைப் புலப்படுத்துபவை பருப்பொருள் உத்திகளாகும்.

சித்திரமுறை, முரண், தலைப்பு, சொல்லுடைப்பு, சொல்லாடல், அடுக்கு வருணனை, அங்கதம் என்ற ஏழும் குறிப்பிடத்தகுந்த பருப்பொருள் உத்தி களாக வகைப்படுத்தப் பெற்றுள்ளன.

நுண்பொருள் வடிவ உத்தியில் பொருள் சொல்லுக்குள்ளேயே அமையும். குறியீடு, படிமம் போன்றவை அவ்வகை உத்தியில் குறிக்கத் தக்கன.

பருப்பொருள் உத்திகளில் சித்திரமுறை, சொல்லுடைப்பு என்கிற உத்திகளைக் கவிஞர் கையாளவில்லை. இவ்வகை உத்திகள் கவிதை மேன்மைக்குக் காரணிகளாகாது என்பது கவிஞரது கோட்பாடாகும். அங்கதம், முரண் உத்திகளை அப்துல் ரகுமான் சிறப்பாகக் கையாண்டுள்ளார். தலைப்பு, சொல்லாடல் என்கிற இரண்டையும் அளவாகப் பயன்படுத்தியுள்ளார்.

சமுதாயம் சார்பான கவிதைகளில் கூறவந்த பொருளை, அங்கதத்துடன் கூறிச் சிந்திக்க வைத்துள்ளார். குறிப்பாக, பால்வீதி, சுட்டுவிரல் ஆகிய தொகுதிகளில் அங்கத உத்தி மிகுதியாக இடம் பெற்றுள்ளது. நளினமாக அங்கதத்தைக் கையாள்வதில் கவிஞர் திறன் மிக்கவர்.

அப்துல் ரகுமான் நிகழ்ச்சிமுரண் உத்தியைக் கையாள்வதில் தேர்ந்தவர். எதையும் மாறுபட்ட நோக்கில் பார்க்கும் இவரது புதுமைப் பார்வையே நிகழ்ச்சிமுரண் மேலோங்கி இருக்கக் காரணமாகும். பொருள்முரண், தலைப்புமுரண், உணர்ச்சிமுரண் போன்ற முரண்கள் அளவாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளமை ஆய்வின் வழி உணரப் பெற்றது.

கவிதையைத் தலைப்பிலிருந்து முடிவுவரை உற்று நோக்கினால் பொருள் புலப்பாடு எளிமையாகவும், சிறப்பாகவும் அமையும். இப்பொருள் புலப்பாட்டிற்குக் கவிஞர் "தலைப்பில்" அதற்கான திறவுகோலை அமைப்பார்.

கவிஞர் கவியரங்கக் கவிஞராக இருப்பதால் அடுக்கு வருணனையைக் கற்பனா சக்தியுடன் திறத்துடன் பயன்படுத்தியுள்ளார்.

கருத்துக்களைச் சுருங்க உரைக்கும் ஆற்றல் வாய்ந்தது குறியீட்டு உத்தி ஆகும். குறியீடு ஒன்றை மற்றொன்றால் உரைப்பது. குறியீடு தன் இயல்பான பொருளைத் தவிர்த்து பிறிதொன்றைக் குறிக்கும். பேராற்றல் உடையது. பன்முகப் பொருள் தருவதும், தலைப்பை நீக்கிவிட்டால் அக் கவிதை பல தளங்களுக்குப் பொருள் தருவதும் குறியீட்டுக் கவிதையின் வியத்தகு சிறப்பாகும்.

அப்துல் ரகுமான் குறியீட்டுக் கவிஞர் என்ற சிறப்பினைப் பெற்றவர். இந்திய மொழிகளில் குறியீடுகளின் பயன்பாடு உருது, பாரசீகம் போன்ற மொழிகளில் மிகுதி. கவிஞர் உருதுமொழி அறிந்தவர். எனவே, தமிழில் குறியீட்டுக் கவிதைகளை மிகுதியாகப் படைத்துள்ளார்.

சொந்தக் குறியீடு, இயற்கைக் குறியீடு, தொன்மக் குறியீடு போன்ற வகைகளைக் கவிஞர் மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளமை ஆய்வின் வழி உணரப்பெற்றது. சமூகச்சீர்கேடு, அரசியல்சீர்கேடு ஆகியவற்றைக் குறிப்பாக உணர்த்தச் சொந்தக்குறியீடு பயன்படுத்தப் பெற்றுள்ளது.

தொன்மக்குறியீட்டிற்குத் தொன்மங்களும், இதிகாசங்களும் தலை யூற்றாக உள்ளன. அவைகள் சமயம் சார்ந்தன. இந்து சமயத்தோடு தொடர் புடைய தொன்மங்களிலிருந்து பாத்திரங்களையும், கதையில் இடம்பெற்ற நிகழ்வுகளையும் அப்துல் ரகுமான் மிகுதியாகக் குறிப்பிட்டுள்ளார். கிறித்துவ சமயம் சார்ந்த பைபிளிலிருந்து சில தொன்மக்கதைகளை எடுத்தாண்டுள்ளார். எல்லோருக்கும் பரவலாகத் தெரிந்த தொன்மங்களிலிருந்து குறியீடு அமைக்கும்போது அது மக்களைச் சென்றடையும் என்பது கவிஞரின் குறியீட்டுக் கோட்பாடாகும்.

சமயம் சார்ந்த குறியீடுகளில் கதைப் போக்கு இல்லை, சமயம் சார்ந்த சொற்களைக் குறியீட்டுப் பொருளாக்கித் தருவதில் கவிஞர்களுக்குத் தனித்திறன் உண்டு. சிலப்பதிகாரம், மணிமேகலை, நளவெண்பா, தேவாரம், பெரியபுராணம் போன்ற தமிழ் இலக்கியங்களிலிருந்து இலக்கிய குறியீடுகளை அமைத்துள்ள நிலை ஆய்வின் வழி பெறப்பெற்றது.

படிமக்கவிதைகள் காட்சித் தன்மையை அடிப்படையாகக் கொண்டவை. உவமேயம், உவமானம் ஆகியவற்றில் உவமானம் காட்சித் தன்மையுடன் அமைவது, சிறந்த படிமம் என உணரப்பெற்றது. படிமம் குறியீட்டைப் போலன்றி ஒரு பொருளைத் தருமியல்பினது.

அப்துல் ரகுமான் மேலை நாட்டு இலக்கியங்களையும் இயக்கங் களையும் அறிந்தவர். அவ்வகையில் குறியீட்டு உத்தியைப் போலவே படிமக் கவிதைகளையும் தம் கவிதைகளில் பயன்படுத்தியுள்ளார். "பால்வீதி", "நேயர்விருப்பம்" கவிதைத் தொகுப்புகளில் அவ்வகை உத்தி மிகுதியாக உள்ளது.

வினை, பயன், மெய், உரு என்ற நிலையில் அமையும் படிமக் கவிதைகளில் வினைப்படிமம், பயன்படிமம் ஆகியவற்றைப் பரவலாகப் பயன்படுத்தியுள்ளார்.

வினைப்படிமம் சமுதாயம் சார்ந்த நிலையில் மிகுந்துள்ளது. கவிஞர் "சமுதாயக்கவிஞராக" இருப்பதால் இந்நிலை அமைந்துள்ளது. பயன் படிமத் தில் சமுதாயம், தத்துவம், தற்சார்பு போன்ற நிலைகளுக்கு இடம் கொடுத் துள்ளார். வினைப்படிமமும் பயன்படிமமும் இணைந்து கவிதையை உருவாக்குவது கவிஞரின் தனித்தன்மையாகும்.

# குறிப்புகள்

1. வை. சச்சிதானந்தம், மேலை இலக்கியச் சொல்லகராதி, ப.134.
2. சி.இ. மறைமலை, முப்பெரும் உத்திகள், ப.20.
3. சி.இ. மறைமலை, முப்பெரும் உத்திகள், முன்னுரை, ப.11.
4. சு. அரங்கராசு, தமிழ்ப்புதுக்கவிதை ஒரு திறனாய்வு ப.268.
5. மேலது. ப,269.
6. பாலா, புதுக்கவிதை ஒரு புதுப்பார்வை, ப.112.
7. சு. அரங்கராசு, தமிழ்ப்புதுக்கவிதை ஒரு திறனாய்வு, ப.271.
8. மேலது.
9. மேலது, ப.284.
10. காண்க: பின்னிணைப்பு - அட்டவணை எண் - 3
11. A.S. Hornby, Oxford Advanced Learner's Dictionary of Current English, P.769.
12. பொன். செல்வ கணபதி, புதுக்கவிதையில் அங்கதம், ப.56.
13. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.59.
14. மேலது, ப.58.
15. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.129.
16. தொல்காப்பியம், இளம்பூரணம், பொருளதிகாரம், நூ.எ. 400.
17. இரா. மோகன் (ப.ஆ.) சிற்பியின் கட்டுரைகள், ப.45.
18. காண்க: பின்னிணைப்பு - அட்டவணை எண் - 5
19. இலலிதவேலன், அப்துல் ரகுமானின் பால்வீதி - ஓர் ஆய்வு, ப.43.
20. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.85.
21. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.16.
22. அப்துல் ரகுமான், ஆலாபனை, ப.22.

23. அப்துல் ரகுமான், பால்வீதி, பக்.51-52.

24.
1. பார்வை நிழல் (பால்வீதி)
2. என் செவியின் சுவாசம் (பால்வீதி)
3. வீழ்ந்த தேவதைகள் (பால்வீதி)
4. தன தேவதை (பால்வீதி)
5. சபிக்கப்பட்ட பூவனம் (பால்வீதி)
6. பாருக்குள்ளே நல்ல நாடு (சுட்டுவிரல்)
7. காந்தக் கயிறு (ஆலாபனை)
8. குருடர்களின் யானை (ஆலாபனை)

25. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.88.

26. அப்துல் ரகுமான், ஆலாபனை, ப.71.

27. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.81.

28. இரா. மோகன் (ப.ஆ), சிற்பியின் கவிதைகள், ப.51.

29. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.6.

30.
1. நிர்வாணத்தை உடுத்து (பால்வீதி)
2. முரண்தொடை (பால்வீதி)
3. மரணம் (நேயர் விருப்பம்)
4. வெற்றி (ஆலாபனை)
5. மரணம் என்ற அழகு (ஆலாபனை)
6. மறுபக்கம் (ஆலாபனை)

31. அப்துல் ரகுமான், நேயர் விருப்பம், ப.24.

32. அப்துல் ரகுமான், ஆலாபனை, பக்.120-121.

33.
1. பாருக்குள்ளே நல்ல நாடு (சுட்டுவிரல்)
2. புதிய பாரதம் (சுட்டுவிரல்)
3. Be Indian Buy Indian (சுட்டுவிரல்)

34. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.11.

35. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.39.

36. அரங்கராசு, தமிழ்ப் புதுக்கவிதை, ஒரு திறனாய்வு, ப.273.

37. 1. என் தேவனே எனக்குக் கைகொடுத்தீர் (பால்வீதி)
   2. அந்தப்புரங்களில் (பால்வீதி)
   3. பலிபீடம் (பால்வீதி)
   4. கண்நதிமூலம் (பால்வீதி)
   5. கலியுக இதிகாசம் (பால்வீதி)
   6. மெழுகுவர்த்தி (பால்வீதி)
   7. இறப்பு எங்கள் பிறப்புரிமை (பால்வீதி)
   8. உடலுக்கு ஒரு வேகம் (பால்வீதி)
   9. மூன்றாவது வர்க்கம் (பால்வீதி)
   10. தந்திக் கம்பங்கள் (பால்வீதி)
   11. அறிதுயில் (பால்வீதி)
   12. விடைகளைத் தேடி (பால்வீதி)

38. 1. கேள்வி (நேயர்விருப்பம்)
   2. நேரு (நேயர்விருப்பம்)
   3. அரசியல்வாதிகளுக்கு (நேயர்விருப்பம்)

39. 1. இந்தியன் உயில் (சுட்டுவிரல்)
   2. வயதுவராதவர்க்கு மட்டும் (சுட்டுவிரல்)

40. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.38.

41. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.86.

42. சு. அரங்கராசு, தமிழ்ப் புதுக்கவிதை ஒரு திறனாய்வு, ப.279.

43. 1. மரணம் (நேயர்விருப்பம்)
   2. மரங்கள் (நேயர்விருப்பம்)
   3. முதுமை (ஆலாபனை)
   4. வகைகள் (ஆலாபனை)
   5. விளக்குகள் (ஆலாபனை)

44. அப்துல் ரகுமான், நேயர் விருப்பம், ப.95.

45. மேலது. ப.52.

46. சு. அரங்கராசு, தமிழ்ப் புதுக்கவிதை ஒரு திறனாய்வு, ப.277.
47. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.84.
48. தொல்காப்பியம், இளம்பூரணம், பொருளதிகாரம், நூ.எ. 57.
49. தமிழ்ப் பேரகராதி, ப.694.
50. "Symbol is anything that communicates a fact or an idea that stands for an object"

    The Shorter Oxford English Dictionary, P.11.
51. The World Book Encyclopaedia, Vol,18. P.1065.
52. அப்துல்காதர், மீராவின் கனவுகள், ப.172.
53. அப்துல் ரகுமான், புதுக்கவிதையில் குறியீடு, ப.45.
54. மேலது, ப.39.
55. பாலா, புதுக்கவிதை - ஒரு புதுப்பார்வை, பக்.128-129.
56. சு. அரங்கராசு, தமிழ்ப் புதுக்கவிதை ஒரு திறனாய்வு, பக்.236-237.
57. அப்துல் ரகுமான், புதுக்கவிதையில் குறியீடு, ப.18.
58. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.16.
59. இரா. சம்பத், புதுக்கவிதையில் இலக்கிய இயக்கம், ப.40.
60. மேலது,
61. காண்க: பின்னிணைப்பு - அட்டவணை எண் - 6.
62. அப்துல் ரகுமான், புதுக்கவிதையில் குறியீடு, ப.59.
63. அப்துல் காதர், மீராவின் கனவுகள், பக்.178-179.
64. இரா. சம்பத், புதுக்கவிதையில் இலக்கிய இயக்கம், ப.59.
65. ப. மஜப்பர்ஹாமீரி, (எளிமையான மனிதர் கடினமான குறியீடுகள்), கவிக்கோ மணிவிழா மலர், 1998, ப.167.
66. அத்ஹர் ஜாவீத், மேலது, ப.258.
67. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், முன்னுரை.
68. மேலது.
69. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.57.
70. மேலது, ப.57.
71. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.98.

72. மேலது, ப.131.

73. மேலது, ப.14.

74. மேலது, ப.92.

75. காண்க: பின்னிணைப்பு - அட்டவணை எண் - 5

76. 1. சபிக்கப்பட்ட பூவனம் (பால்வீதி)
    2. நட்சத்திர பலன் (சுட்டுவிரல்)
    3. முற்றுப்புள்ளியா? (”)
    4. ஒப்பந்தம் (”)
    5. அவதாரம் (ஆலாபனை)
    6. பற்றுவரவு (”)

77. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.92.

78. மேலது, ப.88.

79. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.13.

80. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.60.

81. அப்துல் ரகுமான், புதுக்கவிதையில் குறியீடு, ப.69.

82. மேலது, ப.69.

83. அப்துல் ரகுமான், (கவிதை செத்தால் மனிதம் செத்துவிடும்), சுபமங்களா, 1.1.94, ப.13.

84. மேலது, ப.13.

85. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.95.

86. மேலது, ப.22.

87. மேலது, ப.54.

88. மேலது, ப.11.

89. மேலது, ப.51.

90. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.60.

91. மேலது, ப.53.

92. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.50.

93. ” நேயர்விருப்பம், ப.49.

94. ” சுட்டுவிரல், ப.83.

95. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.68.

96. மேலது, ப.96.

97. மேலது, ப.80.

98. அப்துல் ரகுமான், ஆலாபனை, ப.9.

99. ” பால்வீதி, ப.98.

100. ” சுட்டுவிரல், ப.36.

101. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.79.

102. மேலது, ப.73.

103. மேலது, ப.51.

104. மேலது, ப.52.

105. மேலது, ப.72.

106. மேலது, ப,50.

107. மேலது, ப.47.

108. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.48.

109. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.18.

110. மேலது, ப.94.

111. மேலது, ப.112.

112. மேலது, ப.135.

113. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.61.

114. ” பால்வீதி, ப.69.

115. ” ஆலாபனை, ப.106.

116. ” பால்வீதி, ப.12.

117. ” சுட்டுவிரல், ப.101.

118. ” நேயர்விருப்பம், ப.51.

119. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.125.

120. மேலது, ப.20.

121. மு. சுதந்திரமுத்து, தமிழ்ப்புதுக்கவிதைகளில் படிமங்கள், ப.6.

122. சென்னைப் பல்கலைக்கழக ஆங்கிலத் தமிழ்ப்பேரகராதி, ப.515.

123. இரா. சம்பத், புதுக்கவிதையில் இலக்கிய இயக்கம், ப.135.

124. பா.ரா.சுப்பிரமணியன்,(மு.ப.ஆ) க்ரியாவின் தற்காலத் தமிழகராதி, ப.665.
125. மு. சுதந்திரமுத்து, தமிழ்ப்புதுக்கவிதைகளில் படிமங்கள், ப.20.
126. இரா. சம்பத், புதுக்கவிதையில் இலக்கிய இயக்கம், ப.136.
127. மேற்கோள்காட்டப்பெற்றது, இரா. சம்பத், புதுக்கவிதையில் இலக்கிய இயக்கம், ப.137.
128. இரா. சம்பத், புதுக்கவிதைகளில் இலக்கிய இயக்கம், ப.137.
129. மு. சுதந்திரமுத்து, (தமிழ் உவமைக் கோட்பாடும் படிமக் கோட்பாடும்) படிமவியல் கோட்பாட்டுச் சிந்தனைகள் கருத்தரங்கக் கட்டுரைகள், 30, 31 மார்ச், 1999, ப.28.
130. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.93.
131. மு. சுதந்திர முத்து, (தமிழ் உவமைக் கோட்பாடும் படிமக் கோட்பாடும்) படிமவியல் கோட்பாட்டுச் சிந்தனைகள் கருத்தரங்கக் கட்டுரைகள், 30, 31 மார்ச் 1999, ப.28.
132. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.54.
133. ந. சுப்பு ரெட்டியார், புதுக்கவிதை நோக்கும் போக்கும், ப.35
134. இரா. சம்பத், புதுக்கவிதையில் இலக்கிய இயக்கம், ப.14.
135. தொல்காப்பியம், இளம்பூரணம், பொருளதிகாரம், நூா.எண.272.
136. அ. நாராயணசாமி (உ.ஆ), நற்றிணை நானூறு, பா.எண்.32.
137. திருக்குறள், பரிமேலழகர் உரை, ப.எண்.29.
138. அருணாச்சல தேசிகர் (உ.ஆ), நந்திக்கலம்பகம், பா.எண்.22.
139. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.139.
140. சி.இ. மறைமலை, புதுக்கவிதை முப்பெரும் உத்திகள், ப.201.
141. இரா. சம்பத், புதுக்கவிதையில் இலக்கிய இயக்கம், ப.152.
142. மு. சுதந்திரமுத்து, தமிழ்ப் புதுக்கவிதைகளில் படிமங்கள், ப.31.
143. மேலது, ப.24.
144. தொல்காப்பியம், இளம்பூரணம், பொருளதிகாரம், நூா.எண்.272.
145. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.48.
146. ” நேயர்விருப்பம், ப.30.
147. ” ஆலாபனை, ப.44.

148. ” பால்வீதி, ப.77.

149. அப்துல் ரகுமான், ஆலாபனை, ப.58.

150. மேலது.

151. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.35.

152. மேலது, ப.34.

153. அப்துல் ரகுமான், ஆலாபனை, பக்.11-12.

154. ” நேயர்விருப்பம் ப.24

155. ” பால்வீதி, ப.57.

156. மு. சுதந்திரமுத்து, தமிழ்ப்புதுக்கவிதைகளில் படிமங்கள், ப.43.

157. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், பக்.86-87.

## இயல் 5

### உளவியல் பார்வை

புதுமைப் போக்குகள்

உளவியல் விளக்கம்

உளவியல் துறையின் தந்தை

ஃப்ராய்டு காட்டும் மனத்தின் வகைகள்

சிறப்பு மிகு தன்முனைப்பு வாய்ந்த மேல் மனம் (Super Ego)

உறுத்தல்களும் படைப்புகளும்

இலக்கியமும் ஃப்ராய்டியமும்

ஃப்ராய்டுக்குப் பின் வந்தவர்கள்

ஃப்ராய்டிசத்தின் விளைவு

இலக்கியத்தில் உளவியலின் நிலைகள்

அப்துல் ரகுமான் கவிதைகளில் உளவியல் பார்வை

அப்துல் ரகுமான் அழகியல் ஒத்துணர்வுக் கவிஞர்

நனவிலிமனத்தை அடிப்படையாகக் கொண்டது

மீமெய்ம்மையியக் கவிதை

படைப்பாளிகளின் சுயவரலாறு

கவிஞரின் சொந்த வாழ்க்கையோடு தொடர்புடையவை

கவிஞரின் சமுதாயச் சூழலோடு தொடர்புடையவை

கதைமாந்தர்களின் உணர்வுகளையும் செயல்களையும் விளக்குதல்

தொல்படிவமும் உளவியல் நிலையும்

அப்துல் ரகுமான் கவிதைகளில் தொல்படிவங்கள்

தனிச்சிறப்பான சொற்கள்

கவிஞர் வாசகர் உறவு.

## 5. உளவியல் பார்வை

ஆய்வியல் அணுகுமுறைகளில் உளவியல் அணுகுமுறையும் ஒன்றாகும். இலக்கியத்தை உளவியல் அணுகுமுறையில் நோக்குவது மிக்க பயனுடையதாக அமையும். ஏனெனில் இலக்கியம் ஒரு மனத்தின் வழியாக வேறொரு மனத்துடன் பேசுகிறது. எனவே அந்த மனத்தைப் பற்றிய பரந்துபட்ட அறிவு இலக்கிய வாசகர்களுக்குத் தேவையாகிறது. இக்கருத்து நிலையை அடிப்படையாகக் கொண்டு உளவியல் ஆய்வு அமைவதாகக் கூறலாம். அப்துல் ரகுமான் கவிதைகளில் உளவியல் அணுகுமுறையை அறிமுக நிலையில் செயல்முறைப் படுத்திப்பார்ப்பது இவ்வாய்வுப் பகுதியின் நோக்கமாகும். அவ்வகையில் உளவியல் கோட்பாடுகளைக் குறித்துச் சுருக்கமான கருத்துக்களை முதலில் காணலாம்.

**புதுமைப் போக்குகள்:-**

இலக்கியக் கோட்பாடுகளைக் குறித்து விரிவாக ஆராய்ந்தவர். ரெனிவெல்லக் (Renewellek) என்பராவார். இவர் அவர் காலத்திய திறனாய்வுப் புதிய நெறிகளை “புதுமைப் போக்குகள் (New Trends)” என்று குறிப்பிடுகிறார். அவற்றில் மார்க்சிய நெறி, உளநிலைப் பகுப்பாய்வு நெறி, மொழியியல்-நடைநல நெறி, உயிரிய வடிவ நெறி, தொல்படிம நெறி, மையப் பொருளியல் நெறி என்று வகைப்படுத்திக் கூறுவர்.

மேற்சுட்டப்பெற்ற புதிய போக்குகள் காலப்போக்கில் செறிவுபடுத்தப் பெற்றன. அம்முறையில் மார்க்சிய நெறி சமூக நெறியுடன் இணைந்தது. மொழியியல்-நடைநல நெறிக்குத் திறனாய்வுத் துறையில் சிறப்பிடம் கிடைக்கவில்லை. அதனை மொழியியலுக்கு உரியதாக ஒதுக்கிவிட்டனர். மெய்ப்பொருளியல் நெறியின் ஒரு பகுதியான அறவியல் நெறியை மட்டும் திறனாய்வுத் துறைக்கு உரியதாக்கிக் கொண்டனர்.

“டேவிட் டெய்ச்சஸ் (David Daiches)” இந்நெறிகளை ஐந்து வகை களாகக் கொண்டு திறனாய்வுக் கலைக்குப் புதுப்பொலிவை ஊட்டினார். இதன் பின்னர், “திறனாய்வுக் கலையின் ஐந்து அணுகு நெறிகள்” மேற்கு நாடுகளில் பெரு வழக்கிற்கு வந்தன.[1] இக்கருத்தின் வழி திறனாய்வுக்

கலையின் ஐந்து நெறிகளில் உளவியல் ஆய்வு இணைக்கப் பெற்றுள்ள நிலையை உணரலாம்.

உளவியல் - விளக்கம்:-

உளவியல் என்பது மனித உள்ளத்தின் தன்மைகளை எடுத்து விளக்குவது. சைக்கு (Psyche) லோகஸ் (Logus) என்னும் இரு கிரேக்கச் சொற்களும் இணைந்து சைக்காலஜி (Psychology) என்று வழங்கப் பெறுகிறது.

“சைக்கு என்றால் ஆன்மா எனவும் லோகஸ் என்றால் அறிவியல் எனவும் பொருள் கற்பிக்கப் பெறுகிறது. இதனடிப்படையில் முதலில் உளவியலை ஆன்மா பற்றிப் பயிலும் இயலாகக் கருதினர். பின்னர் இவ்விளக்கம் மாற, உளவியல் தத்துவத்தின் ஒரு பிரிவாக இருந்த நிலைமாறித் தனித்த ஒரு இயலாகச் செயல்படத் துவங்கிற்று.”[2] இக்கருத்தி லிருந்து உளவியல் தனித்ததொரு அறிவியல் துறையாக விளங்கியதை அறியலாம்.

“உள்ளத்தின் இயல்புகளையும் அவற்றின் செயல்பாடுகளையும் பகுத்துப் பகுத்து விளக்கும் அறிவியல் துறையினை 1960 வரையில் உளவியல் எனும் பெயரால் சுட்டினர். அதன் பிறகு முதன்மையும் தலைமையும் கருதி நடத்தையைப் பற்றிய அறிவியல் உளவியல் எனப் போற்றும் வழக்கம் உண்டாயிற்று.”[3]

உளவியல் நடத்தையைப் பற்றிய அறிவியலாக அண்மைக்காலத்தில் பரிணாமம் பெற்று வருகிறது. “தற்போதைய உளவியல் மனிதனின் நடத்தையை அறியும் ஒரு விஞ்ஞானவியலாகும்”[4] என்பார் கருத்தும் முற்சுட்டிய சிந்தனையை அரண்செய்கிறது. “குறித்த மனிதனின் நடத்தையானது குறித்த சூழ்நிலைத் தூண்டல்களினால் ஏற்படுவதன் காரணமாகச் சூழ்நிலை மனிதனின் நடத்தையை அறியவும் விவரிக்கவும் முக்கியமாக அமைகிறது”[5] என்பர்.

"உள்ளத்தின் கோலங்களையும் கோணங்களையும் அதன் விழைவு களையும் விளைவுகளையும் ஆராய்கின்ற ஓர் அறிவியல்"[6] என்று அவ்வுளவியலுக்கான விளக்கங்களை வரையறுத்துக் கூறுவர்.

உளவியல் துறையின் தந்தை:-

சிக்மண்ட் ஃபிராய்டு (Sigmund Freud-1856-1939) என்பவர் உளவியல் துறையின் தந்தையெனக் கருதப்படுவார்.

ஃபிராய்டு மனிதனின் மனநிலைச் செயல்பாட்டைக் குறித்து அறிவியல் முறையில் ஆராய்ந்தவர். ஆராய்ச்சியின் பெரும்பகுதி மருத்துவத் துறையைச் சார்ந்ததாகும். இவரது கருத்துக்கள் தொடக்கக் காலத்தில் வரவேற்பைப் பெறவில்லை. ஏனெனில் மக்கள் மனதில் ஆழப் பதிந்துள்ள நம்பிக்கைச் சார்ந்த கருத்துருவாக்கங்களை எதிர்க்கின்றன. இவ்வெதிர்ப்பை விரும்பாத மக்கள் ஃபிராய்டின் உளவியல் கோட்பாட்டை மறுத்தனர். கோபர் நிக்கஸ், டார்வின் ஆகியோர் தங்கள் உண்மையான கண்டுபிடிப்புக்கு வரவேற்பைப் பெறவில்லை. ஆனால் கடுமையான எதிர்ப்பைத்தான் சந்தித்தார்கள். அதே நிலைதான் ஃபிராய்டுக்கும் கிடைத்தது எனலாம்.

ஃபிராய்டு மனிதனுடைய வாழ்க்கையில் இரு இயல்பூக்கங்கள் (Instincts) இருப்பதாகக் கூறுவார். 1. வாழத்தூண்டும் இயல்பூக்கம், 2. செத்து மடிய வேண்டும் என்கிற இயல்பூக்கம். மனிதனிடம் தோன்றுகிற விருப்பு வெறுப்புகள் இந்த இயல்பூக்கத்தின் அடிப்படையிலேயே எழுகின்றன்; இயங்குகின்றன.

மனிதன் தான் விரும்பியவற்றைப் பெற முயற்சிக்கிறான். முயற்சி வெற்றி பெற்றால் இன்பமடைகிறான். ஏமாற்றம் அடைந்தால் மனம் பாதிக்கப்படுகிறான். பாதிக்கப்படும்போது சாவியல் இயல்பூக்கம் செயல்படத் தொடங்கிவிடுகிறது.

மனிதனுடைய தோல்விகள் மனமுறிவை (Frustration) ஏற்படுத்து கின்றன. மனமுறிவின் காரணமாகத் தன்னுடைய ஆற்றலை வேறுதிசைக்குத் திருப்புகிறான். "உலகில் சிறப்பு மிக்கனவாகப் போற்றப்படும் கவிதை (இலக்கியம்), இசை, நாட்டியம், ஓவியம், சிற்பம் முதலிய அழகுக்

கலைகள் யாவுமே, மன முறிவின் வேற்றுருவங்களாகும் என்பது ∴பிராய்டின் சித்தாந்த மாகும்."[7]

∴பிராய்டு காட்டும் மனத்தின் வகைகள்:-

∴பிராய்டு மனிதனுடைய மனத்தை மூவகைகளில் பகுத்து விளக்குவார்.

1. அடிமனம் (Id)
2. தன்முனைப்பு உடைய மனம் (Ego)
3. சிறப்பு மிகு தன்முனைப்பு வாய்ந்த மேல்மனம் (Super Ego)

**அடிமனம்:-**

அடிமனம் என்பது இன்ப இயல்பூக்கத்தின் கொள்கலமாக விளங்குகிறது. இம்மனத்திற்கு நினைவு நிலையில் தொடர்பு இல்லை. பகுத்தறியும் இயல்பு இல்லை. ஆனால் மிகப் பெரிய ஆற்றல் வாய்ந்தது இம்மனமாகும். நன்மை தீமை, தர்மம் அதர்மம், செய்யத் தகுந்தன செய்யத் தகாதன என்ற பாகுபாடுகள் இம்மனத்திற்குத் தெரியாது. இவற்றுள் "இட் (Id)" (I should, I could, I would-எனப்படுவனவற்றின் சுருக்கம்) எனப்படும். தன் முனைப்பான உணர்வு உந்துதல், நம்முடைய ஆளுமையின், எளிதில் இனங்கண்டு கொள்ள இயலாத கூறாக இருந்து வருகிறது. அதைப் பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. நம் கனவுகளை ஆராய்வதன் மூலமே ஓரளவிற்கு அதன் செயற்பாட்டை நாம் அறிய முடிகிறது"[8] என்று கூறுவர். இக்கருத்தின் வழி அடிமனம் பற்றிய ஒரு மதிப்பீட்டை எளிதில் அறிந்து கொள்ள முடியாது என்பதனை அறியலாம்.

"நீரில் மிதக்கும் ஒரு பனிக்கட்டியைப் போல மனித உள்ளத்தின் கனமும் அடர்த்தியும் அதனுடைய வெளிப்பரப்பிற்கு அடியில் அமைந்துள்ளது அல்லது அதனுடைய நினைவு நிலைக்கு அடியில் அமைந்துள்ளது."[9] இக்கருத்தின் வழி நீரில் மிதக்கும் பனிக்கட்டியின் மேற்புறம் பார்வைக்குச் சிறிதாகத்தான் தெரியும். ஆனால் பனிக்கட்டியின் பெரும் பகுதி நீர்ப்பரப்பிற்குள் ஆழ்ந்திருக்கும். அத்தகு பெரும்பரப்பைக் கொண்டது அடிமனம் என்ற கருத்தைப் பெறலாம்.

ஃபிராய்டு நினைவு நிலை மனத்திற்கும் அடிமனத்தின் செயல்பாட்டிற்கும் உள்ள வேறுபாட்டைத் தெளிவாக ஆராய்கிறார்.

மனிதனுடைய நடத்தைகள் அனைத்தும் பாலுணர்வினாலே உந்தப்படு கின்றன என்பது ஃபிராய்டின் கருத்தாகும். உள்ளத்தின் முதன்மையான ஆற்றல் லிபிடோ என்னும் பாலுணர்வு இயல்பூக்கமாகும் என்று வரையறுத்துக் கூறுகிறார்.

தன்முனைப்புடைய மனம் (Ego):-

அடிமனத்தின் ஆற்றலை நடுமனம் கட்டுப்படுத்துகிறது. மனிதன் தன்னைத் தற்காத்துக் கொள்வதற்குரிய வழிமுறைகளை எடுத்துரைக்கிறது. பகுத்தறியும் உணர்ச்சிகள்இ எச்சரிக்கை உணர்வு போன்றவை இம்மனத்துடன் தொடர்புடையன. சுருக்கமாகக் குறிப்பிட்டால் நடுமனம் நடப்பியல் கோட்பாட்டால் ஆளப்படுகிறது எனலாம்.

3. சிறப்புமிகு தன் முனைப்பு வாய்ந்த மேல் மனம்:-(Super Ego)

இஃது அறநெறி, கட்டுப்பாடுகள், சட்டவிதிகள் போன்றவைகளோடு தொடர்புடையனவாக இம்மனம் விளங்குகிறது. மனச்சான்று என்றும் இதனைக் கூறலாம். அடிமனத்தின் செயல்பாடுகளைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் உடையனவாக இம்மனம் செயல்படுகிறது. மனித வாழ்க்கை அல்லது சமூகம் எவ்வகையில் மேம்படலாம். குறிப்பாக அறத்தின் வழியில் மேம்படலாம் என்பது போன்ற வழிகளை இம்மனத்தின் மூலமாகப் பெறலாம். சமுதாயத்தோடு நல்லிணக்கமாக மனிதன் வாழ்வதற்கு இம்மனமே காரணமா கிறது. ஃபிராய்டு குறிப்பிட்ட மூவகை மனத்தைக் காட்டுவதாகக் கீழ்க்கண்ட வரைபடம் அமைகிறது.




மனமும் படைக்கும் நிலையும்:-

அடிமனதில் இருந்து உருவாகும் கனவு உருவங்களே கலை போன்ற படைப்புக்களின் தோற்றத்திற்குக் காரணம் என்று ஃபிராய்டு காரணம் தெரிவிக்கிறார். அக்கனவுருவங்களை நடுமனம் செம்மைப்படுத்துகிறது. மேல் மனமும் ஒழுங்குபடுத்துகிறது. அம்முறையில் "கலைஞருடைய பகற்கனவுகளின் விரிவாக்கமாகவே அனுபவித்து இன்புறத்தக்க நிலையில் தன் படைப்புக்களைப் புனைந்துகூறும் ஆற்றல் பெற்றவர்களே கலைஞர்கள்"[10] என்பது ஃபிராய்டின் கருத்தாகும்.

கலைஞர்கள் படைப்புக்கலை நுகர்வுகளும் பகற்கனவுக்குரிய பண்பு களாகப் பெற்றிருப்பார்கள். படைப்புக்களில் இடம்பெற்றிருக்கும் பகற்கனவு அவர்களுடன் உள்ள பகல்கனவுகளுடன் இணைந்து வருகிறபோது மகிழ்ச்சியடைவார்கள். அம்முறையில் நுகர்வோருடைய விருப்பங்களும் ஒருவகையில் நிறைவேறுகின்றன. அவ்வகையில் படைப்புக்கள் என்பது மன நிறைவளிக்கும் மாற்றுப்பொருள் என்பது ஃபிராய்டின் கருத்தாகும்.

உறுத்தல்களும் படைப்புகளும்:-

மனிதனுக்கு உண்டாகும் தோல்வி, சோகம், அதிர்ச்சி, ஆழ்ந்த வெறுப்பு போன்றவை அடிமனத்தில் உறைந்து விடுவது உண்டு. இவ்வாறு உறையும் நிலை அம்மனிதனிடம் அறிந்தோ அறியாமலோ நிகழும். இந்நிகழ்வு மனிதனுடைய ஆளுமையினால் பாதிக்கலாம். படைப்பின்

உருவாக்கத்திற்கு இத்தகு ஆளுமைத் தன்மையின் பாதிப்பும் இருக்கும் என்பது ∴பிராய்டின் சிந்தனையாகும். ∴பிராய்டுவின் கருத்துப்படி படைப்பிலக்கிய ஆசிரியருடைய வாழ்க்கைவரலாற்றை அறிந்துகொள்ள வேண்டும். அம்முறையில் அவரைப் பாதித்த அவரின் ஆளுமையுடைய வெளிப்பாடு என்ன என்பதை இனம் காணலாம்.

இலக்கியமும் ∴பிராய்டியமும்:-

∴பிராய்டு தான் கண்டுபிடித்த உளவியல் கோட்பாட்டை இலக்கியத்திலும் செயல்முறைபடுத்திப் பார்த்துள்ளார். குறிப்பாக உளவியல் பகுப்பாய்வு அணுகுமுறையின்படி இலக்கியத்தைத் திறனாய்வு செய்துள்ளார். கனவுகளைப் பற்றிய விளக்கங்கள் (The Interpretation of Dreams) என்ற நூலில் ஒரு அடிக்குறிப்பில் "ஆம்லெத்" நாடகத்தில் வரும் இளவரசன் ஆம்லெத்துவின் பண்பு நலனை உளவியல் பகுப்பாய்வின் வழி ஆராய்ந்திருந்தார். நாடக மேடையில் மனநலம் குன்றிய பாத்திரப் படைப்புகள் (1906) (Psychopathic Characters on the Stage) என்னும் கட்டுரையை உளவியல் பகுப்பாய்வில் ஆராய்ந்திருந்தார்.

வில்கெல்மு என்சன் (Wilhelm Jensen) என்பவர் டேனிஸ் எழுத்தாளர் ஆவார். இவர் "கிராதிவா" எனும் புதினத்தை எழுதியுள்ளார். ∴பிராய்டின் மாணவரான யுங் (Jung) அந்நூலை ∴பிராய்டின் கவனத்திற்குக் கொண்டு வந்தார். அந்நூலை மையமிட்டு "கிராதிவாவின் பிரமைகளும் கனவுகளும் (Deluslons and Dreams in Jensens Crudiva) என்னும் தலைப்பில் உளவியல் பகுப்பாய்வின் அடிப்படையில் விரிவான கட்டுரை ஒன்றை வழங்கியுள்ளார்.

படைப்பிலக்கிய எழுத்தாளர்களும் பகற்கனவு காணுதலும் (Creative Writers and Day-dreaming) என்பது ∴பிராய்டின் கட்டுரைகளில் குறிப்பிடத் தகுந்த கட்டுரைகளாகும்.

இவ்வாறு உளவியல் கோட்பாட்டை உருவாக்கி உளவியலில் தந்தையாக விளங்கியவர் ∴பிராய்டு. உளவியல் பகுப்பாய்வை முறைப்படுத்தி இலக்கியத்தில் செயல்முறை செய்துகாட்டியதில் ∴பிராய்டு முன்னோடியாகவும் விளங்குகிறார்.

ஃபிராய்டுக்குப் பின் வந்தவர்கள்:-

கார்ல்யுங் ஃப்ராய்டுக்குப் பின் வந்தவர்களில் (Carl Jung 1875-1961) குறிப்பிடத்தகுந்தவர் ஆவார். மனித உள்ளத்தின் உணர்வே (Human Psyche) எல்லா அறிவியல்களுக்கும் கலைகளுக்கும் கருவறையாக விளங்குவது. எனவே அத்தகைய உள்ளத்தின் வழிமுறைகளை ஆராய்கிற உளவியல், இலக்கியம் பற்றிய ஆராய்ச்சிக்கும் ஏற்புடையதாக இருக்க முடியும்[11] என்று யுங் (G.Jung) சொல்லுவார். இவர் "தொன்மம், கனவுகள், கற்பனைக்காட்சி இவைகளை அடிப்படையாகக் கொண்டு மனிதரிடம் உள்ள கூட்டு நனவிலி மனத்தைப் பற்றி விரிவாக ஆராய்ந்தார்."[12] மனித இனத்தில் பரம்பரை பரம்பரையாகச் சில பதிவுகள் கூட்டு நனவிலி மனத்தில் இருக்கும் என்பது இவரது சிந்தனையாகும். இப்பதிவுகள் கலைப்படைப்புகளில் வெளிப்படலாம் என்பதை முன்மொழிகிறார்.

பிற அறிஞர்கள்:-

ஃபிராய்டினுடைய உளவியல் கோட்பாட்டைப் பின்பற்றிப் பிற அறிஞர்களும் உளவியல் பகுப்பாய்வை இலக்கியத்துடன் இணைத்து ஆராய்ந்துள்ளனர். ஏர்னசட்டு ஜோன்சு (Ernest Jones) என்பவர் ஆம்பலத் நாடகத்தை ஒடிபஸ் மனச்சிக்கலை மையமிட்டு ஆராய்ந்தார்.

ஆல்பர்ட் மாட்டெல் (Albert Mordell) இலக்கியத்தில் காமச்சுவை உட்கோள் (The Erotic Motive in literature) என்னும் ஆய்வை மேற் கொண்டார். எட்கார் ஆலன்போவின் படைப்புகள் முழுமையையும் மையமிட்டு மேரி போனாபர்ட் (Mary Bonaparte) என்பவர் ஆராய்ந்துள்ளார். ஃபிரெடரிக் ஜ. ஹாப்மேன் (Frederic J. Hoffman) ஃபிராய்டியமும் இலக்கிய மனமும் (Fredianism and the citany mind) என்ற நூலை எழுதியுள்ளார்.

மேற்கண்டவாறு ஃபிராய்டின் உளவியல் சிந்தனையை இலக்கியத்துடன் தொடர்புபடுத்திப் பலர் ஆராய்ந்துள்ளனர்.

∴பிராய்டிசத்தின் விளைவு:-

"பிராய்டுவினுடைய உளவியல் சிந்தனை வளர்ந்த பிறகு இலக்கியம், மெய்ப்பொருளியல் இயக்கத்தில் பெரும் மாறுதல்கள் நிகழ்ந்தன. மீமெய்ம்மையியல், எக்ஸ்டென்சியலிசம் போன்றவைகள் புதுமை நோக்கில் வளர்ந்தன."[13]

மீமெய்ம்மையியல் என்பது முதல் உலகப் போருக்குப் பின் பிரான்சு நாட்டில் தோன்றிய சிந்தனையாகும். Psychic Automatism-த்தின் வழியாக வெளிப்படுத்தும் வகையாகும். அவ்வகையில் பேசுதல், எழுதுதல் மற்ற உருவாக்கங்கள் போன்றன இந்நிலையோடு தொடர்பு பெறும்.[14]

படைப்பாளன் அடிமன இயக்கம் மற்றும் நனவிலி மனத்தில் தோன்றும் எண்ணங்களுக்கு இயன்ற வகையில் கலைப்படைப்புகளை உருவாக்குதல் இவ்வகையைச் சாரும். நனவிலி மனத்தை இயற்கையாக இயங்கச் செய்தல் ஒரு வகை. ஆனால் ஒரு சிலர் போதைப் பொருட்களுக்கு ஆட்பட்டுச் செயற்கையாக மனத்தை இயங்க வைத்தனர். இதனால் மீமெய்ம்மையியக்கம் வளர்ச்சியடையாமல் போனது.

இலக்கியத்தில் உளவியலின் நிலைகள்:-

முற்பகுதிகளில் உளவியல் கோட்பாடு குறித்த பொதுச் செய்திகள் விளக்கப் பெற்றன. உளவியலை இலக்கியத்துடன் தொடர்புபடுத்தி ஆராய்ந்த நிலை குறிக்கப்பெற்றது. இலக்கியத்தில் உளவியலின் பங்களிப்பு முக்கியமாக ஆறு நிலைகளில் காணப்படுகிறது எனலாம்.[15]

1. இலக்கியப் படைப்பாக்கத்தின் அல்லது அது தோற்றம் பெறுவதன் வழிமுறைகளை உளவியல் நிலையில் புலப்படுத்துதல்.

2. படைப்பாளியின் உள்ளத்து நிலையையும் அதற்குரிய காரணங்களையும் அறியக் கொண்டு வருதல். அதாவது படைப்பாளியின் சுயவரலாற்றைப் படைப்பில் காணுதல்.

3. குறிப்பிட்ட இலக்கியத்தில் காணப்பெறுகின்ற கதை மாந்தர்களின் உணர்வுகளையும் செயல்களையும் விளக்குதல்.

4. இலக்கியத்தில் தொல்படிமம் (Archetype) முக்கிய இடம் பெறுகிறது என்பதைக் கருதுகோளாகக் கொண்டு அதன் உருவாக்கத்தைப் புலப் படுத்துதல்.

5. குறிப்பிட்ட இலக்கியப் படைப்பிலுள்ள தனிச்சிறப்பானச் சொற்களையும் தொடர்களையும் மற்றும் சிறப்பான உத்தி முறைகளையும் உள்ளத்து உணர்வுப் பிரதிபலிப்புக்களாக இனங்கண்டு விளக்குதல்.

6. வாசகரிடம் இலக்கியம் ஏற்படுத்துகிற உறவையும் தாக்கத்தையும் காணுதல்.

**அப்துல் ரகுமான் கவிதைகளில் உளவியல் பார்வை:**

இலக்கியத்தில் உளவியல் நிலைகளை அணுகுவதற்கு ஆறு நிலைகள் சுட்டப்பெற்றன. அவைகளை அடியொற்றியும், ஃப்ராய்டின் சிந்தனைகளை அடியொற்றியும் அப்துல் ரகுமானின் கவிதைகளில் உளவியல் பார்வை செயல் முறைபடுத்தப் பெற்றுள்ளது.

**1. இலக்கியப் படைப்பாக்கம்:-**

இலக்கியத்தின் பிறப்பு அல்லது வழி முறைகள் பற்றி விளக்க முறையில் அறிந்து கொள்ளலாம். உணர்வுகளிலும் உற்சாகத்திலும் அனுபவங்களை உள்வாங்கி வெளிப்படுத்துவதில் கவிஞர்களுக்குச் சிறப்பிடம் உண்டு. இம்முறை இருவகைப்படும்.

1. ஒத்துணர்வை அடிப்படையாகக் கொண்டது.
2. நனவிலி மனத்தை அடிப்படையாகக் கொண்டது.

**ஒத்துணர்வு:-**

இன்றைய அழகியலில், உள்ளத்தின் செயலையும் வெளிப்பாட்டையும் கருத்திற் கொண்டு, கலைப்படைப்பின் பிறப்புக்கு ஒத்துணர்வே (Empathy) முக்கியமான காரணம் என்று கூறப்படுகிறது. ஒத்துணர்வு என்பது பிறருடைய மனவுணர்வோடு தன்னுடைய மன நிலையானது உணர்வு அடிப்படையில் ஒத்துப் போதலைக் குறிப்பிடுகிறது.[16]

அந்த ஒத்துணர்வு இரு வகைப்படும். 1. அறவியல் ஒத்துணர்வு, 2. அழகியல் ஒத்துணர்வு.

அறவியல் ஒத்துணர்வை ஓர் எடுத்துக்காட்டின் வழி விளக்கலாம். ஒருவர் கீழே விழுந்து விடுகிறார். மற்றொருவர் அதனைப் பார்க்க நேரிடுகிறது. கீழே விழுந்தவரைப் பார்த்துப்பார்த்தவர் வருத்தப்படுவதோடு நின்று விடுவதில்லை. அருகில் சென்று தூக்கிவிடவும் முற்படுகிறார். இ∴து அறவியல் ஒத்துணர்வாகும்.

அழகியல் ஒத்துணர்வு என்பது போலச்செய்தல் என்பதன் அடிப்படை யாகும். ஒரு பொருளை, நிகழ்வை, அனுபவத்தைப் பார்த்தவர் போலச்செய்தல் அடிப்படையில் வெளிப்படுத்துகிறார். இவ்வடிப்படையில் கவிதை ஒரு வகையில் பிறப்பெடுக்கிறது.

அப்துல் ரகுமான் அழகியல் ஒத்துணர்வுக் கவிஞர்:-

அப்துல் ரகுமான் அழகியல் ஒத்துணர்வுடன் சில கவிதைகளை யாத்துள்ளார். மண், குளம், மரங்கள், அந்தி, சூரியன், சந்திரன், மேகம், விண்மீன்கள் போன்ற இயற்கைப் பொருள்களைக் கூர்ந்து நோக்கி தன் ஆழ்ந்த மனத்தில் அசைபோட்டு, மனதில் தோன்றிய உணர்வுகளைக் கவிதைகளில் வடிக்கிறார்.

தன் வீட்டிற்கு அருகிலுள்ள புகைபோக்கி கூட அவரின் மனதில் பதிந்து பதிவின் அனுபவங்கள் கவிதையாக மலர்கின்றன. இந்த புகைபோக்கி தந்த பதிவுகளை எடுத்துக்காட்டு விளக்கத்திற்காகக் காணலாம்.

“எங்கள் தெருவிற்கு அடையாளமாக உயரமான புகைபோக்கி இருக்கிறது சுட்டுவிரல் என்ற தொகுப்பில் “அவதாரம்” எனும் கவிதைக்கு அந்தப் புகைபோக்கி தான் காரணம் என்பதை இப்போது என்னால் உணரமுடியகிறது”[17] என்று அப்துல் ரகுமான் குறிப்பிடுகிறார். இக்கருத்தின் வழி புகை போக்கி என்கிற பொருள் கவிஞரின் மனதில் பதிந்து “அவதாரம்” எனும் கவிதைக்குக் கருப்பொருளாகின்ற நிலையைக் காணலாம்.

புகை போக்கி கவிஞருக்குக் கொடுத்த அனுபவச்சிந்தனை சற்று வித்தியாசமானதுதான். கண்ணில்லாத காற்று புகைக் கூண்டியிலிருந்து வெளி வரும் புகையை மேலே கொண்டு போகிறது. மேலே வந்த புகைக்குக்

கர்வம் வந்து விடுகிறது. அது மேகத்தைப் பார்த்துச் சொல்வதாகக் கவிதையைக் கீழ்க்கண்டவாறு அமைக்கிறார்.

"உன்னைப் போலவே நிறம்
உன்னைப் போலவே உருவம்
உன்னைப் போலவே
உயரத்தில் இருக்கிறேன்
எனவே
"நானும் மேகம் தான் "
என்றது
சில முட்டாள் மயில்கள்
புகையை
மேகம் என்று மயங்கித்
தோகை விரித்தாடின
மேகம்
'கடகட'வென்று சிரித்துவிட்டு
மழையாக இறங்கியது
நனைந்து சிலிர்த்த
பூமி சொன்னது :
"பெருமை
மேலே ஏறுவதில் இல்லை
கீழே இறங்குதில் இருக்கிறது"[18]

2. நனவிலி மனத்தை அடிப்படையாகக் கொண்டது:-

மீமெய்ம்மையியக் கவிதைகள் (Surrealistic Poetry) இவ்வகை யில் அடங்கும். அப்துல் ரகுமானின் கவிதைத் தொகுப்புகளில் பால்வீதியில் மட்டுமே மீமெய்ம்மையியக் கவிதைகள் உள்ளன. மீமெய்ம்மையியத்தை சர்ரியலிசம் என அழைப்பர்.

"சர்ரியலிசம் குறித்த பரிசோதனை் கவிதைகள் அடங்கிய தொகுப்பு பால்வீதி"[19] என்று மீரா குறிப்பது முற்சுட்டிய கருத்தை அரண் செய்கிறது. "அப்துல் ரகுமான் முதன் முதலில் தமிழில் சர்ரியலிசக் கவிதைகளை

அறிமுகப்படுத்தினார். அவற்றைப் புரிந்தும் புரியாமலும் விமர்சனம் செய்தார் கள்[20] என்பது மீராவின் கருத்தாகும். அம்முறையில் திறனாய்வாளர்கள் புரிந்தும் புரியாமலும் இருக்கிற நிலை கருதத்தக்கது.

பால்வீதியில் மீமெய்ம்மையியக் கவிதைகள் உள்ளன. குறிப்பாக பலிபீடம், நெற்றிக் கண், மூடய இமை, கண்நதி மூலம், எனக்குள் அந்திகள் இல்லை, வியர்க்கும் சாமரைகள் போன்ற கவிதைகளைச் சுட்டலாம்.

மதுரை தியாகராசர் கல்லூரியில் இளங்கலை தமிழ் பயின்ற காலங் களில் மீமெய்ம்மையியக் கவிதைகள் எழுதத் தொடங்கிய சூழலை அப்துல் ரகுமான் குறிப்பிடுகிறார்.

1957-59இல் இளங்கலை படித்துக் கொண்டிருந்த காலம். ஆங்கிலத் துறைப் பேராசிரியர் சக்திவேலிடம் மீமெய்ம்மையியக் கவிதைகளை அறிந்து, தானியங்கி எழுத்தான இக்கவிதைகளை எழுதிப் பழகினேன்."[21]

சர்ரியலிஸத்தின் புதுமையும் வித்தியாசமும் என்னை மிகவும் ஆகர்ஷித்தது. மனம் இரண்டு வகைப்படுகிறது. ஒன்று மேல் மட்டத்தில் இயங்குவது. அது சமூகத்திற்கு அனுசரணையாகப் போலியாக உள்ளது. மற்றொன்று அடிமனம். அதில்தான் நம் உண்மையான எண்ணங்களும் ஆசை களும் ஒளிந்திருக்கின்றன[22] என்று சர்ரியலிசத்தின் மீமெய்ம்மை மன நிலையை விளக்குகிறார்.

அப்துல் ரகுமானின் உண்மையான அடிமனத்தின் உள இயல்பை இக்கவிதைகள் காட்ட வல்லன.

புதுக்கவிதைகள் எனக்கு அறிமுகம் ஆகும் முன்னமே அதாவது 1959-இலேயே நான் சர்ரியலிசம் எனும் இப்புதுமையினை எழுதியுள்ளேன். இதனைப் புரியாத சிலர் என் கவிதைகள் வெறும் உவமை உருவகங்கள் என விமர்சித்து வருகின்றனர்[23] என நேர்க்காணலில் சுட்டுவது இணைத்துப் பார்க்கத்தக்கது.

**மீமெய்ம்மையியக் கவிதை:-**

"சர்ரியலிசம்-மனத்தை நம் நட்டுவாங்கத்திற்கு ஆடச்சொல்லி பலவந்தப் படுத்தாமல், அதன் போக்கில் ஆடச் சொல்லி அவிழ்த்து விடும்

சுதந்திரம்; அடிமனத்தில் உறங்கிக் கிடக்கும் அதிசயங்களைத் தட்டி எழுப்பும் பள்ளி எழுச்சி"[24] என்று மீமெய்ம்மையியத்தின் அதிசயங்களை அப்துல் ரகுமான் விளக்குகிறார்.

"எனக்குள் அந்திகள் இல்லை" என்ற கவிதை மீமெய்ம்மையியக் கவிதையாகும். இந்தக் கவிதை பிறந்த சூழலின் அனுபவத்தைக் கவிஞர் அவ்வாறே குறிப்பிடுகிறார்.

மரணத்திற்குப் பிறகு என்ன ஆவோம்? என்ற கேள்விக்கு விடை கேட்டு ஆழ்மனதிடம் சரணடைந்தேன். சிறிது நேரத்தில் ஒரு படிமம் தோன்றியது. கண்ணீர்த்துளி சொட்டும் இமை. இன்னும் சிறிது நேரம் கழித்து இன்னொரு படிமம் தோன்றியது. ஒரு மணியிலிருந்து கயிறு அறுந்து விழுகிறது. மணியின் நாவிலிருந்து நட்சத்திரங்கள் உதிர்கின்றன. மனப்படிமங்கள் தந்த விடை பிரமிப்பைத் தந்தது. இந்த அடிமன அனுபவத்தைக் கவிதை யாக்கினேன்.

மரண இமைகளிலிருந்து
நான் துளித்து வழிவேன்
மூச்சுக் கயிறறுந்த
மணியின் நாவிலிருந்து
நட்சத்திரங்கள்
மௌனமாக உதிரும்"[25]

என்றவாறு மீமெய்ம்மையியக் கவிதை உதித்த பின்புலத்தை விளக்குகிறார். ஆழ்மனப்படிமங்களின் சேர்க்கை இக்கவிதையை ஆக்கியமையை அப்துல் ரகுமான் விளக்கிக் காட்டுகிறார். மீமெய்ம்மையியம் குறித்த எஞ்சிய கருத்துக்கள் "பரிசோதனை முயற்சிகள்" எனும் தலைப்பில் சுட்டப் பெறுகின்றன.

2. படைப்பாளியின் சுய வரலாறு:-

படைப்பாளியைப் பற்றிய சுயவரலாற்றை அறிந்து கொண்டு அதன் பின்னணியில் கவிதைகளை ஆய்வது வாழ்க்கை வரலாற்றுத் திறனாய்வு

வகையைச் சார்ந்ததாகும். இவ்வகையில் படைப்பில் பொருள் தெரியாமல் இருண்மையாக இருக்கும் பகுதிகளை விளங்கிக் கொள்ளலாம். "பாரதியின் காதல் பற்றிய சில பாடல்களுக்கும் கண்ணம்மா பற்றிய படிமத்திற்கும் அவருடைய பிள்ளைப் பிராயத்துக் காதல் ஏமாற்றங்களும், ஏக்கங்களுமே உள்ளார்ந்த காரணம் என்று கண்டறிந்து சொல்ல முயன்றுள்ளனர்."[26] இம் முயற்சிக்குப் பாரதியின் சுயவரலாறு பற்றிய கருத்துக்கள் பயன்படுகின்றன.

கலைப்படைப்பில் உள் அமிழ்ந்த பொருள்களை ஒரு மனிதன் என்ற முறையில் கலைஞனின் மன உணர்வுகளை உளவியல் ஆராய்ச்சியின் வழி விளக்க முடியும் என்பது ஃபிராய்டின் நம்பிக்கையாகும்.

படைப்பாளி அல்லது கலைஞனின் வெற்றி தோல்விகள், விரக்தி உணர்வுகள், ஏமாற்றங்கள், அதிர்ச்சிகள் போன்றவை அடிமனத்தில் பதிந்து கலையாக்கத்திலும் ஊடுருவலாம். அவ்வாறு ஊடுருவும் நிலையை இரண்டு வகைகளில் பகுத்துப் பார்க்கலாம்.

1. கவிஞனின் சொந்த வாழ்க்கையோடு தொடர்புடையவை.
2. கவிஞனின் சமுதாயச் சூழலோடு தொடர்புடையவை.

அ. கவிஞரின் சொந்த வாழ்க்கையோடு தொடர்புடையவை:-

அப்துல் ரகுமான் வாழ்க்கையோடு தொடர்புடைய அடிமனப் பதிவுகள் சில கவிதைகளில் வெளிப்பட்டுள்ளன. வறுமை, நிறைவேறாக் காதல், கலை வேட்கை போன்றவை அப்துல் ரகுமானின் மனத்தில் பதிந்து ஆழ்மனத்தில் உறைந்திருக்க வேண்டும். உறைந்திருக்கும் அப்பதிவுகள் கவிதைகளின் வழி வெளிப்படக் காணலாம்.

வறுமை:-

அப்துல் ரகுமான் ஏழ்மை நிலையைப் பல கவிதைகளில் பாடியுள்ளார். இஃது தன் அனுபவப் பதிவின் வெளிப்பாடு எனலாம். "எங்கள் குடும்பம் வசதியானது என்று சொல்ல முடியாது. வருகிற வருமானம் சாப்பாட்டிற்குச் சரியாக இருக்கும்"[27] என்று அப்துல் ரகுமான் சுட்டுகிற கருத்து இங்கு குறிக்கத்தக்கதாகும்.

அப்துல் ரகுமானின் தந்தையின் கூற்றாகக் குறிப்பிடுகையில் “நான்கு குழந்தைகளுடன் என் தாய், தந்தையரையும் ஒரு தங்கையையும் கொண்ட எங்கள் குடும்பத்தை வறுமையில்தான் நடத்த முடிந்தது. பொடிக் கம்பெனியில் இருபது வருடங்களுக்கு மேலாகப் பணியாற்றினேன்”[28] என்று கூறுகிறார். “நான் கல்லூரி சேரும் முன்னர் தையற்கடைச் சிறுவனாகப் பணி யாற்றியுள்ளேன்”[29] என நேர்க்காணலில் அப்துல் ரகுமான் தெரிவித்த செய்தியினையும் இங்கு இணைத்துப் பார்க்கலாம். இவ்வாறு ஏழ்மையின் சூழலில் வாழ்ந்த கவிஞர் தான் ஏழ்மையால் உளப்பாதிப்புற்றமையைத் தம் கவிதைகளின் மூலம் வெளிக்காட்டும் முறை கவிஞர்களுக்குரிய பொதுவியல்பு எனலாம்.

“கிழிசல்” என்ற தலைப்பில் தையற்கடையில் வேலை பார்க்கும் சிறுவன் தேம்பி அழுவதை,

“ஊசிக் கண்ணில்
நூல் கோக்க விடாமல்
தடுக்கிறது
தையற் காரப் பையனின்
கண்ணில்
அப்பக்கம் நுழைந்து
இப்பக்கம் வழியும் நூல்”[30]

எனச் சுட்டுகிறார். மேலும் வறுமை நிலை குறித்து மூன்றாவது வர்க்கம்[31] எனும் தலைப்பில் ஆழமான சிந்தனை வெளிப்பாட்டுடன் பாடி ஏழ்மைக்காக இரங்கியிருக்கிறார். ஏழைகளைக் கண்டு தாம் அழும் மன இயல்பை இவரின் பல்வேறு படிமங்களின் வழி உணரலாம். பிச்சைப் பாத்திரம், கையேந்தும் நிலை, வயிற்றுப்பசி, தெருமுனையில் பீற்றல் துணியுடன், பிச்சைக்காரன், குப்பைத்தொட்டியில் ஆவலோடு காத்திருக்கும் மயானவாசிகள், ஓட்டை வீடு என்று பல இடங்களில் குறிப்பிடுவது இங்கு நோக்கத்தக்கதாகும். வறுமை பற்றிய அடிமன உறுத்தல்களின் வெளிப்பாடு கவிதை இலக்கியத்தில் பிரதிபலிக்கக் காணலாம்.

**நிறைவேறாக் காதல்:-**

அப்துல் ரகுமானின் கவிதைகளில் காதல் தொடர்பான கவிதைகள் உள்ளடக்கத்தில் விரித்துணரப் பெற்றன. அக்கவிதைகளின் போக்கு ஒரு தலைக் காதலன்று. தலைவன் பார்வையில் காதல், தலைவி பார்வையில் காதல் எனப் பகுக்கப் பெற்றது. இக்காதலர்கள் பிரிந்தனர். இவர்கள் பிரிவால் ஏற்பட்ட துயரம் மற்றும் அவலம் குறித்து அவர் கவிதைகளில் குறிப்புக் கிடைக்கிறது.

தலைவனைத் தலைவி மறைமுகமாக விரும்பியதை “தீக்கோழி”[32] எனும் கவிதை வெளிக்காட்டுகிறது. சடங்குகளின் காரணமாகக் காதலர்கள் சேர முடியாத நிலையைச் “சடங்குகளின் கைதிகள்”[33] எனும் கவிதை வெளிப்படுத்துகிறது.

இறுதியில் காதல் நிறைவேறிக் கைகூடாத நிலையானது. தன்னைக் காதலித்தவள் குழந்தைப் பேற்றுடன் மீண்டும் சந்திப்பதை இக்கவிதையில் உணர்த்துகிறார். இதன் மூலம் அப்துல் ரகுமான் கவிதைகளில் நிறைவேறாக் காதலின் பாதிப்பு வெளிப்பட்டிருப்பதைக் காணலாம்.

**கலை வேட்கை:-**

காதல் உணர்வுடையவர்கள் பெரும்பாலும் கலைகளில் பேரார்வம் காட்டுவர். அவ்வகையில் அப்துல் ரகுமானின் சுயவரலாற்றில் கலையார்வம் தொடர்பான பல செய்திகள் காணப்பெறுகின்றன. அப்துல் ரகுமானுக்கு இயல், இசை, நாடகம் எனும் கலைகளில் ஈடுபாடு அதிகம் இருப்பதை அவரின் கவிதைகளின் வழி உணரலாம்.

**இயல்:-**

இயற்கலையில் புகழ்பெற்ற அப்துல் ரகுமான் தன் வாழ்வியலை இயற்கலைக்காகவே அர்ப்பணித்துள்ளார். “அப்துல் ரகுமானின் முதல் மரியாதை கவிதைக்கே. குடும்பம், பணம் எல்லாம் இரண்டாம் பட்சம். அவர் கவிதைக்காக எதையும் இழக்கத்தயங்காதவர். குடும்பப் பொறுப்புகளைக் கூடக் கவிதைப் பணிக்கேற்பக் கச்சிதப்படுத்திக் கொண்டவர். சட்டப் பேரவை

உறுப்பினர் தேர்தலில் நிற்கும்படிக் கலைஞர் அழைத்தபோது கூடக்கவிதைப் பணி கெடக் கூடாது என்பதற்காக அதை மறுத்து விட்டார். அவர் தேர்தலில் நின்று வெற்றி பெற்றிருந்தால், அமைச்சராகியிருப்பார். தம் கவிதைப் பணிக்கு இடையூறாகப் பேராசிரியர் பதவி இருந்த காரணத்தால் அதையும் தூக்கி எறிந்தார்"[34] என்ற கூற்றின் மூலம் கவிஞருக்குள்ள இயற்கையின் தாகத்தையும், இயற்கலைக்காகத் தாம் இழந்த இழப்புகளையும் உணரலாம்.

**இசை:-**

அப்துல் ரகுமான் இசை மீது கொண்ட விருப்பம் மிகையானதாகும். அவர் தமக்கிருந்த பாடலிசையின் ஈடுபாட்டைப் பல இடங்களில் சுட்டியுள்ளார். "உயர் நிலைப் பள்ளிப் பருவத்தில் நானும் உடனொத்த தோழர்களும் புதிய பாட்டுக்குழு ஒன்றை உருவாக்கினோம். குழுவில் பிரதான பாடகன் நான். அப்பாதான் பாடல்களை எழுதித்தருவார்"[35] என்கிறார். இதிலிருந்து இளம் வயதிலிருந்து இசைமீதான ஈடுபாடும், தன் தந்தையார் பாடலாசிரியர் என்பதும் கவிஞர் பாடகர் என்பதுவும் பெறலாகும் செய்திகளாகும்.

தமிழிசை அல்லாத பிற இசைப் பாடல்களையும் இரசிக்கும் மன இயல்பை, "இந்திய பாகிஸ்தான் நாடுகளின் புகழ்பெற்ற கஸல் பாடல்கள், மேனாட்டு இசை வல்லுநர்கள் எல்லோரும் என் விரலசைவுக்குப் பாடக் காத்திருக்கும்படி வைத்திருக்கிறேன்"[36] என்று அப்துல் ரகுமான் குறிப்பிடுவதன் வழி அறியலாம்.

தன் இயற்கலைக்கு இந்தி இசைப் பாடல்கள் காணரமாகவும் இருந்தன எனும்போது, "என் கவிதை மனம் ஹிந்தித் திரைப்படப் பாடல்களில் மோகம் கொண்டது. அந்தப் பாடல்கள் என் கவிதை உணர்வுகளைச் சீவி முடித்துச் சிங்காரித்திருக்கின்றன."[37] என்கிறார்.

மேற்குறித்த செய்திகளுக்குச் சான்றுகளாகப் பல கவிதைகள் எழுதியுள்ளார். இவரின் இசை ஈடுபாட்டை பாடகி லதா மங்கேஸ்கருக்கு எழுதிய பாடலின் வழி அறியலாம். பாடலிசை தனக்கு சுவாசம் எனும் போது, "என் செவியின் சுவாசம்"[38] என்ற தலைப்பில் பாடகி லதா மங்கேஸ்கரைப் பலவாறு பாராட்டுகிறார்.

தன் கவிதைப் படைப்புகளில் இசை தொடர்பான படிமங்களைக் கையாள்வதும் பார்வையிடவேண்டியதாகும். இசைத்தட்டுகள், காற்றுயாழ், மீட்டாத ராகங்கள், பாட்டு நிற்கும் தருணம், சுப்ரபாதம் போன்றவற்றின் மூலம் அறியலாம். குறிப்பாக, வீணை, சுரங்கள், புல்லாங்குழல் போன்ற சொற்களை இவரின் கவிதைகளில் சற்று மிகுதியாகக் காணலாம். இவையாவும் இசைமீது கவிஞரின் உள்ளம் மூழ்கி இருப்பதை உணர்த்துகின்றன.

நாடகம்:-

இயல், இசை போன்று நாடகக் கலையிலும் நாட்டம் கொண்டுள்ளார். தன் கவிதைகளில் நாடகப் பாங்கினையும், நாடகம் தொடர்பாகவும் குறிக்கிறார். கவிஞர் தாம் கல்லூரியில் படிக்கும் காலத்தில் பல நாடகங்கள் எழுதி இயக்கியுள்ளார் என்ற செய்தியினை, "கவிக்கோ மணி விழா மலர்"[39] படத்துடன் விளக்குகிறது. மேலும் நாடகத்துடன் தொடர்புடைய திரைப் படத்தின் மீதும் இவருக்கு ஈடுபாடு இருந்தமையும் தெரிய வருகிறது.

திரைப்பட மோகம்:-

தமிழ்த் திரைப்படங்கள் அல்லாத பிற மொழித் திரைப்படங்களை மிக்க ஈடுபாட்டுடன் கவிஞர் விரும்பிப் பார்த்துள்ளார். "திரைப்படக் கலையில் உள்ள உயர்ந்த ரசனையை என்னால் வளர்த்துக் கொள்ள முடிந்தது. என் விருப்ப வரிசையில் முதலில் ஆங்கிலப்படம் அடுத்தது இந்திப்படம். கடைசியாகத்தான் தமிழ்ப்படம்"[40] என்று அப்துல் ரகுமான் குறிக்கிறார். தமிழ்த் திரைப்படங்களை இவர் விரும்பாமைக்குரிய காரணங்கள் சிந்திக்கத் தக்கன.

தமிழ்த்திரைப்படம் அறியாமையை ஏற்படுத்துவதாலும், போலியான கொள்கைகளைச் சுட்டுவதாலும், நடைமுறைக்கு ஒவ்வாதவற்றை உரைப்பதாலும் பிறவற்றாலும் இவர் பிறமொழித் திரைப்படங்களில் ஈடுபாடு காட்டியிருக்கலாம்.

அப்துல் ரகுமான் கவிதைகளிலும் இதற்கான சான்றுகள் உள்ளன. ஆங்கிலத் திரைப்படத்தில் வரும் "ட்ராகுலாவை"[41] கவிதைகளில் காட்டுகிறார்.

தமிழ்த் திரைப்படங்களைப் பல்வேறு இடங்களில் தன் கவிதைகளால் சாடுகிறார். கவிஞர் தான் கலைகளின் காதலன் என்பதை வெளிக்காட்டும் போது,

"தூரிகை
உளி
வீணை
எழுதுகோல்
யாரேனும் வாருங்கள்
நான் பிரசவிக்க வேண்டும்
என்று துடித்த போது
யோனியாக வராத அவை
உன்னை ஏந்திய கருப்பையின்
ரத்த நாளங்களாய்ப்
பாசத்துடன் கிடந்தனவோ"[42]

என்று கவிதை வரிகளின் வழிப் புலப்படுத்துவதைக் காணலாம்.

**ஆ. கவிஞனின் சமுதாயச் சூழலோடு தொடர்புடையவை:-**

கவிஞன் வாழுகிற சமூகச் சூழல், சமூகச் சூழல்களின் சிக்கல்கள் போன்றவை கவிஞனைப் பாதிப்புக்குள்ளாக்கியுள்ளன. குறிப்பாகச் சமூகச் சிக்கல்கள் பல அப்துல் ரகுமானைப் பாதித்துள்ளமையை ஆய்வின் வழி உணர முடிகிறது. ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப் பெற்ற கவிதைகளின் உள்ளடக்கத்தில் சமுதாயம் சார்ந்த கவிதைகள் மிகுந்துள்ளன. குறிப்பாகச் சமூகச் சீர்கேடுகள், அரசியல் சீர்கேடுகள் போன்றவை இவரை வெகுவாகப் பாதித்துள்ளன. அப்பாதிப்பு அவரின் புற மனநிலையோடு நின்றுவிடவில்லை. ஆழ்மனம் வரை சென்று உறைந்து பதிந்திருப்பதைக் கவிதைகளின் வழி உணர முடிகிறது.

சமுதாயச் சீர்கேடுகளின் பாதிப்புகள்:-

சமூகத்தில் நிகழும் முரண்பாடுகள் மக்களின் அறியாமை, மற்றும் ஏமாறும் நிலை, உரிமையில்லாத மக்களின் நிலை பயன்பாடற்ற பழைமையைப் பின்பற்றும் நிலை போன்றவற்றை நினைத்து மனம் பதைபதைக்கிறார் கவிஞர். அப்பதைபதைப்பின் தாக்கம் அடிமன உள்ளத்தின் ஆழத்திலிருந்து எழுவதால் கவலையுடன் சமுதாயச் சீர்கேடுகள் குறித்துப் பாடுகிறார்.

சமூகத்தின் அறியாமை நிலை:-

சமுதாயக் கவிதைகளில், பாடுபொருளின் குவிமையமாக மக்களின் அறியாமை, விழிப்புணர்வின்மை ஆகியவற்றை அப்துல் ரகுமான் சமுதாயக் கடமையுணர்வுடன் சுட்டிக் காட்டுகிறார்.

சமுதாயத்தின் பல்வேறு சீர்கேடுகளுக்கும் சீரழிவுகளுக்கும் பெரிதும் காரணம் மக்களின் விழிப்புணர்வற்ற அறியாமை நிலையே என்பது கவிஞரின் கணிப்பாகும். அறியாமை நிலை மக்களிடம் இருப்பதால் பல சோதனை களுக்கும் வேதனைகளுக்கும் உள்ளாகின்றனர் என்று அப்துல் ரகுமான் கருதுகிறார்.

அறியாமையால் ஏற்படவல்ல விபத்துக்கள் இவரின் ஆழ்மனதைத் வெகுவாகப் பாதித்துள்ளன. ஒருமுறை வளையல்காரன் சில்லறை இல்லை என்பதால் சில்லறை மாற்றித் தருகிறேன் இந்தப் பையனை அனுப்புங்கள் என்று கேட்க, கவிஞரின் அம்மா கவிஞரை அனுப்பியுள்ளார். வளையல் காரன் குழந்தைகளைக் கடத்தி விற்பவன் என்பதை அறிந்த ஒருவர் கவிஞரைக் காப்பாற்றினாராம். “அப்போது அந்த சம்பவத்தின் பயங்கரம் எனக்குப் புரிய ஆரம்பித்தது. எல்லோரும் அம்மாவைத் திட்டினார்கள். என்தாய் ரொம்பவும் அப்பாவி, சூதுவாது தெரியாது. படிப்பும் இல்லை. சுற்று வட்டாரத்தில் அவரைக் ‘கிறுக்கி ஜைனத்’ என்றுதான் கூறுவார்கள்.”[43] இக்கூற்றின் வழிதாயின் அறியாமையைக் கவிஞர் சிந்தித்துப் பார்ப்பதோடு

நின்றுவிடவில்லை. மக்கள் சமுதாயத்தில் தன் தாயைப் போல எத்தனையோ அறியாமை இயல்புடன் இருக்கிற தாய்மார்களின் நிலையை நினைத்துப் பார்க்கிறார். ஏமாற்றுக்காரர்களின் மத்தியில் அறியாமையுடன் வாழ்வது தீங்கன்றோ? என்ற நிலையில் கவிஞர் கவிதைகள் வழி வேதனைப் படுகிறார்.

சமுதாயமக்களின் அறியாமையைப் பயன்படுத்தி ஏமாற்றுகிறவர்கள் அதிகாரத்திற்கும் பதவிக்கும் வருவதைச் சுட்டுகிறார்.

காட்டாக,

> "உங்கள் அரியாசனம்
> அபகரிக்கப் பட்டதை
> நீங்கள் காட்டுக்கு
> அனுப்பப்பட்டு விட்டதை
> அறியவில்லையா நீங்கள்?"[44]

என்று வினா எழுப்பி மக்களைச் சிந்திக்க வைக்கிறார்.

அறியாமையால் ஏமாந்து இறந்துபடும் மக்களை, "சுட்ட பழம்"[45] எனும் தலைப்பில் தீபத்தைப் பழம் என நினைத்து உண்ண வந்த விட்டில் இறப்பதைக் காட்டுகிறார்.

"அறியாமை அகன்று தெளிவடையும் வாய்ப்புக் கிடைத்தபோது, மீண்டும் தடுமாறும் பேதமை நிலையை, ஆலகாலத்திற்குப் பாற்கடல் கடைந்த போது அமுதம் வந்தது. அந்த அமுதத்தை அவசரமாகக் குடித்து இறந்தோம்"[46] என்று அப்துல் ரகுமான் குறிப்பிடுவதில் காணலாம். இதுபோன்ற பல கவிதைகளில் அறியாமை நீங்கி விழிப்புணர்வு எனும் நிலையைப் பெறுவதை இவர் உள்ளம் விரும்புவதை உணரலாம்.

சமுதாயத்தில் அறியாமைக்கு அடுத்த நிலையில் கவிஞரை வெகுவாகப் பாதித்தது அரசியல் எனலாம். மக்கள் சமுதாயத்தை ஆளும் அரசியலை எந்தக் கவிஞரும் பாடாமல் இருக்க முடியாது. அரசியல் சமுதாயத்தை வழி நடத்துவது. எனவே சமுதாயத்தைப் பெரிதும் மேலாதிக்கம் செய்வது அரசியல். அதில் கவிஞரின் உளவியல் தாக்கத்தை அறியலாம்.

அரசியல் சீர்கேடுகளின் தாக்கம்:-

இந்திய, தமிழக அரசியலின் இயக்கம் நன்முறையில் இல்லை என்பதைக் கவிஞர் உணர்ந்து வேதனைப்படுகிறார். கட்சிகள் சார்ந்த அரசியலில் பல சீர்கேடுகள் இருப்பதை வெளிப்படுத்துகிறார். சீர்கேடுகளை வெளிப்படுத்தும் பாங்கில் இவரின் சுயவரலாற்றை இணைத்து நோக்கினால் இவர் சார்ந்த இயக்கம் அல்லது கட்சி, அல்லது கொள்கை பற்றி ஓரளவு அறியலாம்.

காந்தி, நேரு போன்ற தேசியத்தலைவர்களைப் பாடியிருக்கிறார். அந்நிலையில் தேசிய உணர்வுமிக்கக் கவிஞரென மதிப்பிடலாம்.

தமிழக அரசியலில் கலைஞர் அவர்களுடன் நெருங்கிய பிணைப்பு கவிஞருக்கு உண்டு. அப்பிணைப்பிற்கு இலக்கியப்பூர்வமான இணைப்பு காரணமாகின்றது. இது தொடர்பாகக் கவிஞரை வினவியபோது, "எங்கள் நட்பு அரசியல் பூர்வமானது என்பதைவிட இலக்கியப் பூர்வமானது என்று கூறுவேன்"[47] என்று கவிஞர் குறிப்பிடுவதும் இங்கு நோக்கத்தக்கதாகும். மற்றொரு குறிப்பில் தன் குடும்பப் பாரம்பரியம் திராவிடர் கழகங்களில் ஈடுபாடு உடையது எனச் சுட்டுகிறார். "அது சுயமரியாதை இயக்கத்தின் தொடக்க காலம். தந்தைப் பெரியாரின் பகுத்தறிவுக் கொள்கை அப்பாவைக் கவர்ந்தன. அந்த இயக்கத்தில் அவர் தீவிரமாக ஈடுபட்டார்"[48] என்று சுட்டுவதின் வழி அறியலாம். திராவிட முன்னேற்ற கழக இவர் விரும்புவதும், அக்கழகத்தின் அனுதாபியாக இருப்பதுவும் கருதத்தக்கது. "திராவிட முன்னேற்றக் கழகத்தை விமர்சனம் செய்யும் போது இன உணர்வும் மொழி உணர்வும் குறுகிய உணர்வு என்று அவர்கள் பேசினார்கள் இது அவர்கள் மீது எனக்கு அருவருப்பை ஏற்படுத்தி விட்டது"[49] என்று குறிப்பிடுகிறார். அப்துல் ரகுமான் பிற கழகங்களை வெறுப்பதற்கும் தி.மு.கழகத்தை விரும்புவதற்கும் உரிய காரணத்தை இக்கூற்றின் வழி அறியலாம். மேலும் கலைஞருக்கும் கவிஞருக்கும் உள்ள கவியரங்கத் தொடர்பை, "என் சிலேடைகள் எந்த அளவிற்குக் கலைஞரைப் பாதித்திருக்கின்றன என்பதை அறிந்த போது புளகாங்கிதம் அடைந்தேன்"[50] என்று குறிப்பிடுகிறார்.

தி.மு.கழகத்திற்கு நேர் எதிராக இருக்கும் கட்சிகளை மறைத் துரைக்கும் உத்திகளில் கவிஞர் இடித்துரைக்கிறார். “நட்சத்திரப் பலன்”[51] என்ற தலைப்பில், நட்சத்திரங்களின் ஆட்சி ஏற்பட்டது. சூரியன் தோற்றது. நட்சத்திர ஆட்சிக்காலம் இருள் நிறைந்தது. இருள் அரசாங்கக் கொள்கை யானது என்று அறியாமை நிலையை உரைக்கிறார். இதுபோன்ற கவிதை களின் வழி தி.மு.கழகத்தின் மீது தன் ஈடுபாட்டை வெளிப்படுத்துகிறார். இவைகள் கவிஞரின் மன இயல்பை உணர்த்தவல்லன.

அரசியலும் திரையுலகமும்:-

அரசியலில் திரையுலகம் ஆட்சி செலுத்துவது கவிஞருக்கு உடன் பாடில்லை. திரையுலகம் கலை நோக்கம் உடையது. அரசியல் கொள்கை களை அடிப்படையாகக் கொண்டு செயல்பட வேண்டியது. திரையுலகத்தில் நட்சத்திரமாக வளர்ந்து கொள்கை நடைமுறைகளைத் தெரியாமல் அரசியலுக்கும் ஆட்சிக்கும் வருவது அரசியல் சீர்கேடுகளை ஏற்படுத்தும் என்கிறார். கலை மக்களுக்குப் பயன் தர வேண்டியது. மாறாக ஏமாற்றி அறியாமையில் ஆழ்த்தக் கூடாது என்று அப்துல் ரகுமான் குறிக்கிறார். தமிழ்த் திரைப்படத்தின் போக்கினை ஏளனம் செய்து நடிகர் நடிகைகளை “செலுலாய்ட் தெய்வங்கள்”[52] என்று குறிப்பிடுகிறார். திரையரங்கில் திரைப் படம் ஓடுவதினால் அறியாமை உருவாகின்ற நிலையை இத்தலைப்பில் குறிக்கிறார். கதவு மூடி இருள் ஏற்பட்டால்தான் சுகமாக இருக்கிறார்கள். காற்றில் கதவு சிறிது திறந்து வெளி உலக வெளிச்சம் வந்தால் வேண்டாம் என்று கத்துகின்றனர் என்கிறார். இங்கு வெளிச்சம் என்பது அறிவைச் சுட்டுகிறது. இருள் அறியாமையை உணர்த்துகிறது.

போலித்தனமான குரல்களும் ஏமாற்றும் செயல்களும் கவிஞரை மிகுதியாகப் பாதித்துள்ளன. இந்தியத் தலைவர்கள் சிலரை விரும்பினாலும் இந்திய தேசத்தின் மீது சில இடங்களில் வெறுப்புக் காண்பிக்கிறார்.

இந்திய அரசியலின் பகிரங்க ஏமாற்றுதலையும், இழிவுகளையும் ஓங்கி இடிக்கிறார். குறிப்பாக, "இந்தியனின் உயில்"[53] எனும் கவிதையில் 'இந்தியன்' என்ற பெயரால் இந்தியக் குடிமகன் ஏமாற்றப்படுவதைச் சுட்டு கிறார். இந்தியா, இந்தியன் எனும் கூற்று வீண்பிதற்றல், தனித்துவத்தை மாய்க்கக் கூடியது என்றும் குறிப்பிடுகிறார்.

ஒவ்வொரு மாநிலத்திற்கும் உள்ள உரிய மேலான தனித்துவம் தேசிய நீரோட்டத்தில் மூழ்கி மறைகிறது. இவ்வாறு தனித்துவமும், உரிமையும் பறிக்கப் பெறுவதை,

"இனி
நீர்களுக்குத்
தனிவிலாசங்கள்
தேவை இல்லை.
நதிகள் குளங்கள் கிணறுகள்
எல்லாம் மூழ்கிவிட்டன.
கண்ணீரும் மூழ்கிவிட்டது
நீங்களும் மூழ்கிவிடுங்கள்."[54]

என்று கடிந்துரைக்கிறார். இதன் மூலம் இந்திய நிலை குறித்த கவிஞரின் மன இயல்பைக் காணலாம்.

இன்றைய இந்தியாவில் நிகழும் போலித்தனத்தை "உப்பில்லா பண்டம்"[55], "வீட்டுக்கொருமரம்"[56], "புதியபாரதம்"[57], "வறுமைக்கோடு"[58], "அசத்தியமே ஜயதே"[59] போன்ற தலைப்புகளின் வழிசுட்டிக் காட்டுகிறார்.

மக்கள் சமுதாயத்தை வழி நடத்தும் அரசியல் கட்சிகள் மீதும், இந்திய அரசியல் மீதும் கவிஞருக்கு உள்ள உளநோக்கினை மேற்குறித்தச் சான்றுகளின் வழி அறியலாம். அரசியலிடத்தும் மக்கள் அறியாமை நிலையிலிருக்கும் நிலையைக் கண்டு கவிஞர் மனம் பதைக்கிறார். பதைபதைப்பின் பாதிப்பு அடிமனம் வரைக்கும் பாய்கிறது. அப்பாதிப்பையே இக்கவிதைகளிலும் வெளிப்படுத்துகிறார் என மதிப்பிடலாம்.

**கதை மாந்தர்களின் உணர்வுகளையும், செயல்களையும் விளக்குதல்:-**

இலக்கியத்தில் உளவியல் நிலைகள் குறித்து அணுகுவதற்கு, குறிப்பிட்ட இலக்கியத்தில் காணப்படுகின்ற கதை மாந்தர்களின் உணர்வு களையும் செயல்களையும் கவிஞர் எங்ஙனம் பயன்படுத்துகிறார் என்று மதிப்பிடுவதன் வழி அறியலாம். இங்குக் கதைமாந்தர்கள் என்று சுட்டப் பெறுவது இதிகாசம் மற்றும் இலக்கியத்தில் உள்ள கதைமாந்தர்கள் ஆவார்கள். இராமன், சீதை, கிருஷ்ணன், அர்ச்சுனன், சகுனி, பாண்டவர்கள், கௌரவர்கள் போன்ற மாந்தர்களைக் கவிஞர்தம் கவிதைகளில் சுட்டிச் சொல்வதைக் காண முடிகிறது.

தமிழ் இலக்கியத்தில் இடம் பெறும் கண்ணகி, உதயகுமாரன் போன்ற கதைமாந்தர்களையும் சில கவிதைகளில் சுட்டிச் சொல்கிறார். பொதுவாக நோக்கும்போது இராமன், சீதை போன்ற கதைமாந்தர்களைக் கவிஞர் பரவலாகப் பயன்படுத்திய நிலையை மதிப்பிட முடிகிறது.

இந்நிலைக்குக் காரணமாகக் கம்பன் கழகக் கவியரங்குகளில் இவர் மிகுதியாகப் பங்கேற்றுப் பல கவிதைகள் பாடிய நிலையைக் கருத்தில் கொள்ளலாம். அந்நிலையின் தாக்கம் கவிதைகளில் இடம் பெற்றிருக்க வாய்ப்புண்டு.

இராமன் என்கிற கதைமாந்தரைத் தற்காலச் சூழலோடு பொருத்தி வித்தியாசமாகச் சிந்திக்க வைப்பதில் கவிஞர் திறம் பெற்றவராக இருக்கிறார். எடுத்துக்காட்டு விளக்கத்திற்காகக் கீழ்க்கண்ட கவிதையின் வழி விளக்கலாம்.

நாள்பார்த்து, நேரம்பார்த்து இராமன் முடிசூடுவதற்கு ஏற்பாடு நடத்தப்பெற்றது. ஆனால் கைகேயியால் இராமன் காடு செல்ல நேர்ந்தது. இங்கு நல்ல நேரம் பார்த்தும் முடிசூட்டும் செயல் நிகழவில்லை. ஆகவே, நாளும் கோளும் பார்ப்பது பிறழ்வான நம்பிக்கை என்று கவிஞர் கூறுகிறார்.

“கோளும் நாளும்<br>
குறித்தது ராமன்<br>
கொற்றவன் ஆவதற்கு - அந்த

நாளில் என்ன

நடந்தது? பாவம்

நடந்தான் காட்டுக்கு"[60]

என்கிறார். கலியுக இதிகாசம், நீர்ப்பரீட்சை, கோடுகள், ஒருநாள் கூத்து போன்ற கவிதைகளில் இராமனைப் பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன. அச்செய்திகள் அனைத்தும் முரண் நோக்கில் அமைந்தவை என்பது குறிக்கத் தக்கவையாகும்.

இராமன் கதைமாந்தரோடு தொடர்புடைய நிகழ்ச்சி, வில்லை வளைத்துச் சீதையை மணந்ததாகும். இந்த வில்வளைத்தல் என்கிற நிகழ்வை "முதுமை"[61] என்ற கவிதையில் இணைத்து வித்தியாசமாகச் சிந்திக்கிறார். முதுமைக் காலத்தில் உடல் வில்லாக வளைவது மரணத்தை மணக்கவா? எனக் கேட்கிறார்.

சீதை என்ற பாத்திரத்தையும் அப்பாத்திரத்தோடு தொடர்புடைய இயல்புகளையும் வேறுபட்ட நோக்கில் பல இடங்களில் சிந்திக்கிறார்.

"கலியுக இதிகாசத்தில்"[62] சோரம் போகும் சீதைகள் குறித்துக் கவிஞர் வேதனைப்டுகிறார்.

தமிழ் இலக்கியங்களில் சிலப்பதிகாரத்தில் இடம்பெறும் கண்ணகி மீது கவிஞர் மிகுந்த ஈடுபாடு கொண்டிருப்பதைக் கவிதைகள் வழி உணரலாம். "கோவலனின் படுகொலையை மூடி மறைக்க உயிரோடு கொளுத்தப்படும் கண்ணகிகள்"[63] என்று குறிக்கிறார்.

சிலப்பதிகாரக் கதை முழுவதுமே கண்ணகி பாத்திரத்தின் வழியாக முடிந்து விடுகிற பான்மையுடன் கவிஞர் கவிதை யாத்துள்ளார்.

"பால் நகையாள் வெண்முத்துப்

பல் நகையாள் கண்ணகிதன்

கால் நகையால் வாய்நகை போய்

கழுத்துநகை இழந்த கதை"[64]

என்கிற கவிதை சிலப்பதிகாரத்தையே சுருக்கித் தருவது போல் உள்ளது.

பொதுவாக இதிகாசங்கள் தமிழ் இலக்கியங்கள் போன்ற நிலைகளில் இடம்பெறும் கதைமாந்தர்களைக் கவிதையில் இடம்பெறச் செய்கிறார்.

அந்தக் கதைமாந்தர்களை இக்காலச் சூழலோடு முரண்பட்ட நிலையில் இணைத்துச் சிந்திக்க வைப்பதில் கவிஞரின் தனித்தன்மையும் இருக்கிறது. அக்கதை மாந்தர்கள் கவிஞர் உள்ளத்தைப் பாதித்திருக்கிற நிலையினையும் அறிய முடிகிறது.

4. தொல் படிவமும் உளவியல் நிலையும்:-

இலக்கியத்தில் தொல்படிவம் (Archetype) சிறப்பான இடம் பெறுவதை உளவியல் அறிஞர்கள் வலியுறுத்துகின்றனர். உளவியல் மேதையான பிராய்டு தொன்ம ஆராய்ச்சியில் பெரிதும் ஈடுபட்டவர் ஆவார். மனித கலாச் சாரத்தின் தொடக்கத்தை ஆராய முற்பட்டபோது தொன்மம் பற்றியும் அவர் சிந்தித்தார். அவரது மாணவரில் ஒருவரான யுங் (Jung) என்பார் அடிமனத்தின் உளவியல் (Psychology of Unconscious) என்ற விரிவான நூலை எழுதியுள்ளார்.

நமது வாழ்க்கையிலும், கனவுகளிலும் இலக்கியத்திலும் பல உருவங்களும், சம்பவங்களும் பாத்திரங்களும் திரும்பத்திரும்ப வருகின்றன. இவற்றில் சில நமது வாழ்க்கையின் அனுபவங்களிலிருந்து பிறப்பதால்; அவைகளின் தோற்றத்தையும், இயல்புகளையும் அறிவுச் சார்பாக விளக்கலாம். ஆனால் பல நமது சிந்தனைக்கும் அறிவுக்கும் எட்டாத நிலையிலிருந்து வருகின்றன. காரணம் யாதெனில், நாம் ஒவ்வொருவரும் நமது குடும்பத்தோடும், சமூகத்தோடும் இணைந்திருப்பதோடன்றி நமது இன மரபோடும் நம்மை அறியாமல் ஆழ்ந்த தொடர்பு கொண்டிருக்கிறோம். இந்தத் தொடர்பினைத்தான் யுங் “இனமரபுத் தேக்கம் (Racial Memory)” என்று கூறி அது மனத்தின் அடித்தளத்தில் இருப்பதாகச் சுட்டுகிறார்.[65] இவரது கருத்தின் வழி இன மரபுத்தேக்கம் குறிப்பிடத் தகுந்த உளவியல் கூறாக அமைகிறது என்பதை உணரலாம். அத்தேக்கம் மனத்தின் அடித்தளத்தில் இருப்பதால் இனம் புதியாத சம்பவங்களும் பாத்திரங்களும் திரும்பத்திரும்ப நமது வாழ்க்கையிலும் கனவுகளிலும் இலக்கியத்திலும் வருவதாக யுங் கருதுகிறார். இவ்வாறு வருவதைத் தொல்படிவ ஆராய்ச்சியோடு இணைத்துப் பார்க்கலாம். இத்தொல்படிவ இலக்கியத்திறனாய்வு பொதுவாகத் தொன்மக் கதைத் திறனாய்வுடன் (Myth criticism) தொடர்பு பெறுகிறது.

“உளவியலும் இலக்கியமும்” என்ற கட்டுரையில் யுங் தொன்மம், கனவு, கவிதை ஆகியவற்றுக்குள்ள உறவுகளை ஆராய்கிறார். ஒரு கவிஞன் தனது அனுபவத்தைத் திறம்பட வெளிப்படுத்த வேண்டுமானால் தொன்மத்தில் துணையை நாட வேண்டும்”[66] என்பதை வலியுறுத்துகிறார்.

“ஹர்டர் என்பாரும் மொழி என்பது தொன்மப் படிவங்களின் வழியேதான் வளர்கிறது என்றும் கவிதையின் தனிச்சிறப்பு அதன் அடிநாதமாகத் தொன்மம் விளங்குவதால்தான் என்றும், தொன்மம் கவிதையோடு உயிர்த்தொடர்பு கொண்டிருத்தல் வேண்டும் என்றும் வற்புறுத்துகிறார்.”[67] இக் கருத்திலிருந்து கவிதையின் உயிர்த்துடிப்பிற்குத் தொன்மம் காரணமாதலைக் காணலாம்.

இருபதாம் நூற்றாண்டின் தலைசிறந்த திறனாய்வாளர்களில் ஒருவராகக் கருதப்படுபவர் நார்த்தராப் ஃப்ரை ஆவார். அவர் தொன்மம் பற்றிப் பல கருத்துக்களைத் தந்துள்ளார். “தொன்மம் கடவுள்களையோ கடவுளை யொத்த மனிதர்களையோ பாத்திரங்களாகக் கொண்ட கதையென்றும் அது வரலாற்றுக் காலத்திற்கு அப்பாற்பட்டது என்றும் இயற்கை தந்த நிகழ்ச்சி களைக் கொண்டதாகவும் அமைந்திருக்கும்[68] என்றும் கூறுகிற கருத்து தொன்மம் பற்றிய ஒரு வரைவிலக்கணத்தைத் தர முயல்வதாகக் கருதலாம். இவ்வரையறை தொல்படிவ அணுகுமுறைக்கு மிக்க உதவியாக அமையும்.

**அப்துல் ரகுமான் கவிதைகளில் தொல்படிவங்கள்:-**

வரலாற்றுக் காலத்திற்கு முன்பே தொன்மங்கள் உருவாக்கம் பெற்றிருந்தாலும், காலப்போக்கில் அவை சமயத்தின் சார்புபெற்றன. ஒவ்வொரு சமயத்தைச் சார்ந்தும் தொல்படிவங்கள் இடம் பெற்றிருக்கக் காணலாம். அப்துல் ரகுமானின் தொல்படிவங்களில்,

1. இந்து சமயப் புராணத் தொல்படிவங்கள்
2. இந்து சமயம் சார்ந்த இதிகாசத் தொல் படிவங்கள்
3. கிறித்துவத் தொல்படிவங்கள்
4. இசுலாமியத் தொல்படிவம்

போல்வன இடம் பெற்றுள்ளன. இப்பகுதியில் சுருக்கமாகத் தொல்படிவங்கள் கோடிட்டு உரைக்கப் பெறுகின்றன.

1. இந்து சமய புராணத் தொல் படிவங்கள்:-

இந்து சமயத்தைச் சார்ந்த புராணத் தொன்ம நிகழ்ச்சிகள் ஐந்தினைச் சுட்டுகிறார். அவையாவன,

1. அடிமுடி தேடுதல், 2. பாற்கடல் கடைதல், 3. வாமனன் விசுவரூபம் எடுத்தல், 4. நெற்றிக்கண் தொடர்பானவை, 5. தவத்தைக் களைக்கும் மேனகை நடனம் போன்றவைகளாகும். இவைகளில் விசுவரூபம் எடுத்தல், பாற்கடல் கடைதல் போன்ற நிகழ்ச்சிகள் இவரால் திரும்பத் திரும்பக் கையாளப் பெறுகின்றன.

எடுத்துக்காட்டு விளக்கத்திற்காகச் சிலவற்றைக் காணலாம்..

வியர்வைத் துளியின் பெருமையை "வேர்வையே தாலி" எனும் தலைப்பில் அப்துல் ரகுமான் உழைப்பின் உயர்வைச் சுட்டுகிறார். "வியர்வைத் துளிகள் அற்பமானவை அல்ல, வானங்களைச் செருப்பாக்கி விடும் வாமனர்களின் விசுவரூபத்திற்கு இவையே தாரை வார்ப்பு"[69] என்று சுட்டுகிறார்.

இத்தொன்ம நிகழ்ச்சியான விசுவரூபம் தொடர்பாக, விளையாட்டு,[70] என் செவியின் சுவாசம்,[71] மரங்கள்[72] போன்ற தலைப்புகளில் கையாள்வதின் வழி அறியலாம்.

இதனை அடுத்து "பாற்கடல் கடைதல்" நிகழ்ச்சியும் அப்துல் ரகுமானின் ஆழ்மனதில் பாதிப்பை ஏற்படுத்தியுள்ளது. பல்வேறு இடங்களில் பல பொருள்களைச் சுட்ட இத்தொன்மப் படிவங்களை இவர் கையாள்கிறார்.

இந்துத் தொன்மம் தொடர்பான இதிகாசங்களில் இராமாயணமும் மகாபாரதமும் ஏற்படுத்திய உளவியல் தாக்கம் முன்பு விளக்கப் பெற்றது.

2. இந்து சமய இதிகாசங்களின் தொல்படிவங்கள்:-

இந்து சமயம் சார்ந்த இதிகாசத் தொன்மங்கள் 17 இடம் பெற்றிருக்கக் காணலாம். குறிப்பாக மகாபாரதம் தொடர்பாக 9 தொல்படிவங்களையும், இராமாயணத்தில் 8 தொல்படிவங்களையும் கையாண்டுள்ளார்.

மகாபாரதத்தில் கண்ணன், பாஞ்சாலி, பாண்டவர்கள், கௌரவர்கள், சகுனி போன்றவர்களை மையமிட்ட நிகழ்ச்சிகளைத் தம் கவிதைகளில் தொன்ம நயத்தோடு குறிக்கிறார்.

இராமாயணத்தில் இராமன், சீதை, இராவணன், இலட்சுமணன், அனுமன் போன்ற கதைமாந்தர்களையும் இவர்கள் தொடர்பான பல்வேறு கதை நிகழ்ச்சிகளையும் கையாள்கிறார்.

இதிகாசத் தொல்படிவங்கள் தொடர்பாக முன்னர் விளக்கப் பெற்றன.

3. கிறித்தவத் தொல்படிவங்கள்:-

கிறித்தவ சமயம் சார்ந்த தொல்படிவங்களில் பத்து நிகழ்ச்சிகளை அமைக்கிறார். அவையாவன,

1. விலக்கப்பட்ட கனி 2. ஆதாம் ஏவாள் 3. மோசேயின் அருஞ்செயல்கள் 4. ஏசு சிலுவையில் அறையப் பெற்று உயிர்த்தெழுதல் 5. ஏதேன் 6. செம்மறி மேய்த்தல் 7. ஞானஸ்நானம் 8. சாத்தானின் நிகழ்வுகள் 9. ஜீன்களின் தலைவன் 10. யூதாஸ் வருகை போன்றவைகள் குறிக்கத் தக்கன.

சில கிறித்துவத் தொல்படிவங்கள் அமைந்த பாங்கினைக் கீழ்க்கண்ட கவிதைகளின் வழிக்காணலாம். கிறித்தவப் படிவங்கள் பலவற்றைக் கவிஞர் கையாண்டாளும் இவரின் ஆழ்மனது அடிக்கடி சில குறியீடுகளை எடுத்தாள்கிறது. ஏசு சிலுவையில் அறையப்படுதலும் உயிர்த்தெழுதலுமான நிகழ்ச்சியைப் பல இடங்களில் பல பொருள்களில் கையாள்கிறார்.

இவர்தம் கவிதைகள் பிறப்பெடுப்பதற்குச் சிலுவையைத் தொடர்பு படுத்திக் கூறுகிறார். பால்வீதியில் உள்ள முதற்கவிதையில் "என் தேவனே எனக்குக் கைகொடுத்தீர்"[73] என்று சுட்டுகிறார்.

"வாழ்க்கை ஒரு சிலுவை. அதில் நான் அறையப்பட்டிருக்கிறேன். (ஒவ்வொருவரும் தான்) ஒவ்வொரு அனுபவமும் ஓர் ஆணி தான்."[74]

மேலும் சிலுவை தொடர்பாகப் பல இடங்களில் குறிப்பதைக் காண முடிகிறது. 'அந்திச் சிலுவையில், சுவரில் சிலுவை அறையப்பட்டிருக் கிறது. சிலுவையில் காயப் போட்டேன், சிலுவை மரங்கள் சிலுவைகள் ஒரு பக்கம்,

சிலுவைப்பாட்டில் முடிகிறது, ஏசு உயிர்த்தெழுந்தாரோ, அவன் தமக்கும் சிலுவைகள் போன்றன' என்று குறித்துச் சொல்வன.

அப்துல் ரகுமான் கிறித்தவத்தின் தொல்படிவங்களை அதிகம் எடுத்தாள்வதை அறிஞர்கள் சுட்டியுள்ளனர். "கிறித்துவத் திருமறையாம் விவிலியத்தை மிக அதிகமாகத் தம் கவிதைகளில் பல வகைகளில் பயன்படுத்தியுள்ள கிறித்தவரல்லாத கவிஞர்களுள் அப்துல் ரகுமான் முன்வரிசையில் நிற்பவர் என்று தயங்காமல் கூறலாம்"[75] எனும் கருத்து நோக்கத்தக்கதாகும்.

4. இசுலாம் தொல்படிவம்:-

அப்துல் ரகுமான் இசுலாம் சமயத்தைச் சார்ந்து ஒரு தொன்மத்தை "மானுடத்தின் மகுடாபிஷேகம்" என்ற கவிதைத் தலைப்பில் பயன்படுத்தி யுள்ளார்.

> "பூமிக் கூட்டின்
> மானுடக் குஞ்சுக்கு
> காபிரியேலின் சிறகுகள்
> முளைத்துவிட்டன"[76]

என்று குர் ஆனில் உள்ள "காபிரியேல் சிறகு" பற்றி எழுதியுள்ளார்.

இசுலாம் சமயக் கொள்கை மீது பற்றுக் கொண்ட கவிஞர் இசுலாம் தொடர்பான தொல்படிவங்களை அமைக்கவில்லை. இசுலாம் மதக்குறியீடு களைப் பயன்படுத்துதல் இசுலாத்திற்கு ஏற்புடைத்தல்ல என்பதால் இவர் இவ்வாறு செய்திருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது. இவ்வெண்ணம் ஆராய்தற்குரியதாகும். இந்நிலையில் இச்சிந்தனை குறித்து நோக்கிய ஆய்வாளர்கள் கருத்துரைகளும், கவிஞரின் பேட்டியும் முக்கிய இடம் பெறுகின்றன.

"இந்து சமயத் தொன்மங்களை அப்துல் ரகுமான் எழுதுகிறார். இதனால் இசுலாமியர் இவரை எதிர்க்கின்றனர். இந்துத் தொன்மங்களைப் பயன்படுத்துவதை இசுலாமியர்கள் எதிர்க்கின்றார்கள் என்றால் இந்துக்கள்

கவிஞரைப் பாராட்ட வேண்டுமல்லவா?"[77] என்று மு. சுதந்திரமுத்து குறிப்பிடு கிறார். இக்கூற்று இந்துக்களின் ஆதரவை வேண்டுவதை அறியலாம்.

கவிஞர் இன்குலாப் கூறுகையில், "இசுலாமிய விழுமியங்களில் உறுதியான பிடிப்புள்ள கவிஞர் மதங்களின் சடங்குகளில் மயங்குபவர் அல்லர். இவரது மனிதநேயம் மதத்தின் குறுகிய குட்டைகளில் தேங்காது கீதை, பைபிள், குர்ஆன் இந்துவை, கிறித்தவனை, முஸ்லீமை உருவாக்கி இருக்கலாம். ஆனால் மனிதனை உருவாக்க வேண்டும் என்று சொல்லும் துணிச்சல் ரகுமானுக்கு வந்த பிறகு இவரது தோழமைக் கைகள் யாருடன் வேண்டுமானாலும் உறவு கொள்ள நீளும்".[78] இக்கூற்றிலிருந்து ரகுமான் மனித நேயத்தை மட்டுமே மைய நோக்கமாகக் கொண்டு மதங்கள் மனிதனை முதலில் உருவாக்கட்டும் என மதங்களைக் கடந்து நிற்கிறார் எனும் செய்தி அறியப் பெறுகிறது.

பல்வேறு மதங்களில் தோய்வு நிறைந்த அப்துல் ரகுமானைப் பற்றி நா. மகாலிங்கம் குறித்தபோது, "இவர் ஒரு கவிஞராக மட்டும் விளங்கவில்லை. தான் இந்த சமயத்துக்கு உரியவன். தான் பார்வையிடும் இலக்கியம் இந்த சமயத்துக்கு உரியது என்ற நோக்கத்திற்கு அப்பாற்பட்டு சிந்திக்கும் சீரிய சிந்தனையாளரும் கூட. அதனால்தான் அனைத்து மதச் சான்றோரின் வாக்கினையும் சர்வசமய இதிகாசங்களையும் நுட்பமாக ஆய்ந்திடும் ஆற்றல் அவருக்கு அமைந்திருக்கிறது. அனைத்து மதங்களுக்கும் உரியவராகத் தன்னை ஆக்கிக் கொண்டார் அப்துல் ரகுமான்"[79] என்ற கருத்தின் வழி பல செய்திகளை அறியலாம். சமயங்களுக்கு அப்பாற்பட்டுச் சிந்திப்பவர் எல்லா மதங்களுக்கும் பொதுவானவர் எனும் கருத்தை அறியலாம். குறியீட்டைக் கவிஞன் எடுத்தாள்கிறபோது அக்குறியீடு சமயங்களுக்கு அப்பாற்படுவது உண்மை எனப்பகரலாம்.

அப்துல் ரகுமான் சிறந்த குறியீட்டுக் கவிஞர் என்பது போல தொன்மக் கவிதைகளை எடுத்தாள்வதிலும் சிறந்து நிற்கிறார். அவ்வகையில் சிறந்த தொன்மக்கவிஞராகவும் விளங்குகிறார்.

இவர் "தொன்ம உத்தியின் சக்தியை உணர்த்தவும், இந்தியத் தொன்ம வளத்தைக் காட்டவும் தொன்மங்களையும் அதிகமாகப் பயன்படுத்திப் பரிசோதித்திருக்கிறேன்"[80] என்று குறிப்பிடுகிறார். இவரின் அரிய படைப்புகளில் பால்வீதி மணிமகுடம் போன்றது. அதனை விமர்சிப்பதற்கும் நயம் பாராட்டுதற்கும் அறிவு மட்டும் போதாது உளவியல் பார்வையும் தேவை என்கிற கருத்தினை அறிஞர்கள் பலர் குறிப்பிடுகின்றனர்.

"இப்போது புதுக்கவிதைத் துறையில் புலமை மிக்கவரைத் தெரிவதற்கு "பால்வீதியிலோ" அல்லது ஞானக் கூத்தனின் "அன்று வேறு கிழமையிலோ" ஒரு பாடலைக் கூறி நலம் பாராட்டுமாறு வினவலாம். இந்நூல்கள் புதுமை வேட்கை வாதத்தின் மணி மகுடங்களாகத் திகழ்வன. இவற்றை இனந்தெரிந்து கொள்வதற்குத் தமிழ்ப்புலமை மட்டும் போதாது. பிராய்டியக் கோட்பாடும் யுங்கியக் கோட்பாடும் தொன்மவியல் அறிவும் உலகப் புதுக்கவிதைகளைப் பற்றிய தெளிவும் இன்றியமையாதத் தேவையாகும்"[81] என்று கூறுகிற நிலை கருத்தில் கொள்ளத் தக்கதாகும்.

5. தனிச்சிறப்பான சொற்கள்:-

கவிஞர்தம் கவிதைகளில் சில சொற்கள் அவரை அறியாமலே மிகுதியாகப் பயன்படுத்துகிற நிலை ஒருவகையில் உளவியல் ஆய்விற்குட் படுத்தப் பெற வேண்டியதாகும். அச்சொற்கள் கவிஞரது உள்ளத்து உணர்வின் பிரதிபலிப்புகளாக இருக்கலாம்.

அப்துல் ரகுமானிடம் அத்தகு சொற்கள் சில திரும்பத் திரும்பக் கவிதைகளில் இடம் பெறுவதை ஆய்வில் உணர முடிகிறது. நட்சத்திரம், இரவு, நிழல், மரம், ஆடை, இமை, கண்ணீர், கனவு, மரணம், மௌனம் போன்ற சொற்கள் இவர் கவிதைகளில் பல இடங்களில் பல சூழல்களில் திரும்பத்திரும்பப் பயன்படுதலைக் காணலாம்.

நட்சத்திரம்:-

நட்சத்திரம் என்ற சொல்லின் ஆட்சி பால்வீதியில் பரவலாகக் காணப்படுகிறது. கவிதைத் தலைப்பிற்குக் கூட "நட்சத்திரங்களில் கூடுகட்டி"[82] என்று குறித்தமை இங்கு கருதத்தக்கது. "நட்சத்திரம்" என்ற சொல் பல்வேறு பொருள்களைக் குறிக்குமாறு பயன்படுத்தியுள்ளார்.

"கோடிச் சூரியர்களைப் பிழிந்து
நட்சத்திரங்கள் செய்தேன்"[83]

என்று பாடுகிறார். இங்கு நட்சத்திரம் என்பது சுருக்கம், செறிவு போன்ற பொருள் உருவாக்கத்திற்காகப் பயன்படுதலைக் காணலாம்.

நட்சத்திரங்களால், நட்சத்திரப்பூச்சூடி, நட்சத்திரங்களுக்கு மேலே, நட்சத்திரங்களில் ஒழுங்கு இல்லை, நட்சத்திர இரவு, நட்சத்திரக் கன்னியர், நட்சத்திரப் பருக்கை, நட்சத்திரங்கள் தங்கள் வெளிச்சத்தை, நட்சத்திர விதைகள், நட்சத்திர வேஷமணிந்த, நட்சத்திரங்களை அடுக்கி, நட்சத்திரங் கள் நடக்கின்றன, ஒரு நட்சத்திரம் போல் என்று கவிஞர் நட்சத்திரம் என்ற சொல்லைப் பல்வேறு இடங்களில் பல்வேறு சூழல்களில் பல்வேறு பொருள் செறிவில் பயன்படுத்தியுள்ளார்.

"நட்சத்திரம்" பற்றி அப்துல் ரகுமான் குறிப்பிடுவது நோக்கத்தக்க தாகும். "என் மனதில் ஒட்டிநின்று ஓயாமல் உண்டாகும் படிமம் ஒன்று உண்டு. நட்சத்திரம் இதற்குச் சில அனுபவங்களும் காரணமாக இருந்திருக் கின்றன. பால்வீதி தொகுதி முழுவதும் ஆங்காங்கே நட்சத்திரம் மின்னு வதால் என் கவிதைகளையே என் இதய இருளில் முகம் காட்டி மின்னும் நட்சத்திரங்களாகக் கருதுவதால் அந்தத் தொகுதிக்குப் பால்வீதி எனப் பெயரிட்டேன்".[84] இவ்வாறு நட்சத்திரங்கள் மேல் இவர் கொண்டுள்ள ஆழ்ந்த பற்றின் காரணமாகத் தன் கவிதைத் தொகுப்பிற்குத் தலைப்பே "பால்வீதி" என்று வைக்கிறார்.

இரவு:-

இரவு என்ற சொல்லின் ஆட்சி கவிஞரின் கவிதைகளில் மிகுதியாகக் காணப்பெறுகின்றது. இரவு என்ற சொல் தன் பொருளை விடுத்துக்

குறிப்பாய்ப் பிற பொருள்களை வெளிப்படுத்தும் பாங்கும் குறிக்கத்தக்கதாகும்.

"வெண்புள்ளி குத்திய
இரவு நீக்ரோவைப்
. . . . . . . . . . .
. . . . . . . . . . ."[85]

என்ற கவிதையின் வழி இரவை நீக்ரோ இனத்துக்குப் படிமப்படுத்திக் குறிக்கிறார். வெண்புள்ளி என்பது நட்சத்திரங்களாகும்.

சமுதாயத்தில் நடக்கும் கொடுமைகளை இரவு நினைத்துக் கண்ணீர் விடுவதாக "இரவின் கண்ணீர்"[86] என்ற தலைப்பில் பாடியுள்ளார்.

பல இடங்களில் "இரவு" எனும் சொல்லை எடுத்தாள்வது காணப் பெற்றது. "இரவில் நகர நடைபாதையில், இரவின் மாதவம், இரவுத் தொட்டியில், இரவின் வாய்க்குள், இரவென என் கனவு, என் ஏகாந்த இரவில், இளவேனில் இரவு, இரவெல்லாம் உன் நினைவுகள், மன்மத இரவை, சில இரவுகளைத் துப்பறிந்தாய், உங்களால்தான் எமக்கு இரவும் பகலும், இரவாகி வரவேண்டும் நீ என்பது போன்ற சொற்றொடர்களை எடுத்துக்காட்டிற்காகக் குறிப்பிடலாம்.

பொதுவாகக் கவிஞர்கள் இரவு, விண்மீன் போன்றவற்றை விரும்பி இரசிப்பவர்கள் என்பது பொது இயல்பாகும். எனினும் அப்துல் ரகுமான் மிகவும் ஈடுபாட்டுடன் மனதில் பதித்துக் கவிதைகளில் வெளிப்படுத்துகிற நிலை கருதத்தக்கதெனலாம்.

நிழல்:-

"நிழலின் பாதிப்பும் என்னிடம் அதிகமாக உண்டு. என்னைப் பற்றிப் பிடித்து ஆட்டும் படிமங்களில் ஒன்றாகவே ஆகிவிட்டது நிழல். பின்னால் பால்வீதியில் பார்வை நிழல் என்ற கவிதையில் காதலியின் பார்வையை நிழலாகச் சொன்னேன். "நிழல்கள்" என்று தனியாகவே ஒரு வசன கவிதையும் எழுதினேன்"[87] என்று அப்துல் ரகுமான் குறிப்பிடுகிறார்.

நிழல் என்ற சொல்லைப் பயன்படுத்திக் கவிதைத் தலைப்பு அமைத்துள்ளார். எ.டு. "பார்வை நிழல்."[88] இக்கவிதையில் மனைவியின்

சந்தேகம் கவிஞரை நெறிப்படுத்துவதாகக் கூறுகிறார். “நிழல்” என்பது சந்தேகத்திற்குப் படிமமாக அமைக்கப் பெற்றுள்ளது.

“வெளிச்சம் போதித்த பிறகும்
பகலுக்கு இருக்கும்
சந்தேகங்களாய்
இந்த நிழல்கள் ...”[89]

என்ற வரிகளின் வழி முற்சுட்டிய கருத்தைக் காணலாம்.

தன் புகைப்படத்தைப் பார்த்த கவிஞர் இறந்த காலத்தில் சிறைப்பட்ட நிழலை நிகழ்காலம் எட்டிப் பார்ப்பதாகக் குறிக்கிறார்.

“இறந்தகாலத்தில்
சிறைப்பட்ட என் நிழலை
நிகழ்காலம் எட்டிப்பார்க்க
ஒரு சாளரமா இது?”[90]

காதலியின் நினைவு பகலில் குறைவாக இருந்து இரவில் மிகுதியாவதை “வினையாட்டு”[91] என்ற கவிதையில் குறிப்பிடுகிறார். இவ்வாறு சுட்டுகிற பாங்கு கவிதை நளினத்துடன் இருப்பதைக் காணலாம்.

நிழற்பாம்புகள், நிழல்களே இங்கு புழுங்குகின்றன. நிழல் துஷ்ட நிக்ரக நிழலைக் கொடுப்பவை, பொன்னிழல் விரிக்கும் என்றவாறு பல இடங்களில் நிழல் எனும் சொல்லைப் பயன்படுத்திய நிலையைக் கவிதைகளின் வழி உணர முடிகிறது.

மரம்:-

“மரம் என்ற உயர்திணை”[92] என்ற தலைப்பில் சிந்தனைப் படிமங்கள் நிறைந்த வசன கவிதையைக் கவிஞர் எழுதியுள்ளார்.

“மரங்கள்” என்ற தலைப்பிலும், “வேர்களும் கிளைகளும்”[93] என்ற தலைப்பிலும் கவிஞர் கவிதைகளையும் யாத்துள்ளார்.

மேகத்தை மைக் கூடாகவும், மரத்தை எழுதுகோலாகவும் உருவகப் படுத்தி உரைத்த போது,

“மேகமைக் கூடுகள்
கவிழ்த்த மையில் உருவாகும்

அதிசயப் பேனாக்கள்”[94]

என்கிறார். மேலும், “வீட்டுக்கொரு மரம்” என்ற தலைப்பில் அரசியல் சட்ட திட்டங்களின் சீர்கேடுகளை ஏளனத்துடன் பேசுகிறார். “மரம்” என்ற சொல்லின் பாதிப்பை இவரின் கவிதைகளில் பரவலாகக் காணலாம்.

சிலுவை மரங்கள், மரங்களைத் தின்னும் வேர்கள், போதி மர நிழல்கள், ஆடும் மரங்களின், தீபமரம், மரங்களைச் சாய்த்து, மரத்தால் செய்தது, மரங்களின் ஊமை நாவுகள் இவ்வாறு மரங்கள் குறித்து பல இடங்களில் அப்துல் ரகுமான் சிந்தித்து எழுதியுள்ளமைக்குக் காரணம் மரங்களின் மீது கவிஞர் கொண்டுள்ள உள ஈடுபாடுதான் எனக் கூறலாம்.

“மரங்கள் மீது நான் கொண்ட இந்த நேசம் தான் பின்னால் மரம் என்பது உயர்திணை என்ற வசன கவிதை எழுதுவதற்குக் காரணமாக இருந்தது”[96] என்று குறிப்பிடுவது சிந்தனைக்குரியதாகும்.

ஆடை:-

“ஆடை என்னை அதிகமான உணர்வுக் கிளர்ச்சிக்கு ஆளாக்குவதால் அதைப் பற்றித் திரும்பத் திரும்ப எழுதுகிறேன்”[97] என்று அப்துல் ரகுமான் குறிப்பிடுகிறார். ஆடை, துணி, உடுத்துதல் போன்ற நிலைகளில் ஆடையை மையமிட்ட சொற்கள் இவர் கவிதைகளில் இடம் பெறக் காணலாம்.

மனிதன் தன் ஆடையைப் பெறுவதற்குப் பிச்சை கேட்கிறான். அஃறிணை தன் ஆடையைத் தானே தயாரித்துக் கொள்கிறது எனும் கருத்தை,

“பால் தன் ஆடையைத்
தன்னிலிருந்தே தயாரித்துக் கொள்கிறது
மனிதன் தன் ஆடைக்காகப்
பருத்தியிடம் பிச்சை கேட்கிறான்.”[98]

மனிதன் பிறரைச் சார்ந்திருக்கிறான் என்ற கருத்தை ஆடையின் மூலம் உணர்த்துகிறார்.

கட்சிகளின் பெருக்கத்தை நக்கல் செய்யும்போது, “கொடிமரம்”[99] என்ற தலைப்பில் கம்பங்களுக்கு ஆடை மனிதனுக்கு நிர்வாணம் என்று தேசத்தை ஆடையின் அடிப்படையில் பார்க்கிறார். இவ்வாறு ஆடை குறித்த

சொல்லாட்சி இவரின் கவிதைகளில் பல இடங்களில் காணலாம். இந்நிலைக்குக் காரணம் இவர் சிறுவயதில் வறுமையில் உழன்றது. சிறுவயதில் தையற்காரச் சிறுவனாக வேலைபார்த்தது ஆகியவற்றின் பாதிப்பாக இருக்கலாம்.

பிறசொற்கள்:-

இமை, கண்ணீர், கனவு, மரணம், மௌனம் போன்ற சொற்களின் ஆட்சியும் இவரிடம் மிகுந்த அளவில் திரும்பத் திரும்ப வருதலைப் பல இடங்களில் காணலாம்.

மரணம் குறித்து இவருடைய ஆழ்ந்த சிந்தனைகள் படிக்கும் தோறும் புதுப்புதுச் சிந்தனைகள் வளர்ப்பதாக அமைகின்றன. கவிஞரின் விரிந்த பார்வை, ஆழமான நோக்கு, தத்துவ நிலை போன்றவைகளை எல்லாம் வெளிப்படுத்தும் நிலையில் மரணம் என்ற சொல்லாட்சி பயன்படுத்தப் பெற்றுள்ளது.

"மரணத்தை நேசபாவத்தோடு பார்ப்பதற்கு என் அனுபவங்களே காரணமாக இருந்தன"[100] என்று தன் வாழ்வியல் குறிப்பில் அவர்தம் உளப்பாங்கினை வெளிப்படுத்துகிறார்.

பல கட்டுரைகளிலும் கவிதைகளிலும் மரணம் குறித்துச் சிந்தனைகளை எழுதியுள்ளார். "மரணம் முற்றுப்புள்ளி அல்ல"[101] என்ற நூலும், "மரணம் என்ற அழகு"[102], "மரணம்"[103] போன்ற கவிதைகளில் மரணம் குறித்த விரிந்த சிந்தனைகள் இடம்பெறுமாறு கவிதை செய்துள்ளார்.

**6. கவிஞர் வாசகர் உறவு:-**

இலக்கியத்தில் உளவியல் நிலைகள் குறித்த அணுகுமுறைகளில் கவிஞர்-வாசகர் உறவு குறிப்பிடத்தகுந்த ஒன்றாகும். அஃதாவது கவிஞர் இயற்றும் இலக்கியம் வாசகரிடம் என்ன தாக்கத்தை உருவாக்கியிருக்கிறது? என்பதை மதிப்பிடுவதற்கு முற்சுட்டிய உறவுநிலை பயன்படுமெனலாம்.

அப்துல் ரகுமான் கவிதைகள் குறித்து வாசகர்கள் பல கருத்துக்களைக் கொண்டுள்ளனர். அப்துல் ரகுமானிடம் உள்ள "புதுமை

வேட்கை" வாசகர்களுக்குப் புலப்படுகிறது. எனினும், இவரது கவிதைகளில் இடம்பெறும் "புரியாமை நிலையையும்" வாசகர்கள் உணர்ந்துள்ளனர்.

புதுமை வேட்கை:-

கவிஞரின் புதுமை வேட்கைக் காரணமாக "மீமெய்ம்மையியக் கவிதைகள்" உருவாயின. மேனாட்டு இலக்கியங்களின் தாக்கங்கள் இவரிடம் நிறைந்திருப்பதால் அத்தாக்கத்தைப் பயன்படுத்திக் கவிதைகள் பல புனைந்துள்ளார். அவ்வகையில் அப்துல் ரகுமான் தமிழுக்குப் பல புதுமைகள் செய்தவராகத் திகழ்கிறார். அப்துல் ரகுமானின் ஒவ்வொரு கவிதைத் தொகுப்பும் ஒரு புதுமையைக் காட்டி நிற்பதைக் காணலாம்.

"பால்வீதி" மீமெய்ம்மையியக் கவிதைகளைக் கொண்ட கவிதைத் தொகுப்பாகும். "நேயர்விருப்பம்" மரபுக் கவிதையின்பம் கெழுமிய கவியரங்கக் கவிதைகளாகும். வடிவப் பரிசோதனைகள் "சுட்டுவிரலில்" இடம் பெற்றிருக்கின்றன. "ஆலாபனை" தத்துவக் கவிதைகளின் கருவூலமாகத் திகழ்கிறது. இவைகளை எல்லாம் கருத்தில் கொண்டே வாசகர்கள் அப்துல் ரகுமானிடம் உள்ள புதமைப் படைப்புகளை வரவேற்கின்றனர்.

புரியாத்தன்மை:-

அப்துல் ரகுமான் கவிதைகளில் புரியாத இருண்மைத் தன்மை இருப்பதைப் பலர் குறிக்கின்றனர். குறிப்பாக தெ. ஞானசுந்தரம் குறிப்பிடுகையில் "அப்துல் ரகுமான் இலக்கியப் படைப்புகள் அடர்த்தி மிக்கவை"[104] என்று குறிப்பிடுகிறார். அப்துல் ரகுமான் "பால்வீதி தொகுதி மூலம் தன்னை ஒரு சோதனை இலக்கியவாதியாக இனம் காட்டிக் கொண்டவர். கவிதையை நேரடியாகத் தராமல் உவமைகள் உருவகங்கள் படிமங்கள் குறியீடுகளின் வழி வெளியீட்டுமுறையை அமைத்துக் கொண்டதால் "பால்வீதி" புரியவில்லை என்று பரவலாகக் குறை கூறப்பட்டது"[105] என்று பாலா கூறுவது குறிக்கத்தக்கதாகும்.

அப்துல் ரகுமானுடைய கவிதையைப் படிப்பவர்களுக்கு இலக்கிய அறிவும் பயிற்சியும் மட்டும் இருந்தால் போதாது படிமங்கள் குறியீடுகள் அவற்றைப் பயன்படுத்திய பாங்கு அகப்புற உணர்ச்சிகளை கவிஞர் எங்ஙனம் வடித்தெடுக்கிறார் என்பதை எல்லாம் அறிந்தவரால்தான் அப்துல் ரகுமான் கவிதையை நுகர முடியும் என்பது பரவலான கருத்தாகும்.

அப்துல் ரகுமான் தன் கவிதையைக் குறித்து குறிப்பிடுகிற போது,

"விரகம் உடுத்திய
இந்தக்
காமுகரின் விரதைகளிடம்
தாலிகளுடன்
அலிகளை அனுப்பிவிடாதீர்கள்"[106]

என்று குறிப்பிடுகிறார். தம்முடைய கவிதைகளைப் புரிந்து கொள்பவர்கள் ஆற்றல் மிக்கவர்களாக இருக்க வேண்டும் என்கிறார். இக்கவிதைகளில் அலிகள் என்பது கவிதையைச் சரியாக நுகர முடியாதவர்களைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

இவரது கவிதைகளில் புரியாத்தன்மை நிறைந்திருப்பதற்குச் செறிவும் - சொற்சிக்கனமும் குறிப்பிடத்தக்க காரணங்கள் எனலாம். "சுண்டக் காய்ச்சி, கெட்டிப்படுத்தப்பட்ட நிலையாகக் கவிதை அமைய வேண்டும்"[107] என்று அப்துல் ரகுமான் கூறுகிற சிந்தனை இங்குக் கருதத்தக்கதாகும்.

"கோடிச் சூரியர்களைப் பிழிந்து
நட்சத்திரங்கள் செய்தேன்
இவைகளை -
உங்கள் சுவர்களில்
தேதித்தாள் ஆக்கிவிடாதீர்கள்"[108]

என்று கவிஞர் குறிப்பிடுகிறார். இக்கவிதையின் மூலம் உருவத்திலும், ஆற்றலிலும் பெரியதான சூரியனைச் சுருக்கி நட்சத்திரமாகத் தருவதாகக் குறிக்கிறார். பெரிய செய்திகளை, வெளிச்சம் எனும் அறிவு தரும் ஆற்றல்

வாய்ந்ததைச் சுருக்கித் தருவதாகத் தம் கவிதை அமைந்துள்ளன என்று கூறுகிறார்.

கவிஞரின் புதுமை வேட்கை பலரைக் கவர்ந்துள்ளது. பலரை வியப் படைய வைத்துள்ளது. இவர் கவிதைகளில் உள்ள புரியாமைக்குக் காரணம் கவிதைக்கு விளக்கம் கூறி நிற்கும் தேவையற்ற சொற்கள் இல்லாத சுருக்க வடிவம் எனலாம். மேலும் புது உத்திகளைப் பயன்படுத்தியமை (குறியீடு, படிமம்) போன்றவைகள் குறிப்பிடத்தகுந்த காரணிகள் எனலாம். புரியாத நிலை இவரது கவிதைக்குக் குறையை உண்டாக்கவில்லை என அறிஞர்கள் குறிக்கின்றனர். குறிப்பாக க. பஞ்சாங்கம் குறிப்பிடுகையில் “ரகுமானின் கவிதைகளும் இப்படித்தான் பெருமை வந்து சேர்ந்திருக்கிறது இன்று படித்தாலும் அதிலே உறைந்துள்ள இருண்மை சவால் விடுகிறது. அதன் மூலமாக வாசிப்பு என்பது நிரந்தரப்படுத்தப்படுகிறது”[109] எனும் கூற்றினை நோக்கலாம். இத்தகு புரியாத்தன்மை எதிர்ப்பைப் பெற்ற நிலை குறித்து கவிஞரிடம் வினவியபோது, “வாசகர்களின் ஆழமின்மைக்குத் தான் பொறுப்பில்லை” 110 என்கிறார்.

## முடிவுகள்

ஃபிராய்டின் உளவியல் சிந்தனையை உளவியலுடன் தொடர்புபடுத்தி ஆராய்ந்தனர். குறிப்பாக உளவியல் பகுப்பாய்வு முறையை ஃபிராய்டு செயல்முறைப்படுத்தியுள்ளார். ஃபிராய்டின் கருத்துப்படி, படைப்பின் உருவாக் கத்திற்கு ஆசிரியரின் ஆளுமைத்தன்மையின் பாதிப்பும் இருக்கும் என்பது கோட்பாட்டுச் சிந்தனையாகும். படைப்பிலக்கிய எழுத்தாளர்களைப் பகற்கனவு காணுதல் நிலையில் ஃபிராய்டு தொடர்புபடுத்தியுள்ளார்.

மனிதஇனத்தில் பரம்பரை பரம்பரையாகச் சில பதிவுகள் கூட்டுநனவிலி மனத்தில் இருக்கும் என்பது கார்ல்யுங்கின் கருத்தாகும். இப்பதிவுகள் கலைப் படைப்புகளில் வெளிப்படும் என்பது யுங்கின் சிந்தனையாகும்.

ஃபிராய்டினுடைய உளவியல் கோட்பாடு வளர்ந்தபின் இலக்கியத்தில் பெரும் மாறுதல்கள் நிகழ்ந்தன. மீமெய்ம்மையியம், எக்ஷ்டென்ஷ்ஷியலிசம் போன்றவை புதுமை நோக்கில் வளர்ந்தன.

அப்துல் ரகுமான் உணர்வுகள் உற்சாகங்களை உள்வாங்கி, அனுபவத்தைக் கவிதைப் படைப்பாக வழங்குவதில் தனித்திறன் உடையவர். அப்துல் ரகுமான் அழகியல் ஒத்துணர்வுடன் கவிதைகளை யாத்துள்ளார் என்பது ஆய்வில் உணரப்பெற்றது. கவிஞர் தெருவிலுள்ள புகைப்போக்கி கூட, இவரின் மனதில் பதிந்து அனுபவ உணர்வை வெளிப்படுத்தும் வகையில் கவிதைகள் செய்துள்ளார்.

மீமெய்ம்மையியக் கவிதைகள் நனவிலி மனத்தை அடிப்படையாகக் கொண்டவை. நனவிலி மனத்தில் உள்ள எண்ணங்களையும் ஆசைகளையும் வெளிப்படுத்திக் கவிதைகள் பல யாத்துள்ளார். குறிப்பாக இவரது கவிதைத் தொகுப்பான “பால்வீதியில்” மீமெய்ம்மையியக் கவிதைகள் மிகுதியாக உள்ளன. ஆழ்மனப்படிமங்களின் சேர்க்கையுடன் இவ்வகைக் கவிதைகள் அமைந்துள்ளன.

படைப்பாளியின் சொந்த வாழ்க்கை, சமுதாயச் சூழல் போன்றவை சுய வரலாற்றுப் போக்குடன் கவிதையில் வெளிப்படும் உளவியல் இயல்பு அப்துல் ரகுமான் கவிதைகளிலும் உண்டு. வறுமை, நிறைவேறாக்காதல், கலை வேட்கை போன்றவை கவிஞரின் சுய வரலாற்றைச் சார்ந்த ஆழ்மனப் பதிவுகளாக இருப்பதைக் கவிதைகளின் வழி அறியலாம்.

கவிஞர் காலச் சமூகத்தின் சீர்கேடுகள் மனப்பதிவில் இருந்து கவிதையில் வெளியிடப்பெற்றுள்ளன. மக்கள் அறியாமையில் இருக்கிற நிலை, விழிப்புணர்வு இல்லாமல் இருக்கிற நிலை, அரசியல் சீர்கேடு, திரைப்பட மோகம் போன்றன அவல உணர்வாகக் கவிஞரைப் பாதித்துள்ளன. மக்களின் அறியாமையைப் பயன்படுத்தி, ஏமாற்றுகிறவர் ஆள்வதும், அதிகாரம் செய்வதும் நடைமுறையில் இருப்பதைக் கவிஞர் கவிதைகளில் வெளிப்படுத்தியுள்ளார்.

கவிஞர் தம் கவிதைகளில் இராமன், சீதை, கிருஷ்ணன், சகுனி, பாண்டவர்கள், கௌரவர்கள் போன்ற கதைமாந்தர்களை இடம்பெறச் செய்துள்ளார். தமிழ் இலக்கியத்தில் இடம்பெறும் கண்ணகி, உதயகுமாரன் போன்ற கதைமாந்தர்களையும் கவிதைகளில் காட்டியுள்ளார்.

கம்பன்கழகக் கவியரங்குகளில் கவிஞர் மிகுதியாகப் பங்கேற்றவர் ஆதலால் இராமன், சீதை கதைமாந்தர்களை மிகுதியாகப் பயன்படுத்தி யுள்ளார். பழைய கதைமாந்தர்களை வித்தியாசமான போக்கில் படைத்துக் காட்டுவதில் கவிஞர் தனித்திறன் உடையவர்.

இந்துசமயப்புராணத் தொல்படிவங்கள், இதிகாசத் தொல்படிவங்கள் ஆகியவற்றை மிகுதியாகக் கையாண்டுள்ளார். அடிமுடி தேடுதல், பாற்கடல் கடைதல், வாமணன் விசுவரூபம் எடுத்தல், நெற்றிக்கண் தொடர்பானவை, தவத்தைக் கலைத்த மேனகை கதை போன்றவை குறிக்கத் தகுந்த புராணத் தொல்படிவங்களாகக் கவிதைகளில் இடம் பெறச் செய்துள்ளார்.

கிறிஸ்துவச் சமயம் சார்ந்த தொல்படிவங்களில் இயேசு சிலுவையில் அறையப்படுதலையும், உயிர்த்தெழுதலையும் குறித்துப் பல கவிதைகளில் பாடியுள்ளார். கிறிஸ்துவரல்லாத கவிஞராகிய அப்துல் ரகுமான் விவிலியத்தி லிருந்து மிகுதியான தொல்படிமங்களைக் கையாண்டிருப்பது குறிப்பிடத் தகுந்தது.

அப்துல் ரகுமான் சிறந்த குறியீட்டுக் கவிஞராக விளங்குவதைப் போல சிறந்த தொன்மக்கவிஞராகவும் உள்ளார். தொன்ம உத்திக்குப் புலப்பாட்டுச் சக்தி மிகுதி என்பதைக் கவிஞர் உணர்ந்திருக்க வேண்டும்.

கவிஞரின் உள்ளத்து உணர்வுகளில் சில சொற்கள் பதிவுகளாக உள்ளன. இச்சொற்களைக் கவிதைகளில் மிகுதியாக ஆள்வதை ஆய்வின் வழி உணரப்பெற்றது. நட்சத்திரம், இரவு, நிழல், மரம், ஆடை, இமை, கண்ணீர், கனவு, மரணம், மௌனம் போன்ற சொற்கள் கவிஞர் ஆழ்மனதில் பதிவுபெற்ற சொற்களாக உள்ளன.

அப்துல் ரகுமானிடம் புதுமை வேட்கையுள்ளது. இருப்பினும் கவிதை களில் புரியாமை நிலை இருப்பதையும் வாசகர்கள் உணர்ந்துள்ளனர். மீமெய்ம்மையியக் கவிதைகள் புதுமை வேட்கைக்குச் சான்றாக அமைந் துள்ளன. புரியாமை நிலைக்குக் காரணமாகக் கவிதைகளில் இடம் பெறும் செறிவும், சொற்சிக்கனமும் என மதிப்பிடலாம். கவிஞர் பயன்படுத்துகிற குறியீடு, படிமம் போன்ற உத்திகள் புரியாமை நிலைக்கு மேலும் துணையா கின்றன. வாசகர்களின் ஆழ்மனத் தன்மையினையும் கவிதையை அனுபவிக்கும் ஆற்றலும் பெற்றிருந்தால் புரியாமை நிலை என்கிற இருண்மை நிலை நீங்கிவிடும் என்பது மதிப்பிடப் பெற்றது.

## குறிப்புகள்

1. கு. பகவதி (ப.ஆ), திறனாய்வு அணுகுமுறைகள், ப.110.
2. சு. சண்முக சுந்தரம், நாட்டுப்புறவியலில் உளவியல் பார்வை, ப.1.
3. கு. பகவதி (ப.ஆ), திறனாய்வு அணுகுமுறைகள், ப.110.
4. சி.இ. மறைமலை, இலக்கியமும் உளவியலும், ப.2.
5. மேலது.
6. தி.சு. நடராசன், திறனாய்வுக் கலை, ப.85.
7. கு. பகவதி (ப.ஆ), திறனாய்வு அணுகுமுறைகள், ப.112.
8. மேலது, பக்.115-116.
9. சி.இ. மறைமலை, இலக்கியமும் உளவியலும், ப.12.
10. கு. பகவதி (ப.ஆ), திறனாய்வு அணுகுமுறைகள், ப.116.
11. தி.சு. நடராசன், திறனாய்வுக் கலை, ப.86.
12. "Freudism : Freud (1856-1939) His student Carl Gustave Jung's theory of the collective unconscious based upon the evidence provided by mythology and by the dreams and fantasies of his patients, which seemed to derive from the common experience of primitive society rather than from the personal experience of the individual ".

    G. John Samuel, Studies in Tamil poetry, P.119.
13. "The literary and philosophical moments such as surrealism and Existentialism are based on the investigations of Freud. Our New Poetry movement also is highly influenced by the psychonalytic methods of Freud.

    G. John samuel, Studies in Tamil Poetry, P. 119.

14. “Surrealism orginated in France after the First World War as an attempt to give expression to the real functioning of thought through pure psychic antomatism, by means of spoken or writen word or by any other means available ”.

G. John samuel, Studies in Tamil Poetry, P. 119.

15. தி.சு. நடராசன், திறனாய்வுக் கலை, ப.86.
16. மேலது, ப.88.
17. அப்துல் ரகுமான்,(என் பேனாவின் அடிச்சுவட்டில்),முத்தாரம்,10.3.95,பக்.1-2.
18. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.147.
19. மீரா, (பூவோடு சேர்ந்த நாராய்), கவிக்கோ மணிவிழாமலர், 1998, ப.319.
20. மேலது.
21. அப்துல் ரகுமான்,(என் பேனாவின் அடிச்சுவட்டில்), முத்தாரம்,22.12.95, பக்.24-25.
22. அப்துல் ரகுமான், (கவிதை செத்தால் மனிதம் செத்துவிடும்), சுபமங்களா, 1.1.1994, ப.10.
23. அப்துல் ரகுமானிடம் 15.5.98 அன்று கலந்துரையாடலில் பெற்ற செய்தி.
24. அப்துல் ரகுமான், மரணம் முற்றுப்புள்ளி அல்ல, ப.47.
25. மேலது, பக்.49-51.
26. தி.சு. நடராசன், திறனாய்வுக் கலை, ப.91.
27. அப்துல் ரகுமான்,(என் பேனாவின் அடிச்சுவட்டில்), முத்தாரம், 13.1.95,ப.1.
28. செய்யது அப்துல்லா, (மகதி என்ற மாபெரும் சிந்தனையாளர்), கவிக்கோ மணிவிழாமலர், 1998, ப.16.
29. அப்துல் ரகுமானிடம் 15.5.98 அன்று கலந்துரையாடலில் பெற்ற செய்தி.
30. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.44.
31. மேலது, ப.71.
32. அப்துல் ரகுமான், நேயர் விருப்பம், ப.87.

33. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.35.
34. முருகு சுந்தரம்,(அதனால் தான் அவர் கவிக்கோ),கவிக்கோ மணி விழாமலர், 1998, ப.73.
35. அப்துல் ரகுமான்,(என் பேனாவின் அடிச்சுவட்டில்),முத்தாரம்,3.12.94, ப.1.
36. மேலது, 14.7.95, ப.30.
37. மேலது, 30.7.95, ப.31.
38. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.23.
39. கவிக்கோ மணி விழா மலர், 1998, பின்னிணைப்பு படம்.
40. அப்துல் ரகுமான்,(என் பேனாவின் அடிச்சுவட்டில்),முத்தாரம், 2.8.96. ப.24.
41. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.47.
42. மேலது, ப.26.
43. அப்துல் ரகுமான், (என் பேனாவின் அடிச்சுவட்டில்), முத்தாரம், பக்.22-23.
44. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.85.
45. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.16.
46. மேலது, ப.59.
47. அப்துல் ரகுமான், (கவிதை செத்தால் மனிதம் செத்துவிடும்), சுபமங்களா, 1994, ப.15.
48. அப்துல் ரகுமான், (என் பேனாவின் அடிச்சுவட்டில்), முத்தாரம், ப.47.
49. மேலது, 9.5.95, ப.37.
50. மேலது, 14.3.95., ப.25.
51. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.48.
52. மேலது, ப.38.
53. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.114.
54. மேலது, ப.20.
55. மேலது, ப.76.
56. மேலது, ப.67.
57. மேலது, ப.61.
58. மேலது, ப.46.

59. மேலது, ப.113.
60. மேலது. ப.120.
61. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.53.
62. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.51.
63. மேலது, ப.52
64. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.91.
65. வை. சச்சிதானந்தம், மேலைஇலக்கியச் சொல்லகராதி, ப.16.
66. நார்த்ராப்.ஃப்ரை, க.பஞ்சாங்கம் (மொ.பெ.ஆ), இலக்கியத்தின் தொல்படிவங்கள், ப.11.
67. மேலது, ப.9.
68. மேலது, ப.14.
69. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.47.
70. மேலது, ப.22.
71. மேலது, ப.23.
72. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.35.
73. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.5.
74. அப்துல் ரகுமான், மரணம் முற்றுப் புள்ளி அல்ல, ப.11.
75. மோசசு, மைக்கேல் பாரடே, (அப்துல் ரகுமான் கவிதைகளில் விவிலியத் தாக்கம்), கவிக்கோ மணிவிழாமலர், 1998, ப.283.
76. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.95.
77. மு. சுதந்திரமுத்து, (அப்துல் ரகுமான் கவிதைகளில் இந்துத் தொன்மங்கள்), கவிக்கோ மணி விழாமலர், 1998, ப.280.
78. இன்குலாப், (கருப்பு நிலா என் வானத்திலே), கவிக்கோ மணி விழா மலர், 1998, ப.41.
79. நா. மகாலிங்கம், (சமரச ஞானக் கவிக்கோ), கவிக்கோ மணி விழா மலர், 1998, ப.36.
80. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.3.

81. சி.இ. மறைமலை, இலக்கியமும் உளவியலும், ப.82.
82. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.83.
83. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.6.
84. அப்துல் ரகுமான், (என் பேனாவின் அடிச்சுவட்டில்), முத்தாரம், 10.11.95, பக்,28.29.
85. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.76.
86. அப்துல் ரகுமான், ஆலாபனை, ப.42.
87. அப்துல் ரகுமான்,(என் பேனாவின் அடிச்சுவட்டில்), முத்தாரம், 21.4.95, ப.21.
88. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.21.
89. மேலது, ப.21.
90. மேலது, ப.45.
91. மேலது, ப.22.
92. அப்துல் ரகுமான், சொந்தச் சிறைகள், ப.19.
93. அப்துல் ரகுமான், ஆலாபனை, ப.105.
94. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.35.
95. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.67.
96. அப்துல் ரகுமான், (என் பேனாவின் அடிச்சுவட்டில்), முத்தாரம்,7.9.95, ப.21.
97. மேலது, 28.9.95, ப.29.
98. அப்துல் ரகுமான், ஆலாபனை, ப.24.
99. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.99.
100. அப்துல் ரகுமான், (என் பேனாவின் அடிச்சுவட்டில்), முத்தாரம், 28.7.95, ப.31.
101. அப்துல் ரகுமான், மரணம் முற்றுப்புள்ளி அல்ல, முன் அட்டை.
102. அப்துல் ரகுமான், ஆலாபனை ப.119.
103. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.24.

104. தே. ஞானசுந்தரம், (கவிதைகளா? கட்டுரைகளா?), கவிக்கோ மணி விழா மலர், 1998, ப.58.

105. பாலா, புதுக்கவிதை ஒரு புதுப்பார்வை, பக்.188-189.

106. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.6.

107. அப்துல் ரகுமான், விலங்குகள் இல்லாத கவிதை, ப.8.

108. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.6.

109. க.பஞ்சாங்கம், (மொழியே விளையாட்டுப் பொருளாய்), கவிக்கோ மணி விழா மலர், 1998, ப.82.

110. காண்க : நேர்முகப் பேட்டி - பின்னிணைப்பு - 2.

# இயல் 6

## பரிசோதனை முயற்சிகள்

பரிசோதனை முயற்சிகள்

வடிவம் தொடர்பானப் பரிசோதனை முயற்சிகள்

ஹைகூ கவிதைகள்

சிந்தர்

இருசீர் வடிவக் கவிதைகள்

“கீத்” இசைப்பாடல்கள் வடிவங்கள்

உருவகக் கதைக் கவிதை வடிவம்

நாடகம் வடிவம்

உரைநடை வடிவம்

சொற்பொழிவு வடிவம்

உத்தியில் புதுமை

மீமெய்ம்மையியக் கவிதைகள்

கனவுத் தன்மை

புதமைக் காட்சி.

## 6. பரிசோதனை முயற்சிகள்

தமிழ்க் கவிதை உலகில் புதுக்கவிதை செல்வாக்குப் பெற்று விளங்குகிறது. புதுக்கவிதையின் வளர்ச்சி புதுமையின் அடித்தளத்தில் நிகழ்வதாகக் கூறலாம். மேனாட்டு இலக்கிய அறிவு, மேனாட்டு இலக்கிய இயக்கம் போன்றவை புதுக்கவிதைகளில் புதுப்புதுப் பரிசோதனைகளை நிகழ்த்தும் காரணிகளாகின்றன. இக்காலத்திய புதுமை வேட்கையும், தேடல் உணர்வும் பரிசோதனை முயற்சியை மேலும் ஊக்கப்படுத்துகின்றன.

இக்காலப் புதுக்கவிதைக் கவிஞர்களுள் புதுக்கவிதையில் பரிசோதனை முயற்சிகளைச் செயல்முறைப் படுத்திப் பார்த்தவர்கள் மிகச் சிலரே ஆவார். அவர்களுள் அப்துல்ரகுமான் குறிப்பிடத்தகுந்தவர் ஆவார்.

**பரிசோதனை முயற்சிகள்:-**

புதுக்கவிதையில் பரிசோதனை முயற்சிகள் பல நிலைகளில் அமையலாம். வடிவம், உள்ளடக்கம், உத்தி போன்றவைகள் பரிசோதனை முயற்சிகளுக்கானக் களங்களாகின்றன. அப்துல்ரகுமான் இம்மூன்றிலும் பரிசோதனை முயற்சிகளைச் செயல்முறைப்படுத்திப் பார்த்துள்ளார். உள்ளடக்கத்தில் இவர் செய்த பரிசோதனை முயற்சிகள் முற்பகுதியில் உள்ள உள்ளடக்கம் என்ற ஆய்வுக் கட்டுரையில் விளக்கமாகக் கூறப்பெற்றுள்ளது. குறிப்பாக ஆலாபனை என்ற கவிதைத் தொகுப்பில் உள்ளடக்கப் பரிசோதனை சற்று மிகுந்துள்ளதாகக் குறிப்பிடலாம். ஆலாபனையின் பின் அட்டையில்,"வாழ்க்கையை இதுவரை யாரும் காணாத புதிய கோணத்திலிருந்து பார்க்கும் கவிக்கோவின் அற்புதமான தரிசனங்கள் வசன கவிதையின் வசந்த நடையில் வியப்பூட்டுகின்றன"[1] என்று அறிஞர்மதிப்பிட்ட நிலையும் இங்கு கருதத்தக்கதாகும்.

எடுத்துக்காட்டு விளக்கத்திற்காக ஒரு கவிதையினை இங்குக் காணலாம்.

'ஆறாவது அறிவு' என்ற தலைப்பில்,

"உயிரினங்களில்

மனிதன் மட்டும்தான்

பாலுணர்வையும்

பிரச்சினையாக்கிக் கொண்டவன்

ஆறாவது அறிவு என்பது

சிக்கல் விழுந்த நூலா?"[2]

என்று கேட்கும் புது நோக்கு, புது உள்ளடக்கப் போக்கு, புதிய அணுகு முறையை இக்கவிதையில் காணலாம். இவ்வாறு உள்ளடக்கப் பரிசோதனைகள் பல செய்துள்ளார்.

வடிவம், உத்தி போன்ற நிலைகளில் அப்துல்ரகுமான் செய்த பரிசோதனை முயற்சிகள் இவ்வியலில் விரிவாக ஆராயப்பெற இருக்கின்றன.

**வடிவம் தொடர்பான பரிசோதனை முயற்சிகள்:-**

அப்துல்ரகுமான் புதுக்கவிதை வடிவப்பாங்கில் கீழ்க்கண்ட நிலைகளில் பரிசோதனைகளை நிகழ்த்தியுள்ளார்.

1. 'ஹைகூ' கவிதைகள்
2. இருசீர்வடிவக் கவிதைகள்
3. கீத், இசைப் பாடல்கள் வடிவிலானக் கவிதைகள்.
4. உருவகக் கதைக் கவிதை, நாடகம், உரைநடை, சொற்பொழிவு போன்ற வடிவிலான கவிதைகள்.

போல்வனவாகும்.

அப்துல்ரகுமான் தாம் செய்த பரிசோதனை முயற்சிகள் குறித்து நேர்காணலில் குறித்துள்ளமை ஆய்வுக்கு உதவுகிறது.[3]

‘ஹைகூ’ கவிதைகள்:-

கவிதை வடிவங்களில் ‘ஹைகூ’ வடிவம் மிகச் சிறியதாகும். ஜப்பானியர் ஹைகூக் கவிதைகளை வடிப்பதில் பெரும் ஆர்வம் காட்டு கின்றனர். இவர் தம் கவிதைகள் பெரும்பாலும் மூன்றடிகளாக இருக்கும். முதல் அடியில் ஐந்துசீர்களும் அடுத்த அடியில் ஏழுசீர்களும் இறுதி அடியில் ஐந்து சீர்களும் கொண்ட மூன்றடிகளாக இருக்கும்.

மகாகவி பாரதியார் ‘ஜப்பானியக் கவிதைகள்’ என்ற தலைப்பில் ஹைகூக் கவிதைகள் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இலக்கியத்தின் பல புதிய முயற்சிகளுக்குப் பாரதியார் முன்னோடியாகத் திகழ்கிறார். அவ்வகையில் தமிழ்க் கவிதையுலகில் ஹைகூ வடிவத்தை முதலில் சிந்தித்தவர் பாரதியார் எனக் கூறலாம்.

தமிழ்ப் புதுக்கவிஞர்களுள் அப்துல்ரகுமான் ‘ஹைகூ’ வடிவம் குறித்துச் சிறப்பாக சிந்தித்துள்ளார். “1969-இல் நடை இதழில் சி. மணி 10 ஜப்பானியக் கவிதைகளை மொழிபெயர்த்தார். 1969-இல் சில கவிதைகள் “கணையாழி” இதழில் மொழிபெயர்க்கப்பட்டு வந்தன. 1974 இல் வெளியிடப் பட்ட அப்துல் ரகுமானின் பால்வீதி எனும் கவிதைத் தொகுப்பில் “சிந்தர்” என்ற தலைப்பில் உள்ள கவிதைகள் முதன் முதலில் படைக்கப் பட்டன”[4] என்று குறிப்பிடுகிற கருத்து இங்கு சிந்தனைக்குரியதாகும். அவ்வகையில் மொழி பெயர்ப்பு நிலையில் வந்த கவிதைகளை விடுத்து முதன் முதலில் தமிழ் மொழியில் ஹைகூக் கவிதைகள் யாத்தவர் அப்துல் ரகுமான் என்பது புலனாகிறது. அக்கவிதைகள் இவரது பரிசோதனை முயற்சியின் கருவூலமான பால்வீதியில் “சிந்தர்” எனும் தலைப்பில் தொகுக்கப் பெற்றன.

“1974 இல் வெளிவந்த பால்வீதியில் “சிந்தர்” என்ற அர்த்தம் செறிந்த தலைப்பில் அப்துல் ரகுமான் எழுதிய ‘ஹைகூ’க்கள் வெளிவந்தன. இந்த ‘ஹைகூ’ களை ‘எழுத்து’ வாக்கில் எழுதியதாக அவர் குறிப்பிடுகிறார்.

ஹைக்கூவின் வடிவம் மட்டுமின்றி அதன் மற்ற பரிணாமங்களையும் அப்துல்ரகுமான் கவிதைகளில் காணமுடிகிறது. எனவே இவற்றைத் தமிழில் வெளிவந்த முதல் ஹைக்கூக் கவிதைகள் எனலாம்”[5] இக்கருத்தின் வழி அப்துல் ரகுமான் எழுத்துக் காலத்திலேயே ஹைகூ வடிவ முயற்சிகளில் ஈடுபட்டிருக்கிற நிலையை அறியலாம். வடிவத்திற்காக மட்டுமின்றி பிற பரிணாமங்களையும் மதிப்பிடுவதற்கு இவர்தம் ‘ஹைகூ’ கவிதைகள் பயன்படும் என அறிஞர்கள் மதிப்பிடுகின்றனர். மேலும் சிந்தர் கவிதைகள்தான் முதல் ஹைகூக்கவிதைகள் என்று குறிப்பிடுவதும் குறிக்கத் தகுந்ததாகும்.

மேற்குறித்த ‘ஹைகூ’ இலக்கணத்திற்கு மாறாக அப்துல்ரகுமான் குறிப்பிடும் போது,

‘ஹைகூ’வில் இடம் பெறும் அசைகளை விட்டு விட வேண்டும். நாம் கடைப்பிடிக்க வேண்டிய இரு மரபுகள் உண்டு. ‘ஹைகூ’வில் முதல் இரண்டு அடிகள் ஒரு கூறு; ஈற்றடி ஒரு கூறு ‘ஹைகூ’வின் அழகும் ஆற்றலும் ஈற்றடியில் தான் இருக்கிறது. அது ஒரு திடீர் வெளிப்பாட்டை, உணர்வு அதிர்ச்சியை ஏற்படுத்தி முழுக்கவிதையையும் வெளிச்சப்படுத்தும். மற்றொரு மரபு ‘ஹைகூ’வின் மொழி அமைப்பு. ஊழல் சதையற்ற மொழி, தந்தி மொழியைப் போல், அவசியமற்ற இணைப்புச் சொற்களை அது விட்டுவிடும். ஈற்றடியில் பெயர்ச்சொல்லையே பயன்படுத்தும். இந்த இரு மரபில்தான் ‘ஹைகூ’வின் அடையாளமும், அழகும் ஆற்றலும் உள்ளன[6] என்பது கவனிக்கத்தக்கதாகும்.

சிந்தர்:

சிந்தர் என்பதற்குக் குள்ளர் என்று அர்த்தம். மிகச்சிறிய வடிவத்தைக் குறிக்கும் சொல்லாட்சியான இதனையே தன் ‘ஹைகூ’ கவிதைகளின் தலைப்பாகக்கொண்டு பால்வீதியில் ஐந்து ‘ஹைகூ’களை அப்துல்ரகுமான் எழுதியுள்ளார்.

காதலியின் நினைவு காதலனை உறங்கவிடாமல் அடிக்கடி நச்சரிப்பதை,

"இரவெல்லாம்
உன் நினைவுகள்
கொசுக்கள்"[7]

என்று குறிப்பிடுகிறார்.

இயற்கைக்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பை,

"பனித்துளி இல்லாப்
பூவின் இமைகளில்
வீழ்ந்ததென் கண்ணீர்"[8]

என்று சுட்டுகிறார். பனித்துளி உள்ள பூதான் அழகானது. பனித்துளி இல்லாத பூ அழகிழந்தது. அழகினை இழந்த பூவுக்காக மனிதன் அழும் இரக்க உணர்வை இக்கவிதை காட்டுகிறது.

"இளவேனில் இரவு
நட்சத்திர முள்ளில்
விரக நிலவு"[9]

என்று பாடுகிறார். இக்காட்சியின் மூலம் பல செய்திகள் அறியப்பெறுகின்றன. விரகதாபப் பூ முட்களில் பூத்துள்ளது. எல்லை மீறித் தடுமாறினால் சேதமடைய நேரிடும் என்பதை இக்கவிதை சுட்டுகிறது.

பிறப்பு இறப்பு என்ற முரணால் அர்த்தப்படுவதுதான் வாழ்க்கை எனும் கருத்தை,

"மயான வாசலில்
பழுதாகி நின்றது
ஈனில் ஊர்தி"[10]

என்று குறிப்பிடுகிறார். பிள்ளைப் பேறு வண்டி மயான வாசலில் பழுதாகி நிற்கும் ஒரு காட்சியின் மூலம் தத்துவக் கருத்து விளக்கப் பெறுகிறது.

பொறுப்போடும் எச்சரிக்கையோடும் பாதுகாப்போடும் எழுதப் பெற்ற காதலியின் காதல் கடிதம் பற்றிச் சொல்லும் போது,

"முட்டை கொண்டு
திட்டை ஏறும் எறும்புகள்
அவள் எழுத்துக்கள்"[11]

என்று குறிக்கிறார்.

2. இருசீர் வடிவக் கவிதைகள்:-

தமிழில் மிகச் சிறிய வடிவக் கவிதைகளில் ஈரடிக் குறள் வெண்பாவைக் குறிப்பர். ஓரடி நூற்பாக்களை ஒத்த ஔவையார் ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன் போன்றவைகளில் நீதிக் கருத்துக்கள் இருந்தன. அவற்றில் கவிநயம் இல்லை.

இரு சீர் வடிவக் கவிதைகளை அப்துல்ரகுமானும் படைத்துள்ளார். அவ்வகைக் கவிதைகளில் எழுத்துச் சிக்கனமும் மிகுந்திருப்பதைக் காணலாம்.

"சித்திரமின்னல்கள்" என்ற தலைப்பில் ஆறு கவிதைகள் இவ்வடிவில் யாத்துள்ளார்.

"சித்திர மின்னல்கள்" பகுதியில் இடம் பெற்றிருக்கும் கவிதைகள் வடிவமும் தமிழுக்குப் புதுமையானது. இரண்டே சீர் கொண்ட ஒரே அடி என்று இத்தனை சிறிய வடிவம் தமிழில் மட்டுமல்ல, நான் அறிந்த வரையில் வேறு உலக மொழிகளிலும் இல்லை"[12] என்று அப்துல் ரகுமான் குறிப்பிடுகிற கருத்து கருதற்குரியது.

நேயர்விருப்பம் என்ற கவிதைத் தொகுப்பில் "சித்திர மின்னல்கள்"[13] என்ற கவிதைத் தலைப்பு இடம்பெற்றுள்ளது. இத்தலைப்பில் இடம் பெற்றுள்ள கவிதைகள் இரு சீர் வடிவக் கவிதைகளுக்குச் சான்றுகளாகும்.

எ.டு. திருக்குறளை "மும்முலைத்தாய்" என்றும், புத்தகத்தை, "கற்பிழக்காத பரத்தை" என்றும் தாஜ்மஹாலை , "பெண்டளையால் இயன்ற வெண்பா" என்றும் மின்மினியை, "சிறகுத்தாரகை" என்றும் கற்பனையை "பூசலார் நாயனார்" என்றும் குறிப்பிடுவது நோக்கத்தக்கதாகும்.

**3. 'கீத்' இசைப்பாடல்கள் வடிவங்கள்:-**

அப்துல்ரகுமானின் பரிசோதனை முயற்சிகளில் மேனாட்டு இலக்கிய வடிவங்களைத் தமிழில் புகுத்த விழைந்தமையும் ஒன்றாகும். இவ்வகை முயற்சியில் ஐந்து கவிதைகளை எழுதியுள்ளார். அக்கவிதைகள் நேயர் விருப்பத்தில் இடம்பெற்றுள்ளன.

இம்முயற்சி குறித்து அப்துல்ரகுமான் சுட்டுகையில், உருது, ஹிந்தி மொழிகளில் "கீத்" என்ற இசைப்பாடல் வடிவம் ஒன்று உண்டு. இந்தத் தொகுதியில் உள்ள "மாலை வந்தது", "யாரவன் கனவில் வருகிறாள்?", "எரியட்டுமே சுடர் எரியும் வரை", "மனம் வாடும் முன்னே என்ற கவிதைகள் இந்த வடிவத்தில் எழுதப்பட்டவை. இந்த வடிவமும் தமிழுக்குப் புதிது"[14] என்று அப்துல்ரகுமான் குறிப்பிடுகிறார். இவ்வகையில் "இளவேனில்" என்ற கவிதையையும் அடக்கலாம். அக்கவிதையும் நேயர்விருப்பத்திலேயே இடம் பெற்றுள்ளது.

உருது, ஹிந்தி இசைப்பாடல்கள் மீது அப்துல் ரகுமானுக்கு இயல்பாகவே ஈடுபாடும் ஆர்வமும் உண்டு. ஹிந்திப் பாடகி லதா மங்கேஸ்கரைக் குறித்து "என் செவியின் சுவாசம்" என்ற தலைப்பில் பாடியுள்ளமை இங்கு இணைத்து நோக்கத்தக்கதாகும். இவரின் கலையார்வம் பற்றி உளவியலிலும் எடுத்துரைக்கப் பெற்றுள்ளது.

கீத் வடிவக் கவிதைகளுக்கு எடுத்துக்காட்டு விளக்கமாக ஒரு கவிதை யினைக் காணலாம்.

எ.டு. " யாரவள் கனவில் வருகின்றாள்?
யாசகப் புன்னகை புரிகின்றாள்
உள்ளப் பாலையில் ஊற்றுகள் கிளர

உணர்வுக் கொடிகளில் ஆசைகள் மலர

காதலை மழையாய்ச் சொரிகின்றாள்

யாரவள் கனவில் வருகின்றாள்?”[15]

**4. உருவகக்கதைக் கவிதை, நாடகம், உரைநடை, சொற்பொழிவு வடிவங்கள்:**

அப்துல்ரகுமானின் பரிசோதனை முயற்சிகளில் கவிதைகள் அல்லாத பிற இலக்கிய வடிவங்களைத் தம் கவிதைகளில் வடித்தமை சுட்டத்தக்க தாகும். அவ்வகையில் கவிதை வடிவிற்கு முற்றிலும் மாறுபட்ட உருவகக் கதைக் கவிதை வடிவம், நாடக வடிவம், உரை நடை வடிவம், சொற்பொழிவு வடிவம் போன்ற நிலைகளிலும் வடிவப் பரிசோதனையில் கவிஞர் ஈடுபட்டுள்ளார்.

சுட்டுவிரலில் இது குறித்து அவர் மொழிந்த போது, “என் உணர்வுகளின் சரியான வெளிப்பாட்டிற்காகப் புதுக்கவிதை, வசனகவிதை, யாப்புக் கவிதை, உருவகக் கதைக் கவிதை, நாடகம், சொற்பொழிவு என்று பல வகையான வடிவங்களைக் கையாள நேர்ந்தது”[16] என்கிறார். இத்தகைய வடிவப் பரிசோதனைக்குக் காரணங்கள் உண்டு. உணர்வுகளின் சரியான வெளிப்பாட்டு வசதி கருதியே அத்தகு புதுவடிவப் பரிசோதனைகளை மேற்கொள்ள நேர்ந்தது என்பது கவிஞரின் சிந்தனையாகும்.

உருவகக் கதைக் கவிதை வடிவம்:-

கவிஞர் தாம் கூறவிழைந்த ஒன்றை உருவகக் கதையாக அமைத்துக் கவிதை வடிப்பது இவ்வகையில் அடங்கும். இவ்வகையில் ஐந்து கவிதைகள் உள்ளன.[17]

“கொம்பு”என்ற தலைப்பில் உரிமையின்றி ஒடுக்கப்படும் வர்க்கத்தையும், அடக்கு முறை ஆதிக்கத்தையும், மக்களின் அறியாமை நிறைந்த போக்கினையும் உருவகக் கதைக் கவிதை வடிவில் உணர்த்துகிறார்.

“அந்தத் தொழுவத்தில் இரண்டு பசுமாடுகள்

இருந்தன.

எஜமானனின் ஜீவனம் இந்தப் பசுமாடுகளின்
பாலில் தான் நடந்து வந்தது.
புல்லைப் போடும்போது ஒரு பசுவுக்குக்
குறைவாகவும் மற்றொரு பசுவுக்குக் கொஞ்சம்
கூடுதலாகவும் போட்டு வந்தான் எஜமானன்.

- - - - - - -

தீவனம் போதாமல் அந்தப் பசு சில நேரத்தில்
'அம்மா' என்று கத்தும்
அப்படிக்கத்தும் போதெல்லாம் எஜமான் பசுவுக்குத்
'தண்ணி காட்டுவான்'. சில நேரத்தில் அடிப்பான்.

- - - - - - -

எஜமானன் பால் செம்போடு வந்தான். கன்றுக்
குட்டியைப் பிடித்துத் தூரத் தள்ளினான் பால்
கறக்க ஆரம்பித்தான்.
என்றைக்கும் இல்லாமல் அன்று பசுவுக்குக்
கோபம் வந்துவிட்டது.
எஜமானனைக் காலால் உதைத்து முட்டித்
தள்ளியது.
எஜமானன் அலறினான். அலறலைக் கேட்டு
கூட்டம் கூடிவிட்டது.

- - - - - -

"பசுவுக்குத் தீவனம் போதவில்லையோ என்னவோ?
அதனால் முட்டியிருக்கலாம்" என்றார் ஒருவர்.
தீவனம் போதவில்லை என்றால் முட்டுவதா? கேட்டு
வாங்கிக் கொள்ள வேண்டியதுதானே" என்றார்
ஒருவர்.

- - - - - -

பசு 'அம்மா' என்று கத்தியது. அதில் ஆயிரம்
அர்த்தங்கள் இருந்தன."[18]

என்றவாறு பசு, எஜமான் மக்கள் எனும் உருவகங்களின் வழி குறியீட்டுப் பொருள் பட உருவகக் கதைக் கவிதை அமைத்தமையைக் காணலாம். இக்கவிதை காண்போர் கண்களுக்கு ஏற்ப ஏராளமான பொருள்களைத் தருவதைக் காணலாம்.

எஜமான் - ஆதிக்கவர்க்கத்திற்கும்

பசு - அடிமை வர்க்கத்திற்கும்

விமர்சனம் கூறுபவர்கள் - மக்களுக்கும்

உருவகங்களாக அமைந்தமையை இக்கவிதையின் வழிக் காணலாம்.

நாடக வடிவம்:-

கவிதைகள் சில நாடகப் பாங்கில் அமைந்துள்ளன.[19] நாடகக் களத் தோற்றம், நாடகப் பாத்திரம், நாடக உரையாடல் போன்ற நாடகக் கூறுகள் இவ்வகைக் கவிதைகளில் இடம் பெற்றிருக்கக் காணலாம். இவ்வகையில் நான்கு கவிதைகள் உள்ளன.

எ.டு. 'முகவரிச் சீட்டு' எனும் தலைப்பில் பாரியும், அதியமானும் சந்தித்து உரையாடும் உரையாடல் நாடகப் பாங்கில் விளக்கப் பெற்றுள்ளது. "லாட்டரிச் சீட்டின்" மூலம் ஏமாற்றும் நாட்டு நிலையை இக்கவிதையில் வெளிக்காட்டுகின்றார்.

பாரி, அதியமான் உரையாடலில்,

". . . . . . .

கொடையா இது? சூதாட்டம்

பலருடைய கண்ணீரைத்

திரட்டி ஒருவருக்குக் குடிக்கத் தருகிறார்கள்"

"அரசாங்கமே சூதாடுகிறதா?"

"ஆமாம். அதுவும் மக்களிடம்"

"சூதாடுவது குற்றம் என்று சட்டம் இருக்கிறதே?"

"சட்டம் ஒழுங்கு எல்லாம் குடிமக்களுக்குத்தான்:

கோலோச்சுகிறவர்களுக்கு அல்ல. மக்களைப்

பிடிப்பதற்குத்தான் சிலந்தி வலை பின்னுகிறது: தான்

சிக்குவதற்கு அல்ல"[20]

என்று சுட்டுவதைக் காணலாம்.

உரைநடை வடிவம்:-

கவிதைகளில் பல புதுமைகளைச் செய்யும் தாகம் கொண்ட அப்துல்ரகுமான் உரைநடை வடிவில் அமைந்த பல கவிதைகளை இயற்றி யுள்ளார்.[21] இம்முறையில் உரையாடலை இயல்பாக உரை நடையாக அமைக்கிற நிலை குறிக்கத்தக்கதாகும்.

எ.டு. "அவர்களைச் சிறையில் சந்தித்தேன்

"என்ன குற்றம் செய்தீர்கள்?"

என்று கேட்டேன்

ஒவ்வொருவராகச் சொன்னார்கள்:

"எங்கள் வீட்டில் திருடிக் கொண்டு

ஒருவன் ஓடினான். 'திருடன் திருடன்'

என்று கத்தினேன். அமைதிக்குப்

பங்கம் விளைவித்ததாக என்னைக்

கைது செய்துவிட்டார்கள்"[22]

என்பதில் உரையாடல் இயல்புடன் கூடிய உரைநடை வடிவினைக் காணலாம்.

சொற்பொழிவு:-

மேடைச் சொற்பொழிவு, பிரசங்கம் போன்றவைகளில் இடம் பெறும் புலப்பாட்டு நெறியைத் தம் கவிதை வடிவில் இணைத்துள்ள நிலை இவ்வகையில் அடங்கும். இவ்வகையில் நான்கு கவிதைகள் உள்ளன.[23] சொற்பொழிவின் கூறுகளான கூறியது கூறல், உணர்ச்சி ஊட்டுதல், முன் நிற்பவரை விளித்துரைத்தல் போன்றன இக்கவிதைகளில் காணப்பெறு கின்றன. "இரண்டாம் வருகை" எனும் தலைப்பில், ஏசுகிறித்து பேசுவதாக,

"திரளான ஜனங்கள் அவரிடத்தில் கூடிவந்தனர்

அவர் பேசினார்:

இம்முறை சமாதானமாக அல்ல

கலகமாக வந்திருக்கிறேன்"[24]

என்று அமைந்த கவிதையை நோக்கலாம்.

**உத்தியில் புதுமை:**

புதுக்கவிதைகளில் மீம்மெய்ம்மையியம் வியப்பூட்டும் உத்தியாகும். தமிழ்ப் புதுக்கவிதைக் கவிஞர்கள் "மேலை நாட்டுக் கவிஞர்களைப் போன்று மீமெய்ம்மையிய இயக்கத்தின் தன்மைகள் பலவற்றைக் கவிதை வெளியீட்டுக்கு ஓர் உத்தியாகப் பயன்படுத்தினார்."[25] தமிழில் முதன் முதலில் மீமெய்ம்மையியக் கவிதைகளை அப்துல்ரகுமான் எழுதியதாகக் கருதப் பெறுகிறது.

**மீமெய்ம்மையியம்:-**

• பேசும் (அ) எழுதும் மொழியாலோ (அ) வேறு வகையாலோ உள்ளத்தின் அடித்தளத்தில் இயல்பாக ஊற்றெடுத்துப் பொங்கிவரும் சிந்தனை (அ) உணர்ச்சிக் கோவையினை ஒளிவு மறைவின்றி உள்ளத்தில் எழுந்தவண்ணமே வடித்துக் காட்டுவது மீமெய்ம்மையியம்"[26] என்று பிரின்ஸ்டன் கலைக் களஞ்சியம் விளக்கம் தருகிறது. மீமெய்ம்மையியம் பற்றிப் பலர் விளக்கி யுள்ளனர்.

"அக மனத்தின் தடையற்ற சுய இயக்கமே மேலான மெய்யான இயக்கம் ஆகும். இதுவே மீமெய்ம்மையியம்" என்கிறார் பாலா. "தன்னியக்க எழுத்து (Automatic text) கனவுகள், கனவுக் காட்சி, கற்பனைகள், புதுமைக் காட்சிகள், எதேச்சை நிகழ்ச்சிகளுக்கு முக்கியத்துவம் ஆகியவற்றை இலக்கியப் படைப்புகளில் கொண்டுவரும் தன்மையே மீமெய்ம்மையியம்"[28] என்பர். இவைகளின் மூலம் மீமெய்ம்மையியல் என்பது பற்றியும் மீமெய்ம்மையியத்தின் இயல்புகள் பற்றியும் அறியலாம்.

இக்கவிதை உத்திகள் அப்துல்ரகுமானின் கவிதைகளில் மட்டுமே உள்ளன என்பது சுட்டத்தக்கதாகும்.

மீமெய்ம்மையியக் கவிதைகள்:

மீமெய்ம்மையியக் கவிதைகளின் தன்மைகளான தன்னியக்க எழுத்து, கனவுகள், கனவுக் காட்சி, கற்பனைகள், புதுமைக்காட்சிகள், எதேச்சை நிகழ்ச்சிகளுக்கு முக்கியத்துவம் ஆகியன. அப்துல்ரகுமானின் கனவுத் தன்மையை, புதுமைக்காட்சி போன்றவற்றை மட்டும் இங்கு நோக்கலாம்.

கனவுத் தன்மை:

பால்வீதியில் இடம் பெற்ற "வியர்க்கும் சாமரைகள்" என்ற தலைப்பிலான கவிதை இவ்வகைக்குச் சான்றாகும். கனவில் காணும் காட்சி யினை இக்கவிதை உணர்த்துகிறது.

"அசைந்து அசைந்து
ஒரு நாள்
சாமரைகளுக்கு
வியர்க்கத் தொடங்கியது
துளிகள் சிதறின"[29]

"பொக்கை வாயை
விழுந்து அடைத்தது
பூகோளப் பழம்.
மூச்சுத் திணறிச்
செத்தது சிங்கம்"[30]

என்ற கனவுக் காட்சியில் சிங்கம் மூச்சுத் திணறி இறந்தது. அதனால் சுண்டெலிகள் கும்மாளக் கும்மியடித்தன. இறுதியில் என்ன நிலை உருவானது?

"சந்தடியில்
ஒரு சுண்டெலி
சவத்தைக் கடித்துக்
கசிந்த கறுப்பு ரத்தத்தை
நக்கியது
உடனே -

தடித்துப் பரிணமித்துப்

பிடரிமயிர் பீறிடக்

காடெலாம் அதிர

கர்ஜனை செய்தது

விலவிலத்த சுண்டெலிகள்

கூச்செறிந்த மயிர் உதிர

மூச்சிறைக்க ஓடிப்போய்

ஒளிந்தன வலைகளுக்குள்”[31]

சிங்கத்தின் இரத்தத்தைக் குடித்த சுண்டெலிகளும் அச்சிங்கம் போல் மாறிய நிகழ்வை அல்லது கனவுத் தன்மைக் காட்சியாகக் காட்டுகிறார்.

“ஒடுக்கப்பட்ட வர்க்கத்தைச் சார்ந்தவனே பதவியில் அமர்ந்ததும் ஒடுக்கும் வர்க்கத்தவனாக மாறிவிடும் அவலத்தைக் குறிக்க சக்தி வாய்ந்த ஆழ்மனப் படிமங்களை நாடினேன். சர்ரியலிசத்தின் பயிற்சி எனக் கிருந்தது. தியானத்தில் சூழ்ந்தேன். இக்காட்சிகள் கிடைத்தன”[32] என்கிறார்.

புதுமைக் காட்சி:-

புதமையான காட்சியும் மீமெய்மையியக் கவிதைகளில் ஒரு கூறாகும்.

“நட்சத்திர வேஷமணிந்த

எழுத்துக்கள்

நிலா முரசைச் சுற்றிப்

பாட்டு ரத்தத்தை

வாந்தி எடுத்தபடி

குரவையாடிக் கொண்டிருந்தன”[33]

என்கிறார். எழுத்துக்கள் நட்சத்திர வோரத்தில் நிலா முரசைச் சுற்றிப் பாட்டு இரத்தத்தை வாந்தி எடுத்த படி குரவை ஆடும் புதிய காட்சியினைக் காட்டுகிறார். கவிதை என்பது அர்த்தச் செறிவாக இருக்க வேண்டும். மாறாகக் கவர்ச்சி எழுத்துக்களுடனும், வெற்றுச் சந்தத்துடனும் இருத்தல் கூடாது என்பது இக்கவிதைக்குரிய விளக்கமாகும். இவ்விளக்கத்திற்குப் புதுமைக் காட்சியொன்றினைக் கவிதையில் வடித்தெழுகிறார்.

"மரண இமைகளிலிருந்து
நான் துளித்து வழிவேன்
மூச்சுக் கயிறறுந்த
மணியின் நாவிலிருந்து
நட்சத்திரங்கள்
மௌனமாக உதிரும்
ஆயுட் பாதை
முழுவதும்
என் பாதத்தில்
ரேகையாகிவிடும்
வேஷத்தில் வசித்த
அர்த்தம்
திரையின் உட்புறம்
தன் உடலைத் தேடிப்
புறப்படும்"[34]

கண்ணீர்த் துளி சொட்டும் இமை, மணியிலிருந்து கயிறு அறுந்து விழும் காட்சி, மணியின் நாவிலிருந்து நட்சத்திரங்கள் உதிர்கின்ற தோற்றம் என்றவாறு புதுமைக் காட்சிகளைக் கவிஞர் காட்டுகிறார்.

அப்துல்ரகுமான் மீமெய்ம்மையியப் பரிசோதனையுடன் தனது முயற்சியை நிறுத்திக் கொள்ளாமல் மீமெய்ம்மையியப் படிமங்களைப் படைப்பதிலும் முயன்று இருப்பதைப் பால்வீதி கவிதைத் தொகுப்பின் மூலம் அறிய முடிகிறது"[35] என்ற கருத்து இங்கு இணைத்து நோக்கத்தக்கது.

## முடிவுகள்

மேனாட்டு இலக்கிய அறிவு, மேனாட்டு இலக்கிய இயக்கம் போன்றவை புதுக்கவிதைகளில் பரிசோதனை முயற்சிகளை மேற்கொள்ள உந்துசக்திகளாக உள்ளன. மேலும், அப்துல் ரகுமானின் புதுமை வேட்கையும், தேடல் உணர்வும் பரிசோதனை முயற்சிகளை மேலும் ஊக்கப்படுத்துவதாக இருந்த நிலை கருத்தில் கொள்ளப்பெற்றது.

உள்ளடக்கத்தில் கவிஞர், பரிசோதனை, முயற்சிகளை, மேற்கொண்டது போலவே வடிவம், உத்தி ஆகியவற்றிலும் பரிசோதனை முயற்சிகளை மேற்கொண்டுள்ளார்.

தமிழில் "ஹைகூவடிவத்தை" பாரதியார் முதலில் சிந்தித்துள்ளார். தமிழ்மொழியில் முதலில் ஹைகூக் கவிதைகளை யாத்தவர் என்கிற பெருமை அப்துல் ரகுமானுக்கு உண்டு. அவ்வகைக் கவிதைகள் "பால்வீதித்" தொகுப்பில் "சிந்தர்" எனும் தலைப்பில் தொகுக்கப்பெற்றுள்ளன. ஹைகூ முயற்சி எழுத்துக் காலத்திலேயே தோற்றம் பெற்றிருந்தது.

கவிஞரின் ஹைகூக் கவிதைகள் வடிவத்திற்காக மட்டுமின்றி, பிற பரிணாமங்களையும் மதிப்பிடுவதற்கு ஏற்ற வகையில் அமைந்துள்ளன. இரண்டு அடிகள் உள்ள ஹைகூவில் ஈற்றடியில்தான் அழகும் ஆற்றலும் இருக்கிறது. அவ்வகை ஆற்றல் அப்துல் ரகுமானின் சிந்தர் கவிதைகளில் இயல்பாக இடம்பெற்றநிலை மதிப்பிடப் பெற்றது. "சிந்தர்" என்னும் சொல் மிகச் சிறிய வடிவத்தைக் குறிக்கும்.

அப்துல் ரகுமானின் பரிசோதனை முயற்சிகளில் இருசீர் வடிவக் கவிதைகளும் அடங்கும். இக்கவிதைகளில் எழுத்துச் சிக்கனம் இடம் பெற்றுள்ள நிலை கருதத்தக்கதாகும்.

மேனாட்டு இலக்கிய வடிவங்களை அப்துல் ரகுமான் தமிழில் புகுத்திப் பரிசோதனை முயற்சிகளை நடைமுறைப்படுத்தியுள்ளார். உருது, ஹிந்தி மொழிகளில் "கீத்" என்ற இசைப்பாடல் வடிவம் உண்டு. அதன் தாக்கத்தால் தமிழில் ஐந்து கவிதைகளை எழுதியுள்ளார்.

கவிதைகள் அல்லாத பிற இலக்கிய வடிவங்களைக் கவிஞர் கவிதை களில் வடிக்க முற்பட்டமை கருதத்தக்கதாகும். உருவகக்கதைக் கவிதைவடிவம், நாடகவடிவம், உரைநடைவடிவம், சொற்பொழிவுவடிவம் போன்றவைகளைக் கவிதைகளில் செயல்முறைப்படுத்திப் பார்த்துள்ளார்.

மீமெய்ம்மையியம் மேனாட்டு இயக்கம் சார்ந்த புதுக்கவிதை உத்தி யாகும். தமிழில் அவ்வகை உத்தியை அப்துல் ரகுமான் முதன் முதலில் பயன்படுத்தினார். மீமெய்ம்மையியக் கவிதைகளின் தன்மைகளான கனவுத் தன்மை, புதுமைக்காட்சி ஆகியவை அப்துல் ரகுமான் கவிதைகளில் சிறப்பாக இடம் பெற்றுள்ள நிலை விளக்கப்பெற்றது.

மீமெய்ம்மையியப் படிமங்களையும் கவிஞர் தம் கவிதைத் தொகுப்பு களில் "பால்வீதியில்" மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளார்.

## குறிப்புகள்:-

1. அப்துல்ரகுமான், ஆலாபனை, பின் அட்டை.
2. மேலது, ப.49.
3. காண்க : நேர்முகப்பேட்டி - பின்னிணைப்பு எண் - 2.
4. நிர்மலா சுரேஷ், ஹைகூ கவிதைகள், பக்.174-175.
5. தி. லீலாவதி, ஜப்பானிய ஹைகூ, பக்.15-16.
6. அப்துல் ரகுமான், விலங்குகள் இல்லாத கவிதை, பக்.49-50.
7. அப்துல் ரகுமான், பால்வீதி, ப.27.
8. மேலது.
9. மேலது.
10. மேலது.
11. மேலது.
12. அப்துல் ரகுமான், நேயர்விருப்பம், ப.6.
13. மேலது, பக்.91-94.
14. மேலது, ப.6
15. மேலது, ப.76.
16. அப்துல்ரகுமான், சுட்டுவிரல், முன்னுரை.
17. 1. ஈ நாடு (சுட்டுவிரல்)
    2. சிகப்பு நாடா (சுட்டுவிரல்)
    3. கொம்பு (சுட்டுவிரல்)
    4. நெற்றிக் கண் (பால்வீதி)
    5. வியர்க்கும் சாமரைகள் (பால்வீதி)
18. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், பக்.102-104.
19. 1. புதிய பாரதம் (சுட்டுவிரல்)

2. சிகப்பு நாடா (சுட்டுவிரல்)

3. முகவரிச் சீட்டு (சுட்டுவிரல்)
4. பாருக்குள்ளே நல்ல நாடு (சுட்டுவிரல்)

20. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், பக்.56-57.
21. 1. பழைய வீடு (சுட்டுவிரல்)
2. இரவின் கண்ணீர் (ஆலாபனை)
3. ஒரு மேகத்தைப் போல் (ஆலாபனை)
4. தவறான எண் (ஆலாபனை)
22. அப்துல்ரகுமான், சுட்டுவிரல் ப.11.
23. 1. Be Indian Buy Indian (சுட்டுவிரல்)
2. கல்லின் காயம் (சுட்டுவிரல்)
3. டி.வி. பார்க்கும் ராமர்கள் (சுட்டுவிரல்)
4. இரண்டாம் வருகை (சுட்டுவிரல்)
24. அப்துல் ரகுமான், சுட்டுவிரல், ப.28
25. இரா. சம்பத், புதுக்கவிதையில் இலக்கிய இயக்கம், ப.102.
26. Preminger, Alex (Ed), Princeton Encyclopaedia of Poetry and Poetics, P.821.
27. பாலா, சர்ரியலிசம், பக்.44-45.
28. இலட்சுமி சுந்தரம் (ப.ஆ), புதுக்கவிதையும் புதுப்பிரக்ஞையும், ப.55.
29. அப்துல்ரகுமான், பால்வீதி, ப.69.
30. மேலது.
31. மேலது, ப.70.
32. அப்துல்ரகுமான், மரணம் முற்றுப் புள்ளி அல்ல, பக்.60-61.
33. " பால்வீதி, ப.8.
34. மேலது, ப.40.
35. இரா. சம்பத், புதுக்கவிதையில் இலக்கிய இயக்கம், ப.127.

# இயல் 7

## முடிவுரை

மகாகவி பாரதியார் தமிழ்ப்புதுக்கவிதையின் முன்னோடி ஆவார். அவருக்குப் பின் இதழ்கள் பல புதுக்கவிதைக்குரிய இலக்கிய அங்கீகரிப்பிற்கும் வளர்ச்சிக்கும் துணைநின்றன.

எழுத்து, வானம்பாடி போன்ற இதழ்கள் புதுக்கவிதைத் துறைக்கு ஆற்றிய பங்கு குறிப்பிடத்தக்கது. பிற இதழ்களும் இயங்கி ஆதரவு தந்த நிலை மறுப்பதற்கில்லை.

எழுத்து (1954-1970) இதழைச் சார்ந்த கவிஞர்களின் கவிதைகளில் மேனாட்டாரின் இலக்கியத்தாக்கம் மிகுந்திருந்தது. “வானம்பாடி” கவிஞர் களிடம் சமுதாயச் சிந்தனைப் பரவலாக இருந்தது.

கவிஞர் அப்துல்ரகுமான் தம் பதின்மூன்றாவது வயதிலேயே (1950) கவிதை எழுதத் தொடங்கியிருக்கிறார். இளங்கலை பயின்ற காலத்தில் (1957-59) மீமெய்ம்மையியக் கவிதைகளில் பரிசோதனை முயற்சிகளை மேற்கொண்டிருக்கிறார். ஐம்பதுகளின் பிற்பகுதியில் கவிஞர்க்குப் புதுக் கவிதையின் அறிமுகம் கிடைத்துள்ளது. அம்முறையில் எழுத்துக் காலத்திற்கு முன்பே அப்துல்ரகுமான் புதுக்கவிதைத் துறையில் ஈடுபட்டவர் என மதிப்பிடலாம்.

வானம்பாடி இதழில் கவிஞரின் “திட்டங்கள்” “அறிதுயில்” என்ற கவிதைகள் பிரசுரமாயின. இந்நிலையைக் கருத்தில் கொண்டு கவிஞரை வானம்பாடிக் கவிஞர் எனச் சிலர் முத்திரை பதித்துள்ளனர்.

வானம்பாடிக் கவிஞர்களுக்கும் அப்துல்ரகுமானுக்கும் இடையில் பல முரண்கள் உள்ளன. அப்துல்ரகுமானிடம் இருக்கும் சமயப்பற்று வானம்பாடிக் கவிஞர்களிடம் இல்லை. திராவிட இயக்கங்களோடு கவிஞருக்கு நெருக்கம் உள்ளது. அவ்வகை நெருக்கம் வானம்பாடிக் கவிஞர்களிடம் இல்லை. அப்துல் ரகுமானிடம் இருந்த மேனாட்டு இலக்கியத் தாக்கம் வானம்பாடிக்

கவிஞர்களிடம் இல்லை. வானம்பாடிக் கவிஞர்கள் பொதுவுடைமைச் சிந்தனை உடையவர்கள். அச்சிந்தனையில் உள்ள 'மனிதாபிமானம்' என்ற கூறுமட்டும் அப்துல் ரகுமானிடம் காணக் கூடியதாகும்.

கவிஞர் கவிக்குடும்பத்தில் தோன்றியவர். உருது, பாரசீகம் போன்ற பிற மொழிகளை அறிந்தவர். அரபு மொழிக் கவிஞரான கலீல் இப்ரானிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்.

மரபுக் கவிஞராகத் தோற்றம் பெற்று, புதுக்கவிதைத் துறையில் முத்திரை பதித்தவர். நூலாக்கத்திலும் பதிப்புப் பணியிலும் சாதனை படைத்த கவிஞர்க்குப் பரிசுகளும் பட்டங்களும் பலவாகக் கிடைத்தன. பல சிந்தனையாளர்களை உருவாக்கும் திறன் கொண்டவர்.

இலக்கியத்தைப் பொருள் விளக்கிப் பகுத்தாய்தலில் இலக்கிய உள்ளடக்கத்தை உணரலாம். புதுக்கவிதையில் பொருள்கள் மரபிலிருந்து மாற்றம் பெற்று பலவாக விரிந்தன.

அப்துல் ரகுமான் குழுக்களையோ இதழ்களையோ சாராமல் வளர்ந்தவர். அவ்வகையில் அவர் கவிதைகளில் உள்ளடக்கத் தனித்தன்மை மிகுந்திருந்தது. செயல்திறம் மிகுந்த வீறுணர்ச்சிப் போக்கு இவரது கவிதைகளின் தனிச்சிறப்பாகும்.

தற்சார்பு பெறாத கவிதைகள் இவரிடம் மேலோங்கியுள்ளன. தற்சார்பு பெற்ற கவிதைகள் பால்வீதியில் மட்டுமே காண இயலும். ஏனெனில் அந்நூல் கவிஞரின் முதல் நூலாகும். தன்னையும், தன் கவிதைகளையும் அறிமுகப்படுத்துவதாக அக்கவிதைகள் அமைந்துள்ளன.

ஓவியம், சிற்பம், இசை போன்ற கலைகளில் கவிஞர்க்கு ஈர்ப்பு இருந்தது. இவரது கவிதைகளில் இவருக்குச் சுயமோகம் மிகுதி.

தற்சார்புபெறாத கவிதைகளில் சமூகம் சார்ந்த கவிதைகளும் அதற்கடுத்த நிலையில் தத்துவம் சார்ந்த கவிதைகளும் மிகுந்துள்ளன. அவ் வகையில், கவிஞரைச் "சமுதாயக் கவிஞர்", "தத்துவக் கவிஞர்" என மதிப்பிடலாம்.

இயற்கையில் கூடச் சமூகத்தை இணைத்துச் சிந்திக்கும் பாங்கு இவரின் சமுதாய உணர்விற்கு மெருகூட்டுகிறது. சமயம் கடந்த இறைவன் ஒருவனே. அவனுக்கு உருவமும் பெயரும் இல்லை என்பது கவிஞரின் இறைக் கோட்பாடெனத் துணியலாம்.

காதல், குடும்பம் பற்றிய கவிதைகள் கவிஞரிடம் குறைவு. ஆனால் இக்கவிதைகள் தரும் சிந்தனை நிறைவானது. காதலுக்குள் காமம் ஒரு கூறு. காமம் பெருகினால் காதலின் தெய்வீகம் சிதையும் என எச்சரிக்கிறார். ஆண்-பெண் முரணின் சங்கமத்தில் குடும்பம் உருவாக்கம் பெறுகிறது என்கிற சிந்தனையை முன்வைத்துள்ளார்.

தத்துவக் கவிதைகளில் தர்க்கச் சிந்தனையும் அறவியல் சிந்தனையும் மிகுந்துள்ளன. அக உலகம், புற உலகம் குறித்துத் தர்க்க ரீதியாக ஞானப் பார்வையுடன் சிந்திக்கிறார்.

சமூகச்சார்பான கவிதைகளில் சமூகச் சீர்கேடுகள், அரசியல், பொருளாதாரம் போன்ற நிலைகளை அடியொற்றி விரிவான சிந்தனைகளைக் கவிதைகளில் இடம் பெறச் செய்துள்ளார். அவ்விரிவான சிந்தனைகளில் சீர்கேட்டின் நிலைகளை எடுத்துரைத்து மக்களை விழிப்பிற்குள்ளாக்கும் இயல்பு இடம் பெற்றுள்ளது. அரசியல் சீர்கேடுகளைத் துணிந்து எடுத்துரைக்கிற நிலை கவிஞரின் துணிவைக் காட்டுகிறது. போலியான நிலை சீர்கேட்டின் வித்து என்று குறிப்பிடும் அவர் உழைப்பால்தான் உயரமுடியும் என்கிற தீர்வையும் முன் வைத்துள்ளார்.

சாதி சமயம், பெண்கள நிலை என்கிற இவைகளைச் சார்ந்து குறைவான கவிதைகளே எழுதியுள்ளார். இனவெறி அழிவுகள் முதிர்வான சிந்தனைப் பரிணாமத்திற்கு அடையாளமல்ல என்று கூறியுள்ளார்.

உரிமை என்கிற பெண்ணியப் போர்வையில் பெண்ணிய இயல்புகளைப் பெண்கள் இழப்பதைக் கவிஞர் விரும்பவில்லை. குழந்தைகளைப் புறக் கணித்து பெண்கள் அலுவலகம் செல்வதைக் கவிஞர் விரும்பவில்லை.

அப்துல்ரகுமான் கவிதைகளில் யாப்பு வடிவம், யாப்பின் திரிந்த வடிவம், புதிய வடிவம் என்ற வடிவ வகைகள் இடம் பெற்றுள்ளன. யாப்பு வடிவத்தில் சந்தப்பாக்களையும், ஆசிரியப்பாவையும் மிகுதியாகப் பாடியுள்ளார். இவ் வகைக் கவிதைகள் கவியரங்கத்திற்கேற்றவையாகும்.

கவியரங்கத்தின் வசதிக்குகந்ததாக அமைந்துள்ள யாப்பின் திரிந்த வடிவத்தையும் தம் கவிதைகளில் கையாண்டுள்ளார்.

புதிய வடிவங்களில் புதுக்கவிதைவடிவங்கள், வசன கவிதை வடிவங் கள், பரிசோதனைக் கவிதை வடிவங்கள் குறிக்கத்தக்கன.

பரிசோதனை முயற்சிகளில் கவிதை அல்லாத பிற வடிவங்களைக் கூட கவிதையாக்கும் முயற்சியும் கவிஞரின் தனித்தன்மைக்குரிய சான்றுகளாகும்.

புதுக்கவிதை உத்திகளில் பருப்பொருள் உத்திகளும் நுண்பொருள் உத்திகளும் அடங்கும். பருப்பொருள் உத்திகளில் சித்திரமுறை, சொல்லுடைப்பு போன்றவைகளைக் கவிஞர் கையாளவில்லை. தலைப்பு, சொல்லாடல் உத்திகளை அளவாகக் கையாண்டுள்ளார். அங்கதம், முரண் என்கிற இரு உத்திகளையும் சிறப்பாகத் தம் கவிதைகளில் படைத்துள்ளமை மதிப்பிடப் பெற்றது. சமுதாயச் சீர்கேடுகளைப் புலப்படுத்த அங்கத உத்தியினையும் தத்துவக் கருத்துக்களை வெளிப்படுத்த முரண் உத்தியினையும் கவிஞர் கையாண்டுள்ளார். நளினமாக அங்கத உத்தியினைக் கையாள்வதில் கவிஞர் தனித்திறன் மிக்கவர். முரண் உத்திகளில் நிகழ்ச்சி முரண் இவரிடம் மேலோங்கியுள்ளது. பொருள் முரண், உவமை உருவக முரண், தத்துவ முரண், தலைப்பு முரண், உணர்ச்சி முரண் போன்றவற்றை அளவாகப் பயன்படுத்தியுள்ளார். கவிதையின் பொருள் புலப்பாட்டிற்குத் “தலைப்பின்” பங்கு குறிக்கத் தகுந்தது. அப்பங்கினை உணர்ந்து கவிஞர் திறத்துடன் பயன்படுத்தியுள்ளார். கவிஞர் கவியரங்கக் கவிஞராக இருப்பதால் அடுக்கு வருணனையைக் கற்பனைத் திறத்துடன் கையாண்டுள்ளார்.

அப்துல்ரகுமான் சிறந்த குறியீட்டுக் கவிஞர். புதுமை நோக்கும் பன்மொழி அறிவும் குறியீட்டு உத்தியைக்கையாள்வதற்குக் காரணம் என மதிப்பிடலாம். இந்திய மொழிகளில் உருது, ஒரியம், வங்காள மொழிகளில் குறியீடுகளின் பயன்பாடு பெருமளவு உள்ளது. அம்மொழிகளில் பயிற்சி உடைய கவிஞரும் குறியீட்டு உத்தியை மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளார் எனக் கருதலாம்.

சொந்தக் குறியீடு, இயற்கைக் குறியீடு, தொன்மக் குறியீடு என்ற மூவகைகளைக் கவிஞர் மிகுதியாகப் பயன்படுத்திய பாங்கு மதிப்பிடப் பெற்றது. சமூகம் மற்றும் அரசியல் சீர்கேடுகளைக் குறிப்பாக உணர்த்த சொந்தக் குறியீட்டைக் கவிதைகளில் இடம் பெறச் செய்துள்ளார்.

இந்து சமயம் சார்ந்த தொன்மங்களிலிருந்து பாத்திரங்களையும் நிகழ்வுகளையும் மிகுதியாகக் கையாண்டுள்ளார். கிறிஸ்துவச் சமயம் சார்ந்த பைபிளிலிருந்து தொன்மக் குறியீடுகளை அமைத்துள்ளார். எல்லோருக்கும் பரவலாகத் தெரிந்த தொன்மங்களில் குறியீடு அமைத்தால் மக்களைச் சென்றடையும் என்பது கவிஞரின் கோட்பாடாகும்.

சமயம் சார்ந்த குறியீடுகளில் சமயம் சார்ந்த சொற்களைப் பயன் படுத்தியுள்ளார். தமிழ் இலக்கியங்களிலிருந்தும் குறியீடுகள் சிலவற்றை அமைத்தமை கவிஞரிடம் காணப்பெறும் பண்டை இலக்கியப் பயிற்சிக்குச் சான்றுகளாகும்.

மேனாட்டு இலக்கியப் பயிற்சியின் விளைவால் படிம உத்தியினையும் கவிஞர் பயன்படுத்தியுள்ளார். அப்பயன்பாடு பால்வீதி, நேயர்விருப்பம் தொகுதிகளில் மிகுந்துள்ளமை மதிப்பிடப் பெற்றுள்ளது. வினைப்படிமம், பயன்படிமம் பயன்படுத்திய நிலை மேலோங்கியிருப்பது ஆய்வின் வழி மதிப்பிடப் பெற்றது. சமுதாயச் சார்பாக வினைப்படிமங்கள் பலவற்றை அமைத்துள்ளார். பயன் படிமத்தில் சமுதாயத்துடன் தத்துவம், தற்சார்பு போன்றவற்றை இணைத்துக் கையாண்டுள்ளார். இவ்விருவகைப் படிமங்களையும் இணைந்த நிலையைக் கவிதைகளில் கையாள்வது கவிஞரின் தனித்தன்மையெனத் துணியலாம்.

படைப்பிலக்கியத்திற்கும் ஆசிரியரின் ஆளுமைத் தன்மைக்கும் தொடர் பிருப்பதாக ஃபிராய்டு கருதியுள்ளார். மனித இனத்தின் கூட்டு நனவிலி

மனத்தின் மரபாகப் பதிந்து வரும் பதிவுகள் கலைப்படைப்புக்களில் வெளிப் படும் என்பது யுங்கின் சிந்தனையாகும். ஃபிராய்டின் உளவியல் கோட்பாடு வளர்ந்த பின் இலக்கியத்தில் மீமெய்ம்மையியம், எக்ஷ்டென்ஷியலிசம் போன்ற புதுமைகள் தோன்றின. அப்துல்ரகுமான் மீமெய்ம்மையியம் சார்ந்த கவிதைகளை எழுதியவர்.

அழகியல் ஒத்துணர்வுடன் அப்துல்ரகுமான் கவிதைகளை யாத்துள்ளார். மீமெய்ம்மையியக் கவிதைகள் நனவிலி மனத்தை அடிப்படையாகக் கொண்டவை. நனவிலி மனத்தின் எண்ணங்களைக் கவிதைகளில் வெளிப்படுத்தும் திறன் உடையவர். இவரது "பால்வீதி" நூலில் ஆழ்மனப் படிமங்களின் வெளிப்பாடுகள் மிகுந்துள்ளன.

வறுமை, நிறைவேறாதக் காதல், கலை வேட்கை போன்றவை கவிஞரின் சுயவரலாற்றைச் சார்ந்த ஆழ்மனப் பதிவுகளாக இருந்து கவிதைகளில் வெளிப்பட்டுள்ள நிலை மதிப்பிடப் பெற்றுள்ளது. சமூகம், அரசியல், திரைப் படமோகம் என்கிற இவைகளை மையமிட்ட சீர்கேடுகள் கவிஞரைப் பாதித்துள்ளன. பாதிப்பிற்குக் காரணம் மக்களின் அறியாமை என்பதைக் கவிஞர் சுட்டி, மீள்வதற்கான விழிப்புணர்ச்சிகளைக் கவிதைகளின் வழி வெளிப்படுத்தியுள்ளார்.

கம்பன் கவியரங்குகளில் கவிஞர் மிகுதியாகப் பங்கேற்றவர். ஆதலால் இராமன், சீதை போன்ற மாந்தர்களைக் கவிதைகளில் பெரிதும் பயன்படுத்தியுள்ளார். மேலும், கிருஷ்ணன், சகுனி, பாண்டவர்களையும் சித்தரித்துள்ளார். தமிழ் இலக்கியத்திலிருந்து கண்ணகி பாத்திரத்தை சிறப்பாகப் பயன்படுத்தியுள்ளார். பழைய கதைப்பாத்திரங்களை வித்தியாசமான போக்கில் விரித்துரைப்பது கவிஞரின் தனிச்சிறப்பென மதிப்பிடப் பெற்றது.

இந்துசமயப் புராணத் தொல்படிவங்களையும், இதிகாசம் சார்ந்த தொல் படிவங்களையும் மிகுதியாகக் கவிஞர் கையாண்டுள்ளார். கிறித்தவரல்லாத

கவிஞர் கிறித்தவ சமயம் சார்ந்த தொல்படிவங்களைப் படைத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இஸ்லாம் சமயம் சார்ந்த கவிஞர் அச்சமயம்சார்ந்த தொல்படிவங்களைப் படைக்காதது அச்சமயத்தின் இறுக்கமான நிலை,கொள்கைகள் காரணிகளாகலாம். சிறந்த குறியீட்டுக் கவிஞரான அப்துல் ரகுமான் சிறந்த தொன்மக் கவிஞர் எனவும் மதிப்பிடப் பெற்றுள்ளது. தொன்மத்திற்குப் புலப்பாட்டுச் சக்தி மிகுதி என்பது கவிஞரின் கோட்பாடாகும்.

கவிஞரின் உணர்வுகளில் சில சொற்கள் பதிவுகளாகப் பதிந்திருப்பதைச் சில சொற்களின் வழி உணரப் பெற்றது. நட்சத்திரம், இரவு, நிழல், மரம், ஆடை, இமை, கண்ணீர், கனவு, மரணம், மௌனம் போன்ற சொற்கள் கவிஞரின் ஆழ்மனப் பதிவு பெற்ற சொற்களாகும்.

புதுமை வேட்கை, மீமெய்ம்மையியச் சார்பு போன்றவற்றால் கவிஞரின் கவிதைகளில் ஒருவிதப் புரியாதத் தன்மை உள்ளது என்பது சிலர் மதிப்பீடு. அம்மதிப்பீடு பொருத்தமற்றது. கவிதைகளில் செறிவும், சொற்சிக்கனமும் இருப்பதனாலும் குறியீடு, படிமம் போன்ற உத்திகளைப் பயன்படுத்துவதாலும் புரியாமை இடம் பெற்றிருக்கும். வாசகர்களின் அனுபவிக்கும் ஆற்றலும், ஆழமானப் புலமையும் இருப்பின் புரியாமை நீங்கிவிடும் என்கிற கருத்து மதிப்பிடப் பெற்றது.

கவிஞருக்குப் புதுமையில் வேட்கையும் தேடுதல் உணர்வும் இயல் பாகவே இருந்தன. மேனாட்டு இலக்கியப் பயிற்சியும், இலக்கிய இயக்கங் களின் தாக்கமும் கவிஞர்க்கு இருந்தன. இச்சூழலின் விளைவால் தமிழ்ப் புதுக்கவிதையில் பல பரிசோதனை முயற்சிகளில் கவிஞர் ஈடுபட்டுள்ளமை கருத்தில் கொள்ளப் பெற்றது.

உள்ளடக்கத்தில் பொருள் விரிவு நிலையில் மேற்கொண்ட பரிசோதனை முயற்சிகளைப் போலவே வடிவம் மற்றும் உத்தி நிலைகளிலும் பரிசோதனை முயற்சிகளை மேற்கொண்டிருக்கிறார்.

தமிழில் முதலில் ஹைகூக் கவிதைகளை யாத்தவர் அப்துல்ரகுமான் ஆவார். இப்பரிசோதனை முயற்சி கவிஞரிடம் எழுத்துக் காலத்திலேயே தொடங்கியுள்ளமை கருதத்தக்கது.

ஹைகூ வடிவக் கவிதைகளைச் "சிந்தர்" என்ற சொல்லில் குறித்து "பால்வீதி" தொகுப்பில் இடம்பெறச் செய்துள்ளார். ஹைகூ வடிவக் கவிதை களின் ஈற்றடியில் இருக்க வேண்டிய ஆற்றல் கவிஞரின் கவிதைகளில் நேர்த்தியாக உள்ளது.

கவிஞரின் ஹைகூ வடிவக் கவிதைகள் வடிவத்திற்காக மட்டுமின்றிப் பிற பரிணாமங்களையும் மதிப்பிடுவதற்கு ஏற்ற வகையில் உள்ளன.

இருசீர் வடிவக் கவிதை முறையிலும் கவிஞர் பரிசோதனை முயற்சி களை நிகழ்த்தியுள்ளார். இவ்வகை வடிவத்தில் எழுத்துச் சிக்கனம் இருப்பது கருதத்தக்கதாகும்.

உருது ஹிந்தி மொழிகளில் 'கீத்" என்கிற இசைவடிவம் உண்டு. அவ் வடிவத்தாக்கத்தைத் தமிழில் புகுத்தியுள்ளார்.

கவிதைகள் அல்லாத பிற இலக்கிய வடிவங்களான உருவகக்கதை வடிவம், நாடக வடிவம், உரை நடை வடிவம், சொற்பொழிவு வடிவம் போன்ற வடிவங்களைத் தமிழ்ப்புதுக்கவிதைகளில் நடைமுறைப்படுத்திப் பரிசோதனை முயற்சிகளை நிகழ்த்தியுள்ளார்.

மேனாட்டு இலக்கிய இயக்கத்தின் தாக்கத்தால் மீமெய்ம்மையியக் கவிதைகளை முதன் முதலில் தமிழில் எழுதினார். இவ்வகைக் கவிதை களில் கனவுத்தன்மை, புதுமைக்காட்சி ஆகியவற்றைக் கவிஞர் திறம்பட அமைத்த பாங்கு மதிப்பிடப் பெற்றது. மீமெய்ம்மையியப் படிமங்களைக் கையாள்வதிலும் கவிஞர் திறன் உடையவர்.

அப்துல்ரகுமான் கவிதைகளில் நான்கு தொகுப்புகளை மையமிட்டு இவ்வாய்வு அமைகிறது. இனிவரும் காலத்தில் அவரின் முழுமைப் படைப்புக் களையும் கருத்தில் கொண்டு ஆய்வு நிகழ்த்தலாம். கவிஞர் குறியீடு, படிமம் போன்ற நுண்பொருள்உத்திகளைத் திறம்படக் கையாண்டவர். இவ்வகை உத்திகளை மையமிட்டுத் தலைப்பினை அமைத்து ஆய்வினை மேற்கொள்ளலாம். குவிஞர் சிறந்த சமுதாய உணர்வும், கடமையுணர்வும் மிக்கவராக இருப்பதால் சமுதாய அணுகுமுறையை மட்டும் கருத்தில் கொண்டு விரிவான ஆய்வினை நிகழ்த்தலாம்.

# துணை நூற்பட்டியல்

## முதன்மைச் சான்றுகள்

அப்துல்ரகுமான், : பால்வீதி,
கவிக்கோ பதிப்பகம்,
சென்னை, 1996, ஆ.ப.

” : நேயர்விருப்பம்,
கவிக்கோ பதிப்பகம்,
சென்னை,1996, ஏ.ப.

” : சுட்டுவிரல்,
கவிக்கோ பதிப்பகம்,
சென்னை, 1996, மூ.ப.

” : ஆலாபனை,
கவிக்கோ பதிப்பகம்,
சென்னை, 1995, மு.ப.

## துணைமைச் சான்றுகள்


அப்துல் காதர், : மீராவின் கனவுகள்,
செல்மா வெளியீடு,
சிவகங்கை, 1987.

அப்துல்ரகுமான், : மரணம் முற்றுப்புள்ளி அல்ல,
அன்னம்,
சிவகங்கை, 1986.

" : சொந்தச் சிறைகள்,
அன்னம் (பி) லிட்,
சிவகங்கை, 1987.

" : புதுக்கவிதையில் குறியீடு,
செல்மா பதிப்பகம்,
சிவகங்கை, 1990.

" : விலங்குகள் இல்லாத கவிதை,
விசா பப்ளிகேசன்ஸ்,
சென்னை, 1994.

" : முட்டை வாசிகள்,
கவிக்கோ பதிப்பகம்,
பாரதி சாலை,
திருவல்லிக்கேணி,
சென்னை, 1995.

அரங்கராசு, சு., : தமிழ்ப் புதுக்கவிதை ஒரு திறனாய்வு,
மூன்றாம் உலகப் பதிப்பகம்,
கோவை, 1991.

அருணாசலதேசிகர், சோ.,(உ.ஆ): நந்திக் கலம்பம்,
பாரி நிலையம்,
சென்னை, 1968.

இரத்தின வெங்கடேசன், : பாவேந்தரின் சமூகப் புரட்சி,
அருள் புத்தக நிலையம்,
குறிஞ்சிப் பாடி, 1992.

இராமச்சந்திரன், க., : மேத்தாவின் கவிதைகளில் சமுதாயப் பார்வை,
நர்மதா பதிப்பகம்,
சென்னை, 1987.

இராமலிங்கம், மா.,. : இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம்,
தமிழ்ப்புத்தகாலயம்,
சென்னை, 1973.

இலட்சுமி சுந்தரம், (ப.ஆ) : புதுக்கவிதையும் புதுப்பிரக்ஞையும்,
காவ்யா பதிப்பகம்,
பெங்களூர், 1985.

இளம்பூரணம், : தொல்காப்பியம் பொருளதிகாரம்,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை, 1969.

அண்ணாமலை, வீ., : புதுக்கவிதையில் சமுதாயம்,
செல்மா பதிப்பகம்,
சிவகங்கை, 1991.

கடிகாசலம், ந., : தமிழும் பிற துறைகளும்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1994.

கடிகாசலம், பாலாஜி, ந.,(ப.ஆ) : சமூகச் சிக்கலும் தீர்வுகளும்,
அமுத நிலையம் லிமிடெட்,
சென்னை, 1995.

கலைச் செல்வன், : புதுக்கவிதை நடையியல் ஆய்வு,
கலைச் செல்வி பதிப்பகம்,
நஞ்சு கொண்டாபுரம், 1986.

கோபாலகிருஷ்ணக்கோன். இ.மா., (ப.ஆ) : நன்னூல் மூலமும் இராமானுசக் கவிராயர் விருத்தியுரையும்,
மதுரைத் தமிழ்ச் சங்கம்,
சென்னை, 1940.

கோதண்ட இராமன், பி., : இலக்கியமும் விமர்சனமும்,
மணிவாசகர் நூலகம்,
சிதம்பரம், 1962.

சண்முக சுந்தரம், சு., : நாட்டுப்புறவியலில் உளவியல் பார்வை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1991.

சம்பத், இரா., : புதுக்கவிதையில் இலக்கிய இயக்கம், உமா பதிப்பகம், புதுவை, 1992.

சிவகாமி. ச., : இலக்கியப் பொருட் பகுப்பாய்வு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1991.

சிற்பி, : வெளிச்சங்கள், வைகறை பப்ளிகேஷன்ஸ், கோயம்புத்தூர், 1973.

சுப்பு ரெட்டியார், ந., : புதுக்கவிதை நோக்கும் போக்கும், பாரி நிலையம், சென்னை, 1983.

ஜெகநாதன், ஆ., : புதுக்கவிதை ஒரு திறனாய்வு, திலகம் பதிப்பகம், மேலையூர், 1978.

ஜெயராமன், ந.வீ., : புதுக்கவிதையியல், இலக்கியப் பதிப்பகம், சென்னை, 1980.

தட்சிணாமூர்த்தி, அர்ச்சுன., : புதுக்கவிதை சில பார்வை, ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1988.

தமிழண்ணல், : காதல் வாழ்வு, செல்வி பதிப்பகம், காரைக்குடி, 1960.

தமிழவன், : இருபதில் கவிதை, ஜெயகுமாரி ஸ்டோர்ஸ், நாகர் கோவில், 1971.

தமிழவன், : புதுக்கவிதை நாலு கட்டுரைகள்,
கோமதி பிரஸ்,
பாளையங்கோட்டை, 1977.

நடராசன், தி.சு., : திறனாய்வுக் கலை,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 1996.

நாராயண சுவாமி, அ., : நற்றிணை நானூறு,
மூலமும் விளக்கவுரையும்,
கழக வெளியீடு,
சென்னை, 1967.

பகவதி, கு., : திறனாய்வு அணுகுமுறைகள்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1989.

பஞ்சாங்கம், க., (மொ.பெ.ஆ)
(நார்த்தராப் ஃபிரை) : இலக்கியத்தில் தொல்படிமங்கள்,
அன்னம் (பி) லிட்,
சிவகங்கை, 1988.

பரமசிவானந்தம், அ.மு., : கவிதையும் வாழ்க்கையும்,
தமிழ்க் கலைப் பதிப்பகம்,
சென்னை, 1963.

பரிமேலழகர், (உ.ஆ) : திருக்குறள்,
கழக வெளியீடு,
சென்னை, 1973.

பாரதியார், : பாரதியார் கவிதைகள்,
சீனி விஸ்வநாதன் வெளியீடு,
சென்னை, 1991.

பாலா, : சர்ரியலிசம்,
அகரம்,
சிவகங்கை, 1977.

” : புதுக்கவிதை ஒரு புதுப்பார்வை,
அகரம்,
சிவகங்கை, 1981.

பிச்சமூர்த்தி, ந., : காட்டுவாத்து,
எழுத்து பிரசுரம்,
சென்னை, 1962.

மறைமலை, சி.இ., : புதுக்கவிதை முப்பெரும் உத்திகள்,
பூஞ்சோலை பதிப்பகம்,
சென்னை, 1986.

” : இலக்கியமும் உளவியலும்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை, 1991.

மோகன், இரா., (ப.ஆ) : சிற்பியின் கட்டுரைகள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை, 1996.

யோகீஸ்வரன், டி., : தமிழ்க் கவிதைகளில் சமுதாயச் சிக்கல்கள்,
நீலா பதிப்பகம்,
சென்னை, 1985.

ரசூல், ஹெச்.ஜி., : புதுக்கவிதையின் நவீனப் போக்குகள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
பிரைவேட் லிமிடெட்,
சென்னை, 1990.

ரெனிவெல்லாக், ஆஸ்டின்வாரன்., குளோரியா சுந்தரமதி. எஸ், (மொ.பெ.ஆ) :இலக்கியக் கொள்கை,
பாரி நிலையம்,
சென்னை, 1966.

லீலாவதி, தி., : ஜப்பானிய ஹைகூ,
அகரம்,
சிவகங்கை, 1987.

வரதராசன், மு., : இலக்கிய மரபு,
பாரி நிலையம்,
சென்னை, 1968.

வல்லிக்கண்ணன், : புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்,
அகரம்,
சிவகங்கை, 1977.

வானமாமலை, நா., : புதுக்கவிதை முற்போக்கும் பிற்போக்கும், மக்கள் வெளியீடு, சென்னை, 1975.

வேலுப்பிள்ளை. ஆ., : தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், இராமகிருஷ்ணன் பதிப்பகம், சென்னை, 1969.

வையாபுரி பிள்ளை, எஸ்., :இலக்கியச் சிந்தனைகள், நவபாரதி பிரசுராலயம் லிமிடெட், திருவல்லிக்கேணி, சென்னை, 1947.

ஜான் சாமுவேல், ஜி., : ஷெல்லியின் கவிதைக் கலை, மணிப் பதிப்பகம், சென்னை, 1978.

- - புதிய ஏற்பாடு, தி கதியோன்ஸ் இன்டர்நேசனல்ஸ், இந்தியா பெங்களூர் பைபிள் சொஸைட்டி, பெங்களூர், 1984.

## அகராதிகள்


| | | |
|---|---|---|
| ஆங்கிலத் தமிழ் அகராதி, | : | சென்னைப் பல்கலைக் கழகம்,<br>சென்னை, 1981. |
| கோபால கிருஷ்ணக் கோன், இ.மா.,<br>(வெ.ஆ) | : | மதுரைத் தமிழ்ப் பேரகராதி,<br>எக்ஸெல்ஸியர் பவர் பிரஸ்,<br>மதுரை. |
| சச்சிதானந்தம், வை., | : | மேலை இலக்கியச்<br>சொல்லகராதி,<br>மாக்மில்லன் இந்திய பிரஸ்,<br>சென்னை, 1983. |
| சுப்பிரமணியன், பா.ரா., | : | கிரியாவின் தற்காலத்<br>தமிழகராதி,<br>கிரியா பதிப்பகம்,<br>சென்னை, 1994. |

# ஆய்வேடுகள்

## முனைவர்பட்ட ஆய்வேடுகள் :

சுதந்திரமுத்து, மு., : தமிழ்ப்புதுக்கவிதையில் படிமம், சென்னைப் பல்கலைக்கழகம், முனைவர் பட்டத்திற்காக அளிக்கப் பெற்ற ஆய்வேடு, 1985.

செல்வகணபதி, பொன்., : புதுக்கவிதையில் அங்கதம், சென்னைப் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக அளிக்கப் பெற்ற ஆய்வேடு, 1987.

நிர்மலா சுரேஷ்., : ஹைகூக் கவிதைகள், சென்னைப் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்பட்ட ஆய்வேடு, 1997.

## இளம் முனைவர் பட்ட ஆய்வேடுகள் :

இலலித வேலு, : அப்துல் ரகுமான் பால்வீதி - ஓர் ஆய்வு, இள முனைவர் பட்ட ஆய்வேடு, சென்னைப் பல்கலைக் கழகம், 1980.

## இதழ்கள்

| | | |
|---|---|---|
| கணேசன், மா., | : | கருத்து,<br>ஜி.பு. போஸ்கோ,<br>8.D. ஞான இல்லம்,<br>சிதம்பரம் சாலை,<br>வடலூர், 1995. |
| கிருஷ்ணமூர்த்தி, நா., | : | கசடதபற,<br>சென்னை, 1975. |
| கோமல்சுவாமிநாதன், | : | சுப மங்களா (மாத இதழ்)<br>ரஞ்சனி ட்ரஸ்ட் வெளியீடு,<br>சென்னை. 1995. |
| பராசக்தி., | : | முத்தாரம் (வார இதழ்),<br>குங்குமம் பப்ளிகேசன்ஸ்,<br>சென்னை.<br>(1995-1996) வரையுள்ள,<br>இதழ்கள். |
| மீரா, (ப.ஆ) | : | புதுக்கவிதை ஒரு கருத்தரங்கம்,<br>அன்னம் வெளியீடு,<br>சிவகங்கை, 1976, |
| ” (ம.ஆ) | : | கவிக்கோ மணிவிழா மலர்,<br>தாரகை,<br>வான்மதி நகர்,<br>சென்னை, 1998. |
| முல்லை ஆதவன், (ப.ஆ) | : | வானம்பாடி,<br>செந்தமிழ் அச்சகம்,<br>கோவை, 1972. |

## ஆய்வுக் கோவை

| | | |
|---|---|---|
| கருத்தரங்கு ஆய்வுக் கோவை, | : | படிமவியல் கோட்பாட்டுச்<br>சிந்தனைகள்,<br>ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன்<br>வித்யாலயா,<br>கலை அறிவியல் கல்லூரி,<br>கோயமுத்தூர், 1999. |

# English Books

Hornby. A.S., : 'OxfordAdvancedLearner's Dictionary of Current English', Jonathan Crowther, Oxford University Press, 1995, F.E.

John Samuel, G., : Studies in Tamil Poetry, Mani Pathippakkam, Madras. 1978, F.E.

Little William, (Ed) : Shorter Oxford English Dictionary, Vol,I. A.M. Calcutta, The Standard literature Company Ltd., 1970.

Preminger, A.lex., (Ed) : Princeton Encyclopaedia of Poetry and Poetics, London, Macmillan Ltd., 1975.

Sachithanandan, V., : The Impact of Western Thought of Bharathi, Chidambaram Annamalai University, 1970.

Words Worth, : Nature in Romantic Poetry Selected Colleges Poems, Edited by Ambika Seni Gupta, Orient longman - L.d., Madras, 1988, F.E.

Yeats, W.B., : Selected Criticism, Edited by A. Norman Jeffarcs, Pan Book in association with Macmillan, London, 1964.

The World Book of Encyclopaedia, Volume 18, World Book, inc., Chicago, London, Sydney, Toronto, 1989.

# பின்னிணைப்பு - 1

## உள்ளடக்கக் கவிதைகளின் எண்ணிக்கை : அட்டவணை எண் 1

| பால்வீதி | பக்கம் | இயற்கை | இறைமை | தனிமனிதம் | குடும்பம் | தத்துவம் |
|---|---|---|---|---|---|---|
| 1. என்தேவனே எனக்குக்கை கொடுத்தீர் | 5 | | | | | |
| 2. முன்னுரையாக ஒரு விண்ணப்பம் | 6 | | | | | |
| 3. அந்தப்புரங்களில் | 7 | | | | | |
| 4. பலிபீடம் | 8 | | | | | |
| 5. சாவி இருக்கும் வரை | 9 | | | + | | |
| 6. நிர்வாணத்தை உடுத்து | 10 | | | | | + |
| 7. நெற்றிக் கண் | 11 | | | | | + |
| 8. தாகம் | 13 | | | | | |
| 9. மௌனவதாரம் | 14 | | | | | + |
| 10. சுட்ட பழம் | 16 | | | | | |
| 11. பாவைச் சமாதி | 17 | | | + | | |
| 12. முரண் தொடை | 18 | | | | | + |
| 13. தீக்கடை கோல்கள் | 19 | | | | + | |
| 14. பார்வை நிழல் | 21 | | | | + | |
| 15. விளையாட்டு | 22 | | | + | | |
| 16. என் செவியின் சுவாசம் | 23 | | | | | |
| 17. கலை | 25 | | | | | + |
| 18. பத்மை | 26 | | | | | |
| 19. சிந்தர் | 27 | | | | | + |
| 20. நாத்திக் கோயில் | 28 | | | | | + |
| 21. எரித்தக் காட்சி | 30 | | | | | + |
| 22. தீக்குளியல் | 31 | | | + | | |
| 23. சத்திர வாசம் | 32 | | | | | |
| 24. மூடிய இமை | 33 | | | + | | |
| 25. சடங்குகளின் கைதிகள் | 35 | | | + | | |
| 26. சுவாச சாபம் | 36 | | | | | |
| 27. கண்நதி மூலம் | 38 | | | | | + |
| 28. ஞாபக முடிச்சு | 39 | | | | | |
| 29. எனக்கு அந்திகள் இல்லை | 40 | | | | | |
| 30. ஈர்ப்பு | 41 | | | | | |
| 31. ஒற்றை முலை | 42 | | | | | |
| 32. கிழிசல் | 44 | | | | | |
| 33. நார்சிஸ்ஸஸ் | 45 | | | | | |

| பால்வீதி | பக்கம் | இயற்கை | இறைமை | தனிமனிதம | குடும்பம் | தத்துவம் |
|---|---|---|---|---|---|---|
| 34. வேர்வைத்தாலி | 46 | | | | | |
| 35. நீர்ப்பரீட்சை | 49 | | | | | |
| 36. கலியுக இதிகாசம் | 50 | | | | | |
| 37. மெழுகுவர்த்தி | 53 | | | | | + |
| 38. திருஷ்டி பரிகாரம் | 54 | + | | | | |
| 39. பாதயாத்திரை | 56 | | | | | + |
| 40. எங்கள் நதிக்கரையில் | 57 | | | | | |
| 41. இறப்பு எங்கள் பிறப்புரிமை | 59 | | | | | |
| 42. மயானவாசிகள் | 60 | | | | | |
| 43. கால அந்தாதி | 61 | | | | | + |
| 44. உடலுக்கு ஒரு வேகம் | 62 | | | | | + |
| 45. கிரணமாகிய வெளிச்சம் | 63 | | | | | + |
| 46. சலவைத் துறை | 66 | | | | | + |
| 47. புள்ளிக்குதாவதென்று | 68 | | | | | |
| 48. வியர்க்கும் சாமரைகள் | 69 | | | | | |
| 49. மூன்றாவது வர்க்கம் | 71 | | | | | |
| 50. ஐந்தாண்டுக்கு ஒரு முறை | 72 | | | | | |
| 51. பாற்கடலரங்கம் | 73 | | | | | + |
| 52. உங்களைத்தான் | 74 | | | | | |
| 53. தந்திக் கம்பங்கள் | 75 | | | | | + |
| 54. சாட்சி | 76 | | | | | |
| 55. அறிதுயில் | 77 | | | | | |
| 56. மின்னல் | 78 | + | | | | |
| 57. வீழ்ந்த தேவதைகள் | 79 | | | | | |
| 58. ஞான தேவதை | 80 | | | | | |
| 59. தன தேவதை | 81 | | | | | |
| 60. நீதி தேவதை | 85 | | | | | |
| 61. சுதந்திர தேவதை | 85 | | | | | |
| 62. சமாதான தேவதை | 87 | | | | | |
| 63. சபிக்கப்பட்ட பூவனம் | 88 | | | | | |
| 64. விடைகளைத் தேடி | 93 | | | | | |
| 65. மானுடத்தின் மகுடாபிசேகம் | 95 | | | | | + |

| நேயர்விருப்பம் | பக்கம் | இயற்கை | இறைமை | தனிமனிதம | குடும்பம் | தத்துவம் |
|---|---|---|---|---|---|---|
| 1. மண் | 12 | + | | | | |
| 2. ஆயள் தண்டனை | 15 | | | | | + |
| 3. பதவி | 17 | | | | | |
| 4. உரிமை | 19 | | | | | + |
| 5. குளம் | 20 | + | | | | |
| 6. எளிமை | 23 | | | | | + |
| 7. மரணம் | 24 | | | | | + |
| 8. கேள்வி | 25 | | | | | + |
| 9. உழவர்களைப் பாடுவோம் | 26 | | | | | |
| 10. யாருக்கு | 29 | | | | | |
| 11. ஆயிரம் திருநாமம் பாடி | 31 | | + | | | |
| 12. முத்துக்கள் | 34 | | | | | |
| 13. மரங்கள் | 35 | + | | | | |
| 14. தட்டுங்கள் திறக்கப்படும் | 37 | | | | | + |
| 15. அந்தி | 39 | + | | | | |
| 16. நகமகுடம் | 40 | | | | | |
| 17. காந்தியடிகள் | 42 | | | | | |
| 18. கஸ்தூரிபா காந்தி | 43 | | | | | |
| 19. வடலூரும் வார்த்தாவும் | 44 | | | | | |
| 20. நேரு | 47 | | | | | |
| 21. தாயைப் பெற்ற நாள் | 48 | | | | | |
| 22. முதுமை | 52 | | | | | + |
| 23. ஒப்பில்லாத சமுதாயம் | 56 | | | | | |
| 24. மௌனம் என் பாடல் | 68 | | | | | |
| 25. வரவேண்டும் நீ | 69 | | | + | | |
| 26. திரையை எரி | 70 | | | | | + |
| 27. சக்கையில்லாத கரும்பு | 71 | | | + | | |
| 28. வேதியியல் | 72 | | | + | | |
| 29. நாடகம் இன்றே முடித்து விடு | 73 | | | + | | |
| 30. மாலை வந்தது | 75 | | | + | | |
| 31. யாரவள் கனவில் வருகின்றாள் | 76 | | | + | | |
| 32. எரியட்டுமே சுடர் எரியும் வரை | 78 | | | | | + |
| 33. இளவேனில் | 79 | + | | | | |

| நேயர்விருப்பம் | பக்கம் | இயற்கை | இறைமை | தனிமனிதம் | குடும்பம | தத்துவம் |
|---|---|---|---|---|---|---|
| 34. மனம் வாடும் முன்னே | 80 | | | + | | |
| 35. உங்களால்தான் | 81 | | | + | | |
| 36. கண்ணும் எழுதேம் | 82 | | | + | | |
| 37. நட்சத்திரங்களில் கூடுகட்டி | 83 | + | | | | |
| 38. தாமரையும் சூரியகாந்தியும் | 85 | + | | | | |
| 39. அரசியல் வாதிகளுக்கு | 86 | | | | | |
| 40. தீக்கோழி | 87 | | | + | | |
| 41. நாணயம் | 88 | | | | | |
| 42. கண்ணாமூச்சி | 89 | | | + | | |
| 43. இப்பொழுதெல்லாம் | 90 | | | + | | |
| 44. சித்திர மின்னல் | 91 | | | | | + |

| ஆலாபனை | பக்கம் | இயற்கை | இறைமை | தனிமனிதம் | குடும்பம் | தத்துவம் |
|---|---|---|---|---|---|---|
| 1. ஒப்புதல் வாக்கு மூலம் | 7 | | | | | |
| 2. விளக்குகள் | 11 | | | | | + |
| 3. கனவு | 14 | | | | | + |
| 4. போட்டி | 17 | | | | | |
| 5. பௌர்ணமிப் பிறை | 19 | | | | | |
| 6. அலங்காரம் | 23 | | | | | + |
| 7. தவறான எண் | 26 | | + | | | |
| 8. பற்று வரவு | 30 | | | | | |
| 9. நான் யார் | 34 | | | | | + |
| 10. இழந்தவர்கள் | 38 | | | | | + |
| 11. இரவின் கண்ணீர் | 42 | + | | | | |
| 12. ஆறாத அறிவு | 43 | | | | | |
| 13. மானுடத்தின் திருவிழா | 51 | + | | | | |
| 14. கோடுகள் | 55 | | | | | + |
| 15. வெற்றி | 58 | | | | | + |
| 16. சிறகுகள் | 61 | | + | | | |
| 17. ஒரு மேகத்தைப் போல் | 65 | | | | | + |
| 18. காந்தக் கயிறு | 69 | | | | | + |
| 19. அதுதான் | 73 | | | | | + |
| 20. அந்த இடம் | 76 | + | | | | |
| 21. மாதிரி | 80 | | | | | + |
| 22. முரண்களின் போராட்டம் | 84 | | | | | + |
| 23. பழம் புதிது | 88 | | | | | + |
| 24. குருடர்களின் யானை | 92 | | | | | |
| 25. வகைகள் | 97 | | | | | + |
| 26. பாதை | 101 | | | | | + |
| 27. வேர்களும் கிளைகளும் | 105 | | | | | |
| 28. மனித புத்தி | 109 | | | | | |
| 29. கொடுக்கல் | 112 | | | | | + |
| 30. கடற்கரை | 115 | | | | | + |

| ஆலாபனை | பக்கம் | இயற்கை | இறைமை | தனிமனிதம் | குடும்பம் | தத்துவம் |
|---|---|---|---|---|---|---|
| 31. மரணம் என்ற அழகு | 119 | | | | | + |
| 32. முகமூடி | 122 | | | | | + |
| 33. சாத்தானின் சந்நிதி | 126 | | | + | | |
| 34. கண்ணீரின் ரகசியம் | 130 | | | | | + |
| 35. தற்கொலைசெய் | 133 | | | | | |
| 36. சுயப்பிரசவம் | 136 | | | | | |
| 37. பத்திரப்படுத்துங்கள் | 139 | | | | | + |
| 38. மறுபக்கம் | 142 | | | | | + |
| 39. நீராக | 145 | + | | | | |
| 40. நாட்டுமிராண்டிகள் | 149 | | | | | |
| 41. அதிகாரம் | 153 | | | | | |
| 42. வீழ்ச்சி | 156 | | | | | + |
| | | 13 | 3 | 19 | 2 | 57 |

## உள்ளடக்கக் கவிதைகளின் எண்ணிக்கை : அட்டவணை எண் : 2

| பால்வீதி | பக்கம் | சாதிசமயம் | அரசியல் | பொருளாதாரம் | பெண்மை | சீர்கேடுகள் |
|---|---|---|---|---|---|---|
| 1. என்தேவனே எனக்குக்கை கொடுத்தீர் | 5 | | | | | |
| 2. முன்னுரையாக ஒரு விண்ணப்பம் | 6 | | | | | |
| 3. அந்தப்புரங்களில் | 7 | | | | | |
| 4. பலிபீடம் | 8 | | | | | |
| 5. சாவி இருக்கும் வரை | 9 | | | | | |
| 6. நிர்வாணத்தை உடுத்து | 10 | | | | | |
| 7. நெற்றிக் கண் | 11 | | | | | |
| 8. தாகம் | 13 | | | | | + |
| 9. மௌனவதாரம் | 14 | | | | | |
| 10. சுட்ட பழம் | 16 | | | | | + |
| 11. பாவைச்சமாதி | 17 | | | | | |
| 12. முரண்தொடை | 18 | | | | | |
| 13. தீக்கடை கோல்கள் | 19 | | | | | |
| 14. பார்வை நிழல் | 21 | | | | | |
| 15. வினையாட்டு | 22 | | | | | |
| 16. என் செவியின் சுவாசம் | 23 | | | | | |
| 17. கலை | 25 | | | | | |
| 18. பத்மை | 26 | | | | | |
| 19. சிந்தர் | 27 | | | | | |
| 20. நாத்திக் கோயில் | 28 | | | | | |
| 21. எரித்தக் காட்சி | 30 | | | | | |
| 22. தீக்குளியல் | 31 | | | | | |
| 23. சத்திர வாசம் | 32 | | | | | |
| 24. மூடிய இமை | 33 | | | | | |
| 25. சடங்குகளின் கைதிகள் | 35 | | | | | |
| 26. சுவாசசாபம் | 36 | | | | | |
| 27. கண்நதி மூலம் | 38 | | | | | |
| 28. ஞாபகமுடிச்சு | 39 | | | | | |
| 29. எனக்கு அந்திகள் இல்லை | 40 | | | | | |
| 30. ஈர்ப்பு | 41 | | | | | + |
| 31. ஒற்றைமுலை | 42 | | | | | |
| 32. கிழிசல் | 44 | | | + | | |
| 33. நார்சிஸ்ஸஸ் | 45 | | | | | |

| பால்வீதி | பக்கம | சாதிசமயம் | அரசியல் | பொருளாதாரம் | பெண்மை | சீர்கேடுகள் |
|---|---|---|---|---|---|---|
| 34. வேர்வைத்தாலி | 46 | | | + | | |
| 35. நீர்ப்பரீட்சை | 49 | | | | | + |
| 36. கலியுகஇதிகாசம் | 50 | | | | | + |
| 37. மெழுகுவர்த்தி | 53 | | | | | |
| 38. திருஷ்டி பரிகாரம் | 54 | | | | | |
| 39. பாதயாத்திரை | 56 | | | | | |
| 40. எங்கள் நதிக்கரையில் | 57 | | | | | + |
| 41. இறப்பு எங்கள் பிறப்புரிமை | 59 | | | | | + |
| 42. மயானவாசிகள் | 60 | | | + | | |
| 43. கால அந்தாதி | 61 | | | | | |
| 44. உடலுக்கு ஒரு வேகம் | 62 | | | | | |
| 45. கிரணமாகிய வெளிச்சம் | 63 | | | | | |
| 46. சலவைத் துறை | 66 | | | | | |
| 47. புள்ளிக்குதவாதென்று | 68 | | | | | + |
| 48. வியர்க்கும் சாமரைகள் | 69 | | + | + | | |
| 49. மூன்றாவது வர்க்கம் | 71 | | | | | |
| 50. ஐந்தாண்டுக்கு ஒரு முறை | 72 | | + | | | |
| 51. பாற்கடலரங்கம் | 73 | | | | | |
| 52. உங்களைத்தான் | 74 | | | | | + |
| 53. தந்திக்கம்பங்கள் | 75 | | | | | |
| 54. சாட்சி | 76 | | | | | + |
| 55. அறிதுயில் | 77 | | | + | | |
| 56. மின்னல் | 78 | | | | | |
| 57. வீழ்ந்ததேவதைகள் | 79 | | | | | + |
| 58. ஞானதேவதை | 80 | | | + | | |
| 59. தனதேவதை | 81 | | + | + | | |
| 60. நீதிதேவதை | 85 | | | | | + |
| 61. சுதந்திரதேவதை | 85 | | | | | |
| 62. சமாதானதேவதை | 87 | | | | | + |
| 63. சபிக்கப்பட்ட பூவனம் | 88 | | | | | + |
| 64. விடைகளைத் தேடி | 93 | | | | | + |
| 65. மானுடத்தின் மகுடாபிசேகம் | 95 | | | | | |

| நேயர் விருப்பம் | பக்கம் | சாதிசமயம் | அரசியல் | பொருளாதாரம் | பெண்மை | சீர்கேடுகள |
|---|---|---|---|---|---|---|
| 1. மண் | 12 | | | | | |
| 2. ஆயள் தண்டனை | 15 | | | | | |
| 3. பதவி | 17 | | + | | | |
| 4. உரிமை | 19 | | | | | |
| 5. குளம் | 20 | | | | | |
| 6. எளிமை | 23 | | | | | |
| 7. மரணம் | 24 | | | | | |
| 8. கேள்வி | 25 | | | | | |
| 9. உழவர்களைப் பாடுவோம் | 26 | | | + | | |
| 10. யாருக்கு | 29 | | | + | | |
| 11. ஆயிரம் திருநாமம் பாடி | 31 | | | | | |
| 12. முத்துக்கள் | 34 | | | + | | |
| 13. மரங்கள் | 35 | | | | | |
| 14. தட்டுங்கள் திறக்கப்படும் | 37 | | | | | |
| 15. அந்தி | 39 | | | | | |
| 16. நகமகுடம் | 40 | | | + | | |
| 17. காந்தியடிகள் | 42 | | + | | | |
| 18. கஸ்தூரிபா காந்தி | 43 | | + | | | |
| 19. வடலூரும் வார்த்தாவும் | 44 | | + | | | |
| 20. நேரு | 47 | | + | | | |
| 21. தாயைப் பெற்ற நாள் | 48 | | + | | | |
| 22. முதுமை | 52 | | | | | |
| 23. ஒப்பில்லாத சமுதாயம் | 56 | | | | | + |
| 24. மௌனம் என் பாடல் | 68 | | | | | |
| 25. வரவேண்டும் நீ | 69 | | | | | |
| 26. திரையை எரி | 70 | | | | | |
| 27. சக்கையில்லாத கரும்பு | 71 | | | | | |
| 28. வேதியியல் | 72 | | | | | |
| 29. நாடகம் இன்றே முடித்து விடு | 73 | | | | | |
| 30. மாலை வந்தது | 75 | | | | | |
| 31. யாரவள் கனவில் வருகின்றாள் | 76 | | | | | |
| 32. எரியட்டுமே சுடர் எரியும் வரை | 78 | | | | | |
| 33. இளவேனில் | 79 | | | | | |

| நேயர் விருப்பம் | பக்கம் | சாதிசமயம் | அரசியல் | பொருளாதாரம் | பெண்மை | சீர்கேடுகள் |
|---|---|---|---|---|---|---|
| 34. மனம் வாடும் முன்னே | 80 | | | | | |
| 35. உங்களால்தான் | 81 | | | | | |
| 36. கண்ணும் எழுதேம் | 82 | | | | | |
| 37. நட்சத்திரங்களில் கூடுகட்டி | 83 | | | | | |
| 38. தாமரையும், சூரியகாந்தியும் | 85 | | | | | |
| 39. அரசியல் வாதிகளுக்கு | 86 | | + | | | |
| 40. தீக்கோழி | 87 | | | | | |
| 41. நாணயம் | 88 | | | + | | |
| 42. கண்ணாமூச்சி | 89 | | | | | |
| 43. இப்பொழுதெல்லாம் | 90 | | | | | |
| 44. சித்திர மின்னல்கள் | 91 | | | | | |

